# குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு

## இரண்டாம் தொகுதி



உரையாசிரியர்
**புலவர் அ. மாணிக்கனார் M.A.,**
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
அ.மா.ஜெயின் கல்லூரி சென்னை.



**வர்த்தமானன் பதிப்பகம்**
ஏ. ஆர். ஆர். காம்ப்ளக்ஸ்,
141, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர்,
சென்னை - 600 017. ☎ 825 79 95

57/3

சிலப்பதிகாரம், மணிமேகலை, நாலடியார் முதலியவற்றின்
உரையாசிரியரும் ஜைனதத்துவ நூலாசிரியரும்
ஸ்ரீ புராணச் செம்மலும்
சொல்லரசருமான
**பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரனார் எம்.ஏ.,**

அவர்களின் மகனாரும்
வாணிகத்திறனும் நுண்மாண்நுழைபுலமும்
சுறுசுறுப்பும் உடைய

**ஸ்ரீ. வர்த்தமானன்** M.Sc.,
அவர்களுக்கு இந்நூல்
மாலையைச் சூட்டுவதில் மகிழ்கிறேன்.

**–அ. மாணிக்கம்**

# பொருளடக்கம்

# குமரகுருபர அடிகளின் வரலாறு

தமிழ்நாட்டில் தலைசிறந்தது தென்பாண்டி நாடு. அதில் சிறந்து விளங்குவது தென் கைலாயம் என்று பெயர் பெற்ற தலம். அது தாமிர பரணி நதிக்கரையில் உள்ளது. திருவைகுண்டத்தின் ஒரு பகுதி தென் கைலாயம்.

அவ்வூரில் வேளாளர் குலத்தில் ஒரு கவிராயர் தோன்றினார். அவர் திருப்பெயர் சண்முக சிகாமணிக் கவிராயர். அவர்தம் இல்லக் கிழத்தியார் சிவகாமியம்மையார். முருகப்பக்தியுடைய கவிராயர்க்கு ஓர் ஆண்மகவு தோன்றியது. அம்மகவே குமரகுருபரர். அவர் ஐந்தாம் ஆண்டு வரை ஊமையாய் விளங்கினார். ஆதலால் கவிராயரும் அவர்தம் மனைவியாரும் திருச்செந்தூருக்குச் சென்றனர். அங்கு முருகப் பெருமான் திருமுன்பு தம் குழந்தையைக் கிடத்தித் தம் மகனுக்குப் பேசும் ஆற்றலை அருள வேண்டும் என்று வரம் வேண்டிக் கிடந்தனர். செந்திலாண்டவனான அம் முருகப் பெருமான் அருள் கிட்டியது. அவர்தம் மகவு பேசும் ஆற்றல் கிட்டப் பெற்றது. பேசும் ஆற்றல் மட்டுமா? புலமையும், பாடல் பாடும் ஆற்றலும் அவர்க்கு வாய்த்தன. அம்மகவான குமரகுருபரர் முதலில் கந்தப் பெருமான் மீது 'கந்தர் கலிவெண்பா' என்ற நூலைப்பாடினார். சிவபெருமானுக்குரிய இயல்புகளும் முருகப் பெருமானின் வீரத் திருவிளையாடல்களும் இதில் காணலாம்.

பின்பு அடிகள் தம் ஊரில் உள்ள கைலாச நாதர் மீது 'கைலைக் கலம்பகம்' என்ற நூலைப் பாடியருளினார். இந்நூல் இப்போது கிடைக்கப் பெறவில்லை. இவருடைய தம்பியார் பெயர் குமாரசாமிக்கவிராயர்.

இறைவன் அருளால் தமிழ்ப்புலமை வாய்க்கப் பெற்ற குமரகுருபரர் பக்தி வைராக்கியம் உடையவராய்த் திகழ்ந்தார். பல சிவத்தலங்களுக்கும் சென்று சிவ பெருமானை வழிபடத் தொடங்கினார்.

மதுரையம்பதியில் அவர் சில காலம் தங்கியிருந்தார். அது காலை மீனாட்சியம்மையின் திருவருளில் திளைத்து 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்' என்ற நூலை இயற்றியருளினார். பிள்ளைத் தமிழ் என்றால், 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்' ஒன்றே புகழ் பெற்றது. அப்பிள்ளைத் தமிழை மதுரையை அக்காலத்தில் ஆட்சி செய்த திருமலை நாயக்கர் முன்னிலையில் அரங்கேற்றினார். அதன் சொற்பொருள் சுவைகளைச் சுவைத்தார் நாயக்கர். அடிகள் முத்தப் பருவத்தைப் பாடிய போது 'காலத்தொடு கற்பனை கடந்த' என்ற தொடக்கம் உடைய பாடலைப் பாடிய போது மீனாட்சியம்மை பெண் வடிவில் வந்து தம் கழுத்தில் இருந்த முத்துமாலையைக் கழற்றிக் குமரகுருபரர்க்குச் சூட்டியருளினார் என்பர். இத்தகைய சிறப்பு அப்பெருமானுக்கு வாய்த்தமை வியக்கத் தக்கது.

பின்னும் அம்மதுரையிலே அவர் இருந்தபோது மூன்றாவதாகப் பாடியது 'மதுரைக் கலம்பகம்'. அதன் பின்பு அவர் சோழ நாட்டுத் தலங்களைக் கண்டு வழிபடச் செல்லப் புறப்பட்டவர் திருவாரூர்க்கு வந்தார். அப்போது அவர் பாடியது 'திருவாரூர் நான்மணிமாலை.'

சிவஞான உபதேசம் பெறவேண்டும் என்ற ஆவல் அவரை உந்தியது. தமக்குரிய குருவை நாடிட விழைந்தார் அவர். திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து 4ஆம் பட்டமூர்த்தியாக விளங்கிய மாசிலாமணி தேசிகர் தமக்குரிய குருவாக ஆதற்குரியவர் என அவர் எண்ணினார். ஆதலால் மாசிலாமணி தேசிகரை அண்டித் தன் கருத்தை வெளிப்படுத்த, தேசிகர் குமரகுருபரரைத் தலப்பயணம் மேற்கொண்டு வருமாறு பணித்தார். அக் கட்டளையை மேற்கொண்ட குமரகுருபரர் சிதம்பரத்துக்குச் செல்லலானார். செல்லும் வழியில் வைத்தீசுவரன் கோயிலில் தங்கி இறை வழிபாடு செய்தார். அத்தலத்தில் வீற்றிருக்கும் முருகப் பெருமான் மீது 'முத்துக்குமார் சுவாமி பிள்ளைத்தமிழை' இயற்றினார். மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழைப் போலவே முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழும் சிறந்து விளங்குகிறது. பின், அவர் சிதம்பரத்துக்குச் சென்றார். அத்தலத்தில் அவர் தங்கியிருந்த போது அவர் இயற்றிய நூல்

‘சிதம்பர மும்மணிக் கோவை’. அவர் காசியில் இறந்தவர்க்குத்தான் முக்தி கிடைக்கும். சிதம்பரத்தைத் தரிசித்தவர்க்கே முக்தி கிடைக்கும் என அந்நூலில் விளக்கியுள்ளார். அக்காலத்தில் அவர் இயற்றிய மற்றொரு நூல் ‘சிதம்பரச் செய்யுட் கோவை’.

யாப்பருங்கலக்காரிகை என்ற நூலில் செய்யுட்குரிய மேற் கோள்கள் சமண சமயச் சார்புடையன. ஆதலால் சைவ சமயச் சார்புடைய மேற்கோட் செய்யுட்களை இயற்ற வேண்டும் என்று அன்பர் சிலர்வேண்டிக் கொண்டதற்கு ஏற்ப அடிகள் இந்நூலை இயற்றினார். ‘நீதி நெறி விளக்கம்’ என்ற நூலையும் இக்காலத்திலேயே அவர் இயற்றியதாதல் வேண்டும் என்பர். திருக்குறளில் கண்ட உண்மைகளை இந்நூலில் வேறு வடிவில் நாம் காண்கின்றோம். திருக்குறளில் உள்ள தொடர்களையும், கருத்துகளையும் பொன்னே போல் போற்றிக் கையாண்டுள்ளார் அடிகள்.

சிதம்பர வாசகத்துக்குப்பின் குமரகுருபர அடிகள் தம் ஞான குருவான மாசிலாமணிதேசிகரிடம் சென்றார். அவர்தம் பரிபக்குவத்தை உணர்ந்த தேசிகர் துறவாடையைத் தந்தருளினார். அதுமுதல் அவர் குமரகுருபர முனிவர் ஆனார். அக்குருவான ஞான தேசிகர் மீது பாடப்பட்டதே ‘பண்டார மும்மணிக் கோவை’.

பின்பு தம் குருவின் அருளாணையைப் பெற்றுக் காசிக்குக் குமரகுருபரர் சென்றார். அங்கு டில்லி பாதுஷாவிடம் அருள் பெறுவதற்காக அவரது தாய் மொழியான இந்துத்தானி மொழிப் புலமை அவர்க்கு வேண்டப்பட்டது. ஆதலால் சகலகலா வல்லியைத் துதித்துத் தமக்கு இந்துத்தானி மொழியில் புலமை வேண்டும் என வேண்டிட, சகலகலாவல்லி அவர் விழைந்த வண்ணமே அருள் செய்தாள். குமரகுருபரர் இந்துத்தானி மொழியில் டில்லி பாதுஷாவின் அன்பைப் பெற்றவர். அக் காலத்தில் சிங்கத்தில் அமர்ந்து பாதுஷாவின் அவைக்களத்துக்குச் சென்றார் என்பர்.

அந்த டில்லி பாதுஷா அவர்க்குக் காசியில் கேதார இடத்தில் மடம் கட்டிக் கொள்ள இடத்தைத் தந்து உதவினார். குமரகுருபரர்

அதுவரை அங்கு மறைபட்டிருந்த விசுவநாதப் பெருமானை வெளிப்படுத்திக் கோயில் முதலியவற்றை அமைத்தார். (முகமதியர் கேதார கட்டத்தில் உள்ள கேதார லிங்கத்தை மறைத்து வைத்திருந்தனர். அதைக் குமரகுருபரர் வெளிப்படுத்திக் கோயில் அமைத்தார் என்பர்.)

குமரகுருபரர் காசியில் தங்கியிருந்த மடத்துக்குக் 'குமாரசாமி மடம்' என்பது பெயர். அவர் அங்குத் தங்கியிருந்த போது, விநாயகர் மீது பதிகம் பாடினார் என்பர் (இது இப்போது கிடைக்கவில்லை) பின், காசிக்கலம்பகம் ஆகிய நூல்களை இயற்றினார். அடிகள் வாழ்ந்த மடாலயத்தில் புராண சாலை ஒன்றை ஏற்படுத்தினார். அங்கு இந்துத்தானி மொழியிலும் தமிழிலும் புராணச் சொற்பொழிவு செய்தார். அதைக் கேட்டு உவந்தவர்களுள் ஒருவர் துளசி ராமாயணத்தை இயற்றிய துளசிதாசர். அவர் குமரகுருபரர் மூலம் கம்பராமாயணக் கருத்துக்களைத் தாம் இயற்றிய துளசி ராமாயணத்தில் மேற்கொண்டு பாடினார் என்பர்.

அடிகளின் காலத்துக்குப் பின்பு சொக்கநாத சுவாமிகள், அருணாசல சுவாமிகள், அம்பலவாண சுவாமிகள், சடையப்ப சுவாமிகள், தில்லை நாயக சுவாமிகள் முதலானோர் குமாரசாமி மடத்தில் ஆட்சி செய்து வந்தனர். தில்லை நாயக சுவாமிகள் திருப்பனந்தாளில் 1720 இல் ஒரு மடத்தை நிறுவினார். காசியுடன் தொடர்புடைமையால் இம்மடம் காசிமடம் என்ற பெயரில் வழங்குவதாயிற்று.

தில்லை நாயக சுவாமிகளுக்குப் பின்பு குமரகுருபரசுவாமிகள் முதலாக அருள்நந்தித் தம்பிரான் ஈறாக அருளாட்சி செய்து வந்தனர்.

குமரகுருபரர் இயற்றிய நூல்களின் இயல்புகள் பற்றி முன்னுரையில் காண்க.

(குறிப்பு:- இம்மடம் ஏற்படுத்திய தமிழ்க்கல்லூரியில் தமிழ் பயின்றதால் குமரகுருபர பிரபந்தத் திரட்டு என்ற நூலுக்கு உரை எழுதும் பேறு பெற்றேன் என்பதைக் குறிப்பதில் மகிழ்கின்றேன்.)

**-உரையாசிரியர்.**

# முன்னுரை

**மும்மணிக் கோவை:** வெவ்வேறு மூன்று மணிகளால் ஆன மாலையைப் போல் ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை என்ற பாக்கள் அந்தாதியாய்ப் பொலியப் பாடுவது மும்மணிக் கோவை. குமரகுருபர அடிகள் இரு மும்மணிக் கோவைகளைப் பாடியுள்ளார். அவை சிதம்பர மும்மணிக் கோவை, பண்டார மும்மணிக் கோவை. சிதம்பரத்தின் பெருமை கூத்தப் பெருமான் இயல்பு, தரிசனம் செய்த அளவில் முத்தி கிட்டப்பெறும் தன்மை ஆகியவை சிதம்பர மும்மணிக் கோவையுள் அமைந்துள்ளன. பண்டார மும்மணிக் கோவை என்பது மாசிலாமணிதேசிகர் பற்றிய செய்தியை விளக்குவது. சைவ சித்தாந்தக் கருத்துகளை இந்நூலில் ஆசிரியர் விளக்கிச் சொல்கின்றார்.

**சிதம்பரச் செய்யுட்கோவை:** இந்நூல் யாப்பிலக்கணச் செய்யுள் வகைகளுக்கு எடுத்துக் காட்டான பாடல்களைக் கொண்டது. இதில் வரும் பாடல்கள் இனியன; தத்துவங்கள் நிறைந்தவை.

**சகலகலாவல்லி மாலை:** 'சகலகலாவல்லி'யாவார் கலைமகள். அப் பெருமாட்டியைத் துதித்துப்பாடுவது இந்நூல்.

குமரகுருபரர் டில்லி பாதுஷாவிடம் இந்தியில் உரையாடுவதற்குத் தமக்கு இந்திப் புலமை தந்தருளக் கலைமகளை வேண்டி இதைப் பாடினர் என்பது வரலாறு. கலைமகளின் அருமை பெருமைகளை இந்நூல் விரிவாகப் பேசுகின்றது. இது ஒரு இனிய பாராயண நூல்.

**மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை:** மீனாட்சியம்மை மீது ஆசிரியர் கொண்ட பக்தி மிகுதி. ஆதலால் மீனாட்சியம்மை

பிள்ளைத் தமிழ், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரை மீனாட்சியம்மை குறம் என்ற நூல்களைப் பாடியுள்ளார்.

இரட்டை மணிமாலை என்பது இருவகையான மணிகளால் ஆன மாலை. வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் அந்தாதியாய் அமையப் பாடப்படுவது இதன் இலக்கணமாகும். ஆதியும் அந்தமும் மண்டலிக்கப் பாடுதலும் இதன் இலக்கணமாகும்.

**மதுரை மீனாட்சியம்மை குறம்:** குறத்தி ஒருத்தி குறி கூறுவதான கருத்தை உட்கொண்டு பாடப்படுவது குறம் என்று கூறப்படும். மூன்று கால நிகழ்வுகளையும் கூறுவது இந்நூல். பாட்டுடைத் தலைவன் ஒருவனைக் கண்டு காமம் கொண்ட ஒருத்தியின் கையைப் பார்த்துக் குறி கூறுவதாக இஃது அமையும். குறவஞ்சி என்ற நூலும் இவ்வகையைச் சார்ந்ததே ஆகும்.

**தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணி மாலை:** தில்லையில் உள்ள சிவகாமியம்மையின் மீது பாடப்பட்டது இந்நூல். இறைவனின் இயல்பை விட இறைவியின் இயல்பு மிக்கது என இந்நூல் பேசுகின்றது.

## வைத்தீசுவரன் கோவில்

# 6. முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

முத்துக்குமார சுவாமி மீது பாடப்பட்ட பிள்ளைத் தமிழ் எனப் பொருள் தரும். புள்ளிருக்கு வேளூர் என்ற தலத்தில் எழுந்தருளியுள்ள முத்துக்குமார சுவாமி மீது இது பாடப்பட்டது. இத்தலம் வைத்தீசுவரன் கோயில் எனவும் அழைக்கப்படும்.

இந்நூலின் பெயர் 'முத்தையன் பிள்ளைத்தமிழ்' 'புள்ளிருக்கு வேளூர்ச் சேனாபதிப் பெருமாள் பிள்ளைத்தமிழ்' 'புள்ளிருக்கு வேளூர் குமார தேவர் பிள்ளைக் கவி' எனவும் வழங்கும்.

### விநாயகக் கடவுள் துதி

### ஆசிரிய விருத்தம்

349. பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
பொருப்பில் பிறந்துதவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர்
போர்க்களிற் றைப்புணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தல்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகண் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்
மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கண்கடவுள்
வேழங் கடம்படுபடா
வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை
விண்டுதண் தேன்றுளிக்கும்
கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
குருசிலைப் பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
கொழிதமிழ்க் கவிதழையவே. (1)

**தெளிவுரை**

(அடி3) மின்னல் போன்ற சிறிய இடையையும் பெரிய போர் செய்யும் கண்களையும் உடைய தெய்வ யானையினது குடம் போன்ற சாயாத விருப்பத்தைத் தரும் கொங்கைக் கொம்பால் கிளைத்துக் கிளைத்து அலைக்க, அரும்பு விரிந்து குளிர்ந்த தேனைச் சொரியும்

(அடி4) பெருமையுடைய கடப்ப மாலையைச் சூடியவன்; மலை போன்ற தோள்களையுடையவன்; பெருமையில் சிறந்தவன்; போர் செய்யக் கூடிய வில்லைத் தாங்கிய திருக்கையையுடைய முருகப் பெருமான் அவனைத் துதிக்கின்ற எனது வடித்த தமிழ்க் கவிகள் செழிக்கும் பொருட்டு,

(1) அழகு அமைந்த குடுமியான பொற் சிகரங்களையுடைய மேலான இமய மலையில் தோன்றிச் சொரியப்பட்ட வெண்நிலவு தவழ்கின்ற வெள்ளி மலையில் உள்ள ஒப்பற்ற போர் யானையைக் கூடி,

(2) அழகு பொருந்திய பாட்டைப் பாடும் வண்டுகள் மொய்த்த பசிய கூந்தலையுடைய செழுமையான பெண் யானை யானது பெற்று வளர்த்த சிறிய கண்களையும் பெரிய காது களையும் உடைய யானைக்கன்றின் இரு செம்மையான திருவடி களைக் கை கூப்பித் தொழுவோம்.

**விளக்கம்**

ஒரு நூலைத் தொடங்கும் போது மங்கலச் சொல்லை முதலில் பெய்து தொடங்க வேண்டும் என்பது மரபு. அதன்படி இங்குப் 'பொன்' என்ற மங்கலச் சொல்லால் நூல் தொடங்குகிறது.

'பொன் பூத்த குடுமி' என்ற தொடர் வானொலியாக இவ்வாசிரியர்க்குக் கிடைத்தது.

(4) பொலம் - பொன். குவடு - உச்சி. இமம் - பனி. இமவான் பொருப்பு - இமய மலை. வெள்ளி வேதண்டம் - வெள்ளிமலை. கயிலை மலை. இமய மலையில் பிறந்து கயிலை

மலையில் உள்ள சித்திர சாலையில் எழுதப்பட்டிருந்த சிவப்பிரணவம் சத்திப் பிரணவம் என்ற மந்திரங்கள் முறையே ஆண் யானை பெண் யானைகளின் வடிவமாகத் தோன்ற அவற்றைப் பார்த்துச் சிவ பெருமானும் உமையம்மையும் அவ்வடிவம் கொண்டு சேர்ந்தனர். தேவர் முதலியவர் துன்பத்தைப் போக்குவதற்கு விநாயகக் கடவுளை ஈன்றனர் என்பது காஞ்சிப் புராணம்.

(2) தென் - அழகு. பாட்டளி - பாடல் பாடும் வண்டு. பைங்கூந்தல் - பசிய கூந்தல்; கரிய கூந்தல். செழும்பிடி - செழுமையுடைய பெண் யானை. பயந்தளித்த - பெற்றுத் தந்த. குஞ்சரக்கன்று - யானைக்கன்று; விநாயகர் இருசெஞ்சரண் - இரு திருவடிகள். அஞ்சலிப்பாம் - வணங்குவோம்.

(3) மின் பூத்த சிற்றிடை - மின்னல் போன்ற சிறிய இடை. பேர் அமர்க்கண் - பெரிய போர் செய்யும் கண். கடம்படு - குடம் போன்ற. படா - சாயாத. கடவுள் வேழம் - தெய்வ யானை அம்மை. கோடு - யானைக் கொம்பு.

(4) கொன் - பெருமை. தெரியல் - மாலை. தடம்புயம் - பெரிய தோள். குருசிலை - சிறந்தவனை. பொருசிலை - போர் செய்யும் வில். பரவும் - போற்றும்; துதித்துப் பாடும். கவி தழைய - கவியால் ஆன 'முத்துக் குமார சுவாமி பிள்ளைத்தமிழ்' என்ற இந்நூல் சிறந்து விளங்கும் பொருட்டு. கடம்பு - கடம்ப மலர். இது முருகப் பெருமானுக்கு உகந்த மலர். கந்தபுரி - கந்தன் + புரி; வைத்தீசுவரன் கோயில். (1)

## 1. காப்புப் பருவம்

### திருமால்

350. பூமேவு கற்பகப் பொங்கரில் செங்கண்
புலோமசை வளர்த்தகும்பப்
புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை விருப்பனைத்தும்

கோமேவு சாரல் குறச்சிறுமி மேல்வைத்த
குழகனைக் கழகந்தொறும்
கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்
குமாரனைத் தனிபுரக்க
தேமேவு கடவுள் பொலங்கிரி திசைக்கரிகள்
திகிரிகிரி குலகிரியொடும்
திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடல்
தெண்திரை முகட்டுதித்த
பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும்
பசுங்குதலை மழலையஞ்சொல்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே. (2)

(பிள்ளைத் தமிழ் பாடுபவர் திருமால் முதல் முப்பத்து முக்கோடி தேவர் ஈறாகப் பல கடவுளர்களை பிள்ளையைக் காக்கும்படி வேண்டுவதாகும். இஃது இரண்டாம் திங்களில் நிகழ்வதாகும்.)

(அடி3) இடம் பொருந்திய தெய்வத்தன்மையுடைய அழகிய மந்தர மலையை எண் திக்கு யானைகளும் சக்கரவாள மலையும் குல மலைகளுடனே சுழலச் சுழற்றி மத்தாக வீச, அகன்ற திருப்பாற் கடலில் தெளிவான அலையின் மேல் தோன்றிய.

(அடி4) பாக்களில் பொருந்திய இனிமை முதிர்ந்து அமுதம் போல் ஒழுகும் பசுங்குதலையான மழலைச் சொல்லையுடைய தாமரையை இருப்பிடமாகக் கொண்ட திருமகளின் இரண்டு கொங்கைகளாகிய மலைகளின் மேல் உறங்கும் பச்சை மேகமாகிய திருமால்,

(1) மலர்கள் பொருந்திய கற்பகச் சோலையில் சிவந்த கண்களையுடைய புலோமசையால் வளர்க்கப்பட்ட குடம் போல் நெருங்கிய கொங்கைகளையுடைய களிப்புக் கொண்ட தெய்வ யானையினது விளையாடுகின்றதற்கு இடமான பன்னிரு தோள்களாகிய மலைகளை உடையவனை விருப்பம் முழுவதும் மலைச்சாரலில் வாழும் குறத்தி வள்ளி மீது வைத்த கட்டழகனை,

சங்கங்கள் தோறும் கூட்டமாகிய முத்தமிழ் நிறைந்த கந்தபுரியில் வாழ்கின்ற முத்துக்குமரனைச் சிறப்பாகக் காப்பானாக!

**விளக்கம்**

(3) புலோமசை - இந்திரனின் மனைவியான இந்திராணி. தேம் மேவு - இடம் உடைய; தெய்வம் விரும்பும். கடவுள் பொலங்கிரி - மேரு மலை. திசைக்கரி - எட்டுத் திக்கு யானைகள். திகிரி கிரி - சக்கர வாள மலை. குலகிரி - குலாசலங்கள். மத்து - மேருமலையான மத்து. தடங்கடல் - பெரிய கடல்; திருப்பாற் கடல். தென்திரை முகட்டு உதித்த - தெள்ளிய அலையில் தோன்றிய.

(4) பாமேவு - பாக்களில் பொருந்திய. மதுரம் - இனிமை. பசுங்குதலை மழலை - பசிய குதலைச் சொல்லான மழலைச் சொல். குதலை - திருத்தம் பெறாத சொல். பங்கயச் செல்வி - தாமரையில் வீற்றிருக்கின்ற திருமகள். இருகொங்கைக்குவடு - இரு முலைகளாகிய மலை. பச்சைப் பசுங்கொண்டல் - பசுமை யான நிறம் உடைய மேகம் போன்ற திருமால். வளர் - துயிலும்.

(1) பூமேவு - பூக்கள் பொருந்திய. கற்பகப் பொங்கர் - கற்பகச் சோலை. புலோமசை வளர்த்த யானை தெய்வயானை. கும்பம் புணர் முலை - குடம் போன்ற கொங்கை. பன்னிரு பொருப்பன் - பன்னிரண்டு தோள்களாகிய மலைகளையுடைய முருகப் பெருமான். தேவியரை யானை என்றதற்கு ஏற்ப இறைவர் தோள்களை மலை என்றார். விருப்பு அனைத்தும் - விருப்பம் முழுவதும்.

(2) குறச்சிறுமி - வள்ளி. குழகனை - இளையவனை. புரக்க - காப்பானாக.

முடிபு: பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டு வளர் பச்சைப் பசுங் கொண்டல், கந்தபுரி முத்துக் குமரனைத் தனிபுரக்க.

(2)

## வைத்தியநாதர்

### சந்த விருத்தம்

351. ஒருபு றத்துமர கதமி மைப்பவொளிர்
மாமேரு மற்றொரு மேருவைச் சாய்த்தென
உலக ளக்கநிமிர் வடபொ ருப்பையொரு
தோளால்வ ளைத்தபி னாகியைத் தீக்கனல்
உமிழு முக்குடுமி அயிறி ரித்துவரு
வாய்வாள்ம ழுப்படை வீரனைப் பார்த்தனொடு
உடலு மற்றொழிலி னறவி ளைத்துமெதிர்
ஓடாது டற்றுகி ராதனைக் கூக்குரல்
விரிக டற்புடவி முழுது ணச்சமையும்
ஓர்காளை கட்டுப்ர தாபனைக் கார்க்கடு
விடமெ டுத்தரிய திருமி டற்றிலிடு
காமாரி யைக்கவு மாரியைப் போற்றிரு
விழிமு னிற்கும்வடி வழகு டைக்கடவுள்
மாமோகி னிக்கும ணாளனைச் சூக்கும
வெளியி னில்பரம நடந விற்றுதிறல்
வேளூர்வ யித்திய நாதனைப் போற்றுதும்
குரவு செச்சையொடு நறவு யிர்ப்பவிரி
தேனாறு வட்டெழு மார்பனைப் பேய்த்திரள்
குரவை யிட்டவுணர் தடிசு வைத்திடவொர்
கூர்வேல்வி டுத்தகு மாரனைப் பார்ப்பதி
குமர னைச்சமரி லுருமு கக்குளிறு
காலாயு தக்கொடி யாளனைக் கோட்டிய
குறுந கைக்குமன முருக வெற்பவர்த
மானோடு மற்பொரு தோளனைத் தாக்கிய
திரண்ம ருப்பினமர் பொருத னிக்கடவுள்
மால்யானை யைப்புணர் காளையைச் சாற்றிய
செழும றைப்பொருளி னுரைவி ரித்துமெனும்
வேதாமு டித்தலை மோதுகைக் காய்ப்பொடு

திருவ டித்துணையென் முடிப தித்தவடு
ஆறாத மெய்ப்புக ழாளியைப் பூட்டிய
சிறைவி டுத்தமரர் குறைமு டித்துதவு
சேனாப திப்பெரு மாள்தனைக் காக்கவே. (3)

## தெளிவுரை

(அடி3) குராமலர் வெட்சிப்பூவுடன் நறுமணம் வீச விரிதலால் உண்டான தேன் ஆறு பெருகி ஓடுவதற்கு உரிய மார்பை உடையவன்.

பேய்க் கூட்டமானது குரவைக் கூத்தாடி அசுரரின் தசையைச் சுவைக்கும்படி கூரிய வேற்படையை ஏவின குமாரன்.

பார்வதி மகன் போர்க்களத்தில் இடிகள் சிந்தும்படி ஒலிக்கும் சேவலாகிய கொடி உடையவன், செய்த புன்னகைக்கு மனம் உருகிடக் குன்றவர் பெண்ணோடும் மற்போர் செய்த திருத் தோள்களை உடையவன்.

(அடி4) இடித்த திரண்ட கொம்பால் போர் செய்த ஒப்பற்ற பெரிய தெய்வ யானையைச் சேர்ந்த இளம்பருவம் உடையவன்,

சொல்லப்பட்ட செழித்த மறைப் பொருளுக்கு, உரையை விரித்துச் சொல்வோம் என்ற பிரமனின் தலையில் குட்டிய தழும்புடன், இரண்டு திருவடிகளில் என் முடி அழுத்திய தழும்பும் நீங்காத உண்மையான புகழ் உடையவன் ஆன,

அடைக்கப்பட்ட சிறையினின்றும் விடுவித்துத் தேவர்களின் குறை தவிர்த்தருளிய படைத்தலைவனான பெருமானைக் காக்கும் பொருட்டு,

(அடி1) ஒருபக்கத்தில் மரகத மணி விளங்க ஒளிவிடும் மகாமேரு மலையானது மற்றொரு மேருமலையைச் சாய்த்தாற் போல் உலகங்களை அளக்கும் பொருட்டு நிமிர்ந்த வடக்கு மலை ஒப்பில்லாத தோள் வலியால் வளைந்த பினாகத்தை உடையவன்.

தீய்க்கின்ற நெருப்பை உமிழ்கின்ற முத்தலையுடைய சூலப் படையைச் சுழற்றி வரும் மழுவாயுதத்தை யுடைய வீரன்

அருச்சுனனுடன் சினந்து எதிர்த்த மற்போரினால் மிக மெலிந்தும் அவன் எதிரில் சினந்து எதிர்த்த வேடன்

(அடி2) ஒலிமிக்க கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் உண்ண அமைந்த காளையை ஊர்தியாக உடைய மகிமையுள்ளவன்

கரிய கடிய நஞ்சை எடுத்து அரிய திருக்கழுத்தில் அடக்கிக் கொண்ட மன்மதனை அழித்தவன்

பார்வதியைப் போல் அழகுடைய திருக்கண்களுக்கு எதிரே உடல் அழகு கொண்ட தெய்வத் தன்மை உள்ள பெருமை உடைய மோகினிக்கு நாயகன் ஆன

பரவெளியில் மேன்மையான நடனம் செய்யும் வெற்றி யுடைய வேளூரில் எழுந்தருளியுள்ள வைத்தியநாதன் என்ற பெயரை யுடைய சிவபெருமானை வணங்குவோம்.

**விளக்கம்**

முடிபு: சேனாபதியான முருகப் பெருமானைக் காக்க வைத்திய நாதனை வணங்குவோம்.

மரகதம் - மரகதமணி. இமைப்ப - ஒளிவீச.

(அடி1) ஒரு மேருமலை மற்றொரு மேருமலையைச் சாய்த்தாற் போல். மாமேரு - சிவபெருமான். வடபொருப்பு - மேருமலை. பினாகி - பினாகம் என்ற வில்லை ஏந்திய சிவ பெருமான். முக்குடுமி அயில் - மூன்று உச்சிகளையுடைய சூலப் படை. வாய்வாள் - வாய்ந்த கூர்மையுடைய. பார்த்தன் - அருச்சுனன். உடலும் - போர் செய்த. மல் - மற்போர். அற இளைத்தும் - மிகக் களைப்படைந்தும். ஓடாது உடற்று கிராதனை - ஓடாது + உடற்று + கிராதனை; ஓடாமல் நின்று போர் ஆற்றும் வேடனை. (வேட வடிவம் உடைய சிவபெருமான் வேடன் எனப் பட்டான்.) கூக்குரல் - ஒலியுடைய.

(அடி2) கடற்புவி முழுது உணச் சமையும் - கடலால் சூழப்பட்ட உலகம் முழுவதும் உண்ணுமாறு சமைந்த. ஓர் காளை -

ஒரு காளையூர்தியான திருமால். ப்ரதாபனை - வீரப்புகழ் உடையவனை. கார்க்கடுவிடம் - கரிய கொடிய விடம். காமாரி - மன்மதனுக்குப் பகைவன். கவுமாரி - உமையம்மை; பார்வதி. மாமோகினி - திருமால் மோகினியாக அவதாரம் செய்தார். அவர் 'மாமோகினி' எனப்பட்டார். மணாளன் - கணவன், மோகினி அவதாரம் கொண்ட திருமாலுக்குக் கணவனாய் விளங்கிய சிவன். சூக்கும வெளி - சூட்சும வானம். வேளூர் - வைத்தீசுவரன் கோயில்.

(அடி3) குரவு - குராமலர். செச்சை - வெட்சி மலர். நறவு உயிர்ப்ப - தேன் சிந்த. தேன் ஆறு உவட்டெழு மார்பனை - தேன் ஆறு பெருக்கெடுத்து ஓடும் மார்பு உடையவனை. உவட்டெழு - பெருக்கெடுக்கும். குரவை - குரவைக் கூத்து. அவுணர் தடி - அவுணரின் மாமிசம். கூர்வேல் விடுத்த குமாரன் - கூர்மையான வேலை எறிந்த முருகப் பெருமான். பார்ப்பதி - பார்வதி. சமரில் - போரில். உரும் உக - இடி கெடுமாறு. குளிறு - ஒலிக்கும். காலாயுதம் - கோழிச் சேவல். கொடியாளன் - கொடியையுடைய முருகப் பெருமான். வெற்பவர் தம் மான் - வள்ளி நாயகியார். மற்பொரு தோளனை - தழுவும் தோளையுடையவனை.

(அடி4) மருப்பு - நகில். கடவுள் மால்யானை - தெய்வ யானை அம்மை.

செழுமறைப் பொருளின் உரை விரித்தும் எனும் - செழுமை யான வேதத்தின் பொருளை விரித்துக் கூறுவோம் என்னும். வேதா - நான்முகன். காய்ப்பு - தழும்பு. சுவடு - தழும்பு. திருவடித் துணை - இரண்டு திருவடிகளை. சிறை - சூரபன்மன் அமைத்த சிறை. சேனாபதிப் பெருமாள் - முருகப் பெருமான்.

வேள் என்னும் நாமம் உடைய முருகன் வணங்கிய இடம் ஆதலால் 'வேள் ஊர்' எனப்பட்டது. (3)

## தையல் நாயகி அம்மை

### வேறு

352. குழைய டர்ந்துவடி கணைது ரந்துசெறி
குமிழ்ம றிந்தவிழி நவ்வியைக் கோட்டொடு
குவடெ றிந்தமுத கலசம் வென்றதட
முலைசு மந்தமலை வல்லியைச் சேற்றொளிர்
குமுதம் விண்டசுவை அமுதம் உண்டினிய
கொழுநர் கொஞ்சுசிறு கிள்ளையைத்
தாள்துணை
குறுகு தொண்டர்பிழை அறம றந்துபிறர்
குணமி கழ்ந்ததக வில்லியைச் சேண்செலும்
எழுபெ ரும்புவன முழுதொ ருங்குதவும்
இறைவி யென்றுமறை கையெடுத் தார்க்கவும்
இடைநு டங்குமட நடையி ளங்குமரி
எனவி ருந்தகன கள்வியைப் பூத்தஎன்
இதய புண்டரிக மலரி லெந்தையொடும்
இனித மர்ந்தவொரு செல்வியைப் பாற்றொகும்
இருவர் கண்கள்கது வரிய செஞ்சுடரின்
இடம ருங்குடைய தையலைப் போற்றுதும்
முழுது ணர்ந்துமுணர் வரிய தொன்றையொரு
மொழியின் விண்டசிறு பிள்ளையைச்
சூர்ப்பெயர்
முதுப ழம்பகையை யறவெ றிந்தவுணர்
முதல்த டிந்ததனி வில்லியைப் பாட்டளி
முரல விண்டதரு நிழறொ ழும்புகுடி
புகவ ழங்குகொடை வள்ளலைப் போற்றடி
முடியு மின்றிவெறு வெளிக டந்துமறை
முடிவி னின்றுநிறை செல்வனைக் காத்தொறும்
மழலை வண்டுதட மலர்கு டைந்துபுது
மதுவ ருந்திநறு மல்லிகைச் சேக்கையின்

வடிப சுந்தமிழி னிசைப யின்றபெடை
யொடுது யின்றினிய செவ்வழிப் பாட்டினை
வருவி பஞ்சிபயி றரும தங்கர்தெரு
மரமு ரன்றுநெடு வைகறைப் போய்ச்செழு
மலரி லஞ்சிதொறு முலவு கந்தபுரி
மருவு கந்தனைஎ மையனைக் காக்கவே. (4)

**தெளிவுரை**

(அடி3) முற்றும் அறிந்தும் அரிதற்கு அரிய ஒரு பொருளை ஒரு சொல்லால் சொல்லிய சிறுபிள்ளைச், சூரன் என்னும் பெயரை முழுமையான பழம் பகைவனை முடியும்படி கொன்று அசுரரின் வேரைக் களைந்த ஒப்பில்லாத வில்லாளி,

பாடல்களை வண்டுகள் பாட, மலர்ந்த மர நிழலில் தொண்டர் குடியேற, வழங்கிய கொடையையுடைய வள்ளல்,

யாவரும் வழிபடுவதற்குரிய முதலும் இறுதியும் இல்லாமல் வெட்ட வெளியைத் தாண்டி வேதத்தின் உச்சியில் நிறைந்து நின்ற செல்வம் உடையவன்,

சோலை தோறும் இன வண்டுகள் பெரிய மலர்களைத் தோண்டிப் புதிய தேனை உண்டு நறுமண மல்லிகை மலர்ப் பள்ளியில் வடித்த பசுந்தமிழின் இசையைப் பழகின பொன் வண்டுகளுடன் உறங்கி

இனிய செவ்வழிப்பண்ணினை வீணை வாசித்தலைப் பழகிய மதங்கரும் மயங்கும்படி பாடி நீண்ட வைகறையில் எழுந்து போய்ச் செழுமையான மலர்களையுடைய பொய்கை தோறும் உலவும் கந்த புரியில் வாழ்பவன் முருகப் பெருமான். இத்தகையவனை

(அடி1) காதணியை நெருங்கி வடித்த அம்பைத் துரத்தி நெருங்கிய குமிழம் பூவில் பாய்ந்து மீள்கின்ற கண்களையுடைய பெண்மான்

யானைக் கொம்புகளுடன் மலைகளை வென்று அமிர்த குடங்களை வென்ற பெரிய கொங்கைகளை உடைய மலை யரையன் மகள்,

சேற்றில் விளங்குகின்ற செவ்வல்லி மலர்ந்த சுவையுள்ள தேனையுண்டு இனிதாகிய கணவன் கொஞ்சும் இளங்கிளி,

திருவடித்துணையை அடைந்த அடியவரின் குற்றங்களை முற்றும் மறந்து பிறர் குணங்களை அவமதித்த தகுதி இல்லாதவன்,

(அடி2) தொலைவில் போகின்ற பெரிய உலகங்கள் முற்றும் ஒருங்கே ஈன்ற தலைவி என்று வேதங்கள் வாய் எடுத்து வாழ்த்தும், அவள், இடை துவளும் மெல்லிய நடையையுடைய இளங்குமரி என்று கூறுமாறு விளங்கிய பெரிய கள்ளி,

மலர்ந்த என் மனம் என்ற தாமரை மலரில் சிவபெரு மானுடன் எழுந்தருளிய ஒப்பற்ற செல்வம் உடையவள்;

இருபக்கத்தும் சேர்ந்துள்ள நான்முகன் திருமால் ஆகிய இருவருடைய கண்களால் பற்றப்படுதற்கு அரிய சிவந்த ஒளியான சிவபெருமானது இடப்பாகத்தை யுடைய தையல் நாயகியை வணங்குவோம்.

**விளக்கம்**

முடிபு: எம் ஐயனைக் காக்க தையலைப் போற்றுதும்.

(அடி1) குழை - காதணி. வடிகணை - வடித்த அம்பு; கூர்மையான அம்பு. குமிழ் - குமிழம்பூவைப் போன்ற மூக்கு. நவ்வி - பெண்மான். கோடு - கொம்பு. குவடு எறிந்த கலசம் வென்ற - மலையை வென்ற குடத்தை வென்ற. குமுதம் விண்ட - செவ்வல்லி மலர்ந்த. கொழுநர் - கணவர். சிறு கிள்ளை - சிறு கிளி. தாள் துணை - இரு திருவடிகளை. குறுகு - அடையும். அறமறந்து - முற்றும் மறந்து. பிறர் குணம் இகழ்ந்ததக வில்லியை - பிறர் நற்குணங்களை இகழ்ந்த தகுதி இல்லாதவளை; என்றது பிறர் குணங்களை இகழாமல் மதிப்பவள்.

(அடி1) இறைவி - தேவி. மறை -வேதம். கை எடுத்து ஆர்க்கவும் - வாய் எடுத்து வாழ்த்தவும். கனகள்ளி - பெரிய கள்வி. என் இதய புண்டரிக மலரில் - என் மனம் என்ற தாமரை மலரில். எந்தை - சிவபெருமான். பால் தொகும் இருவர் - இரு பக்கத்தும் உள்ள திருமால், நான்முகன். கதுவு அரிய - பற்றுதற்கு அரிய. இடமருங்கு - இடப்பாகம். தையல் - தையல் நாயகி. இத்தலத்தில் உள்ள அம்பிகையின் திருப்பெயர்.

(3) உணர்வு அரிய ஒன்றை - உணர்தற்கு அருமையான பிரணவத்தை. விண்ட - சிவபெருமானுக்குக் கூறிய. சிறுபிள்ளை - முருகப் பெருமான். அவுணர் முதல் - அசுரரின் வேர். தடிந்த - அழித்த. தனிவில்லி - ஒப்பற்ற வில்லை உடைய சிவபெருமானை. பாட்டு அளி முரல் - பாடல்களை வண்டுடன் பாட. அடி முடியும் இன்றி - முதலும் இறுதியும் இல்லாமல். வெறு வெளி - வெட்ட வெளி. காத்தொறும் - சோலை தோறும்.

(4) மல்லிகைச் சேக்கை - முல்லைமலர்ப் படுக்கை. பெடை - பெண் வண்டு. வடி பசுந்தமிழ் - தெளிந்த பசுமையான தமிழ். பெடை - பெண் வண்டு. துயின்று - உறங்கி. செவ்வழிப் பாட்டினை - செவ்வழிப் பண் அமைந்த பாட்டினை. மாலையில் பாடுதற்குரியது செவ்வழிப்பண். விபஞ்சிபயில் - வீணையைப் பயின்ற. இலஞ்சி - குளம். மதங்கர் - பாணர். தெருமர - மயங்கும்படி. முரன்று - பாடி. (4)

## கற்பக விநாயகக் கடவுள்

### வேறு

353. கடாமுமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு
கராசல மிட்டமெய்க் கஞ்சுகிக் கேற்பவொர்
படாமணி மத்தகத் தந்தியைத் தீர்த்தர்கள்
பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும்
வடாதுபொ ருப்பினில் துன்றுபுத் தேட்கெதிர்
மனோலய முற்றமெய்ப் பண்பினைக் காட்டிய
சடானன னைத்தலைச் சங்கம்வைத் தாற்றிய
சடாயுபு ரத்தருட் கந்தனைக் காக்கவே. (5)

**தெளிவுரை**

(3) வடக்கு மலையில் பொருந்தியிருக்கும் சிவ பெருமானுக்கு எதிரே மன ஒருமை அடைவதற்குக் காரணமான உண்மை நிலையை அறிவித்த ஆறுமுகப் பெருமானை,

(4) தலைச் சங்கம் வைத்து நடத்திய சடாயுபுரத்தில் எழுந்தருளியிருக்கின்ற கந்தப் பெருமானைக் காத்தற் பொருட்டாக,

(1) மதநீரை உமிழ்கின்ற துதிக்கையையும் சினத்தையும் கிம்புரிப் பூண் அணிந்த கொம்பையும் கொண்ட ஒப்பற்ற முகபடாம் அணிந்த மத்தகம் பொருந்திய யானையை

(2) தூய்மையானவர்கள் வழிபடுதற்குரிய அரிய கற்பகக் கன்றான விநாயகப் பெருமானை வழிபடுவோம்.

**விளக்கம்**

(1) கடாம் - மதநீர். உமிழ் - சொரியும். கை - தும்பிக்கை. கதம் - சினம். கிம்புரிக் கோடு - கிம்புரி என்ற அணியை அணிந்த கொம்பு. ஒரு கராசலம் - ஒரு கையாகிய மலை; அதாவது யானை போன்ற விநாயகர். கரம் + அசலம் = கராசலம். அசலம் - மலை. கஞ்சுகி - உடற் கவசம்; சட்டை.

(2) படாம் - முகபடாம். தீர்த்தர்கள் - தேவர்கள். தந்தியை - கொம்பை உடைய யானையை (விநாயகரை) தீர்த்தர்கள் - தேவர்கள்.

(3) வடாது பொருப்பு - வடக்குத் திக்கில் உள்ள மேருமலை. புத்தேள் - சிவபெருமான். மனோலயம் - மன ஒன்றிப்பு. மெய்ப்பண்பு - உண்மை இயல்பு.

(4) சடானன் - சட் + ஆனன்; ஷட் - ஆறு. ஆனனன் - முகத்தை யுடையவன்; ஆறுமுகன்.

சடாயுபுரம் - இத்தலத்தின் பெயர்; இங்குச் சடாயுப் பறவை பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது.

தலைமைத் தமிழ்ச் சங்கம் இப்பதியில் வைத்திருந்ததாகக் கொள்ள வேண்டும். தலைச்சங்கத்து அமர்ந்திருந்து முருகப் பெருமான் தமிழ் வளர்த்தார். ஆதலால் அத் தொடர்பால் இங்ஙனம் கொள்ளப்பட்டதாகவும் கொள்ளலாம்.

முன்னே கூறப்பட்ட விநாயகர் வணக்கம் பொதுவானது. இங்கே உள்ள கற்பக விநாயகர் வணக்கம் இத்தலத்துக்கு உரிய விநாயகர் வணக்கம் ஆகும்.

முடிபு: கந்தனைக் காக்கக் கற்பகக் கன்றினைப் போற்றுவோம். (5)

## பிரம தேவர்

### ஆசிரிய விருத்தம்

354. பைங்காற் கமுகு செம்பழுக்காய்ப்
பவள முதிர்ப்பக் கதிர்ச்செந்நெல்
பனிமுத் துகுக்குஞ் சோணாட்டின்
பரிசு பாடி ஞிமிறிரைப்பக்
கொங்கார்த் திரைக்கு நறைக்காந்தள்
குறிஞ்சி மலரோ டணிந்தநறுங்
குஞ்சிப் பெருமாள் வேதபுரிக்
குமரப் பெருமாள் தனைக்காக்க
செங்கால் கருங்கண் பைந்தொடியார்
சிற்றாய்ப் பாடிப் பெருங்குடியில்
தீம்பால் திருடிக் கட்டுண்டு
திரியா வண்ணந் திருத்தாதைக்
கங்காப் படங்கப் பால்தயிர்நெய்
அருந்தேன் கடலோ டிருந்துண்ண
அகிலம் படைத்துத் தனக்கேற
அன்னம் படைத்த பெருமாளே. (6)

**தெளிவுரை**

(3) சிவந்த கால்களும் கரிய கண்களும் உடைய பசிய வளையலை அணிந்த ஆய மங்கையிடத்துச் சிறிய ஆய்ப்பாடியில் உள்ள பெரிய குடியில் இனிய பாலைத் திருடிக் கட்டுப்பட்டுத் திரியாத வண்ணம் தன் தந்தைக்கு

(4) வாய் திறத்தல் இல்லாதபடி பால், தயிர், நெய் அரிய தேன் என்பனவற்றைக் கடலுடனே இருந்து உண்ணும்படி உலகத்தைப் படைத்தார்; தனக்கு ஏறுதற்கு அன்னப் பறவையையும் படைத்துக் கொண்டவர் பிரமன்.

(1) அப்பெருமான், பசிய காயையுடைய பாக்கு மரங்கள் பழுத்த காய்களாகிய பவளங்களை உதிர்க்கச் செந்நெற்கதிர்கள் குளிர்ந்த முத்துக்களைச் சிந்தும் சோழ நாட்டின் பெருமையை எடுத்துப் பாடி வண்டுகள் ஒலிக்கத்

(2) தேனை நிறைந்து இறைக்கின்ற மணமுள்ள காந்தள் மலர்களைக் குறிஞ்சிப் பூக்களுடன் அணிந்த முடியையுடைய பெருமானும் வேதபுரியில் வாழ்கின்ற முருகப் பெருமானும் ஆன முருகப் பெருமானைக் காப்பாராக!

**விளக்கம்**

பைங்காய் - பசியகாய். கமுகு - பாக்கு. பவளம் - உதிர்ப்ப பவளத்தைப் போல் உதிர்க்க. பனி முத்து உதிர்க்கும் - குளிர்ந்த முத்துக்களை உதிர்க்கும். சோணாட்டின் பரிசு - சோழ நாட்டின் இயல்பு. ஞிமிறு - வண்டு.

(2) கொங்கு - தேன். ஆர்த்து - நிறைத்து. இறைக்கும் - சிந்துகின்ற. நறைக் காந்தள் - மணத்தையுடைய காந்தள் மலர். நறுங்குஞ்சி - நறுமணம் உடைய தலைமயிர். வேதபுரி - வைத்தீசு வரன் கோயில்; வேதம் இத்தலத்தை வழிபட்டமையான் வந்தது இப்பெயர். குமரப் பெருமாள் - முருகப் பெருமான்.

(1) பைந்தொடியார் - பசுமையான வளையலை அணிந்த ஆய மகளிர். சிற்றாய்ப்பாடி - சிறிய ஆயர் பாடி. தீம்பால் -

இனிய பால். கட்டுண்டு - தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டு. திருத்தாதைக்கு - திருமாலான தந்தைக்கு.

(2) அங்காப்பு அடங்க - வாய் திறப்பது இல்லாது ஒழிய. தந்தைக்குப் பால் தயிர் வெண்ணெய் அரிய தேன் ஆகியவற்றை உண்ண அகிலம் படைத்தான் நான்முகன். தானும் உண்பதற்கு உணவு கொண்டான் எனவும் கொள்ளலாம். நெற்கதிரில் முத்து உண்டாகும். ஆதலால் 'கதிர்ச் செந்நெல் மணிமுத்து உதிர்க்கும்' என்றார்.

சோணாடு கமுகு பவளத்தையும் செந்நெல் முத்தையும் உதிர்க்கும். ஆதலால் அதன் இயல்பை 'வண்டுகள் பாட' என்றார்.

முடிபு: அகிலம் படைத்த பெருமான் குமரனைக் காக்க என இயையும். (6)

## தேவேந்திரன்

### வேறு

355. கானாறு கற்பகக் காவுமூ வுலகுமக்
காவென நிழற்றுமொற்றைக்
கவிகையும் குணதிசைக் காவலும் பிறவுமுள
காணியும் காணியாக
வானாறு கோட்டிமய மலைவயிறு வாய்த்ததலை
மகளுக்கு மணமகற்கும்
மருமகளை யுரியதன் திருமக ளெனப்பெற்ற
மாமடிக ளைத்துதிப்பாம்
பானாறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்
பாலாறு பங்கயச்செந்
தேனாறு டன்கடவுள் வானா றெனப்பெருகு
சித்தாமிர் தம்சிவபிரான்
சீர்த்திப்ர தாபநிகர் தினகர புரித்தேவ
தேவனைக் காக்க வென்றே. (7)

**தெளிவுரை**

(3) பால் பொருந்திய செந்நெல்லினது பசுமையான கதிர்களைக் கடித்து மென்மையுடைய பசுமையான குவளை மலர்களை வாயால் மெல்லும் பருத்த கொம்புகளையுடைய எருமைகள், தம் மடிகளாகிய மடுக்களின் மடை திறந்ததனால் உண்டான இனிய பாலாறு தாமரை மலர்களினின்றும்

(4) பெருகும் செந்தேன் ஆறுகளுடன் கலந்து தெய்வத் தன்மையுள்ள வான் கங்கை போன்று வரும் சித்தார்த்தாமிர்த தீர்த்தம் சிவபெருமானின் கீர்த்தியை ஒத்த தினகரபுரியில் உள்ள தேவ தேவனான கந்த வேளைக் காத்தல் வேண்டும் என்று

(1) மணம் கமழும் கற்பகச் சோலையும் மூன்று உலகங்களும் அந்தக் கற்பகச் சோலை போல் நிழலைச் செய்யும் ஒப்பற்ற கொற்றக் குடையும் கீழ்த்திசைக் காவலும் பிற இடங்களிலும் காணி யாட்சியாக

(2) வானத்தை அளாவும் சிகரங்களையுடைய இமய மலையில் தோன்றிய மூத்த மகளுக்கும் அவள் கணவனுக்கு மருமகளாகிய தெய்வ யானையை உரிமையாய்த் தன் மகளாகப் பெற்ற மாமனான தேவேந்திரனின் அடிகளை வணங்குவோம்.

**விளக்கம்**

(1) கான் - நறுமணம். கற்பகக்கா - கற்பகச் சோலை. அக்கா என - அந்தக் கற்பகச் சோலை போல். நிழற்றும் - நிழல் செய்யும். குணதிசை - குணக்கு + திசை; கிழக்குத்திக்கு. காணி - உரிமை. தெய்வ யானையைத் தன் மகளாகப் பெற்றதால் கற்பகக் கா முதலியவை இந்திரனுக்கே உரியன ஆயின.

(2) மருமகள் - தெய்வ யானை. மாமடிகள் - பெண்ணைக் கொடுத்த மாமன். வான் நாறு - வானத்தை அளவுகின்ற. கோடு - சிகரம்; உச்சி.

(3) பானாறும் - பால் + நாறும்; பால் பிடித்த. குதட்டும் - மெல்லும். பணை மருப்பு - பருத்த கொம்பு. மடு மடி மடை திறந்த

- மடிவாகிய மடு மடை திறந்தாற் போன்று. தீம்பால் ஆறு - இனிய பால் ஆறு. பங்கயம் - தாமரை.

(4) கடவுள் வான் ஆறு - தெய்வத்தன்மையுடைய கங்கை ஆறு. சித்தாமிர்த தீர்த்தம் - வைத்தீசுவரன் கோயிலுக்குள் அம்பிகையின் சந்நிதிக்கு முன் உள்ள நீர்நிலையின் பெயர். பாலாறு சீர்த்திக்கும். தேனாறு பிரதாபத்துக்கும் உவமைகள். சீர்த்தி - மிகுபுகழ். புகழுக்கு வெண்ணிறமும் பிரதாபத்துக்குச் செந்நிறமும் உவமை கூறுதல் இயல்பு. தினகரபுரி - தினகரனான கதிரவன் வழிபட்ட தலம். ஆதலால் இப் பெயர்த்து.

முடிபு: தேவ தேவனைக் காக்க என்று மாமடிகளைத் துதிப்போம். (7)

## திருமகள்

356. மானிறக் கடவுடிரு மறுமார்பி னறவிரி
வனத்துழாய்க் காடுமூடி
மாயிருள் வழங்குதன் றிருமாளி கைக்கந்தண்
மணிவிளக் கிட்டுமுட்டாள்
கானிறைக் குங்கமல வீட்டுக்கு நெட்டிதழ்க்
கதவந் திறந்தளித்தும்
காதன்மை காட்டும் கவுத்துவத் துடன்வந்த
கன்னிகையை யஞ்சலிப்பாம்
மீனிறப் புணரியை விழுங்கும் கடல்தானை
வெள்ளமொடு கள்ளமனமும்
மெய்யுமிரு ளத்திரளு மவுணக் கருங்கங்குல்
விடியக் கடுங்குரல்விடும்
தீநிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்துவண்
சிறைமயில் பரிநடாத்தும்
சேவகப் பெருமானை வேதபுரி வருமிளஞ்
சேயைப் புரக்கவென்றே. (8)

**தெளிவுரை**

(3) மீன்மயக்கடலை அடக்கும் வேறொரு கடல் போல் சேனைப் பெருக்கோடு வஞ்ச மனத்துடன் கூடிய தம் மனமும் உடலும் இருண்டிருக்கத் திரண்டிருந்த அரக்கராகிய கருமையான இரவு விடியுமாறு கருங்குரல் எடுத்துக் கூவும்

(4) தீயின் நிறமாகிய உச்சிக் கொண்டையையுடைய வெள்ளைச் சேவலைக் கொடியாய் உயர எடுத்த வளவிய சிறைகளையுடைய மயில் ஆன குதிரை ஊர்தியாக வரும் வீரனான பெருமானை வேதபுரியில் எழுந்தருளியிருக்கும் இளங்குமரனைக் காக்க என்று,

(1) மேகம் போன்ற கரிய நிறத்தையுடைய கடவுளின் (திருமால்) அழகிய மறு அமைந்த மார்பில் நறுமணத்துடன் மலரும் அழகாகிய துளவங் காட்டினால் மூடப் பெற்று

(2) பேரிருள் அடர்ந்த தன் திருமாளிகைக்கு அழகும் தட்பமும் உள்ள மணிவிளக்கு ஏற்றியும் முள்ளுடன் கூடிய காம்பையுடைய மணம் செய்கின்ற தாமரையாகிய வீட்டுக்கு நீண்ட இதழ்களாகிய கதவைத் திறந்து கொடுத்தும் தன் அன்புடைமையைக் காட்டும் கவுத்துவ மணியுடன் தோன்றிய திருமகளைக் கைகூப்பி வணங்குவோம்.

**விளக்கம்**

(1) மால் - மேகம். திருமறுமார்பு - திருவாகிய - இலக்குமி யாகிய களங்கத்தையுடைய மார்பு. சிறந்த இலக்கணமாகிய இது திருமாலின் மார்பில் இருப்பது. இதன் பெயர் ‘ஸ்ரீ வத்சம்’ என்பது. மணிவிளக்கு - இரத்தினதீபம்; இரத்தின விளக்கு.

(2) கான் நிறைக்கும் - மணம் நிரப்பும். கமல வீடு - தாமரை வீடு. நெட்டு இதழ் - நீண்ட இதழ். காதன்மை - அன்புடைமை. கவுத்துவம் - கௌத்துவமணி. இது கதிரவன் போன்று விளங்கு கிறது. மணிவிளக்கு இட்டும், கதவைத் திறந்தும் காதன்மை காட்டும் என்க.

இக்கௌத்துவமணி திருப்பாற்கடலைக் கடைந்த போது எழுந்தது. அதன்பின் இலக்குமி தோன்றினாள்.

(3) மீன்நிறப் புணரி - மீன்மயமான கடல். கடல் தானை - கடல் போன்ற பெரிய படை. அவுணக் கருங்கங்குல் - அசுரராகிய கரிய இரவு. கடுங்குரல் விடும் - கடிய குரலை எழுப்பும்.

(4) தீநிறக்குடுமி - தீயைப் போன்ற கொண்டை. வெண் சேவல் - வெண்மையான சேவற்கோழி. வண்சிறை - வளமான இறகு. மயில் பரி நடாத்தும் - மயிலான ஊர்தியை நடத்தும். சேவகப் பெருமான் - வீரம் உடைய பெருமானான முருகன். புரக்க என்றே - காகக வேண்டும் என்றே. (8)

## கலைமகள்

357. துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன்
சுதைநிறம் சிதைவுறாமே
தொன்மறை கனிந்தூறு மண்பல்நீ ரூறலில்
தூத்துகி ளனைப்புறாமே
நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
நன்னெஞ் செனக்குடிபுகும்
ஞானப் பிராட்டியைச் சொற்கடல் தெள்ளமுதை
நாத்தழும் பத்துதிப்பாம்
சிறைபட்ட தண்டுறைச் சித்தாமிர் தப்பெருந்
தீர்த்தம் திளைத்தாடிய
செஞ்சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளின்
தெள்ளமுத மயமாகலான்
உறைபட்ட சுதைநிலவொ டிளவெயிலு மளவளாய்
உண்ணச் சகோரம்வெஃகும்
ஓங்கெயில் பருதிபுரி முருகனைச் சண்முகத்
தொருவனைக் காக்கவென்றே. (9)

**தெளிவுரை**

(1) சிறைப்படுத்தப்பட்ட குளிர்ந்த துறையையுடைய சித்தா மிர்தம் என்ற பெயரையுடைய பெரிய நீர்நிலையில் மூழ்கிய கதிரவனும் சந்திரனைப் போல் தெளிவாகிய அமிர்த உருவாதலால்,

(4) துளியாகிய அமுதம் போன்ற நிலவுடன் இளவெயிலும் கலந்து சகோரப் பறவை உண்ண விரும்பும் உயர்ந்த மதிலை யுடைய பரிதிபுரியில் எழுந்தருளிய முருகப் பெருமானை ஆறு முகக் கடவுளைக் காப்பாற்றுக என்றே,

(1) பல துறைகளையுடைய மறை பயின்ற நான்முகனின் சிவந்த நாவில் படிந்தும் தன் வெண்மையான நிறம் அழிந்து சிவப்பு நிறம் பொருந்தாமலும், பழைமையான வேதங்கள் முதிர்ந்து ஊறி வரும் மேல்வாய்ப்பல் நீர் சுரத்தலால் வெண்மையான ஆடை நனையாமலும்,

(2) மணம் பொருந்திய வெண்மையான இதழ்களையுடைய தாமரையில் எமது நல் மனத்திற் போல் குடிபுகா நின்ற ஞான நாயகியைக் கலைக் கடலில் தோன்றிய தெளிவாகிய அமுதத்தை - கலைமகளை - நாவில் தழும்பு உண்டாகுமாறு துதிப்போம்.

**விளக்கம்**

(1) துறைப்பட்ட - பல துறைகள் பொருந்திய. மறையவன் - நான்முகன். சுதை நிறம் - வெண்மையான நிறம். அண்பல் நீர் ஊறலில் - பல் நீர் ஊறலில். தூத்துகில் - வெண்மையான ஆடை.

(2) நறைபட்ட - மணம் பொருந்திய. வெண்தோட்டு - வெண்மையான இதழையுடைய. நளினப் பொகுட்டு - தாமரைப் பொகுட்டில். பொகுட்டு - கொட்டை. இருப்பிடம். ஞானப் பிராட்டி - அறிவுச் செல்வி. கலைமகள் நாத்தழும்பு - நாக்கில் தழும்பு உண்டாக.

(3) சிறைபட்ட - சிறை செய்யப்பட்ட. சித்தாமிர்தம் - கோயிலுக்குள் உள்ள நீர்நிலை. செஞ்சுடர்க் கடவுள் - கதிரவன்.

வெண்சுடர்க்கடவுள் - சந்திரன். உறை - துளி. சுதை நிலவு - வெண்மையான நிலவு. அளவளாய் - கலந்து. சகோரம் - சகோரம் என்ற பறவை. நிலாமுகிப்புள். இப்பறவை சந்திர கிரணத்தை உண்டு உயிர் வாழ்வது.

சண்முகத்தொருவனைக் காக்க என்று சொல்கடல் தெள்ளமுதை நாத் தழும்பு ஏறத் துதிப்போம். பருதிபுரம் - கதிரவன் வணங்கியதால் இத்தலம்பருதிபுரம் எனப்படும். பருதி - கதிரவன். (9)

## சத்தமாதர்கள்

### சந்த விருத்தம்

358. பயில்தரு முதுமறை நூலைத் தெரித்தவள்
பகைதொகு புரமெரி மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்வில் குனித்தவள்
எயிறுகொ டுமுதெழு பாரைப் பெயர்த்தவள்
எறிதரு குலிசம்வி டாமல் தரித்தவள்
இடுபலி கொளுமொர்க பாலக் கரத்தினள்
எனுமிவர் எழுவர்கள் தாளைப் பழிச்சுதும்
கயல்திரி சரவண வாவிக் கரைக்குரை
கழலொடு பரிபுர மோலிட் டிடக்கட
களிறொடு களிறெதிர் மோதத் திசைத்திசை
கடுநடை யுளதக ரேறுஞ் சமர்த்தனை
முயல்தரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு
முழுமதி குறைமதி யாகத் துகில்கொடி
முகில்தொடு தடமதில் வேதப் பதித்தனி
முதல்வனை அறுமுக வேளைப் புரக்கவே. (10)

**தெளிவுரை**

(3) கயல் மீன்கள் உலவும் சரவணப் பொய்கைக் கரையில் ஒலிக்கின்ற கழலுடன் சிலம்புகள் ஒத்த மதயானையுடன் மத

யானை எதிர்மோத, திக்குகள் தோறும் வேகமாகிய நடையுள்ள ஆட்டுக்கடாவின் மீது ஏறிய அந்த வன்மையுள்ளவனை,

(4) முயல் கறையுடனே தேய்ந்த மெலிந்து ஒப்பில்லாத நிறை நிலா பிறைச்சந்திரன் ஆகுமாறு, கொடியாடைகள் மேகத்தைத் தீண்டும் பெரிய மதில் சூழ்ந்த வேதபுரியில் வாழும் ஒப்பில்லாத முதல்வனை ஆறுமுகங்களையுடைய கந்தனைக் காக்கும் பொருட்டாக,

(1) பழகுதற்குரிய பழைய வேதநூலை உணர்த்தியவள் அபிராமி, பகையாய் ஒன்று கூடிய முப்புரங்களில் தீ மூண்டு எரியுமாறு நகைத்த மகேசுவரி, மணியுடைய கிரவுஞ்ச மலை பிளக்கும்படி நெடிய வேற்படையைச் செலுத்திய கௌமாரி, ஒலிக்கின்ற கடலில் புகை எழுமாறு நீண்ட வில்லை வளைத்த நாராயணி,

(2) கொம்பினால் தோண்டி ஏழ்உலகங்களையும் பெயர்த்த வராகி, எறிதற்குரிய வச்சிராயுதத்தை இடைவிடாது தரித்துள்ள இந்திராணி, இடும் பலி ஏற்கும் ஒப்பில்லாத கபாலத்தை ஏந்திய கையுடைய காளி என்ற ஏழு மங்கையர் ஆகிய இவர் அடிகளைத் துதிப்போம்.

**விளக்கம்**

ஏழு மங்கையர் (1) வேத நூலை உணர்த்தியவள் அபிராமி. (2) முப்புரங்கள் நெருப்பு மூண்டு எரியச் சிரித்தவள் மகேசுவரி. (3) கிரவுஞ்ச மலை பிளக்கும்படி வேற்படையை எறிந்தவள் கௌ மாரி. (4) கடலில் புகை எழ வில்லை வளைத்தவள் நாராயணி. (5) கொம்பினால் ஏழு உலகங்களையும் பெயர்த்தவள் வராகி. (6) வச்சிராயுதத்தைக் கொண்டவள் இந்திராணி. (7) பிச்சை ஏற்கக் கபாலத்தைக் கையில் உடையவள் காளி.

(1) முதுமறை - பழைய வேதம். புரம் - முப்புரம். எரிமூள - தீஎழ. பனிவரை - கிரவுஞ்ச மலை. வார்வில் - நீண்ட வில். குனித்தவள் - வளைத்தவள்.

(2) எயிறுகொடு - கொம்பைக் கொண்டு. எழுபார் - ஏழு உலகங்கள். பெயர்த்தவள் - பேர்த்து எடுத்தவள். எறிதரு குலிசம் - எறிவதற்கு உரிய வச்சிரப்படை. பலி - பிச்சை. கபாலக் கரத்தினள் - மண்டை ஓட்டை ஏந்தியவள். பழிச்சுதும் - வணங்குவோம்.

(3) கயல்திரி - கயல் மீன் திரியும். சரவணவாவி - சரவணப் பொய்கை. கழல் - வீரக்கழல் என்ற அணி. பரிபுரம் - சிலம்பு. ஒலிட்டிட - ஒல் (ஓலம்) இட்டிட. கட களிறு - மதம் உடைய ஆண் யானை. தகர் - ஆட்டுக்கடா. சமர்த்தனை - ஆற்றல் உடைய வனை.

(4) முயல் தரு கறை - முயல் போன்ற களங்கம். முகில் தொடு - மேகத்தைத் தொடும். வேதப்பதி - வேதமுதல்வன். தடமதில் - பெரிய மதில்.

முடிபு: அறுமுக வேளைப் புரக்க எழுவர் தாளைப் பழிச்சுதும். (10)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்

### வேறு

359. முறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு
சொர்க்கத் தலத்தோடு சேடசய னத்தையும்
முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர்தம்
அக்குக் கொடுத்தானை மாதிரமொ ரெட்டையும்
இறைப்பொழு தினில்பொடி படுத்தருள் கொடுக்கவல
சத்திக் கரத்தானை ஊதியமெ னத்தனை
இருப்பினும் நடப்பினும் நினைப்பவ ரிருக்களமர்
சித்தத் திருப்பானை ஆறிருபு யத்தனை
வெறுப்பொடு விருப்பினை அறுத்தவர் உளத்துமலர்
பத்மப் பதத்தானை வேதபுரி யில்சின
விடைக்கொடி வலத்தினு மடக்கொடி இடத்துமுள
முக்கண் திருத்தாதை யார்பணிகு ருக்களை

மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையும்
ஒக்கப் படைத்தானை மூவிருமு கத்தனை
மருத்துவர் வசுக்கதிர் உருத்திர ரெனப்பொலியும்
முப்பத் துமுக்கோடி தேவர்கள்புரக்கவே. (11)

**தெளிவுரை**

(1) கட்டு அவிழ்ந்த மணம் உள்ள நூற்றிதழ்களையுடைய அழகிய தாமரை மலர்ப்பீடத்தையும் மேல் உலகத்துடன் அனந்த சயனத்தையும் தம் முடித்தலைகளைத் தன் அடியில் பதித்தவர்க்கு அருள் செய்தவனை, எண்திசைகளையும்

(2) இமைப் போதில் பொடியாக்கி அருள் செய்ய வ்ல்ல வேற்கையனை, தன்னால் பெரும் பேறாக இருந்தாலும் நடந்தாலும் நினைப்பவர் இருக்க எம் போன்றவர் மனத்தில் இருப்பவனை, பன்னிரு தோள்கள் உடையவனை,

(3) வெறுப்புடன் விருப்பை அறுத்தவரின் உள்ளத்தில் மலர்கின்ற தாமரை அடிகளை உடையவனை, வேத புரியில் சினத்தையுடைய காளைக் கொடியை வலப்பக்கத்தும், மடக் கொடியை இடப் புறத்தும் அமைத்துள்ள மூன்று கண்களையுடைய திருத் தந்தையான சிவபெருமான் வணங்குதற்குரிய ஆசாரியனை,

(4) பிரமனைத் தலையில் குட்டி உலகம் முழுவதையும் படைத்தவனை, ஆறு முகங்கள் உடையவனை, மருத்துவர் இருவர் வசுக்கள் எண்மர் கதிரவர் பன்னிருவர் உருத்திரர் பதினொருவர் ஆக முப்பத்து மூவர் எனக் கூறுமாறு விளங்கும் முப்பத்து முக்கோடி தேவர்களும் காப்பார்களாக!

**விளக்கம்**

(1) முறுக்கு உடை - கட்டு அவிழும். நறை - நறுமணம். சததளம் - நூற்றிதழ். மலர்த்தவிசு - தாமரை மலராகிய இருக்கை. சேட சயனம் - அனந்த சயனம். முடித்தலை அடியில் வைத்து வணங்குபவர்க்கு இந்திரப் பதவியையும் பிரம பதவியையும் திருமால் பதவியையும் அளிப்பார் என்பது கருத்து. மாதிரம் - திசை.

(2) இறைப் பொழுது - இமைப்போது. பொடி படுத்து - தூளாக்கி. கொடுக்கவல்ல சத்திக் கரத்தனை - கொடுக்க வல்ல வேற்கை உடையவனை. ஊதியம் - பெரும்பேறு. சித்தத்து இருப் பானை - உள்ளத்தில் இருப்பவனை. மலர்பத்மப்பதத்தானை - மலருகின்ற தாமரைத் திருவடிகளை. மடக்கொடி - உமை யம்மையார். முக்கண் திருத்தாதை - மூன்று கண்களை யுடைய தந்தையார் ஆன சிவபெருமான்.

(4) மறைக்கிழவன் - பிரமன். இருவர் - அச்சுவினி மருத் துவர். வசுக்கள் எண்மர் - அநலன், அகிலன், பராசகன், முதலி யோர். ஆதித்தர் பன்னிருவர் - தாத்துரு, சக்கரன், அரியமான் முதலியவர். பதினொரு உருத்திரர், மாதேவன், அரன், உருத்திரன் முதலியவர்.

முடிபு: கொடுத்தானை, கரத்தானை, இருப்பானை, புயத் தானை, பத்மப் பதத்தானை, குருக்களை, படைத்தானை, முகத்தனை, முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்க! (11)

## 2. செங்கீரைப்பருவம்

(செங்கீரை ஆடும் பருவம் என்பது பொருள். இப் பருவத்தில் நிகழும் செயல், ஒரு காலை மடக்கி, ஒரு காலை நீட்டி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்த்தி முகம் அசைய ஆடுதல். இஃது ஐந்தாம் மாதத்தில் நடைபெறுவது.)

(பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது. இளங்குழந்தை 'ங்க்' 'ங்க்' என்று கூறக் கேட்டுத்தாய் முதலியவர் மகிழும் பருவம். இது பொருள் அற்ற ஓசை. ஆயினும் இனியது. இதனைச் செங்கீரை என்றனர் என்பது ஒரு சாரார் கருத்து. கீர் - சொல். ஆயினும் குழந்தையின் இயற்கையான ஆடல் என்பதே பொருளாகக் கொள்வர்.)

### ஆசிரிய விருத்தம்

360. இருக்கோ லிடும்பரி புரக்கோல மும்நுதலில்
இட்டபொட் டுஞ்சுட்டியும்
எரிமணிப் பட்டமும் கட்டுபொன் அரைஞாணும்
இளஞாயிறுஉ தயம்செயும்

உருக்கோல மும்சூழி யக்கொண்டை யும்முச்சி
உச்சியும் வாளிமுத்தும்
ஒள்ளொளி ததும்பும் குதம்பையும் கண்டுகண்டு
ஓடரிக் கண்களிக்கும்
மருக்கோல நீலக் குழல்தைய லாட்கரு
மருந்தா யிருந்ததெய்வ
மகக்கோல மேமுதிர் கிழக்கோல மாய்க்குற
மடந்தைமுன் நடந்துமற்றத்
திருக்கோல முடனொரு மணக்கோல மானவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடியருளே. (1)

**தெளிவுரை**

(1) வேதங்கள் ஒலிக்கின்ற பரிபுர அணியின் அழகையும், நெற்றியில் இட்ட பொட்டையும் சுட்டியையும் நெற்றிப் பட்டத்தையும் கட்டப்பட்ட பொன் அரைஞாணினையும் இளங் கதிரவன் உதிப்பதைப் போன்ற

(2) உடல் அழகையும் சூழியக் கொண்டையினையும் உச்சி முச்சியினையும் வாளி முத்தினையும் ஒட்பமாகிய ஒளி வீசும் குதம்பையினையும் பார்த்துப் பார்த்துச் செவ்வரி படர்ந்த கண் களிக்கும்

(3) மணம் அழகு நீல நிறம் என்பனவற்றை இயற்கையாக உடைய கூந்தலையுடைய உமையம்மையார்க்கு அரிய மருந்தாக இருந்த தெய்வத்தன்மை உடைய பிள்ளைக் கோலமே முதிர்ந்த கிழக் கோலமாய்க் குறத்தியான வள்ளியின் முன் நடந்து, அந்தத்

(4) திருக் கோலத்துடன் ஒப்பில்லாத மணக் கோலமும் கொண்டவனே! செங்கீரை ஆடியருளுக. இறந்து மறுபடியும் பிறவி எடுக்கும் தெய்வங்களுக்குத் தலைவனாய் விளங்குபவனே! நீ செங்கீரை ஆடியருளுக!

**விளக்கம்**

(1) இருக்கு - வேதம். ஒலிடும் - ஒல் + இடும் ஒலிக்கின்ற. பரிபுரம் - காலணிவகை. கோலம் - அழகு. எரிமணிப்பட்டம் - ஒளிவீசும் மணியால் ஆன சுட்டி.

(2) உருக் கோலம் - வடிவழகு. சூழியக் கொண்டை - ஒருவகைக் கொண்டை. முச்சி - உச்சிக் கொண்டை. வாளி - மேல் காதில் உள்ள ஓர் அணி. பொன் அரை ஞாண் - பொன்னால் ஆன அரைஞாண். இளஞாயிறு - உதய சூரியன். இஃது இறைவர் மேனிக்கு உவமை. குதம்பை - காதணி. ஒடு அரிக்கண் - வரியை யுடைய கண். ஒள்ளொளி - மிக்க ஒளி.

(3) மரு - மணம். கோலம் - அழகு. குழல் - கூந்தல். தையலாள் - பார்வதி. குறமடந்தை - குறவர் பெண்ணான வள்ளி நாயகி. வள்ளியம்மையின் தந்தை வந்த போது முருகக் கடவுள் கிழ வடிவம் கொண்டார். பின்பு அப்பெருமாட்டியை விநாயகர் அருளால் அடைந்து மணக் கோலம் கொண்டார். மணக்கோலம் - திருமண வடிவம். மணக் கோலம் ஆனவன் - விளி; மணக் கோலம் கொண்டவனே! (1)

361. கும்பாதி காரிய மெனத்தமை நிமித்தமாகக்
கொண்டவகி லாண்டங்களின்
குழுவுக்கு மற்றுத்த மிருவர்குறி யும்தலைக்
கூடினும் தான்தனக்கச்
சொம்பாதி அன்மைக் கனைத்தும்தன் மயமெனும்
சுருதிகரி யாவைத்தும்அச்
சுருதிக்கும் எரிசுடர்ப் பருதிக்கும் இரவிகுல
தோன்றற்கும் இளவலுக்கும்
சம்பாதி யொடுநற் சடாயுவுக் கும்பெருந்
தவமுனிவ ரெழுவருக்கும்
தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த
தம்பிரான் றிருமேனியில்

செம்பாதி யும்கொண்ட தையல்நா யகிகுமர
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடியருளே. (2)

**தெளிவுரை**

(1) குடம் முதலிய காரியங்கள் குயவன் முதலியவரை நிமித்த காரணமாகக் கொண்டாற்போல் சிவசக்திகளை நிமித்த காரணமாக்க கொண்ட அகிலாண்ட கோடிக்கு தம் இருவர் குறிகள் கலந்திருந்தாலும்

(2) தனக்கு அந்தப் பொருள் பாதியேல் அங்ஙனம் வாராமைக்கு எல்லாம் தன் மயம் என்ற வேதங்களைச் சான்றாகக் கொண்டிருந்தும், அந்தச் சுருதிக்கும் எரியும் கதிர்களை யுடைய கதிவரனுக்கும் கதிரவன் குலத் தோன்றலான இராமனுக்கும் இலக்குவனுக்கும்

(3) சம்பாதியுடன் நல்ல சடாயுவுக்கும் பெருந்தவம் உடைய எழுவருக்கும் குளிர்ந்த அருள் செய்த தீராத வினைகளைத் தீர்த்தருளிய சிவபெருமானின் திருமேனியில்

(4) சரிபாதியையும் பகிர்ந்து கொண்ட தையல் நாயகிக்கு மகனே! செங்கீரை ஆடியருளுக. செத்து மறுபடியும் பிறக்கின்ற தெய்வங்களின் தலைவனே! செங்கீரை ஆடியருளுவாயாக!

**விளக்கம்**

(1) கும்பாதி காரியம் என - கும்பம் முதலிய பொருள்கள் குயவன் முதலியவரை நிமித்த காரணமாகக் கொண்டாற் போல, தமை நிமித்தமாகக் கொண்ட - சிவம் சத்திகளாய தங்களை நிமித்த காரணமாகக் கொண்ட. அகிலாண்டம் - அகிலம் + அண்டம். அகிலம் - எல்லாம். அண்டம் - உலகம். குழுவுக்கு - தொகுதிக்கு. இருவர் குறியும் - ஆண் பெண் சின்னங்கள். கூடினும் - கூடினாலும் அதனால் அமைதி தோன்றாமலும்.

(2) சொம் - சொத்துக்கள். பாதி அன்மைக்கு - சிவத்துக்கு உரிய பாதியும் தனக்கே உரியது என்பதைத் தெரிவித்தற்கு.

அனைத்தும் தன் மயம் எனும் சுருதி - சர்வம் சத்திமயம் என்னும் வேத வாக்கியம். கரி - சான்று. தோன்றல் - இராமன். இளவல் - இலக்குவன்.

(3) சம்பாதி முதலியவர் இத்தலத்தை வழிபட்டுப் பேற்றைப் பெற்றவர். அநூருவின் மக்கள், சம்பாதி, சடாயு. தவ முனிவர் எழுவர் - அத்திரி, ஆங்கீரசன், அகத்தியன், புலத்தியன், வசிட்டன், கோதமன், மரீசி. செம்பாதி - சரிபாதி. கும்பாதி காரியங்கள் மண் தண்டம் கலசங்கள் குலாலன் என்பனவற்றை முறையே முதற்காரணம் துணைக்காரணம் நிமித்த காரணங் களாகக் கொண்டதுபோல், உலகங்களின் குழு ஐம்பூதம் மாயை சங்கரன் என்பனவற்றை முறையே முதற்காரண துணைக்காரண நிமித்த காரணமாய்க் கொண்டு விரிந்துள்ளது என்பது கருத்து.

முடிபு: தையல் நாயகி குமர! தெய்வங்கள் மணவாள! செங்கீரை ஆடியருளுக!

362. கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக்
களிற்றோடு முட்டவிட்டுக்
ககனவட் டத்தினொடு பருதிவட் டத்தைவளை
திகிரிவட் டத்திலிட்டு
முக்கண் திருத்தாதை கோதண்ட மெனவைத்த
வேதண்ட மாதண்டமா
மூதண்ட கூடந்த்ரி கூடத் தொடும்சாடி
மூரிக் கடாசலமவன்
மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட
மேகபட லத்துமொண்டு
மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப்பெய்து
விளையாட்டு வீரர்களொடும்
திக்கெட்டும் விளையாடு சேனா பதிக்கடவுள்
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே. (3)

**தெளிவுரை**

(1) கைகளுக்கு எட்டும் எட்டுத் திக்கு யானைகளையும் பிடித்து அந்த யானைகளுடன் முட்ட விட்டு, வான் மண்டலத்துடன் பருதி வட்டத்தை உலகை வளைந்திருக்கும் சக்கர வாள மலையிலே இட்டு,

(2) மூன்று கண்களைக் கொண்ட திருத்தந்தையார் தாம் வில்லாகக் கொண்ட மேருமலையை அரிய தண்டாயுதமாகக் கொண்டு, வான் முகட்டையும் திரிகூட மலையையும் மோதி வலிமையுள்ள யானை

(3) அவனது திருமேனிக்கு இட்ட சட்டைக்கு ஒப்பான மேகத்திரையினின்றும் நீரை முகந்து மேற்குக் கடலைப் பெரிதாக்கி கீழ்க்கடலில் புகவிட்டு விளையாடும் வீரனோடு

(4) எட்டுத் திசைகளிலும் விளையாடும் சேனாபதிக் கடவுளே! செங்கீரை ஆடியருளுக! இறந்து மறுபடியும் பிறக்கும் தெய்வங்களுக்குத் தலைவனே! செங்கீரை ஆடியருளுக.

**விளக்கம்**

(1) எட்டுக்களிறு - எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகள் அவையாவன: அயிராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சுகம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம்.

பருதிவட்டம் - கதிரவன் மண்டலம். திகிரி வட்டம் - சக்கரவாள மலை. ககன வட்டம் - வான வட்டம்.

(2) கோதண்டம் - வில். வேதண்டம் - மேருமலை. மாதண்டமா - பெருந்தண்டாயுதமாகக் கொண்டு. அண்ட கூடம் - அண்டத்தின் உச்சி. த்ரிகூடம் - திரிகூட மலை. மூரிக் கடாசலம் - பெரிய யானை. கடம் + அசலம்; மூரி - வன்மை; கடம் - மதநீர்; அசலம் - மலை. கடாசலம் முனிவர் இயற்றிய வேள்வியில் பிறந்தது. அண்ட கூடம் - அண்டத்தின் உச்சி.

(3) மெய்க்கு இட்ட - உடம்புக்கு இட்ட. நேரிட்டிடப்பட்ட - ஒத்த. மேக படலத்து - மேகபடலத்தால். யானைத் தோல் மேக படலத்துக்கு உவமை. வீரர் - நவவீரர் முதலியவர். நீரை மொண்டு பெய்து விளையாடும் சேனாபதிக் கடவுள். படலம் - கூட்டம்.

முடிபு: சேனாபதிக் கடவுள்! செங்கீரை ஆடியருள். தெய்வங்கள் மணவாள! செங்கீரை ஆடியருள் என இயையும். (3)

363. மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான்
மணிமார்பு வாணிக்குநான்
மறைமுதலி செந்நாத் தடந்தைய லாளொடும்
வயித்தியக் கடவுளார்க்கு
மெய்விரிக் கும்தொண்ட ருள்ளத் தடத்தினொடு
வேதச் சிரம்கடுப்ப
வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும்
வேளூர திசைதிசைதொறும்
கைவகுத்து அரமகளிர் குரவையாட் டயர்பெருங்
கயிலைத் தடஞ்சாரலும்
கனகாச லத்தும்வள ரிமயா சலத்துமுயர்
கந்தமா தனவெற்பெனத்
தெய்வதப் பிடியொடும் விளையாடு மழகளிறு
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே. (4)

**தெளிவுரை**

(1) மை தீட்டப்பட்ட கண்களையுடைய திருமகளுக்குச் சக்கரப் படையையுடைய திருமாலின் கௌத்துவ மணி அணிந்த மார்பை நிகர்க்கவும், நாமகளுக்குப் பிரமனிடத்துச் சிவந்த நாவை ஒக்கவும், தையல் நாயகியோடும் வைத்திய நாதர்க்கு

(2) வாய்மையான மலர் விரிந்த அடியாரின் உள்ளத் தடத்துடன் வேத முடியை ஒக்கவும் வேதபுரி கந்தபுரி புள்ளூர் என்று சொல்லப்படும் வேளூரில் உள்ளவனே!

(3) உயர்ந்த கந்த மாதன மலையைப் போல எல்லாத் திக்குகளிலும் கை வகுக்கப்பட்டுத் தெய்வ மகளிர் குரவைக் கூத்தாடும் பெரிய கயிலைச் சாரலிலும்,

(4) மேருமலையிலும் வளரும் இமயமலையிலும் தெய்வ யானையோடு விளையாடும் இளங்களிறே! செங்கீரை யாடியருளுக!

**விளக்கம்**

(1) மை விழிச் செங்கமல வல்லி - மை பூசப்பட்ட தாமரையில் வீற்றிருக்கும் கொடி போன்ற திருமகள். நேமியான் - சக்கரப்படையையுடைய திருமால். வாணி - கலைமகள். தையலாள் - பார்வதி.

(2) உள்ளத்தடம் - மனம் என்ற பொய்கை. வேதச்சிரம் - வேதத்தின் உச்சி. கடுப்ப - ஒப்ப.

(1-2) திருமாலின் மார்பு முதலியவற்றைத் திருமால் முதலியவர் இருப்பிடமாகக் கொண்டது போல் வேளூரை இடமாகக் கொண்டவன் முருகன்.

வேதபுரி, கந்தபுரி, புள்ளூர் என்பவை வைத்தீசுவரன் கோயிலின் பெயர்கள்.

(3) கைவகுத்து - பிரிவு செய்து கொண்டு. குரவையாட்டு - கை கோத்து ஆடுதலை. சாரலும் - சாரலிலும். கந்தமாதன வெற்பு - கயிலை மலையைச் சார்ந்துள்ள முருகப் பெருமானுக்கு உரிய ஒரு மலை. வெற்பென - மலையில் விளையாடுவது போல்.

(4) தெய்வதப்பிடி - தெய்வயானை. மழகளிறு - இளைய ஆண் யானையே; விளி.

(4)

364. மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி
வில்லியார் இளவலோடும்
விதிமுறை வணங்கச் சடாயுபுரி யில்கருணை
வெள்ளமென வீற்றிருக்கும்
ஆனே றுயர்த்திட்ட வையற்கும் அம்மைக்கும்
அருமருந் தாகிநின்ற
ஆதிப் பிரானென்று மும்முதல் கடவுளும்
அடித்தொழும் பாற்றமற்றக்
கூனேறு மதிநுதல் தெய்வக் குறப்பெண்
குறிப்பறிந்து அருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவள்தொண்டைவாய்த்

தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே. (5)

## தெளிவுரை

(1) மீன்கள் உள்ள ஆழமான கடலில் தீயை இட்ட இராமன் தம்பியோடும் விதி முறையாக வணங்கும் சடாயுபுரியில், அருள் வெள்ளமோடு வீற்றிருக்கின்ற

(2) விடையைக் கொடியாகக் கொண்ட தந்தைக்கும் தாய்க்கும் அருமருந்தாக நின்ற முதற்கடவுளே என்று மூவராகிய முதன்மைக் கடவுளும் திருவடித் தொண்டு செய்ய,

(3) அந்த வளைவு கொண்ட இளம் பிறை போன்ற நெற்றியையுடைய தெய்வத் தன்மை பொருந்திய வள்ளி நாயகியின் குறிப்பு உணர்ந்து அவளது அருகில் போய் உன் குற்றேவல் நான் செய்யும்படி ஏவுக என்று குறைகூறி வேண்டி அவளது கோவைப்பழம் போன்ற வாயினின்றும் வெளிப்படும்

(4) தேன் போன்ற இனிய சொல்லைக் கேட்பதற்கு மிக்க விருப்பம் கொண்டு நின்றவனே! செங்கீரையாடியருளுக! இறந்து மறுபடியும் பிறக்கும் இயல்புகளையுடைய தெய்வங்களின் தலைவனே, செங்கீரை யாடியருளுக.

## விளக்கம்

(1) மீன் ஏறு - மீன்கள் மிக்க. 'ஏறு' என்பது 'மிக்க' என்ற பொருளில் வந்தது. குண்டு - ஆழம். அகழி - தோண்டப்பட்டது. அதாவது கடல். வில்லியார் - இராமன். இளவல் - இளைய வனான இலக்குவன். சடாயுபுரி - சடாயு வணங்கிய தலமாதலால் இப்பெயர்.

(2) ஆன் ஏறு - காளை. ஐயற்கும் - சிவபெருமானுக்கும். அம்மைக்கும் - உமையம்மையான தாய்க்கும். மும்முதற்கடவுள் - அயன், அரி, அரி ஆகிய மூவர். அடித்தொழும்பு - குற்றேவல்.

(3) கூன் ஏறு - வளைவு பொருந்திய. குறப்பெண் - குறவர் குலத்தில் தோன்றிய வள்ளி நாயகி. தொண்டை - கொவ்வைக் கனி.

(4) வாய் ஊறி நின்றவன் - விருப்புடன் நின்றவன். தேன் ஊறு கிளவி - தேன் போன்ற சொல். (5)

## வேறு

365. செம்பொன டிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை அரைஞாண் அரைமணி யொடுமொளி
திகழரை வடமாடப்
பைம்பொன் அசும்பிய தொந்தியொ டும்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதல்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல மும்குழை
காதும் அசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியும் முச்சிக்
கதிர்முத் தொடும்ஆட
அம்பவ ழத்திரு மேனியு மாடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (6)

தெளிவுரை

(1) திருவடியில் செம்பொன்னால் இயன்ற சிறிய கிண்கிணி யோடு சிலம்புகளும் கூடி ஆடவும், இடையில் அரைஞாண் கயிறும் உடை மணியோடும் ஒளி விளங்கும் அரை வடங்களும் ஆடவும்,

(2) பசும் பொன் போல் ஒளிவீசும் தொந்தியுடன் சிறு வயிறும் சரிந்தாடவும், பட்டம் அணிந்த நெற்றியில் விளங்கும் பொட்டுடனே வட்ட வடிவமான சுட்டியும் பதிந்து ஆடவும்,

(3) கம்பிகள் அமைந்த குண்டலமும் குழையுடன் கூடிய காதும் அசைந்தாடவும், கட்டப்பட்ட சூழியும் உச்சியும் ஒளி முத்துக்களோடு ஆடவும்,

(4) அழகிய பவளம் போன்ற திருமேனி ஆடவும் செங்கீரை ஆடியருளுக! முதன்மையுடைய வைத்திய நாத புரியில் வீற்றிருக்கின்ற குகனே, செங்கீரையாடியருளுக.

**விளக்கம்**

(1) கிண்கிணி - ஒருவகைக் காலணி. அரைஞாண் - அரை ஞாண் கயிறு. அரைமணி - இடுப்பில் அணியும் ஒருவகை அணி. இதனை 'உடைமணி' என்றும் உரைப்பர்.

(2) அசும்பிய - ஒளி விளங்கும். பண்டி - வயிறு. வட்டச் சுட்டி - வட்டமான சுட்டி என்ற அணி.

(3) கம்பி விதம் பொதி - கம்பி வகைகளையுடைய. குழை காது - குழை அணிந்த காது; வடிந்த காது எனவும் பொருள் கொள்ளலாம். முச்சி - உச்சிக் கொண்டை.

(4) அம்பவழம் - அழகிய பவளம். ஆதி - முதன்மை. (6)

366. குழையொடு குழையெதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில்வீசக்
குமுத விதழ்க்கனி வாயமு தூறிய
குறுநகை நிலவூர
முழுவயி ரப்புய வலயமு முன்கை
முதாரியும் ஒளிகால
முத்த மரும்பி யெனக்குறு வேர்வும்
முகத்தில் அரும்பியிடப்
புழுதி யளைந்த பசுந்திரு மேனிப்
பொங்கொளி பொங்கியெழப்
புண்டரி கங்கள் மலர்ந்த விழிக்கடை
பொழியருள் கரைபுரள

அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (7)

**தெளிவுரை**

(1) குழை என்ற அணியுடன் குழை என்ற அணி எதிரே மோதிக் காதில் அணிந்த குண்டலங்களும் ஒளி வீச, செவ்வல்லி போன்ற இதழுடன் கூடிய கனிவாயில் அமுதம் சுரந்த சிறு நகை யான நிலவு விரிய,

(2) முழு வயிர மணியினால் செய்யப்பட்ட வாகுவலயமும் முன்கையில் அணிந்த முதாரியும் ஒளியை யுமிழ, முத்துக்கள் அரும்பினால் போலச் சிறு வியர்வை முகத்தில் அரும்ப,

(3) புழுதி படிந்த பசிய திருமேனியில் பேரொளி பொங்கி எழ, தாமரை மலர் போல மலர்ந்த கடைக்கண்கள் பொழியும் அருள் வெள்ளம் கரைபுரண்டு ஓட,

(4) அழகு பழுத்து முதிர்ந்த இளங்கனியே, செங்கீரை ஆடியருளுக! முதன்மை வாய்ந்த வைத்திய நாத புரித்தலத்தில் வீற்றிருக்கும் குகனே செங்கீரையாடியருளுக.

**விளக்கம்**

(1) குழை - காதணி. குழை வேறு, குண்டலம் வேறு. அமுதூறிய - அமுதம் ஊற. நிலவு ஊர - நிலவு வெளிப்பட.

(2) புயவலயம் - தோள்வளை. முதாரி - முன்கையில் அணியும் ஓர் அணிவகை. ஒளிகால - ஒளி வீச. முத்தம் அரும்பி - முத்துப் போல் வியர்வை தோன்றி. புழுதி அளைந்த - புழுதியில் படிந்த. புண்டரிகங்கள் மலர்ந்த - தாமரைகள் மலர்ந்த. கரைபுரள - கரை புரண்டு ஓட.

(4) இளங்கனி - என்றும் இளையராய் இருந்தலால் இளங்கனி என்றார். கனி - உவமையாகு பெயர். கனி, குகன் - விளிகள்.

(7)

367. விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழு தலறியுன்
மென்குரல் கம்மாமே
கரைவுறும் அஞ்சன நுண்துளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புனல் அருவி படிந்துடல்
கருவடி உண்ணாமே
உருவ மணிச்சிறு தொட்டில் உதைந்துநின்
ஒண்பத நோவாமே
ஒருதா ளுந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்து
அருள்பொழி திருமுக மசைய வசைந்தினிது
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (8)

## தெளிவுரை

(1) கைவிரல்கள் சுவைக்கப்பட்டுப் பழுத்து அமுதம் சுரந்த மென்மையான உதடுகள் உலர்ந்து போகாமலும் விம்மியும் பொருமியும் கீழே விழுந்து அலறியும் நின் மென்மையான குரல் குறையாமலும்,

(2) கரையும் மையின் நுண்ணிய துளிகள் சிந்திக் கண்கள் என்னும் தாமரை மலர்கள் சிவக்காமலும், அழும் கலங்கல் நீர் ஆகிய அருவியில் மேனி கருமை அடையாமலும்

(3) நிறம் உள்ள மணிகள் பதித்த சிறு தொட்டிலை உதைத்து நின் அழகிய திருவடிகள் நோகாமலும், ஒரு காலை உந்தி எழுந்து இரண்டு கையும் ஒருங்கு பதித்துத் தலை நிமிர்ந்து,

(4) அருளைப் பொழியும் அழகிய முகம் அசைய அசைந்து செங்கீரை ஆடுக. முதன்மையுடைய வயித்திய நாதபுரியில் வீற்றிருக்கும் குகனே, செங்கீரை ஆடுவாயாக!

**விளக்கம்**

(1) விரல் சுவையுண்டு - பெருவிரல் சுவையைச் சுவைத்து. கம்மாமே - கம்மாமல்; குரல் ஒலி குறையாமல்.

(2) அஞ்சனம் - மை. நுண்டுளி - நுண்ணிய துளி. கண்மலர் - கண்ணாகிய மலர். சிவவாமே - சிவப்புநிறம் அடையாமலும்.

(3) கலுழிப்புனல் - கண்மையைக் கரைத்துவரும் கலங்கிய நீர். மையைக் கலந்து வரும் நீர் உடலில் வழிந்து அதனைக் கருமை அடையுமாறு செய்ய.

(4) ஒருகால் உந்தி எழுந்து இருகையும் ஒருங்கு பதித்து நிமிர்ந்து அருள் பொழி திருமுகம் அசைய அசைந்தினி யாடுக:- செங்கீரையின் இலக்கணத்தை இது விளக்குகிறது. அதாவது ஒரு காலை ஊன்றி எழுந்து இரண்டு கைகளையும் சேர்த்துத் தலை நிமிர்ந்து இரண்டு கைகளையும் சேர்த்துத் தலை நிமிர்ந்து ஆடுதல் செங்கீரையின் இலக்கணம்.

(3) உருவம் - நிறம். மணிச்சிறு தொட்டில் - மணி பதிக்கப் பட்ட சிறிய தொட்டில். ஒண்பதம் - ஒளியுடைய கால். நோவாமே - நோகாமல்.

ஒரு தாள் - ஒருகால். உந்தி - ஊன்றி. இருகையும் ஒருங்கு பதித்து - இரண்டு கைகளையும் நிலத்தில் ஒன்றாய்ப் பதித்து. நிமிர்ந்து - தலை நிமிர்ந்து. (8)

சந்த விருத்தம்

368. கும்பம தக்களி யானைஇ ரண்டே ஒன்றேமைக்
கொண்டல்வி ழிக்கயல் மீனுமி ரண்டே
கொண்டேகிச்
சம்பர னைப்பொரு சேவகன் வந்தான் வந்தான்முற்
சண்டைகொ ளற்கென நேர்வரு பெண்பா லன்பாயே
அம்பவ ளக்கொடி யேவளர் கொம்பே யென்றேநீ
அன்றுபு னத்துயிர் சோர்வது கண்டே முன்போதும்
கம்பம தத்தர்ச கோதர செங்கோ செங்கீரை
கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. (9)

**தெளிவுரை**

'தன்னை வெல்லக் காமன் ஆண் வடிவத்தை விட்டுப் பெண் வடிவு கொண்டு வள்ளியாக வந்ததாக' முருகன் அவளிடம் கூறியது இது.

(1) குடத்தைப் போன்ற மத்தகத்தையுடைய மதம் மிக்க இரு யானைகளும், கரிய மேகம் ஒன்றும், விழித்த கயல்மீன்கள் இரண்டும் கொண்டு வந்து

(2) சம்பரனைப் பொருது வென்ற வீண் ஆனவன் எதிர் நின்று போர் செய்ய வந்தான் என்று கூற, எதிரே வரும் பெண்ணிடத்தில் அன்பு கொண்டு,

(3) 'அழகிய பவளக் கொடியே! வளர்கின்ற பூங்கொம்பே' என்று கூறியபடியே அந்நாளில் தினைப்புனத்தில் நீ உயிர் தளர்வதைக் கண்டு நினக்கு எதிரே வந்த,

(4) கட்டுத் தறியில் கட்டப்பட்ட மதயானை வடிவு உடையவரான விநாயகருக்கு முன் பிறந்தவனே! நீ செங்கீரை ஆடியருளுக! கந்தபுரி என்ற வைத்தீசுவரன் கோயில் என்ற பதியில் வீற்றிருக்கின்ற கருணாநிதியே! செங்கீரை ஆடுக!

**விளக்கம்**

(1) கும்பமதக் களிறு - குடம் போன்ற மத்தகத்தை உடைய ஆண் யானை. யானை இரண்டு - கொங்கைகள் இரண்டு. மைக் கொண்டல் - கருமையான மேகம்; கூந்தல். விழிக்கயல் - விழியாகிய மீன்.

'ஏகிப்பொரு சேவகன் கொண்டு வந்தான்' என இயைக்க.

(2) சம்பரன் - ஓர் அசுரன். இவனை மன்மதன் கொன்றான். ஆதலால் மன்மதனுக்குச் 'சம்பராரி' என்று பெயர் உண்டாயிற்று. என - என்று நினைக்க. பெண்பால் - பெண்ணிடம். சண்டை கொளற்கு - போரிட.

(3) அம்பவளக் கொடி - அழகிய பவளக்கொடி. கொம்பே - கொம்பு போன்றவளே. முன்போதும் - முன்வந்த.

(4) கம்ப மதத்தர் - கட்டுத் தறியில் கட்டப்படும் மதம் உடைய யானையைப் போன்றவர்.

வள்ளி தம் கருத்துக்கு இணங்காமல் வாட்டம் அடைவதைப் போக்கிட விநாயகர் யானை வடிவு கொண்டு வந்தார். ஆதலால் 'நீ அன்று புனத்துயிர் சோர்வது கண்டே முன் போதும் கும்ப மதத்தர் சகோதர' என்றார். கருணாநிதி - அருட்செல்வ; விளி. (9)

369. திங்கள் நுதல்திரு மாதொடு நின்றே மன்றாடும்
செங்கண்வி டைக்கொடி யோனருள் கன்றே
யொன்றேயாய்
எங்களு ளத்தமு தூறுக ரும்பே அன்பாளர்க்கு
இன்பம ளிக்குமெய்ஞ் ஞானம ருந்தே எந்தாயின்
கொங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே வண்டுதும்
கொந்தள கக்குற மான்வளர் குன்றே என்றோதும்
கங்கைம கட்கொரு கான்முளை செங்கோ செங்கீரை
கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. (10)

**தெளிவுரை**

(1) பிறையைப் போன்ற நெற்றியையுடைய பார்வதியுடன் நின்று தில்லையம்பலத்தில் ஆடுகின்ற சிவந்த கண்களையுடைய காளையைக் கொடியாக உயர்த்தவனான சிவபெருமான் பெற்ற கன்றே! ஒரு பொருளாகி

(2) எம் உள்ளத்தில் அருள் சுரக்கச் செய்யும் கரும்பே! அன்புடையவர்க்கு இன்பத்தை உதவும் உண்மையான அறிவமுதமே! எம் தாயான உமையம்மையின் கரிய கூந்தலில் வாழ்கின்ற புள்ளிகளையுடைய வண்டே! பூங்கொத்துக்கள் அணிந்த கூந்தல் பாரத்தையுடைய மான் வளர்தற்குரிய குன்றமே!

(3) என்று அழைக்கின்ற கங்கா தேவிக்கு ஒரு மகனே! செங்கீரை ஆடியருளுக! வைத்தீசுவரன் கோயில் பதியில் வீற்றிருக்கும் கருணாநிதியே, செங்கீரை ஆடியருளுக.

**விளக்கம்**

(1) மாது - உமையம்மை. மாதொடு நின்றே மன்றாடும் - உமையம்மை காண இறைவன் ஆடுவதால் இங்ஙனம் உரைத்தார். செங்கண் விடைக் கொடியோன் - சிவந்த கண்ணை உடைய காளையைக் கொடியில் உடையவன். கன்றே - மகனே; குழந்தையே.

(2) கரும்பே - கரும்பைப் போன்றவனே. அன்பாளர் - அடியவர். எம் தாயின் - எம் அன்னையான உமையம்மையின்.

(3) கொங்கு அலர் - தேனையுடைய மலர். மைக்குழல் - கருமையுடைய கூந்தல். பொறி வண்டே - புள்ளியுடைய வண்டே. சிவபெருமான் உமையம்மையாருக்கு உபதேசம் செய்தபோது முருகப்பெருமான் அத் தேவியின் கூந்தலில் வண்டின் வடிவாக இருந்து வேதம் முதலியவற்றை அறிந்தனர் என்று சைவநூல் கூறும்.

(4) கங்கை மகட்கு ஒரு கால் முளை - கங்கையின் மகனே! கால்முளை - மகன். (10)

## 3. தாலப்பருவம்

(தாலப்பருவம் - தாலாட்டைக் கவனிக்கும் பருவம் என்பது பொருள். தாலாட்டையேல், தாலாட்டையேல் என்ற அடுக்கு, 'ஓ'வுடன் கூடி தாலேலோ என இணைந்தும் 'தாலோ' என்று மருவியும் வரும்.)

### ஆசிரிய விருத்தம்

370. பில்கும் பசுந்தேன் அசும்பிருந்த
பின்தா ழளகத்து அரமகளிர்
பேதைக் குறும்பு விளையாடும்
பேரா யத்துச் சிறுமருங்குற்கு
ஒல்குங் கொடிபோய் நுடங்கியிட
ஓங்கும் பளிக்கு நிலாமுற்றத்து

உயர்சூ ளிகையின் மரகதத்தின்
ஒளிகால் வீசத் தெளிவிசும்பிற்
பல்குஞ் சுரபி தரங்கநெடும்
பாகீ ரதியின் கரைக்கிளைத்த
பசும்புல் லெனச்செந் நாவளைக்கும்
பைம்பொற் றலங்கள் பலகோடி
மல்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (1)

**தெளிவுரை**

(1) சிந்தும் பசுமையான தேன் கசிந்து கொண்டிருக்கின்ற பின்னால் தொங்கும் கூந்தலையுடைய பெண்கள் அறியாமையால் குறும்பாக விளையாடும் பெரிய மகளிர் கூட்டத்தின் இடைக்கு

(2) தோற்கும் பூங்கொடிகள் போய் அசைதலாலும், உயர்ந்த சிகரத்தில் மரகதத்தின் ஒளி வீசுதலாலும் தெளிந்த விண்ணுலகத்தில்

(3) தெய்வப் பசுக்கள் அலைவீசும் நெடிய கங்கையின் கரையில் செழித்திருக்கின்ற பசிய புல் என்று எண்ணிச் சிவந்த நாவினால் வளைக்கின்ற பசும் பொன்னால் ஆன மாடங்கள் பலகோடி,

(4) நிறைவான செல்வப் பெருக்கையுடைய கந்த புரியில் வாழ்பவனே! தாலோ தாலேலோ! மலைமகளாகிய பார்வதி வயிற்றில் பிறந்த மணியே, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

(1) பில்கும் - துளிக்கும். பேதைக்குறும்பு - அறியாப்பருவ மகளிர்; பேதைப்பருவத்து விளையாட்டு என்பதுமாம். பேர் ஆயம் - மகளிர் கூட்டம்.

(2) நுடங்கிட - அசைய. பளிக்கு நிலா முற்றம் - பளிங்கால் ஆன நிலா முற்றம். சூளிகை - மாளிகையின் உச்சியறை.

(3) தெளி விசும்பு - தெளிந்த வானம். பல்கும் - பரவிய. சுரபி - தெய்வப்பசுக்கள். பாகீரதி - கங்கை. செந்நா - சிவந்த நாக்கு. பைம்பொன் தலங்கள் - பசும் பொன்னால் இயன்ற மாளிகைகள்.

(4) மல்கும் - நிறைந்த. மலையாள் - மலைமகளான பார்வதி.

மரகத மணியின் ஒளியைப் புல் என்று எண்ணித் 'தெய்வப் பசுக்கள்' தம் நாவை நீட்டின. இது அப்பதியின் செல்வச் சிறப்பை விளக்குகிறது. (1)

371. தொடுக்குந் தொடைவெண் துகில்கொடிகள்
தொடுநீர்ப் பரவை முகம்புழுங்கத்
தோன்றும் பருதி மணித்திண்தேர்
தூண்டும் கலின வாம்பரியை
முடுக்கும் சுடர்ப்பொன் தலத்திழைத்த
முழுநீ லத்தி னொழுகொளியின்
முழுகும் கடவுள் மால்யானை
முகிலின் தோன்ற அகலிடநின்று
அடுக்குங் களிறென்று அரமகளிர்
ஐயுற் றிடத்தன் வெளிறுமுடம்பு
அளறு படிந்த தெனக்கங்கை
யாற்றுப் பசும்பொன் அசும்புபுனல்
மடுக்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (2)

## தெளிவுரை

(1) தொடுக்கப்பட்ட வரிசையான வெண் கொடிச் சீலைகள் தோண்டப்பட்ட நீரையுடைய கடலின் முகமானது வெதும்பத்

தோன்றும் கதிரவனின் அழகிய வலிய தேரைச் செலுத்தும் கடிவாளம் பூட்டிய தாவிச் செல்லும் குதிரைகளை,

(2) தாக்கி விரைவுபடுத்தற்கு இடமான ஒளியுடைய பொன் மாளிகையில் பதிக்கப்பட்ட முழு நீலத்தின் ஒளியில் முழுகும் தெய்வத்தன்மையுடைய பெரிய யானை மேகம் போல் தோன்ற மண் உலகத்தினின்று

(3) வந்த யானை என்று தெய்வப் பெண்கள் ஐயம் கொள்ள அதைக் கண்டு அந்த யானை சேறு படிந்துள்ளது என்று எண்ணிக் கங்கையாற்றின் பசும்பொன் போல் தோன்றும் நீரில்

(4) குளிக்கும் பார்வதியின் வயிறு வாய்த்த முழுமணியே, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

(1) துகிற்கொடிகள் - கொடிச்சீலை. தொடுநீர்ப் பரவை - தோண்டப்பட்ட நீரையுடைய கடல்.

முகம் புழுங்க - முகம் வெதும்ப. பரிதிமணித் திண்தேர் - கதிரவனின் அழகிய திண்ணிய தேர்.

கலின வாம்பரி - கடிவாளம் பூட்டிய தாவி ஓடும் குதிரை. வாம் - 'வாவும்' என்பது விகாரப்பட்டது.

(2) முடுக்கும் - விரைவுபடுத்தும். சுடர்ப் பொன்தலம் - ஒளிரும் பொன்னால் ஆன மாளிகைகள். முழு நீலம் - தோளா மணி; முழுமையான நீல மணி. கடவுள் மால் யானை - தெய்வத் தன்மையுடைய யானை; அஃது இந்திரனின் ஐராவதம், அந்த யானை நீல மணியின் ஒளியில் மூழ்குதலால் கரிய நிறத்துடன் விளங்கியது.

(2-3) தெய்வ மகளிர் தன்னைப் பூமியில் உள்ள கரிய யானை என்று ஐயம் கொண்டதை அறிந்து அந்த வெள்ளையானை தன்மேல் சேறு படிந்ததாக நினைத்து அச்சேறு நீங்கக் கங்கை நீரில் மூழ்கியது.

(3) அரமகளிர் - தெய்வ மகளிர். வெளிறும் உடம்பு - வெண்மையான உடல். அளறு படிந்தென - சேறு படிந்துள்ளது என்று. பசும்பொன் அசும்பு புனல் - பசும்பொன் போல் ததும்பும் நீர்.

(இச்செய்யுள் முந்தைய பாட்டைப் போல் கந்தபுரியின் செல்வப் பெருக்கை விளக்குகிறது.) (2)

372. தீற்றுஞ் சுதைவெண் நிலவெறிப்பத்
திரள்மா மணிகள் வெயில்விரிக்கும்
செம்பொன் தலத்துப் பேரமர்க்கண்
சிறியார் நறிய அகில்புகையிட்டு
ஆற்றுங் குழற்காட் டினைப்புயலென்று
ஆட மயில்கண் டம்பவளத்
தரும்பு நகையைச் சகோரப்புள்
அருந்த விரிந்த முழுநகைவிண்
ஊற்று நிலவுக் கிந்துசிலை
ஒளிர்மா ளிகையும் சூளிகையும்
உருகிப் பெருகும் கலுழிவெள்ளம்
உவரோ டுவரிக் கடற்புலவ்வு
மாற்றும் கடவுள் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (3)

**தெளிவுரை**

(1) பூசப்பட்ட சுண்ணச் சாந்து வெண்மையான நிலவு ஒளியை வீசக் கூட்டமான பெரிய மாணிக்கங்கள் ஒளியைப் பரப்பும் செம்பொன்னால் கட்டப் பட்ட மேல் மாடத்தில், போரிடும் கண்களையுடைய சிறுமியர் நறுமணம் கொண்ட அகில் புகையை ஊட்டும்,

(2) கூந்தலை மேகம் என்று நினைத்து மயில்கள் ஆடும். அவற்றைப் பார்த்த மகளிரின் பவளம் போன்ற வாயில் குறுநகை

தோன்ற. அதைச் சகோரப்பறவை உண்ண விரைந்தது கண்டமகளிர் முழுநகை புரிய நகைவிண்டு

(3) பரவியூற்றும் நிலாவுக்குச் சந்திர காந்தக்கல்லைப் பதித்த ஒளி விளங்கும் மாடங்கள். அவற்றினின்றும் மேன் மாடங்களி னின்றும் உருகிப் பெருக்கெடுத்து ஓடும் கலங்கல் வெள்ளமானது கடலின் உவர்ப்புடன் புலால் நாற்றத்தையும்

(4) மாற்றும் கடவுள் தன்மையுடைய கந்தபுரியின் வாழ்வாய் விளங்குபவனே! தாலோ தாலேலோ பார்வதியம்மையின் திரு வயிற்றில் உதித்த மணியைப் போன்றவனே, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

மகளிர் அகிற்புகையிட்டுக் கூந்தலை ஆற்றினர். அப் புகையை மேகம் என்று எண்ணிய மயில்கள் ஆடின. அவற்றைப் பார்த்த மகளிர் குறுநகை கொண்டனர். அப்புன்னகையைச் சகோரப் பறவை நிலவு என எண்ணி உண்டது. அதனால் முழுநகை மகளிர்க்குத் தோன்றியது. அந் நகையான நிலவு ஒளியால் சந்திரகாந்தக்கல் உருகியது. உருகி ஓடிய அந்நீரானது கடலில் கலந்தது; அதன் உப்புத்தன்மையையும் புலால் நாற்றத் தையும் அந்நீர் போக்கியது.

(1) தீற்றும் - பூசப்பட்ட. சுதை வெண்ணிலவு எறிப்ப - சுண்ணாம்பினின்று நிலவு ஒளி எழ. மாடங்களில் பதிக்கப்பட்ட மணிகள் வெயிலைப் போல் ஒளிவீசும். செம்பொன் தலம் - செம் பொன்னால் ஆன மாளிகை. சிறியார் - இளஞ்சிறுமியர். நறிய - நறுமணம் உடைய.

(2) ஆற்றும் - உலர்த்தும். குழற்காடு - கூந்தல் காடு. புயல் - மேகம். அம்பவளம் - அழகிய பவளம். சகோரப்புள் - சகோரப் பறவை. இது நிலவு ஒளியை உண்ணும் வழக்கம் உடையது. விண்டு - வெளிப்பட்டு.

(3) இந்து சிலை - சந்திரக்காந்தக்கல். இந்து - சந்திரன். சிலை - கல். இது நிலவின் ஒளிக்கு உருகும் தன்மையுடையது.

கலுழிவெள்ளம் - கலங்கல் வெள்ளம். சூளிகை - மாடத்தில் அமைந்த உச்சி அறை. உவர் - உப்புத் தன்மை. புலவு - புலால் நாற்றம்.

(4) மாற்றும் - போக்கும். (3)

373. கிளைக்குஞ் சகரர் தொட்டபெருங்
கிடங்கென் றிடங்கர் மாவியங்கும்
கீழ்நீ ரழுவக் குண்டகழிக்
கெழுமு புனல்தெண் திரைமேய்ந்து
திளைக்கும் கமஞ்சூல் நெடும்புயலைச்
சிறுகண் பெருங்கைப் பகடென்றோர்
செங்கண் களிறு பிளிறநிமிர்
திகிரி கிரியென் றிவர்ந்துடலம்
இளைக்கும் படிவிண் தொடநிவந்த
எழில்பொன் புரிசை விண்டுபதத்து
ஏறு மேணி பொற்றருவுக்
கிடுவே லியுமா யேழுலகும்
வளைக்கும் கடவுள் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (4)

**தெளிவுரை**

(1) நெருங்கிய சகர புத்திரர் தோண்டிய பெருங்கடல் என்று நினைத்து முதலைகள் உலவுகின்ற கீழ் நீரையுடைய பள்ளமான ஆழ்ந்த அகழியில் நிறைந்த நீரின் தெளிவான அலைகளை மேய்ந்து

(2) நெருங்கிய நிறைந்த கருப்பத்தை யுடைய பெரிய மேகத்தைச் சிறிய கண்களையும் பெரிய கையையும் உடைய யானையாகும் என்று நினைத்து ஒப்பில்லாத யானைகள் முழக்கம் இட, உயர்ந்த சக்கரவாள மலை என்று எண்ணி ஏறி

(3) உடல் மெலியுமாறு வானத்தைத் தீண்டுமாறு உயர்ந்த அழகிய பொன்மதில் வானமான இடத்துக்கு ஏறுதற்குரிய ஏணியும் அழகிய கற்பக மரத்துக்கு இட்ட வேலியுமாய் ஆகி, ஏழ் உலகையும்

(4) வளைக்கின்ற தெய்வத் தன்மையையுடைய கந்தபுரிச் செல்வமே தாலோ தாலேலோ! பார்வதியின் வயிற்றில் உதித்த முழுமணி போன்றவனே! தாலே தாலேலோ.

**விளக்கம்**

கந்தபுரியில் உள்ள நீர் அகழியைக் கடல் என மேகங்கள் எண்ணி அதில் நீர் குடிக்கின்றன. அம் மேகங்களை யானைகள் தம் இனம் என்று எண்ணி முழக்கம் இடுகின்றன. அந்த வொலியைக் கேட்ட மேகங்கள் அடுத்துள்ள மதிலைச் சக்கரவாள மலை என எண்ணி அவற்றில் ஏறுகின்றன. அம்மதில் வானத்தில் ஏறுதற்கு வைத்த ஏணியாயும் கற்பக மரங்களுக்கு வேலியாயும் அமைந் துள்ளது என்பது கருத்து.

(1) கிளைக்கும் - நெருங்கிய. சகரர்புத்திரர் - சகரன் என்பவர்களின் மக்கள். அவர்களால் கடல் தோண்டப்பட்டது என்க. பெருங்கிடங்கு - கீழ்க் கடல். இடங்கர்மா - முதலையாகிய விலங்கு. கீழ்நீர் - ஊற்று நீர். குண்டகழி - ஆழமான அகழி. தெண்திரை மேய்ந்து - தெளிவான அலைகளைக் குடித்து.

(2) கமஞ்சூல் - நிறைவான கருப்பம். நெடும் புயல் - பெரிய மேகம். பகடு - யானை. யானை சிறு கண்களையும் நீண்ட துதிக்கையையும் உடையது. பிளிற - முழக்கம் இட. திகிரி கிரி - சக்கரவாள மலை. இவர்ந்து - ஏறி.

(3) விண் தொட - வானைத்தீண்ட. நிவந்த - உயர்ந்த. எழில் பொன் புரிசை - அழகுடைய பொன் மதில். விண்டுபதம் - வானம். பொன்தரு - கற்பக மரம்.

(4) வளைக்கும் - சூழும். மலையாள் - பார்வதி. (4)

374. சோலைப் புறமுப் புடைக்கனிகள்
தூக்கு முடத்தெங் கிமையவர்தம்
தோன்றல் திருவோ லக்கத்துத்
தோகை மயிலி னடங்குயிற்றும்
ஏலக் கருங்கொந் தளஅளகத்
திளமா தருக்கு முதிர்வேனில்
இளைப்பாற் றுதற்குத் தாற்றொடுஞ்செவ்
விளநீர் கொடுப்ப வீற்றுளைந்த
காலப் புயலின் முகம்துடைக்கும்
கமுகு பழுக்காய்ப் பவழமுடன்
கதிர்முத் திட்டுச் செழும்பாளைக்
கற்றைக் கவரி புடையிரட்டும்
மாலைப் பழனப் பருதிபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (5)

## தெளிவுரை

(1) சோலைகளில் தேங்காய்களையுடைய வளைந்த தென்னை மரங்கள் தேவர் மன்னன் இந்திரனின் அவையில் தோகையை உடைய மயிலைப் போன்று நடனம் செய்கின்ற

(2) மயிர்ச்சாந்து அணிந்த கரிய குழற்சியாகிய கூந்தலை யுடைய இளைய மகளிர்க்கு முதுவேனிற் பருவத்தின் மெலிவைத் தீர்ப்பதற்கு தாறுகளோடும் செவ்விள நீர்களைக் கொடுக்க இறுதிக் காலத்தில் வருந்தின.

(3) கார்கால மேகத்தின் முகத்தைத் துடைக்கின்ற பாக்கு மரங்கள் பழுத்த காயான பவளத்தோடு ஒளி பொருந்திய முத்துக்களை விரித்துச் செழித்த பாளைகளாகிய கற்றைச் சாமரங்களைப் பக்கத்தில் நிற்கும் வரிசையான வயல்கள் சூழ்ந்த கந்தபுரியின் வாழ்வாக விளங்குபவனே! தாலே தாலேலோ! பார்வதியின் மணி வயிற்றுதித்த முழுமையான மணி போன்றவனே! தாலோ தாலேலோ!

**விளக்கம்**

(1) முப்புடைக் கனிகள் - மூன்று பக்கமும் புடைத்து விளங்கும் தேங்காய். முடத்தெங்கு - வளைந்த தென்னை மரங்கள். இமையர்தம் தோன்றல் - தேவர்களில் மன்னனான இந்திரன். திருவோலக்கம் - அத்தாணி மண்டபம்; கொலு மண்டபம். மயிலின் - மயில் போல். நடம் குயிற்றும் - நடனம் செய்யும்.

(2) ஏலம் - மயிர்ச்சாந்து. கொந்தள அளகம் - கொத்தான முன் உச்சி மயிர். தாறு - காய்க் குலை. செவ்விளநீர் - செவ்விள நீர்க்காய்கள். ஈற்றுளைந்த - ஈன்று வருந்திய.

(3) புயல் - மேகம். கதிர் முத்து இட்டு - பாளையில் உள்ள பூ அரும்புகள். பாளையான கவரியை. புடை இரட்டும் - இருபக்கத்து வீசும்.

(4) மாலைப் பழனம் - வரிசையான வயல்கள். (5)

### வேறு

375. மாலி மயத்து மடப்பிடி பெற்று
வளர்த்த இளங்களிறே
மழவிடை யேதிரு மாமடி கட்கென
வைத்த கவுத்துவமே
மூல மெனக்குல நான்மறை ஓலிடு
முழுமுத லேமூவா
முக்கண் கனிகனி யும்சுவை யேதனி
முத்திக் கொருவித்தே
காலை யிளங்கதி ருக்கெதிர் முதிரும்
கதிர்செம் பவளமுடன்
கதிர்முத் திட்டுவ ணங்கக் கன்னல்கொல்
கமுகுகொ லெனவளரும்
சாலி வயல்தமிழ் வேளூ ரடிகேள்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ (6)

**தெளிவுரை**

(1) பெரிய இமய மலையில் தோன்றிய இளம் பிடியானது பெற்று வளர்த்த யானைக்கன்றே! இளமை பொருந்திய காளையே! திருமாமனான திருமால் மார்புக்கு ஏன வைத்த கௌத்துவ மணியே!

(2) யாவற்றுக்கும் மூலம் என்று கூறும் மேலான நான்கு வேதங்களும் முறையிடுவதற்குரிய முழு முதற் பொருளே! அழியாத மூன்று கனிகளையுடைய கனியிடத்துப் பழுத்த சுவையே, ஒப்பற்ற வீட்டுக்கு ஒரு காரணமே.

(3) காலைப் போதில் தோன்றும் இளங்கதிரவனுக்கு எதிராக முதிர்கின்ற நெற்கதிர்கள் ஆகிய செம்பவளங்களுடன் ஒளியுள்ள தன் முத்துக்களையும் இட்டு வணங்கக் கரும்போ, கமுகோ என்று கண்டவர் கூறும்படி வளர்கின்ற

(4) செந்நெல் வயல் சூழ்ந்த தமிழ் வளர்கின்ற வேளூர் அடிகளே! தாலோ தாலேலோ, தமிழ்ச்சங்கத்தின் தலைமைப் புலவனே, தாலோ, தாலேலோ!

**விளக்கம்**

(1) மால் இமயத்து - பெரிய இமயமலையில். மடப்பிடி - பார்வதி. மழவிடையே - இளைய காளையே! மாமடிகள் - மாமனார். கவுத்துவமே - கௌத்துவ மணியே.

(2) ஓலிடும் - ஓலம் இடும்; கூறும்; அழைக்கும். முக்கண்கனி - சிவபெருமான். தனி முத்தி - ஒப்பில்லாத வீடு பேறு. வித்தே - மூல காரணம் ஆனவனே!

(3) கதிர் செம்பவளம் - ஒளியுடைய சிவந்த பவளம். பெரியோரைப் பார்க்கப் போகும் போது காணிக்கைப் பொருளை இட்டு வணங்குதல் மரபு. அதுபோல் கதிரவனை நெற்கதிர் இட்டு வணங்குவதாகக் கூறப்படுகின்றது. கன்னல் - கரும்பு. கமுகு - பாக்கு. கொல் - இடைசொல்.

(4) சாலி - நெல். வேளூர் அடிகேள் - வேளூரில் வீற்றிருக்கின்ற அடிகளே. (6)

376. கருமுகி லுக்கரி தாம்அடி வாரம்
கண்டிரு பறவைகள்தம்
கண்களி பொங்கவொர் பறவை முடித்தலை
காணா துட்குவரப்
பொருபுன லருவித் தலையின் மிசைத்தவழ்
புதுமதி நிலவொழுகப்
புள்ளூ ரிற்பொலி வெள்ளி மலைக்கண்
பொன்மலை யைக்குவவு
குருமணி வயிரப் புயமெனும் எட்டுக்
குவடுஞ் சுவடுபடக்
குத்திப் பொருமிரு கோடு படைத்ததொர்
கூந்தல் பிடிபெற்றுத்
தருமொரு தொந்தித் தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (7)

தெளிவுரை

(1) கரிய மேகத்துக்கும் காணுதற்கு அரிதான அடிவாரத்தை இரண்டு பறவைகள் கண்டு தம் கண் களிப்பு மிக, ஒரு பறவை யானது முடித்தலையினைக் காண இயலாமல் வெட்கி வந்தது. வர,

(2) அலை மோதும் கங்கை நீரையுடைய உச்சி மீது தவழ்கின்ற புதுமதியின் நிலவு ஒளிர திரட்சியாக நிறம் உடைய அழகிய வயிரத்தை நிகர்த்த தோள்கள் என்னும் எட்டுக்குவடும் தழும்பு படக் குத்திப் போர் ஆற்றும் இரு கொம்புகளையுடைய ஒப்பில்லாத கூந்தலையுடைய பெண் யானை ஒன்று பெற்றுத் தந்த

(4) தொந்தியையுடைய விநாயகர்க்குத் தம்பியே, தாலோ தாலேலோ! தமிழ்ச் சங்கத்தின் தலைமைப் புலவனாய் இருந்தவனே, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

இப்பாடலில் சிவபெருமானைப் பொன்மலையாய் உருவகிக்கின்றார்.

(1) கருமுகிலுக்கு - கரிய மேகம் போன்ற திருமாலுக்கு. அடிவாரம் - திருவடி; அடிப்பகுதி. இருபறவை சம்பாதி, சடாயு. ஓர் பறவை - அன்னமாக வடிவு கொண்ட நான்முகன். உட்குவர - அஞ்சிவர. அருவி - கங்கை. வெள்ளி மலைக்கண் பொன் மலை - வெள்ளி மலையில் வீற்றிருக்கும் சிவபெருமான். சிவபெருமான் பொன் மலை எனப்பட்டார்.

(3) பிடி - அம்பிகை

பொன்மலை என உரைத்தற்கு ஏற்ப அதன் அடிவாரம் மேகத்தால் அறிதற்கரிதாயது எனவும், அன்புள்ள இரண்டு பறவை களால் அறிந்து மகிழ்தற்குரியது எனவும், ஒரு பறவையால் காணற்கு அரிய முடியை உடையது எனவும், அருவியும் சந்திரனும் தலையில் உச்சியில் உள்ளது எனவும், எட்டுக் குவடு களைக் கொண்டது எனவும், அவை ஓர் யானையினாலே குத்தப் படுவது எனவும், அம்மலையைக் குத்தும் பெண் யானையால் ஈன்று எடுக்கப்பட்ட யானைக்கு இளையோய் எனவும் முடித்தார்.

(4) தந்திக்கு - விநாயகருக்கு; தந்தத்தை உடைமையால் 'தந்தி' எனப்பட்டார். (7)

377. உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட
ஒளிவிடு முழுமணியே
உயர்மறை நூல்கலை முடிவின் முடிந்திடும்
ஒழுகொளி மரகதமே
விண்ணொடு மண்ணை விழுங்கி அருள்கதிர்
விரியும் இளஞ்சுடரே
மெய்ப்புலன் மேய்ந்து சமைந்தவொர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே
புண்ணிய நாறுமொர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே

புள்ளூ ரெனவெம துள்ளத் தடநிறை
புத்தமு தக்கடலே
தண்ணொளி பொங்கிய கருணா நிதியே
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (8)

**தெளிவுரை**

(1) உள்ளம் உருகுகின்ற அடியாரின் அறியாமை என்ற இருள் நீங்க ஒளிரும் முழுமாணிக்க மணியே! உயர் மறை நூல்களும் முடிவில் மறையும் கலையும் ஆகியவற்றின் இறுதியில் முடியப் பெற்ற ஒழுகும் ஒளியையுடைய மரகதமே!

(2) வானுடனே மண்ணையும் உட்கொண்டு அருள் என்ற கதிர்கள் விரியப் பெறும் ஞாயிறே! உண்மையான அறிவால் மேயப் பெற்று விளங்கும் ஒப்பில்லாத மனவீட்டை விளங்கச் செய்யும் விளக்கின் ஒளியே!

(3) புண்ணியம் விளங்கும் ஒரு பெண்மணி கனிந்து தந்த தூய்மையான நல்ல பழமே! புள்ளூரில் போல எம் மனமாகிய இடத்தில் நிறைந்த புதிய அமுதக் கடலே!

(4) குளிர்ந்த ஒளி மிக்க கருணாநிதியே! தாலோ தாலேலோ! தமிழ்ச் சங்கத்தின் தலைமைப் புலவா, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

(1) இருள் - அறியாமை; அஞ்ஞானம். கலை - ஆறு சாத்திரங்களும் பிற பல கலைகளும். கலை முடிவில் முடிந்திடும் என்பதற்கு ஆடையின் தலைப்பில் முடிந்திடும் என்பது வேறு பொருள். உள் - மனம்.

முடிவில் என்பதை மறைநூல் என்பதின் இறுதியில் கூட்டி, வேத முடிவிலும் ஆகமம் முதலிய நூல்களின் இறுதியிலும் அறுபத்து நான்கு கலைகளின் முடிவிலும் எனவும் கொள்ளலாம்.

(2) விண் - வானம். மெய்ப்புலன் - உண்மை ஞானம். வீட்டை - உள்ளம் என்ற வீட்டை. புண்ணியம் நாறும் - முப்பத் திரண்டு அறங்களைச் செய்த. பெண்கனி - உமையம்மையார்.

(4) தண்ணொளி - குளிர்ந்த ஒளி. (8)

### சந்த விருத்தம்

378. தோலாத முத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தொடு வேலா நூலா நூலோதும்
சீலாம லைக்கொடி பாலா கீலா மேலாகும்
தேவாதி பற்கொரு தேவா ஓவா தேகூவும்
காலாயு தக்கொடி வீறா வேறா வேறேறும்
காபாலி பெற்றகு மாரா வீரா பேராளா
சேலார்வ யல்குரு கூரா தாலோ தாலேலோ
சேனாபதிப்பெரு மாளே தாலோ தாலேலோ. (9)

### தெளிவுரை

(1) தோற்காத மூன்று வகையான தமிழ் பயின்ற நாவை யுடையவனே! கெடாத மாமர வடிவில் வந்த சூரபன்மனின் வேர் அற்றுப்போகும்படி எடுத்த வேலை யுடையவனே! நூற்கப்படாத மறை நூல்களில் கூறப்படும் ஒழுக்கம் வாய்ந்தவனே.

(2) மலைமகளான பார்வதியின் மகனே! ஒளி உருவம் உடையவனே! மேன்மையான தேவ அதிபனுக்கு ஒப்பில்லாத தேவனே! இடைவிடாது கூவும்

(3) சேவல் கொடியை யுடைய மேன்மை கொண்டவனே! ஒருவரும் ஏறாத ஏற்றின் மேல் ஏறும் சிவபெருமானின் மகனே! வீரனே! புகழ் உடையவனே!

(4) மீன்கள் நிறைந்த வயல் சூழ்ந்த புள்ளூரனே! தாலோ தாலேலோ, சேனாபதிப் பெருமாளே! தாலோ, தாலேலோ!

**விளக்கம்**

(1) தோலாத - தோற்காத. நாவா - நாவை உடையவனே! மூவா மாவா - கெடாத மாமரமாக. சூர்வேர் - சூரபன்மனின் முதல். அற - கெட. தொடுவேலா - தொடுத்த வேலை யுடையவனே! நூல் ஓதும் - அறநூல் கூறும்.

(2) சீலா - ஒழுக்கம் உடையவனே! கீலா - ஒளி யுடையவனே; மேலானவனே! ஓவாதே - இடைவிடாமல். காலாயுதம் - காலையே ஆயுதமாகக் கொண்ட சேவல். வீறா - பிறருக்கு இல்லாத பெருமையுடையவனே! காபாலி - சிவ பெருமான். பேராள - புகழ் உடையவனே.

(4) சேல் ஆர் - மீன்கள் பொருந்திய. குருகூரா - புள்ளூரனே. பெருமான் - பெருமையுடையவன். இது ‘பெருமாள்’ எனவும் வழங்கும். (9)

379. ஊனாயு யிர்க்குயி ரானாய் தாலோ தாலேலோ
ஓதாதுணர்த்திடு போதா தாலோ தாலேலோ
ஆனாவ ருட்கனு பானா தாலோ தாலேலோ
ஆயாத சொல்சொல்உ பாயா தாலோ தாலேலோ
நானாயெ னக்கரி தானாய் தாலோ தாலேலோ
நாதாதி கட்கனு பூதா தாலோ தாலேலோ
தேனார்பொ ழில்குரு கூரா தாலோ தாலேலோ
சேனாப திப்பெரு மாளே தாலோ தாலேலோ. (10)

**தெளிவுரை**

(1) உடல்களாகி அவற்றுள் அமைந்துள்ள உயிர்களுக்கு உயிராயும் இருப்பவனே! தாலோ, தாலேலோ! ஓவாது உணர்ந்த அறிவனே, தாலோ, தாலேலோ!

(2) நீங்காத அருளுக்கு உற்ற துணையானவனே! தாலோ, தாலேலோ! ஆராயப்படாத சொற்களைக் கூறிய தந்திரனே! தாலோ, தாலேலோ!

(3) நானாகி எனக்கும் காண்பதற்கு அரிதானவனே! தாலோ, தாலேலோ! நாதம் முதலானவற்றுக்கு அனுபூதனே! தாலோ, தாலேலோ!

(4) தேன் நிறைந்த சோலை சூழப் பெற்ற புள்ளூரனே தாலோ, தாலேலோ! சேனாபதிப் பெருமாளே தாலோ, தாலேலோ!

**விளக்கம்**

(1) ஊன் - தசை; உடல். உயிர்க்கு உயிர் - அந்தராத்துமா! போதா - அறிவுடையவனே. ஓதாது உணர்த்திடு போதன் - மௌன தேசிகன்.

(2) அனுபானா - துணையாய் உள்ளவனே! ஆயாத - ஆராய்ச்சி செய்தற்கு முடியாத.

(3) அரிது - அரிய பொருள். அனுபூதன் - காரணமானவன். நாதாதிகள் - நாதம் முதலிய தத்துவம் 36.

(4) தேன் ஆர் - தேன் நிறைந்த. குருகூர் - புள்ளூர்; வைத்தீசுவரன் கோயில். (10)

## 4. சப்பாணிப் பருவம்

(இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டும் பருவம்.)

380. முடங்கும் திரைப்பரவை வயிறுளைந் தீன்றநறு
முளரிப் பிராட்டிவைத்து
முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளை எனமழலை
முதிருமென் குதலைகற்பத்
தொடங்கும் குறப்பாவை கற்றைக் குழற்ககில்
தூமமொடு தாமமிட்டுச்
சுடிகைநுதல் வெயர்வும் துடைத்தொழுகு கத்தூரி
தூரியம் கொண்டு தீட்டிக்

குடங்கைக் கடங்கா நெடுங்கண் கடைக்கழகு
கூரஅஞ் சனமெழுதிமென்
கொங்கைத் தடத்துப் பசுங்களபம் அப்பியவள்
குற்றேவல் முற்றுமாற்றித்
தடங்குங் குமப்புயம் கொட்டிநட மிட்டவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டி யருளே. (1)

**தெளிவுரை**

(1) தெளிந்த அலையையுடைய திருப்பாற் கடலானது வயிறு நொந்து பெற்ற நறுமணத் தாமரை இருக்கையுடைய திருமகள் தன் முன்கையில் வைத்துக் கொண்டு முத்தம் இட்டு விளையாடும் பசிய கிளியைப் போல் மழலை பேசுகின்ற மென்மையான குதலை மொழியைக் கற்கத்

(2) தொடங்கும் குறமகளான வள்ளியின் கற்றையான கூந்தலுக்கு அகில் புகையுடன் பூமாலைகளைச் சூட்டி, பட்டம் அணிந்த நெற்றியில் உள்ள வியர்வையையும் துடைத்து நெகிழ்ந்த கத்தூரிப் பொட்டை எழுது கோலால் எழுதி,

(3) உள்ளங்கைக்கு அடங்காத நீண்ட கடைக் கண்களுக்கு அழகு மிக, மையைத் தீட்டி, மென்மையான கொங்கையில் பசிய களபச் சாந்தைப் பூசி, அவளது சிறிய பணிகளை முழுதும் செய்து,

(4) அகன்ற குங்குமம் பூசிய தோள்களைத் தட்டிக் கொண்டு நடனம் செய்தவனே! சப்பாணி கொட்டியருளுவாயாக! இரண்டு கைகளையும் சேர்த்து ஓசை யுண்டாகக் கொட்டியருளுக. தையல் நாயகியார் சேர்ந்த தெய்வநாயகனின் மகனே! சப்பாணி கொட்டி யருளுவாயாக!

**விளக்கம்**

(1) முடங்கும் - வளைகின்ற. திரைப்பரவை - அலையையுடைய திருப்பாற்கடல். வயிறு உளைந்து - வயிறு

நொந்து பெற்ற. நறுமுளரி - நறுமணம் உடைய தாமரை மலர். மழலை முதிரும் - மழலைச் சொல் மிக்க. கற்ப - கற்க. வள்ளி திருமாலுக்கு மகள் ஆதலால் திருமால் முத்தம் இடுவதாகக் கூறினார்.

(2) குறப் பாவை - குறப் பெண்ணான குறத்தி. அகில் தூமம் - அகிற்புகை. தாமம் இட்டு - மலர் மாலைகளைச் சூட்டி. சுடிகை - சுட்டி என்ற அணி.

(3) குடங்கை - உள்ளங்கை. கூர் - மிகுமாறு.

(4) தடக்குங்குமப்புயம் - பெரிய குங்குமம் அணிந்த தோள். நடமிட்டவன் - நடனத்தைச் செய்தவனே! மதலை - மகனே! (1)

381. மழைக்கொந் தளக்கலப மயிலிளஞ் சாயல்நெடு
மதரரிக் கெண்டைஉண்கண்
மான்கன்றை அமருலகு வாழப் பிறந்திடு
மடப்பிடியை வானவில்லைக்
குழைக்கும் தடக்கைத் திருத்தாதை நீரொடு
கொடுப்பக் குடங்கைஏற்றுக்
கொழுமலர் மணங்கமழ் மணப்பந்தர் நிற்பவக்
கொம்புமின் கொடியின்ஒல்கி
இழைக்கும் பசும்பொன் தசும்பென அசும்புபொன்
இளமுலை முகம்கோட்டிநின்று
எய்யாமை நோக்கும் படைக்கண் கடைக்கணோக்கு
இன்னமுதம் ஊற்றவின்பம்
தழைக்கும் பெருங்காதல் வெள்ளம் திளைத்தவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (2)

### தெளிவுரை

(1) மேகம் போன்ற கூந்தலையும் தோகையுடைய மயிலினது இளஞ்சாயலையும் நீண்ட மதர்த்த செவ்வரி படர்ந்த

கெண்டை மீன் போன்ற இளஞ்சாயலையும் உடைய மான்கன்றைத் தெய்வ உலகம் வாழ்வு பெறத் தோன்றிய இளம்பிடியை

(2) வில்லை வளைக்கும் பெரிய கைகளை யுடைய பெரிய திருத்தந்தையானவர் நீரோடு கொடுக்கக் குடங்கையால் ஏற்றுக் கொண்டு, செழித்த மலர்களின் மணம் வீசும் திருமணப் பந்தலில் நிற்க, அந்தப் பூங்கொம்பு போன்றவள் மின்னல் கொடிபோல் அமைந்து,

(3) செய்யப்பட்ட பசும்பொன் குடம் போல் பரவின தேமலையுடைய இளமுலை நாறும் முகம் வளைந்து நின்று அறியாமை நோக்கும் வேற்படை போன்ற கண்கள் கடைக்கண் நோக்கான இனிய அமுதத்தை வார்க்க, இன்பம்

(4) மிகுதற்குக் காரணமான பேராசையான கடலில் மூழ்கியவனே! சப்பாணி கொட்டியருளுவாயாக! தையல் நாயகி மருவும் தெய்வ நாயகனின் மகனே! சப்பாணி கொட்டியருளுக!

**விளக்கம்**

(1) மழைக் கொந்தளம் - மேகம் போன்ற கூந்தல். கூந்தலையும் சாயலையும் கண்ணையும் உடைய மான் கன்று; தெய்வயானை அம்மையார்.

வானவில் - இந்திரவில். மதர் அரி - மதர்த்த சிவந்த வரிகளையுடைய. கெண்டை - மீன். உண்கண் - மைதீட்டிய கண்.

(2) குழைக்கும் - வளைக்கும். திருத்தாதை - இந்திரன். அக் கொம்பு - தெய்வ்யானை. மணப்பந்தர் - திருமணப் பந்தலில். மின் கொடியின் ஒல்கி - மின்னல் கொடி போல் அசைந்து.

(3) இழைக்கும் - செய்யும். பசும் பொன் தசும்பு - பசும் பொன்னால் ஆன குடம். கோட்டி - வளைத்து. எய்யாமை நோக்கும் - அறியாமல் பார்க்கும். இன்னமுதம் - இனிய அமுதம்.

(4) தழைக்கும் - மிகுகின்ற. வெள்ளம் திளைத்தவன் - வெள்ளத்தில் முழுகியவன். (2)

382. உண்ணிலா உவகைத் தடங்கடல் படிந்திட்ட
உம்பருஞ் செங்களம்பட்டு
ஒண்பருதி யுடல்கிழித் தோடும் கடற்றானை
ஒளிறுவா ளவுணர்குழுவும்
தெண்ணிலா மதிநுதல் தெய்வப் பிணாக்கள்வாய்த்
தேனமுதும் அமுதவாரித்
தெள்ளமுது முடனிருந் துண்ணப் பணித்திட்ட
செங்கைவேல் பைம்புனத்துப்
பண்ணுலா மழலைப் பசுங்கிளவி எயினர்பொன்
பாவைவிழி வேலொடொப்புப்
பார்க்குந் தொறுந்தலை கவிழ்த்துநின் றவள்திருப்
பவளத்து முத்தரும்பும்
தண்ணிலா வுக்கொண் சகோரமென நின்றவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (3)

### தெளிவுரை

(1) மனத்தில் நிலைபெற்ற களிப்பான பெருங்கடலில் முழுகிய தேவர்களும், போர்க்களத்தில் மடிந்து ஒளியுடைய சூரிய மண்டலத்தைக் கிழித்து விரைந்து வீர சுவர்க்கம் புகுந்த கடல் போன்ற படையையும், ஒளி செய்கின்ற வாள் படையையும் உடைய அவுணர் கூட்டமும்,

(2) தெளிவாகிய நிலவையுடைய பிறை போன்ற நெற்றியை யுடைய தெய்வ மகளிரின் வாயில் உண்டாகிய தேன் போலும் அமுதத்தையும் திருப்பாற்கடலில் பிறந்த தெளிந்த அமுதத்தையும் கூடியிருந்து உண்ணும்படி ஆணையிட்ட சிவந்த கை வேலானது பசிய தினைப்புனத்தில்

(3) பண்கள் பொருந்திய மழலையான பசிய சொற்களையுடைய குறவரின் பொன் பாவை போன்ற வள்ளி நாயகியின் கண்ணாகிய வேலுடன் ஒத்திருப்பதை முருகப் பெருமான் நோக்குந்தோறும் தலைகுனிந்து நின்ற அவளது பவளம்

போன்ற இதழ் தோற்றும் முத்துக்களில் உண்டான குளிர்ச்சியான நிலவு ஒளிக்கு ஒளியுடைய சகோரப்பறவை போல் நின்றவனே! சப்பாணி கொட்டியருளுவாயாக!

**விளக்கம்**

(1) உள்நிலா - உள்ளத்தில் நிலை பெற்ற. உவகைத் தடங்கல் வடிந்திட்ட உம்பரும் - தம் பகைவரான அசுரர்கள் போரில் அழிவது கண்டு இன்பக்கடலில் திளைத்துத் தேவர்களும். செங்களம்பட்டு - போர்க்களத்தில் இறந்துபட்டு.

(2) தெண்ணிலா - தெளிவான பிறை. தெய்வப் பிணாக்கள் - தேவமகளிர். பணித்திட்ட - ஏவிய. பைம்புனத்து - பசிய தினைப் புனத்தில்.

(3) பண்உலாம் - இசை பொருந்திய. பசுங்கிளவி - பசுமையான சொல். எயினர் பொற்பாவை - வேடரின் மகளான வள்ளி. விழி வேலொடு ஒப்புப் பார்க்கும் என்க.

(4) சகோரம் - சகோரப் பறவை.

(3-4) வள்ளியின் புன்முறுவலை நிலவாக உருவகித்ததற்கு ஏற்ப அதனை உண்ண விரும்பிய முருகவேளைச் சகோரப் பறவையாக உருவகம் செய்தார். (3)

383. மடநடைத் தெய்வக் குறப்பாவை திருஉருவின்
மயிலிளஞ் சாயலுநிலா
மணிவடம் அறப்புடைத் திருமாந்த கனதன
வனப்பும் குறித்துநோக்கி
இடுகிடைப் பாவிக் கினிப்பிழைப் பில்லைகொல்
எனத்திரு வுளங்குழைந்தாங்கு
ஏந்திளங் கொங்கையை இணைப்புயத் தேந்திநின்று
எல்லா வுறுப்புநிற்கக்
குடமுலைக் கேயிவள் குடிப்பிறப் புக்கியை
குணங்கிடைத் ததுகொலென்றக்
கோதைநெடு நாணெய்த அவயவங் கட்குள
குணாகுணந் தனிதெரிக்கும்

தடமலர்க் கைத்தலம் சேந்தொளி துளும்பஒரு
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (4)

**தெளிவுரை**

(1) இளம் நடையையுடைய தெய்வத் தன்மையுடைய குறப்பெண்ணான வள்ளியம்மையின் திருவுருவில் உள்ள இளைய மயிற் சாலையும் முத்துவடங்கள் அற்று விழும்படி புடைகொண்டு நிமிர்ந்த பருத்த கொங்கைகளின் அழகையும் உற்று நோக்கிச்

(2) சிறிய இடையாகிய பாவிக்கு இனிப் பிழைப்பு இல்லை என்று உள்ளம் நெகிழ்ந்து சாயாத இளங் கொங்கைகளை இரு தோள்களாலும் தாங்கி நின்று எல்லா உறுப்புகளும் நிற்க,

(3) குடம் போன்ற கொங்கைகளுக்கே இவளது குடிப் பிறப்புக்கு ஏற்ற குணம் கிடைத்தது என்று அந்த வள்ளி நாயகி பெருநாணம் அடையும்படி ஒவ்வோர் உறுப்புக்குள்ள நன்மை தீமைகளைத் தனித்தனி தெரிவிக்கிற

(4) அகன்ற தாமரை மலர் போன்ற கைகள் இரண்டும் சிவந்து ஒளித் ததும்பும்படி சப்பாணி கொட்டுவாயாக! பார்வதியைத் தழுவும் தேவர்களின் தலைவனான சிவபெரு மானின் மகனே, சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

(1) குறப்பாவை - குறவர் குலமகளான வள்ளி. சாயல் - மென்மை. இறுமாந்த - நிமிர்ந்த. கனதனம் வனப்பு - கனமான கொங்கையின் அழகு.

(2) இடுகு இடை - சுருங்கிய இடை. இடையான பாவி. இனிப் பிழைப்பு இல்லை - இனி உயிர் பிழைப்பு இல்லை. ஏந்து இளங் கொங்கையை - சாயாத இளைய கொங்கையை. இணைப் புயத்து ஏந்தி - இரண்டு தோள்களிலும் ஏந்தி. திருவடிவின்

மென்மையை முழுவதும் நோக்கி அவ்வடிவில் கொங்கை மட்டும் இடைக்குக் கேடு உண்டாக்குவதை நினைந்து அவற்றை ஏந்தினர்.

(3) குடிப் பிறப்புக்கு இயை குணம் - கொலை செய்யும் இயல்பு. குறவர் மான் முதலியவற்றைக் கொல்லும் இயல்பு உடையவர். இங்குக் கொங்கை இடையை அழிக்கும்படி இருத்தலின் இது கூறினார். தனி தெரிக்கும் - தனித்தனியே சுட்டிக் காட்டி நிற்கும். குணாகுணம் - நற்குணம் தீய குணம்.

(4) சேந்து - சிவந்து. (4)

384. விண்ணென் கடற்புவன முடவுப் படத்தேந்து
வேந்துபொலி பாந்தள்வைப்பும்
விரிநீர் வரைப்புமெழில் விஞ்சையர் இருப்புமுகை
விண்டுநறை விரிமுண்டகக்
கண்ணன் திருப்பதமு நான்முகக் கடவுள்பூங்
கஞ்சமும் குலிசப்பிரான்
கற்பகக் காவுநின் தொண்டர்கள் தொழும்புக்கொர்
காணியா வைத்துமற்றத்
திண்ணென் தடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
சீறூரு மூரூர்தொறும்
செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம்
சீதனக் காணிபெற்றத்
தண்ணென் குறிஞ்சித் தலந்தலை அளிப்பவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (5)

## தெளிவுரை

(1) வான் உலகத்தாரும் மதிப்பதற்குரிய கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் தன் படங்களால் தாங்கும் பாம்பரசனான ஆதிசேடன் விளங்கும் நாக உலகமும், கடல்சூழ்ந்த இந்த வுலகமும், வித்தியாதர உலகமும் அரும்புகள் மலர்ந்து மணம் கமழும் தாமரைக்

(2) கண்ணனான திருமாலின் பதவியும், நான் முகனின் அழகிய மலர்ப்பதமும், வயிரவாளையுடைய இந்திரனது கற்பகச் சோலையும், உன் அடியார்கள் அடிமைத் திறத்துக்கு ஓர் காணியாக வைத்து விட்டு,

(3) அந்தத் திண்மையுடைய பெரிய கையில் வெஞ்சிலை வேடர் குடிகொண்டிருக்கின்ற சிறு ஊர்களும் ஊர் ஊர் தோறும் உள்ள செந்தினைப் புனம் நிறைந்த குளிர்ந்த சாரல்களும் பிறவும் ஆகிய சீதனக் காணி பெற்று,

(4) அந்தத் தண் என்ற குறிஞ்சி நிலத்தைக் காப்பவனே! சப்பாணி கொட்டியருளுக! உமையம்மையாரைத் தழுவும் சிவ பெருமானின் மகனே! சப்பாணி கொட்டுக.

**விளக்கம்**

விண் - வான் உலகத்தார்; ஆகுபெயர், முடவுப் படத்து ஏந்து - வளைவான தன் படங்களால் தாங்கும். வேந்து - பாம்பு அரசன். பாந்தள் வைப்பு - நாக உலகம், விரிநீர் பரப்பு - கடல் சூழ்ந்த மண் உலகம். விஞ்சையர் - வித்தியாதரர். இருப்பு - உலகம். முகை விண்டு - மொட்டு அவிழ்ந்து, நறை விரி - மணம் கமழும், முண்டகக் கண்ணன் - தாமரைக் கண்ணனான திருமால், திருப்பதம் - வைகுந்த பதம்.

(2) பூங்கஞ்சம் - தாமரைப் பதமும்; பிரமபதமும். குலிசப்பிரான் - வச்சிராயுதத்தையுடைய இந்திரன், கற்பகக்காவும் - கற்பகச் சோலையும், தொழும்புக்கு - அடிமைத்திறத்துக்கு, காணியா - உரிமையாக.

(3) செந்தினை - செந்நிறத்தினை, தண்சாரல் - குளிர்ந்த சாரல், சீதனக் காணி - சீதனமான காணி; மணம் பெற்றுச் செல்லும் பெண்ணுக்குக் கொடுப்பது சீதனம்; இது மாமனாரால் கொடுக்கப் படுவது.

(4) முருகன் குறிஞ்சி நிலக்கடவுள் ஆதலால் குறிஞ்சித் தலந்தலை அளிப்பவன் என்றார்.

விண் உலகம் முதலியவற்றைத் தொண்டர்க்கு உரிமையாய்க் கொடுத்து விட்டு வேடரின் சிற்றூர் முதலியவற்றைச் சீதனக் காணியாய்ப் பெற்றுக் கொண்டு குறிஞ்சியைக் காப்பவனே, சப்பாணி கொட்டுக! என்றார். (5)

## வேறு

385. கடலைச் சுவற வடித்தும் இடித்துக்
கனவரை துகள்கண்டும்
கடிதில் திரிய வகுப்பதை ஒப்பக்
காரவு ணக்கடலின்
உடலிற் பெருகிய குருதிக் கடல்பிண
வோங்கலொ டோங்கவமைத்
தொட்டிய ஒட்டல ரிற்பிற கிட்டவர்
ஒழியப் பிறரையெலாம்
தடவுத் தாழியின் மத்தெறி தயிரின்
தத்துதி ரப்புனலின்
தசைகுடர் நிணமொடு மூளை குழம்பச்
சமர்விளை யாடல்செயும்
குடுமிச் சுடர்வடி வேலைத் தொட்டவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்குமு ரேசன்
கொட்டுக சப்பாணி. (6)

### தெளிவுரை

(1) கடலைவற்றச் செய்தும் பெரியமலையை இடித்துப் பொடியாகும்படி செய்தும் விரைவாக வேறுபட வகுப்பதை ஒப்பக் கருமையான அவுணக் கடலின்

(2) உடம்பினின்றும் பெருகிய இரத்தக்கடலானது பிணமலைகளுடன் உயர்ந்து தோன்ற அமையச் செய்து, சேர்ந்த பகைவரின் பின்னிட்டவர் ஒழியப் பிறர் எல்லாரையும்

(3) பெரிய தாழியில் மத்தினால் கடையப்பட்ட தயிரைப் போல் தாவும் இரத்த நீரில், ஊன் குடல் நிணத்துடன் மூளையும் கூடிச் சேறாகப் போர் விளையாடலைச் செய்தும்

(4) முனை பொருந்திய ஒளிரும் வடிவேற்படையை விடுத்தவனே! சப்பாணி கொட்டுவாயாக. வடித்த தமிழ் வழங்கும் வேதபுரியில் வாழும் குமரக் கடவுளே, சப்பாணி கொட்டுக;

**விளக்கம்**

(1) சுவற - வற்ற. இடித்துக் கனவரை துகள் கண்டும். பெரிய மலைகளை இடித்துத் தூளாகச் செய்தும், கடிதில் - விரைவில். கார் அவுணர் - கருமையான அவுணர்;

(2) பிண ஓங்கல் - பிண மலை; ஒட்டிய - சேர்ந்த, ஒட்டலரின் - பகைவரின், பிறகிட்டவர் - தோற்று ஓடியவர்.

(3) தடவுத் தாழி - வளைந்த பானை, மத்தெறி தயிரின் - மத்து இட்டுக் கடையப்படும் தயிரைப் போன்று. தத்து உதிரப் புனலில் - தாவி ஓடும் இரத்த நீரில். சமர் - போர்.

(4) குடுமி - முனை, வடிவேல் - கூர்மையான வேல். கொழிதமிழ் - வடித்த தமிழ், (6)

386. சமரிற் பட்டவர் வெட்டிய பூதத்
தலைவர்கள் நிற்பமுதல்
தாமரை நாயகன் வயிறு கிழித்துத்
தந்தொழில் தலைநின்றாங்கு
அமரிற் குரிய மடக்கொடி யாரை
அலைத்தனர் பற்றியெயிற்று
அவுண ரெனத்தமை உணரார் கணவர்கள்
ஆர்ப்பில் வெடித்தபெருங்
கமரிற் குருதி பிலத்தை நிரப்பிடு
களமெதிர் கண்டினியக்
காரவு ணக்கடல் சூரொடு மாளக்
கடிதின் தடிதியடல்

குமரக் கடவு ளெனப்பணி வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. (7)

**தெளிவுரை**

(1) போரிலே இறந்த அவுணர் தங்களைவெட்டிய பூதத் தலைவர்கள் போர்க்களத்தில் நிற்க, முதல்வனான சூரியனது நடுவிடத்தைக் கிழித்துக் கொண்டு வீர சொர்க்கம் அடைந்து அவுணராகிய தங்கட்கு உரிய கொடிய தொழிலை மேற் கொண்டாற் போன்று

(2) போர்க்களத்தில் இறந்தவர் யாவராயினும் அன்னார் அடைதற்குரிய இளங்கொடி போன்ற அரம்பையரை வருத்திப் பற்றிப் பெரிய பற்களையுடைய அவுணர் (வீர சொர்க்கம் புகுந்த அவுணர்) தங்களை அவுணர் என்று அறியாதவர்களாகிய கொழுநர்கள் எழுப்பிய பேரொலியால்.

(3) வெடித்த பெரிய வெடிப்பின் வழியே போய் உதிரமானது பாதலத்தை நிரைக்கின்ற போர்க்களத்தை எதிரில் கண்டு இனி அந்தக்கரிய அவுணக் கடலானது சூரனுடன் இறந்து போகும்படி விரைவாக வெட்டக்கடவை.

(4) வெற்றியுடைய குமரக் கடவுளே! எனக் கூறி வணங்குதற்கு உரிய வேலவனே! சப்பாணி கொட்டுக. வடித்த தமிழ் வழங்கும் வைத்தீசுவரன் கோயில் குமரேசனே, சப்பாணி கொட்டுக.

**விளக்கம்**

(1) சமர் - போர், பட்டவர் - இறந்தவர், பூதத் தலைவர்கள் - தம்மைக் கொன்ற பூதகணத் தலைவர்கள். இவர்கள் முருகப் பெரு மான் படையினர். தாமரை நாயகன் - கதிரவன், வீரசுவர்க்கம் அடைபவர் கதிரவன் மண்டலத்தைப் பிளந்து செல்வர். ஆதலால் 'தாமரை நாயகன் வயிறு கிழித்து' என்றார்.

(2) அமரிற்குரிய மடக்கொடியார் - போரில் இறந்தவர் பெறுவதற்குரிய வீர சுவர்க்கத்தில் உள்ள தெய்வ மங்கையர். கணவர்கள். ஆர்ப்பில் - பூதகணத்தவர் செய்த ஆரவாரத்தினால்.

(3) கமர் - வெடிப்பு, பிலம் - பாதலம், களம் - போர்க்களம், கார் அவுணக்கடல் - கரிய அவுணரின் கடல் போன்ற கூட்டம், கடிதி - சொல்வாயாக!

(4) குமரக் கடவுள் - விளி (7)

387. அற்ற வுடற்குறை யிற்ற முடித்தலை
அங்கைத் தலம்வைத்திட்டு
ஆடு பறந்தலை யோடுதி ரப்புனல்
ஆறு கடத்துகெனும்
சிற்றல கைக்கொரு பேரல கைப்பெண்
தேரழி யக்கழியும்
திகிரிப் பரிசில் விடப்படு சுழியில்
தெருமரல் மட்பகைஞன்
பற்றிய திரிகை திரித்து விடத்திரி
பரிசென வும்சுழலும்
பம்பர மெனவும் வரும்படி யவுணர்
படக்கள வேள்விசெயாக்
கொற்ற மகள்புண ரும்சுடர் வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. (8)

## தெளிவுரை

(1) அறுபட்ட உடலின் குறைகள் வெட்டுண்டு வீழ்ந்த முடித்தலைகளை உள்ளங்கையில் வைத்துக் கொண்டு கூத்தாடும் போர்க்களம் அதில் பெருகி ஓடும் இரத்தநீர் ஆற்றினின்று என்னைக் கடத்தி விடுக என்று வேண்டுகிறது.

(2) ஒரு சிறிய பேய். ஒரு தேர் சிதைந்து போக அதினின்று கழன்று விழுந்த சக்கரமாகிய தோணிகளைப்

பொருந்திய சுழியில் செலுத்த அத்தோணியானது சுழலுகின்றது. அது குயவன் ஒருவன்.

(3) பற்றிய திரிகையைச் சுழற்றியிடச் சுழல்கின்ற தன்மை போலவும், சுற்றும் பம்பரம் என்றும் சொல்லும் படியாய்ச் சுழலும் படிவரும். இவ்வாறு அவுணர்கள் இறந்து போகக் களவேள்வி செய்து,

(4) கொற்ற மகளைப் புணரும் ஒளிரும் வேற்படையை உடையவனே! சப்பாணி கொட்டுவாயாக! தெளிந்த தமிழ் வழங்கும் வேதபுரியில் வீற்றிருக்கும் குமரனே, சப்பாணி கொட்டுவாயாக.

**விளக்கம்**

(1) உடற்குறை - கவந்தம்; தலையற்ற உடல் இற்ற - வெட்டப்படும் உடல் குறை தன்தலையைத் தன் கையில் கொண்டு ஆடியது. பறந்தலை - போர்க்களம். உதிரப்புனல் - குருதி நீர் கடத்துக எனும் - நான் கடந்து போகும்படி செய்ய வேண்டும் என்று கூறும்.

(2) சிற்றலகை - சிறிய பேய், பேரலகைப் பெண் - பெரிய பேய், தேர் அழிய - தேர் சிதைய, கழியும் - கழன்ற, திகிரி - சக்கரம். பரிசில் - நீரைக்கடக்க உதவும் தெப்பம். இது வட்ட வடிவாகப் பிரம்பால் செய்யப்படுவது. மட்பகைஞன் - குயவன், சக்கரமே தோணியாக அமைகின்றது. தெருமரல் - சுழலல்,

(3) திரிகை - குயவன் சக்கரம், பரிசு - தன்மை, அவுணர் பட - அசுரர்கள் இறந்து பட, களவேள்வி பகைவரை வென்று போர்க் களத்தைத் தனதாக்கிக் கொண்டு வேட்டல். இதுவாகைத் திணை துறைகளுள் ஒன்று.

(4) கொற்ற மகள் - வெற்றித்திரு; துர்க்கை.

சந்த விருத்தம்

388. வளரிள வனமுலை மலைமக ளுக்கொர் தவப்பேறே
மறிதிரை பொரநிமிர் கருணை கொழித்த
பெருக்காறே
அளியுமி னமுதெழு வெளியினில் வைத்த
சுவைத்தேனே
அறமுது தவமொடு வளர வளர்த்திடு நற்றாயே
களிமயில் கடவிவி ணடைய முடுக்கிய புத்தேளே
கலைமறை எனுமுரல் வரியளி மொய்த்த
மலர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. (9)

**தெளிவுரை**

(1) வளரும் இளைய அழகிய கொங்கையை உடைய மலையரசன் பெண்ணான பார்வதிக்கு ஒப்பில்லாத தவப்பேறாக வாய்ந்தவனே! மடங்கும் அலைகள் மோத உயர்ந்த கருணையான நீர் வீசும் வெள்ளப் பெருக்கையுடைய நதியே!

(2) கனிந்த இனிய அமுதமானது தோன்றிய வெளியிடத்தில் வைக்கப்பட்ட சுவையையுடைய தேனே! அற நெறியானது பெரிய தவத்துடன் வளரும்படி வளர்க்கின்ற நல்ல தாயே!

(3) களிப்புக் கொண்ட மயிலைச் செலுத்தி வான் உலகம் முழுவதும் முடுக்கின தெய்வமே! நூல்கள் வேதங்கள் என்ற வரிவண்டுகள் நெருங்கிய பூஞ்சோலையே!

(4) தெளிந்த தமிழ் பயின்ற மதவலியே! சப்பாணி கொட்டுக! பரிதி புரியான வேதபுரியில் எழுந்தருளியுள்ள ஒப்பில்லாத முதல்வனே! சப்பாணி கொட்டியருளுக!

**விளக்கம்**

(1) மலை மகள் - பார்வதி தவப்பேறே - தவப்பயனே! மறிதிரை - மடங்கி விழும் அலை.

(2) அளியும் - கனிந்த; வெளி - சிதாகாசம் அறம் தவமொடு வளர என இயையும்.

(3) களி மயில் - களிக்கும் மயில்களை; கடவி - செலுத்தி அடைய - முற்ற; வேதம் என்ற வண்டுகள் என்க. முரல் - ஒலிக்கும். வரியளி - வரிகளையுடைய வண்டுகள். மலர்க்காவே - மலரை யுடைய சோலையே!

(4) தெளிதமிழ் - தெளிந்த தமிழ், மதவலி - விளி, தினகரபுரி - வைத்தீசுவரன் கோயில்

389. கனியொடு சுவையமு தொழுகிய சொற்பயில்
தத்தாய்வேள்
கணையொடு பிணையென உலவு கடைக்கண்
மடப்பாவாய்
நனைமலர் பொதுளிய எழிலி தழைத்த குழல்கோதாய்
நளிர்புன மிசைவளர் கலபம்விரித்த மயிற்பேடே
எனவொரு குறமகள் அடிமுடி வைத்தனை முத்தேவாம்
இறைவரு முறைமுறை பணிய இருக்கு முதற்றேவே
சினவிடை யவரருள் மழவிடை கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. (10)

**தெளிவுரை**

(1) பழங்களுடன் சுவையுடைய அமுதம் ஒழுக மொழிகள் பயில்கின்ற கிளியே! காமன் அம்புடன் பெண்மான் போல் உலவும் கடைக் கண்களையுடைய இளைய பாவையே!

(2) குளிர்ந்த மலர்கள் நெருங்கிய மேகம் போல் செழித்த கூந்தலையுடைய பெண்ணே! குளிர்ந்த தினைப் புனத்தில் வளர்ந்த கலாபத்தை விரித்த பெண் மயிலே!

(3) என்று கூறி ஒரு குறமகளின் அடியை நின் திருமுடியில் வைத்துக் கொண்டு மும்மைத் தேவர்களாகிய இறைவரும் முறை முறையாய் வணங்கத் தக்கபடி எழுந்தருளியிருக்கின்ற முதன்மை யுடைய தெய்வமே!

(4) சினத்தையுடைய காளையூர்தியையுடையவரான சிவ பெருமான் பெற்ற இளங்காளையே! சப்பாணி கொட்டுக! தினகரபுரியில் வீற்றிருக்கும் ஒப்பற்ற முதல்வனே! சப்பாணி கொட்டியருளுக!

**விளக்கம்**

(1)தத்தாய் - கிளியே, கணை - அம்பு. பிணை - பெண் மான். அம்பும் பெண் மான் கண்ணும் வள்ளியின் கண்ணுக்கு உவமை.

(2) நனை - தேன் மலர் பொருந்திய கூந்தல். எழிலி தழைத்த - மேகம் போன்று தழைத்த. கலபம் - மயில் தோகை. மயிற்பேடு - பெண்மயில்.

(3) வைத்தனை - வைத்தாய். இறைவர் - நான்முகன் திருமால் முதலியவர். குறமகள் - வள்ளி.

(4) மழவிடை - இளைய காளையே! விளி. (10)

## 5. முத்தப்பருவம்

390. குருகு நாறு செந்தளிர்க்கைக்
கொடிநுண் நுசுப்பில் கோட்டிமயக்
குலப்பூங் கொம்பு நறவூழ்த்த
கொழுந்தா மரையோ டவிழ்ந்ததுழாய்ச்
சருகு நாறு முடைத்தலையின்
தாம நாறு திரள்திண்தோள்
தாதையாரும் கண்டுகண்டு
தடங்கண் களிப்பக் குரவுவிரிந்து
அருகு நாறு திருமேனி
அம்தீங் குதலை மழலைகனிந்து
அமுதம் ஊறு பசுந்தேறல்
அசும்பு நாறத் தெய்வமணம்
முருகு நாறும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. (1)

**தெளிவுரை**

(1) வளையல் ஒலிக்கும் செந்தளிர் போன்ற கையையும் கொடி போன்ற நுண்ணிய இடையையும் உடைய சிகரங்களை யுடைய இமயமலையில் பிறந்த உயர்ந்த பூங்கொடியும் தேனைச் சிந்தும் செழுந்தாமரையோடு அவிழ்ந்த துழாய்ச்

(2) சருகும் மணக்கும் முடைத் தலை மாலைகள் நாறும் திரண்ட திண்மையான தோள்களையுடைய தந்தையாரும் பார்த்துப் பார்த்துப் பெருங்கண் களிக்குமாறு குராமலர் விரிந்து,

(3) மணக்கும் திருமேனியில் அழகிய இனிய குதலை மொழிகள் முதிர்ந்து அமுதம் போல் சுரக்கும். பசுமையான தேன் துளிர்க்கத்

(4) தெய்வ மணம் கமழும் சிவந்த கனி போன்ற வாயின் முத்தம் தந்தருளுவாயாக! மூவகைத் தமிழ்ச்சுவை தெளிந்த கந்தபுரி முருகனே! முத்தம் அளித்தருளுவாயாக!

**விளக்கம்**

(1) குருகு - வளையல். நாறும் - மணக்கும். நுசுப்பு - இடை. கோட்டு இமயம் - சிகரத்தையுடைய இமயமலை. கொம்பு - கொம்பைப் போன்ற பார்வதி.

(2) துழாய்ச்சருகு - துளசிச்சருகுகள். திருமாலின் தலை துழாய்ச்சருகு நாறு முடைத்தலை எனப்பட்டது. தாமம் - மாலை. நாறு - தோன்றும்; மணக்கும். தாதையாரும் - சிவபெருமானும். குரவு - குராமலர்.

(3) அம் தீங்குதலை - அழகிய இனிய குதலை - மழலை. குதலை - திருந்தாத வடிவுடைய சொல். பசுந்தேறல் - பசிய தேன். அசும்பு - தேன் துளி. மேனி அசும்பு நாற.

(4) முருகு - மணம். மும்மைத் தமிழ் தேர் - இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழ்ச்சுவை தெளிந்த.

சிவபெருமான் நான்முகன் திருமாலின் தலைகளை மாலை யாகக் கோத்து அணிந்துள்ளார். ஆதலால் ''தாமரையோடு அவிழ்ந்த துழாய்ச் சருகு நாறு முடைத் தலையின் தாமநாறு திரள் திண்டோள்'' (1)

391. நறவு விரிந்த விரைத்தோட்டு
நளினத் தொட்டில் தடமுலைப்பால்
நல்கி வளர்த்த கைத்தாயர்
நகைவாள் முகத்தும் மார்பகத்தும்
குறுமென் நடைய சிறுபசுங்கால்
குருதி ததும்ப வுதைந்துசில
குறும்பு செயத்தாள் நோமெனமென்
கோல்கொண் டோச்சப் பெரும்புவனம்
நிறுவு மொருநின் பெருந்தன்மை
நினைந்தாய் போலக் கனிந்தமுது
நெக்குப் பசுந்தேன் அசும்பூற
நெடுவெண் ணிலவு விரிந்தகுறு
முறுவல் அரும்பும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. (2)

**தெளிவுரை**

(1) தேன் விரிந்த மணம் உள்ள இதழ்களையும் தாமரைத் தொட்டிலில் பெரிய முலைப் பாலை ஊட்டி வளர்த்த கைத்தாயரின் நகை ஒளிகள் உள்ள முகத்திலும் மார்பகத்திலும்

(2) குறிய மெல்லிய நடையை உடைய சிறிய பசுமையான காலில் உதிரம் தளும்ப உதைந்து சில குறும்புகளைச் செய்யத் திருவடி நோகும் என மென்மையான கோலால் அடிக்க, பெரிய உலகங்கள்

(3) நிலைபெறுத்துகின்ற ஒப்பில்லாத நின் பெருமையை எண்ணியவன் போல் பழுத்து அமுது நெகிழ்ந்த பசுந்தேனானது துளி சுரக்க, பெரிய வெண்மையான நிலவு விரிந்து

(4) குறு முறுவல் விரிந்த புன்னகை தோன்றும் செங்கனி வாய் முத்தம் அளிப்பாயாக. மூன்று வகைப்பட்ட தமிழ்ச்சுவை தெளிந்த கந்தபுரியில் வீற்றிருக்கும் முருகா! முத்தம் தருவாயாக.

**விளக்கம்**

(1) நறவு - தேன். நளினத் தொட்டில் - தாமரையான தொட்டிலில்; என்றது சரவணப் பொய்கையில் உள்ள தாமரை மலரில். கைத்தாயர் - கார்த்திகைப் பெண்கள்.

(1-2) கைத்தாயர் முகத்தும் மார்பகத்தும் உதைத்து

(2) குறும்பு - விளையாட்டு, ஓச்ச - அடித்தற்கு என்க.

(3) நெக்கு - நெகிழ்ந்து. அசும்பு ஊற - துளி சிந்த.

(4) குறுமுறுவல் - புன்னகை. (2)

392. பொழியுங் கருணைப் பெருவெள்ளப்
புணரி பெருகி அலையெறியப்
பொங்கி எழுந்த பெருங்காதல்
புளகம் போர்ப்பப் போதுசெயும்
விழியு மனமும் குளிர்தூங்க
விரிநீர்ச் சடிலத்து ஒருவனிரு
வீணைக் குதவும் திருச்செவிகள்
விருந்தாட் டயர விரைகொழித்து
வழியும் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர அமுது குழைத்தூற்றும்
மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தையொன்று
மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. (3)

**தெளிவுரை**

(1) சொரியும் அருள் என்ற வெள்ளப் பெருக்கையுடைய கடல் பெருகி அலை வீசப் பொங்கி மேல் எழுந்த பெருங் காதலாகிய புளகம் மூட,

(2) தாமரை போன்ற மனமும் கண்ணும் குளிர, விரிந்த நீரை யுடைய சடையையுடைய ஒப்பில்லாத சிவபெருமானின் இரண்டு வீணைக்கு இடமாய்க் கொடுத்துள்ள அழகிய செவிகள் விருந்தினைச் செய்ய

(3) நறுமணம் பொருந்தி வழியும் செழிய தேனைப் பிழிந்து இனிய அமுதத்தைக் குழைந்து வார்க்கிற மழலை மொழிகள் வெளிப்படும் பழைமையான வேதங்களை விரித்துத் தெளிவிக்கப் பட்ட சொல் ஒன்று சொல்லிய,

(4) பவளம் போல் சிவந்த கனி போன்ற வாயில் முத்தம் கொடுத்தருளுவாயாக! மூவகைத் தமிழ்ச் சுவை தெளிந்த கந்தபுரி முருகனே! முத்தம் அளித்தருளுவாயாக!

**விளக்கம்**

(1) புணரி - கடல். அலைஎறிப்ப - அலை வீச. புளகம் - மயிர்ச் சிலிர்ப்பு.

(2) போது செயும் விழியும் - பகலையும் இரவையும் செய்யும் சூரிய சந்திரர்கள்.

விரிநீர் சடிலம் - பரந்த நீரையுடைய கங்கையை அணிந்த சடை. ஒருவன் - சிவபெருமான். வீணைக்கு - வீணையின் இசைக்கு. விருந்தாட்டயர - விருந்தாடலைச் செய்ய. விரை - மணம்.

(2-4) செவிகள் விருந்தாட்டு அயர வார்த்தை ஒன்று மொழியும். (3)

393. கலைப்பால் நிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலம்
கனியக் கனிய அமுதூறும்
கடவுள் மறையும் முதல்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்தேன் நறையும் வடித்தெடுத்த
சாரம் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழு நாறத் தடங்கரைகொல்
அலைபாய் புனல்தெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராஎன்
அம்மை அமுது சூல்கொண்ட
முலைப்பால் நாறும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. (4)

**தெளிவுரை**

(1) நூற் பகுதிகள் நிரம்பிப் பேரறிவினையுடைய கல்வியாகிய செல்வம் உடையவர்கள், கேள்வி நலம் முதிர முதிர அமுதத்தைப் போன்று சுரக்கும் தெய்வத் தன்மையுடைய வேதங்களும், முதற்சங்கத்து

(2) விளங்கிய முதற் பாவலர் இன்சுவைக் கனியும் இனிய தேன் சுவையும் வடிகட்டி எடுத்த சாரம் கனிந்து ஊற்றிருந்த இனிய தேன் சுவையும் வடிகட்டி சாரம் பழுத்துச் சுரந்திருந்த பைந்தமிழும் விளங்கப் பெருங்கரையை அழிக்கின்ற

(3) அலைவடிவாய்த் தாவும் நீரை யுடைய தெளிந்த கடல் சூழ்ந்த மண் உலகையும் மற்றும் உள்ள அண்டங்களையும் பல முறை பெற்றும்,

(4) அழகானது மிகத் தான் முதிராத என் தாயினது அமுதமே, சூல் கொண்டாற் போன்ற கொங்கையின் பால் மணம்

மணக்கும் சிவந்த கொவ்வைக் கனியைப் போன்ற வாய் முத்தத்தை அளித்தருளுவாயாக! மூவகைப்பட்ட தமிழ்ச்சுவை தெளிந்த கந்தபுரி முருகனே! முத்தம் அளித்தருளுவாயாக!

**விளக்கம்**

கலைப்பால் - கலையின் பகுதிகள். முதுக்குறைவு - பேர் அறிவு. மறை கேட்கப்படுதலின் கேள்வி நலம் கனியக் கனிய அமுது ஊறுவது எனக் குறித்தார். கடவுள் மறை - தெய்வத் தன்மையுடைய வேதம்.

(1-2) முருகப் பெருமான் முதற் சங்கத்திலிருந்து தமிழாராய்ந்தவர். என்பது இங்குக் குறிக்கத் தக்கது. பாவலர் தமிழும் மறைத் தமிழும் நாறி.

(3) தீஞ்சுவை - இனிய சுவை. தண் தேன் - குளிர்ந்த தேன். தடங்கரை - பெரிய கரையை. கொல் - அழிக்கும். ஊற்றிருத்தல் - சுரத்தல். முதிரா என் அம்மை -

(4) உமாதேவி; தெண் கடல் வைப்பு - தெளிவான கடலால் சூழப்பட்ட பூமி.

கடவுள் தன்மை யுடைய வேதம் முதலிய:வை மணம் வீசும் உன் கனிவாயில் உமையம்மையின் முலைப்பால் மணக்க ஒரு முத்தம் தருக என்பது கருத்து. (4)

394. புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையும் இன்னகையும்
புளகம் பொதிந்த இளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கண்
கயலும் கலப மயிலியலும்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணால் முகந்துண்டு இன்னமுதின்
இயலும் சுவைநல் லவியொடுநீத்து
ஏக்கற் றிருந்தத் தாக்கணங்கின்

இழுமென் குதலை கனிந்தூறும்
இதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்
முயலும் குமுதக் கனிவாயால்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. (5)

**தெளிவுரை**

(1) மேகம் போல் இருண்டிருக்கின்ற கூந்தலையும், பொன்னால் இயன்ற காதணியையும், இனிய நகையையும், புளகம் போர்த்த இளமையான கொங்கையையும், புருவமாகிய வில்லையும், போர் செய்யும் பெருங்கண்ணான

(2) கயல் மீனையும், தோகையையுடைய மயிலின் சாயலையும், கன்னிப் புனத்தில் உள்ள ஒப்பில்லாத பெண் அமுதின் அழகிய நலத்தையும், பன்னிரு கண்களாலும் எடுத்து உண்டு இனிய அமுதத்தில் உள்ள

(3) சுவையையும் நல்ல அவியினது சுவையுடன் நீக்கிவிட்டு ஏங்கியிருந்து அந்தத் தெய்வப் பெண்ணின் இனிய மெல்லிய குதலைச் சொற்கள் முதிர்வதால் உண்டாகும் அதர அமுதத்தின் சுவையைக் கண்டு களிப்பதற்கு

(4) முயலும் செவ்வல்லி மலரைப் போன்ற கனி வாயால் முத்தம் அளிப்பாயாக! மூவகைப் பட்ட தமிழ்ச்சுவை தெளிந்த கந்தபுரி முருகனே! முத்தம் தந்தருளுவாயாக!

**விளக்கம்**

(1) புயல் - மேகம். கொந்தளம் - கூந்தல். பொன்னங் குழை - பொன் அணி. புளகம் - உரோமம். சிலிர்ப்பு; படைப்பு. புருவச்சிலை - புருவம் ஆகிய சிலை; உருவகம்.

(2) கயல் - (கண்ணாகிய) மீன். கலபம் - தோகை. மயில் இயல் - மயில் போன்ற சாயல். காமர் கலனும் - அழகிய நலன்.

(3) இயல் - சாயல். அவி - அவியுணவு; தேவர் உணவு. நீத்து - அகற்றி; விடுத்து. ஏக்கற்று - ஏங்கியிருந்து. தாக்கணங்கு - வள்ளி.

(4) குமுதக் கனிவாய் - குமுத மலர் போன்ற கொவ்வைக் கனியை ஒத்த வாய். (5)

## வேறு

395. கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
கொடியிடைக் கடைசியர்குழாம்
குரவையிடு துழனியில் கொண்டல்திரை யத்தாவு
குழவுப் பகட்டுவாளை
சேடுபடு புத்தேள் நிலத்துப் புனிற்றிளம்
சேதா வயிற்றுமுட்டச்
சேங்கன் றெனத்தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற்பகத்
தேடுபடு தடமலர்த் தேனருவி யொடுசொரிந்
தேரியொடு கால்நிரம்ப
இழுதுபடு கழனியும் தெய்வமண நாறஎன்
றின்சுவை முதிர்ந்துவிளையும்
காடுபடு செந்நெல்பைங் கன்னல்நிகர் புள்ளூர
கனிவாயின் முத்தம் அருளே
கங்கைக்கு நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தமருளே. (6)

### தெளிவுரை

(1) யானைக் கொம்பைப் போன்ற கொங்கை மலைக்கு இளைத்த மெலிந்த கொடி போன்ற இடையையுடைய உழத்தியர் கூட்டம், குரவைப் பாட்டுப் பாடும் ஒலியால் வாளை மீன்கள் மேகங்கள் ஓரிடத்தில் சேரும்படி குதிக்கின்றன.

(2) அவை பெருமை பொருந்திய தெய்வ உலகத்தில் உள்ள கன்று ஈன்று அணிமையையுடைய இளஞ்சேதாவின் காம

தேனுவின் வயிற்றில் முட்டுகிறது. அக்காமதேனு அதைத் தன் கன்று என்று எண்ணியது. அதனால் பெரிய மடியாகிய மடை திறந்து ஒழுகும் இனிய பால் சொரிகிறது. அப் பாலானது கிளைகளையுடைய கற்பக மரத்தில் உள்ள

(3) இதழ்களுடன் கூடிய பெரிய மலரின் தேன் அருவி யாற்றுடன் கலந்து ஏரிகளுடன் தெய்வ மணம் கமழ ஏற்று, இனிய சுவை மிக்கு விளையும்

(4) மிகுதியாகிய செந்நெல் தாள்கள் பசிய கரும்பை ஒத்த புள்ளூரனே! கொவ்வைக் கனி வாயால் முத்தம் தருக! கங்கை தேவிக்கும் திருமால் தங்கையான பார்வதிக்கும் ஒப்பற்ற மகனே! கனி வாயால் முத்தம் தந்தருளுவாயாக!

**விளக்கம்**

(1) கோடுபடு - யானைக் கொம்பைப் போன்ற. கொங்கைக் குவடு - முலையாகிய மலை. இளைத்திட்ட - மெலிந்த. கடைசியர் குழாம் - கடைசியர் (உழத்தியர்) கூட்டம். குரவையிடு - குரவைப் பாட்டைப் பாடும். துழனியின் - ஒலியால். கொண்டல் திரையத் தாவு - மேகங்கள் ஓரிடத்தில் கூடும்படி தாவிய. குழவுப்பகட்டு வாளை - இளமையுடைய பெரிய மீன்கள்.

(2) சேடுபடு - பெருமையுடைய. புத்தேள் நிலம் - தேவ வுலகு. சேதா - சிவந்த பசு; காமதேனு. வயிற்று முட்ட - வயிற்றில் மோத. சேங்கன்று என - தன் சிவந்த கன்று என்று. தடவு மடி - பெரிய மடி. தீம்பால் - இனிய பால். சினை - கிளை.

(3) ஏடுபடு - இதழ் பொருந்திய. காமதேனுவின் மடியினின்று சொரியப்பட்ட பால் அருவி ஏரியொடு வாய்க் காலில் நிரம்பி ஓடியது. அப்பாலால் கழனி சேறாகின்றது.

(4) பைங்கன்னல் - பசிய கரும்பு.

செந்நெல் கரும்பைப் போல் பருத்து வளர்கின்றது. என்பதை 'செந்நெல்' பைங்கன்னல் நிகர் என்ற தொடர் விளக்கி நிற்கின்றது. (6)

396. துளிதூங்கு மழைமுகில் படலம் கிழிக்கும்
துகில்கொடிகள் சோலைசெய்யத்
தோரண முகப்பில் தவழ்ந்தேறு கலைமதித்
தோற்றத்தை அறுகான்மடுத்து
அளிதூங்கு தேனிறால் இதுதம்மின் வம்மினென்று
அழிநறா வார்ந்துநிற்கும்
அந்நலார் கைகூப்ப ஆடவர் பிழிந்தூற்று
அளவில்அப ராதமிதெனா
ஒளிதூங்கு முகமதிக் கொப்பென்கி லேன்விடுதிர்
உயிரொன்று மெனவிடலுமவ்
உடுபதிக் கடவுள்நற வுண்டமற் றவரினும்
உய்ந்தோம் ஒழிந்தோமெனாக்
களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் தங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (7)

**தெளிவுரை**

(1) துளித்தலையுடைய குளிர்ந்த மேகக் கூட்டத்தைக் கிழிக்கின்ற கொடி ஆடைகள் சோலையைப் போன்று நிழல் செய்யும். தோரணம் கட்டிய முகப்பில் தவழ்ந்து ஏறும் கலைகள் நிறைந்த சந்திரனை ஆறு கால்களையும் பதித்துத், தேன் ஈக்கள் உறங்கும் தோரண முகப்பு - வாயில் மாடம்.

(2) இத்தேன் ஆடையை எடுத்துத் தாருங்கள்! வாருங்கள்! எனச் சொல்லி அறிவு அழிவதற்குக் காரணமான, கள்ளைக் குடித்து நிற்கின்ற மங்கையர் கையைக் குவித்து வணங்க, ஆடவர் சந்திரன் என்னும் தேன் அடையைப் பிழிந்து வார்க்கும் போது, 'இது குற்றமாகும்' என்று

(3) 'ஒளியுடைய மங்கையர் முகம் என்ற சந்திரனுக்கு யான் ஒப்பு என்று சொல்லேன்; உயிர் ஒன்றை மட்டும் விடுங்கள்' எனச் சந்திரன் வேண்டினன். வேண்ட, அவ்வாடவர்கள் அப்படியே

தப்ப விட்டனர். அந்தச் சந்திரன் கள் உண்ட அவரிடத்தினின்று பிழைத்தோம் ஒழிந்தோம் என்று தப்பித்தான்.

(4) இத்தகைய இயல்புடைய களிப்புத் தங்கிய மாடங்கள் மிக்குள்ள புள்ளிருக்கும் வேளூர! கொவ்வைக் கனி போன்ற வாயால் முத்தம் அளித்தருளுக! கங்கைக்கும் திருமால் தங்கை யான பார்வதிக்கும் ஒப்பற்ற மகனே, கனிவாய் முத்தம் தந்தருளு வாயாக.

**விளக்கம்**

(1) துளிதூங்கு - துளிகள் பொருந்திய. முகில் படலம் - மேகத் தொகுதியை. சோலை செய்ய - சோலை போல் நிழலைச் செய்ய. அறுகால் - ஆறு கால்கள். அளி - வண்டு.

(2) தேன் இறால் - தேன் கூடு. தம்மின் - தாருங்கள். வம்மின் - வாருங்கள். அழிநறா ஆர்ந்து நிற்கும் - அறிவு அழிவதற்குக் காரணமான மதுவைக் குடித்து நிற்கும். அந்நலார் - அழகிய பெண்கள். ஆடவர் - அந்நங்கையரின் கணவர். பிழிந்து ஊற்றும் - பிறைச் சந்திரனைப் பிழிந்து ஊற்றும். அபராதம் - குற்றம். எனா - என்று சந்திரன் கூறி.

(3) என்கிலேன் - எனக் கூறமாட்டேன். விடுதிர் - விட்டு விடுவீர். உயிர் ஒன்றும் - உயிரை மட்டும். உடுபதிக் கடவுள் - சந்திரன். உடு - விண்மீன். உய்ந்தோம் ஒழிந்தோம் - பிழைத் தோம்; தப்பினோம்.

(4) மாடம் மலி - மாளிகைகள் மிக்க. கள்ளைக் குடித்த மங்கையர் மயக்கத்தால் சந்திரனைத் தேனடை என்று கருதி விரும்ப, ஆடவர் அச்சந்திரனைப் பிடித்துப் பிழியத் தொடங்கு கையில் சந்திரன் தனக்குரிய தண்டனை போலும் என எண்ணினான். 'நான் மகளிரின் முகத்துக்கு ஒப்பு என்று சொல்ல வில்லையே!' என்று சொல்லிட அவர்கள் அவனை விட்டு விடச் சென்று மகிழ்வான் என்பது இப்பாடலில் அமைந்துள்ள கற்பனை.

(7)

397. பூமரு வுயிர்க்கும் கருங்கொந் தளத்துவிரி
பூந்துகள் படலமுமணம்
பொங்கிய நறும்புகைப் படலமும் காலமழை
பொழிமுகில் படலம்செயத்
தாமரை முகச்சோதி எழவெழும் சிறுமுறுவல்
தண்ணிலவு செயவெயில்செயத்
தழல்மணிக் கலனகல் நிதம்பமொடு வெம்முலை
தடங்கடலு மலையுஞ்செயத்
தேமரு குழல்கோதை மயிலனீர் கோசிகச்
செம்மலென வேறுபுவனம்
செயவும்வல் லீரென மணந்திடை தணந்தவர்சொல்
செஞ்சொல் பசுங்கிளிசொலக்
காமரு மனங்குழையு மாதர்பயில் வேளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (8)

## தெளிவுரை

(1) பூக்கள் மணம் வீசும் கரிய கூந்தலில் விரிந்த மலர்த்துகள் கூட்டமும் மணம் மிக்க நறுமண் புகைக் கூட்டமும், பருவ மழை பொழியும் மேகத் தொகுதியை ஒக்கத்

(2) தாமரை மலர் போன்ற இனிய முக ஒளி எழுதலும் தோற்றுகின்ற புன்னகையானது, குளிர்ந்த நிலவைத் தோற்றுவிக்க, நெருப்புப் போன்ற மணிக்கலன்கள் வெயிலை யுண்டாக்க, அகன்ற நிதம்பத்துடன் விருப்பத்துக்கு ஏதுவான கொங்கைகள் முறையே பெரிய கடலையும் மலையையும் போல் விளங்க,

(3) நறுமணம் உள்ள ஐம்பாலின் கூந்தலையுடைய மயிலை ஒப்பவரே! விசுவாமித்திரரைப் போல் வேறு உலகங்களை உண்டாக்கவும் வல்லீர் என்று, கூடி இடையே பிரிந்து சென்றவர் சொல்லும் செவ்விய சொற்களைப் பசிய கிளிகள் கூற,

(4) அழகிய மனம் உருகி நின்ற மடந்தையர் சஞ்சரிக்கின்ற வேளூரனே! கொவ்வைக் கனி போன்ற வாய் முத்தத்தைத் தந்தருளுவாயாக! கங்கைக்கும் திருமாலின் தங்கையான உமைக்கும் ஒப்பற்ற மகனே! கனிவாய் முத்தம் தந்தருளுக.

**விளக்கம்**

(1) மரு - நறுமணம். பூந்துகட் படலம் - பூ + துகள் + படலம்; மகரந்தம் பொடியின் பரப்பு. புகை என்றது கூந்தலுக்கு ஊட்டியது. மங்கையர் தம் ஈரக் கூந்தலை உலர்த்தப் புகை யூட்டுவர். முகில் படலம் செய் - மேக படலத்தின் தோற்றத்தை யுண்டாக்க.

(2) முறுவல் - புன்னகை. தழல் மணிக்கலன் வெயில் செயஎன இயைக்க. சிறு முறுவல் தண்ணிலவு செய. நிதம்பம் கடலாகவும் முலை மலையுமாய் விளங்க.

(3) தேமரு - தேன் பொருந்திய. மயில் அனீர் - மயிலைப் போன்றவரே! கோசிகச் செம்மல் - விசுவாமித்திர முனிவர். மங்கையரிடத்துள்ள மகரந்தப் பொடி முதலியவை புதிதாய்ப் படைக்கப்பட்ட உலகம் ஒன்றில் உள்ள மேகம் முதலிய பொருள் களைப் போல் விளங்கினமையின் விசுவாமித்திரரை அம் மங்கையர்க்கு உவமையாக்கினார். என - என்று பொய்யாகச் சொல்லி. தணந்தவர் - பிரிந்தவர்.

(3-4) பிரிவதற்கு முன் கணவர் தனிமையில் கூறிய பாராட்டுச் சொற்களை அங்கிருந்து கிளி கற்று அவர் பிரிவாற்றா மையால் வருந்தும் காலத்தில் கூறியது. அவற்றைக் கேட்டு மகளிர் வருந்தினர்.

(4) காமரு - அழகிய. மனம் குழையும் - மனம் வருந்தும்.

(8)

### சந்த விருத்தம்

398. மதியு நதியும் அரவும் விரவு
மவுலி யொருவன் முக்கணும்
வனச முகமும் அகமு மலர
மழலை யொழுகு சொற்சொலும்
புதல்வ இமய முதல்வி யருள்செய்
புனித அமரர் கொற்றவன்
புதல்வி தழுவு கொழுந குறவர்
சிறுமி குடிகொள் பொற்புய
கதிரு மதியு மொளிர வொளிரும்
ஒளிய அளிய கற்பகக்
கனியி னினிய வுருவ பருவ
மழையி னுதவு கைத்தல
முதிரு மறிவி லறிஞர் உணரு
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. (9)

### தெளிவுரை

(1) சந்திர மண்டலமும் வான் கங்கையும் பாம்பும் கலந்திருக்கப் பெற்ற திருமுடியையுடைய ஒப்பில்லாத சிவபெருமானின் மூன்று கண்களும் தாமரை மலர் போன்ற முகமும் திருவுள்ளமும் மலரும்படி மழலைத் தன்மை ஒழுகுகின்ற சொற்களைச் சொல்லும்

(2) மகனே! இமய மலையில் அவதரித்த தலைவியான உமையம்மை பெற்ற தூயவனே! தேவர் தலைவனான இந்திரனின் மகளான தெய்வயானை அணையும் கணவனே! குறப் பெண்ணாகிய வள்ளி நாயகி குடி கொண்டிருக்கின்ற அழகிய தோள்களை உடையவனே!

(3) கதிரவனும் சந்திரனும் ஒளி செய்ய விளங்கும் ஒளியையுடையவனே! கனிந்த கற்பகக் கனியினும் இனிதாகிய திருவடிவம் கொண்டவனே. பருவ மழை போல் வள்ளன்மையுடைய கைத்தலம் உடையவனே!

(4) பேரறிவையுடைய அறிஞர் அறிவதற்கு உரியவனே! முத்தம் தந்தருளுக! முனிவர்கள் வழிபடுவதற்கு இடமாகிய பரிதிபுரியில் எழுந்தருளியுள்ள முருகனே! முத்தம் அளிப்பாயாக!

**விளக்கம்**

நதி - கங்கை. மவுலி - முடி. ஒருவன் - ஒப்பில்லாதவன். வனச முகம் - தாமரை முகம். சொலும் - 'சொல்லும்' என்பதன் தொகுத்தல் விகாரம்.

(2) இமய முதல்வி - இமய மலையில் தோன்றியவளே! அமரர் கொற்றவன் - இந்திரன். கொழுந - கணவனே! குறவர் சிறுமி - குறவர் குலப் பெண்ணான வள்ளி. பொற்புய - அழகிய தோளை யுடையவனே!

(3) அளிய - கனிந்த. பருவமழை - பருவகால மேகம்.

(4) பரவு - போற்றும். (9)

399. வடிவி னழகும் எழுத அரிய
புயமு நறிய செச்சையும்
மருமம் விரவு குரவு மரையின்
மணியு மணிகொள் கச்சையும்
கடவு மயிலும் அயிலு மொழுகு
கருணை வதன பற்பமும்
கமல விழியும் விழியு மனமும்
எழுதி எழுதி நித்தலும்
அடிக ளெனவுன் அடிகள் பணியும்
அடிய ரலது மற்றும்வேறு
அமரர் குழுவும் அகில மறையும்
அரியும் அயனு முற்றுநின்
முடியும் அடியும் உணர அரிய
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. (10)

## தெளிவுரை

(1) நின் உருவத்தின் அழகும் எழுதுதற்கு அரிய தோள்களும் நறுமண வெட்சி மாலையும் திருமார்பில் பொருந்திய குரவ மலர் மாலையும் இடையில் அணியப்பட்ட மணியும் அழகைக் கொண்ட கச்சையும்

(2) நின்னால் செலுத்தப்படும் மயிலும் வேலும் ஒழுகும் அருளை யுடைய முகத்தாமரையும் தாமரை மலர் போன்ற கண்களும் அடியார்கள் தம் கண்ணிலும் மனத்திலும் பலகால் எழுதி, நாள் தோறும்,

(3) 'அடிகளே' என்று நின் திருவடிகளை வணங்கும் அடியார்க்கே அன்றி, மற்றுமுள்ள வேறாகிய தேவர் கூட்டமும் எல்லா வேதங்களும் திருமாலும் நான்முகனும் முற்றும் நின்

(4) முடியையும் அடியையும் உணர்வதற்கு அரிய முதல்வனே! முத்தம் தந்தருளுவாயாக! முனிவர்கள் துதித்துப் போற்றும் பருதி புரியின் முருகப் பெருமானே, முத்தம் தந்தருளுக.

## விளக்கம்

(1) செச்சை - வெட்சி மலர் மாலை. மருமம் - மார்பு. குரவு - குராமலர். அரையின் மணி - உடையின் மணி.

(2) கடவும் - செலுத்தும். அயில் - வேல். விழியிலும் மனத் தகத்திலும் எழுதி எழுதி.

வதன பற்பம் - முகமாகிய தாமரை. கமல விழி - தாமரை போன்ற கண்.

(3) அமரர் குழு - தேவர் கூட்டம். அகில மறையும் - எல்லா வேதங்களும். அடியநலது - அடியாரே அல்லாது. (10)

## 6. வருகைப்பருவம்

(நடக்கும் பருவக் குழந்தையைத் தம்மிடம் நடந்து வருமாறு தாய் தந்தையர் முதலியவர் வேண்டல் வருகைப் பருவமாகும்.)

400. செம்பொற் கருங்கழல் அரிக்குரல் கிண்கிணி
சிலம்பொடு கலின்கலினெனத்
திருவரையில் அரைமணி கிணின்கிணின்
எனப்பொலந்
திண்டோளின் வளைகலிப்ப
அம்பொன் பகட்டுமார் பில்சன்ன வீரமும்
ஆரமும் திருவில்வீச
அணிமகர குண்டலம் பருதிமண் டலமென்ன
அலர்கதிர்க் கற்றைசுற்றப்
பைம்பொன் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்
பட்டமொளி விட்டெறிப்பப்
பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தொறும்
பனிமுறுவல் நிலவரும்பக்
கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. (1)

**தெளிவுரை**

(1) செம்பொன்னால் இயற்றப்பட்ட பெரிய கழல் அணியில் இடப்பட்ட பருக்கைக் கற்களான ஒலியையுடைய கிண்கிணிகள் சிலம்புகளுடன் 'கலின், கலின்' என ஒலிக்கவும்,

திருவரையில் உடைமணி கிணின் கிணின் என்று ஒலிக்கவும், உறுதியான தோள்களில் வாகு வலயங்கள் ஒலிக்கவும்,

(2) அழகிய பொன் நிறம் உள்ள அகன்ற மார்பில் அணிந்துள்ள சன்ன வீரமும் ஆரமும் அழகிய ஒளியை வீசவும்,

அணிந்துள்ள மகர குண்டலங்கள் கதிரவன் மண்டலம் போல் பரவிய ஒளிப்பிழம்பு வீசவும்,

(3) பசும் பொன்னால் ஆன ஒளியை யுடைய சுட்டியும் கட்டப்பட்ட சூழியத்துடன் நெற்றிப் பட்டமும் ஒளிவிட்டு வீசவும்,

தாமரை மலர் போன்ற மலர்ந்த திருமுக மண்டலங்கள் தோறும் குளிர்ந்த புன்னகை என்ற நிலவு தோன்றவும்,

(4) குடம் போன்ற சாயாத கொங்கைகளையுடைய மலை மகளின் செல்வ மகனான குமாரனான தலைவனே, வருவாயாக!

குராமலரின் மணம் கமழ்கின்ற கந்தபுரியில் அருள் உருவாகக் குடிகொண்டிருந்தாற் போன்ற குமரக் கடவுளே, மேலான ஆசாரியனே, வருவாயாக!

**விளக்கம்**

(1) கருங்கழல் - பெரிய கழல் என்ற அணி. அரிக்குரல் - தவளையின் குரல் போன்ற ஒலி. கிண்கிணி - ஒருவகைக் காலணி; கிண்கிண் என்ற ஓசையையுடையதால் இப் பெயர். கலிப்ப - முழங்க.

(2) அம்பொன் - அழகிய பொன். பகட்டு மார்பு - பெரிய மார்பு. சன்ன வீரம் - வீரசங்கிலி; வெற்றிமாலை. திருவில் - இந்திர வில்லின் ஒளி. மகர குண்டலம் - மகர வடிவில் செய்யப்பட்ட குண்டலம். பருதி மண்டலம் - கதிரவன் மண்டலம். கற்றை - தொகுதி.

(3) சுட்டி - நெற்றியில் அணியும் அணி. சூழியம் - உச்சிக் கொண்டை. அணிகலன் வகை. பட்டம் - நெற்றிப்பட்டம். பங்கயம் - தாமரை. பனிமுறுவல் - குளிர்ந்த புன்னகை. நிலவு - ஒளி; நிலவுஒளி.

(4) கும்பம் - குடம். படாமுலை - சாயாத் கொங்கை. மலைப்புதல்வி - மலை மகளான பார்வதி. குரவு - குராமலர். இது முருகப்பெருமானுக்கு உகந்த மலர்.

முடிவு: கலிப்ப, வீச, அற்ற, எறிப்ப, அரும்ப, வருக என இயையும். (1)

401. மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்டுகில்
மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி எம்பிரான்
மார்பினில் குரவையாடி
முழவுமுதிர் துடியினில் சிறுபறை முழக்கிஅனல்
மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத் திளமானின்
முதுபசிக்கு அறுகருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூளெழ
மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள் சேப்பமுழு
வெள்ளநீர்த் துளையமாடிக்
குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. (2)

## தெளிவுரை

(1) இளமை மிகுந்த கனி வாயினின்றும் வடியும் பசிய தேனானது வெள்ளாடை அணிந்த மடியை நனைக்க, இறைவியின் அழகான வயிறு குளிருமாறு தாவி ஏறி, இறைவனின் மார்பில் குரவைக் கூத்து ஆடி,

(2) முழவு ஒலியைவிட மிக்க துடியிடத்தில் சிறுபறை போல் முழக்கி, தீயை சடைநீரைச் சொரிந்து அணைத்துப் பிறையை, நெளிகின்ற பாம்பின் வாயில் இட்டு, மான்கன்றின் பெரும்பசிக்கு அறுகம்புல்லை உண்பித்து,

(3) அழகு மிகுந்த செம்மேனியில் மிதித்துத் திரு வெண்ணீற்றுத் துகள் மேல் எழ மிகுதியாகப் புழுதியாடல் செய்து விரிந்த சடைக்காட்டிலே நின் அழகிய விழிகள் சிவக்க முழுப் பெருக்கு நீரில் முழுகி,

(4) இளமை முதிர்கின்ற காலத்தில் பெருமகிழ்ச்சி ஏற்படச் சிறு குறும்புகளைச் செய்தவனே! வருவாயாக! குராமலரின் மணம் கமழ்கின்ற கந்தபுரியில் அருள் உருவாகக் குடிகொண்ட குமரக் கடவுளே, மேலான ஆசாரியனே வருவாயாக!

**விளக்கம்**

மழவு - இளமை. மணிவயிறு - அழகிய வயிறு. குரவை ஆடி - குரவை ஆட்டம் ஆடுவது போல் ஆடி. குரவை என்பது ஒருவகைக் கூத்து. பசுந்தேறல் - பசுமையான தேன் போன்ற வாய்நீர்.

(2) முழவு முதிர் - முழவினைப் போன்ற ஓசை மிகும். முழவு - மத்தளம். துடி - உடுக்கை. சிறுபறை - சிறிய பறை போல ஒலியுண்டாக்கி. மோலி - சடை. நீர் - கங்கையின் நீர். இறைவர் கையில் உள்ள தீயைக் கங்கை நீரை வார்த்து அவித்தான் முருகன். மடுத்து - செறித்து. இளம்பிறையை நெளியும் பாம்புக்கு இரையாக வாயில் தந்தான். தலையில் உள்ள அறுகம்புல்லைக் கையில் உள்ள மானுக்குத் தந்து உண்ணச் செய்தான். அறுகு - அறுகம்புல்.

(3) விழவு முதிர் - அழகு மிக்க. வெண்நீறு - வெண்ணிறமான நீறு. தூள்எழ - துகள் உண்டாக. புழுதி யாட்டயர்ந்து - புழுதியில் ஆடுவது போல் ஆடி. சேப்ப - சிவக்க. துளையம் ஆடி - துளைந்து விளையாடி.

(4) சிறு குறும்பு - சிறு விளையாட்டு. செய்தவன் - செய்தவனே; விளி. (2)

402. இருளற இமைக்குநின் திருவுருவின் அலர்சோதி
இளஞாயி றெனமுகையவிழ்ந்து
ஏடுவிரி தாமரைக் காடுமுகிழ் நகைநிலவு
எறிப்பவலர் குமுதவனமும்
கரைபுரள வலைமோது கடலைக் கலக்குமழ
களிறென உழக்கியொருநின்
கண்மலர்கள் செம்மலர்க ளாகமோ கப்பெருங்
கலவியங் கடலின்மூழ்கும்

வெருளின்மட நோக்கின் நீர்அரமகளி ருடனாடும்
விளையாட் டெனத்திரைபொரும்
வெள்ளநீர்ச் சரவணப் பொய்கையம் துறையில்நீள்
வீரர்க ளெனும்கோளரிக்
குருளைக ளொடும்புனல் குடைந்துவிளை யாடிய
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியில்அருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (3)

**தெளிவுரை**

(1) இருள் அகலும்படி ஒளிர்கின்ற நின் திருவடியின் பரவிய ஒளியை இளங்கதிரவன் என்று எண்ணி அரும்பு விரிந்து இதழ்கள் அலர்ந்த தாமரை மலர்க்காட்டையும் குறுநகையான நிலவு ஒளி வீசுதலால் மலர்ந்த நீலமலர்க்காட்டையும்

(2) கரைபுரள அலை மோது கடலைக் கலக்குகின்ற இளங்களிறு போலக் கலக்கி ஒப்பில்லாத உன்கண் மலர்கள் சிவந்த மலர்கள் ஆகுமாறு மோகமான கலவிக் கடலில் முழுகும்

(3) வெருட்சியுடன் கூடிய மடநோக்கத்தைக் கொண்ட நீரரமகளிரோடு ஆடும் விளையாட்டைப் போல் அலைமோதும் நீர்ப்பெருக்கையுடைய சரவணம் என்ற பொய்கையின் அழகுத் துறையில் வீரவாகு தேவர் முதலிய ஒன்பது பெரிய வீரர்கள் என்கின்ற

(4) கொல்லவல்ல சிங்கக் குட்டிகளோடும் நீரில் குடைந்து விளையாடின குமார நாயகனே வருவாயாக! குராமலர் மணம் கமழ்கின்ற கந்தபுரியில் அருள் குடிகொண்டாற் போல் விளங்கும் குமரகுருபரனே வருவாயாக!

**விளக்கம்**

முருகன் தன் நவவீரருடன் கூடிச் சரவணப் பொய்கையில் விளையாடிய செயல் கூறப்படும்.

சரவணப் பொய்கையில் உள்ள தாமரை மலர் முருகப் பெரு மானின் சோதியைக் கண்டு மலர்ந்தது. முருகனின் திருமேனியின்

ஒளிக்கு ஞாயிறு உவமை. நகையில் உண்டாகிய நிலவைப் போன்ற ஒளியால் குமுதம் மலர்ந்தது.

(1) இமைக்கும் - விளங்கும். அலர் சோதி - வெளிப்படும் பேரொளி. இளஞாயிறு - உதிக்கும் கதிரவன். முகை - மொட்டு. நகைநிலவு - சிரித்தலால் உண்டான நிலவு ஒளி. குமுதம் - செவ்வல்லி.

(2) மழ களிறு - இளைய ஆண் யானை. உழக்கி - கலக்கி. காட்டையும் வனத்தையும் கலக்கி. மோகப் பெருங்கலவியங்கடல் - மோகமாகிய பெரிய கலவிக்கடலில்.

(3) வெருளின் - வெருட்சியோடு. மடநோக்கு - இளம் பார்வையுடைய. நீர் அரமகளிர் - நீர்நிலைகளில் வாழும் இயல்புடைய தெய்வ மகளிர். வீரர்கள் - வீரவாகு முதலிய ஒன்பது வீரர்.

(4) கோள் அரிக்குருளை - கொல்லவல்ல சிங்கக் குட்டி. புனல் குடைந்து - நீரில் விளையாடி. (3)

403. கட்டுண்ட படர்சடைக் காட்டெம்பி ரான்வைத்து
கலைமதியொ டையநீயக்
கவுரிதிரு முடியின்நித் திலமிட் டிழைத்திட்ட
கதிரிளம் பிறையிணைப்பத்
தெட்டுண்ட போல்முழுத் திங்களென்று ஏக்கறும்
செழுமணிச் சூட்டுமோட்டுச்
செம்பாம்பு பைவிரித் தாடுதலும் ஓடிநின்
சிறுநறுங் குஞ்சிக்கிடும்
மட்டுண்ட பைங்குலைக் காந்தளென் றணையஅம்
மாசுணம் வெருண்டோடலும்
மணிமுடியின் நகுதலையை மற்றெமை நகைத்தியால்
மலரவன் தலைநீமுனம்
குட்டுண்ட தறியாய்கொல் எனவித ழதுக்கும்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (4)

**தெளிவுரை**

(1) கட்டுப்பட்ட பரவிய சடைக்காட்டில் எம் பெருமான் வைத்த மதிக்கலையுடன், ஐய, நீ அந்த உமையம்மையின் முடியில் உள்ள முத்துக்களால் ஆன இளம்பிறையைப் பொருத்தினை. அவ்வாறு பொருத்த,

(2) தெளிந்தது போல் முழுமதி என்று எண்ணி ஏங்கும் மாணிக்கத்துடன் கூடிய உச்சியையும் பெருமையையும் உடைய செம்பாம்பானது படம் விரித்து ஆடும். ஆடவும், நீ அதைக் கண்டு ஓடி நின் நறிய தலையில் சூட்டிக் கொள்வதற்குரிய

(3) தேனுடன் கூடிய பசிய குலைகளையுடைய காந்தள் மலர் என்று நெருங்கினாய். ஆதலால் அந்தப் பாம்பு அஞ்சி ஓடியது. அங்ஙனம் ஓடியவுடன், அழகாகிய சடையில் நகைத்துக் கொண்டிருக்கின்ற தலையை நோக்கி, நீ சிரிக்கின்றாய்; ஆதலால் பிரமன் தலையே! நீ முற்காலத்தில்,

(4) குட்டுப்பட்டதை அறியவில்லை போலும்! என்று உதட்டை அதுக்கிச் சினந்து நோக்கும் குமார நாயகனே வருகவே! குரவு மலர் மணம் கமழ்கின்ற கந்தபுரியில் அருள் குடிகொண்ட குமரகுருபரனே, வருவாயாக!

**விளக்கம்**

முருகன் சிவன் தலையில் உள்ள பிறையோடு அம்மையின் முடியில் உள்ள முத்தால் ஆன பிறை என்ற அணியை ஒன்றாய் இணைத்தான். அப்போது அவற்றை முழுமதி என்று எண்ணிச் சடையில் உள்ள பாம்பு பிடிக்க வருகையில், அப் பாம்பை முடியில் அணிதற்கு உரிய காந்தள் மலர் என்று முருகன் அதன் அருகே சென்றனன். அப்போது அப்பாம்பு ஓடியது. அவ்வமயம் சிவன் முடியில் உள்ள நான்முகன் தலை தன்னைக் கண்டு சிரிப்பதாக நினைத்து, ''நீ முன் குட்டுண்டதை மறந்தாயோ'' என்று சொல்லி முருகன் சினந்தான். இது இப்பாடலில் கூறப் படுவது.

படர்சடை - பரந்த சடை. எம்பிரான் - சிவபெருமான். கவுரி - பார்வதி. நித்திலம் இட்டு இழைத்த கதிர் இளம்பிறை - முத்தால் ஆன ஒளியுடைய பிறைச்சந்திரன் என்ற அணி. இணைப்ப - சேர்க்க. முருகன் சிவபெருமான் முடியில் உள்ள பிறையுடன். பார்வதியில் தலையில் உள்ள பிறை என்ற அணியைச் சேர்க்க.

(2) தெட்டுண்ட போல் - தெளிந்தது போல். ஏக்கறும் - ஏங்கும். செழுமணி - செழுமையான மாணிக்க மணி. சூட்டு மோட்டுச் செம்பாம்பு - உச்சியையும் பெருமையையும் உடைய சிவந்த பாம்பு. பை விரித்தாடலும் - படத்தை விரித்து ஆடவும்.

(3) மட்டுண்ட - தேன் பொருந்திய. பைங்குலைக் காந்தள் - பசிய காந்தள் மலர். அணைய - நெருங்க. மாசுணம் - பாம்பு. வெருண்டு - அஞ்சி. மணிமுடியின் நகுதலை - சிவபெருமானின் தலையில் உள்ள பிரமன் தலை. எம்மை நகைத்தியால் - எம்மைப் பார்த்து இகழ்ந்து சிரிக்கின்றாய். மலரவன் தலை - பிரமனின் தலையே; விளி.

(4) இதழ் அதுக்கும் - உதட்டைக் கடிக்கும். குட்டுண்டது - குட்டப்பட்டது; செயப்பாட்டு வினை. (4)

404. அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற்கு
அடங்காமை யால்எம்பிரான்
அலர்விழிகள் பொத்தலும் இருட்படல மூடவுள்
அஞ்சிநின்று ஏங்கஏங்கிச்
செங்கைத் தலங்கொண்டு எடுத்தணைப் பாட்கும்
திருத்தாதை யார்க்குமுத்தம்
திருமுகமொ ராறும் கொடுப்பக் கதுப்பில்
தெறித்துமுத் தந்தருகெனும்
கங்கைக்கு நல்காது எழுந்தலறி யோடலும்
கண்ணீர் துடைத்தெடுத்துக்
கான்மலரு நீவித்தன் மார்புற அணைக்கும்அக்
கவுமாரி அருள்மாரியில்
கொங்கை குடங்கொட்டு பாலருவி யாடும்
குமாரநா யகன்வருகவே

குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. (5)

**தெளிவுரை**

(1) முருகன், உள்ளங்கையால் இறைவியின் சிவந்த கண்கள் மூடுதற்கு அடங்காமையால் எம் சிவபெருமானின் பரந்த கண்களை மூடவும், இருள் உலகில் மூடிக் கொள்கிறது. அதனால் உள்ளம் நடுங்கி இரங்கிச்

(2) செங்கைத்தலத்தால் அணைத்துக் கொள்பவனான உமையம்மைக்கும் திருத்தந்தையாகிய சிவபெருமானுக்கும் ஆறு திருமுகங்களாலும் முத்தம் தந்து நின்றான் முருகன். அதுகாலை கன்னத்தில் அறைந்து ‘முத்தம் தருக’ என்று வினவும்

(3) கங்கைக்கு முத்தம் தராமல் அலறிக் கொண்டு ஓடினான். ஓடலும், கண்ணீரையும் துடைத்துப் போக்கித் திருவடி மலரையும் தடவி மார்பில் அணைத்துக் கொள்ளுபவள் உமாதேவி. அவளின் அருள்மழை போல்

(4) கொங்கைக் குடங்கள் கொட்டுகின்ற பால் அருவியில் விளையாடுகின்ற குமார நாயகனே, வருவாயாக! குரவு மலர் மணம் கமழும் கந்தபுரியில் அருள் குடி கொண்ட குமரனே! மேலான ஆசானே! வருவாயாக!

**விளக்கம்**

முருகப் பெருமான் உமையின் கண்களை மூட இயல வில்லை. ஆதலால் சிவபெருமான் திருவிழிகளைக் கை கொண்டு மூடவும் இருள் எங்கும் மூடியது. அதைக் கண்டு ஏங்கி நிற்ப, அவரை உமையாள் எடுத்து அணைத்துக் கொண்டாள். அப்போது முருகன் சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் முத்தம் அளித்தான். கங்கை தனக்கும் முத்தம் தரவேண்டும் என்று விரும்பினாள். அவன் முத்தம் தராமல் எழுந்து ஓடினான். அத் தகையவனை உமையாள் எடுத்து அணைத்துக் கொண்டு பாராட்டினாள்.

(1) அங்கைத் தலம் - உள்ளங்கைத்தலம். அடங்காமை - அடங்காததால். பொத்தலும் - மூடலும். இருட்படலம் - இருள் பரப்பு.

(2) சிவபெருமானின் முகம் ஐந்து உமையின் முகம் ஒன்று ஆக ஆறிலும் முத்தம் தந்தனர். கதுப்பில் எறித்து - கன்னத்தில் விரலால் சுண்டி.

(3-4) அருள் மழை போலக் கொட்டும் பால் அருவி. கான்மலர் - கால்.

(4) கொங்கைக்குடம் - கொங்கையாகிய குடம். (5)

### வேறு

405. பைந்தண் கமல வட்டவணைப்
பாவை அனையார் பூவிரியும்
பசுமென் குழல்கட் டகில்புகையின்
படல மூட முடைநறவின்
கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்ன லெனவும் கன்னலைப்பூங்
கமுக மெனவுங் கடைக்கூடாத்
தந்தம் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறும்
சமயத் தவர்போல் தலைமயங்கும்
அந்தண் பழனக் கந்தபுரிக்கு
அரசே வருக வருகவே
அருளா னந்தக் கடல்பிறந்த
அமுதே வருக வருகவே. (6)

**தெளிவுரை**

(1) பசுமையும் குளிர்ச்சியும் உள்ள தாமரை மலரான வட்ட அணையில் உள்ள ஓவியம் போன்ற திருமகள் போன்ற மாதர்

மென்மையான கூந்தலுக்குக் காட்டும் அகிற்புகையின் கூட்டம் மூட ஒருவகை நாற்றம் பொருந்திய கள்ளின்

(2) மணம் வீசும் செய்ய பவளம் போன்ற வாயையுடைய மருதநிலப் பெண்கள் செந்நெற் பயிரைப் பசிய கரும்பு என்றும் கரும்பைப் பொலிவாகிய கமுக மரம் என்றும் முடிவு தெரியாமல்

(3) தம்தம் உள்ளத்தில் தோன்றிய வண்ணம் சொல்லிச் சொல்லி முழுமாயக் கடலில் முழுகித் தடுமாறும் சமய வாதிகள் போல் தடுமாறுவர். இத்தகைய

(4) அழகிய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த கந்தபுரியின் அரசே! வருவாயாக! அருளுடன் கூடிய ஆனந்தக் கடலில் தோன்றிய அமுதமாக வருகவே!

**விளக்கம்**

(1) பைந்தண் கமல வட்ட அணைப்பாவை - திருமகள்; பசிய தாமரை மலர் அணையில் வீற்றிருக்கும் பாவை போன்ற திருமகள்.

மங்கையர் கூந்தலுக்குப் புகையூட்ட. அது மூடிக் கொள்ள. அதனால் செந்நெல்லைக் கரும்பு எனவும் கரும்பைக் கமுகு எனவும் நினைக்கலாயினர்.

(2) கந்தம் - நறுமணம். செந்துவர்வாய் - சிவந்த பவளம் போன்ற வாய். கடைசி மகளிர் - உழத்தியர். பைங்கன்னல் எனவும் - பசுமையான கரும்பு எனவும். கன்னலைப் பூங்கமுகம் எனவும் - கரும்பைப் பாக்குமரம் எனவும். கடைக்கூடா - அறிய முடியாத; முடிவு பெறாத.

(3) சலதி - கடல். தலை மயங்கும் - தடுமாற்றம் கொள்ளும்.

(4) அந்தண் - அழகிய குளிர்ந்த. பழனம் - வயல். (6)

406. வள்ளைக் குழையில் தாவடிபோம்
மடமா னோக்கின் கடைசியர்கள்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை
பள்ளத் திருள்தூங் கழுவநீர்ப்
பரப்பென் றகல்வான் மிசைத்தாவப்
பாகீ ரதித்தீம் புனல்கிடைத்த
பரிசு வீட்டின் பயன்துய்க்கும்
உள்ளக் கருத்தால் பிறிதொன்றை
உண்மைப் பொருளென் றுள்ளவும்தம்
உணர்வில் தெய்வம் கடைக்கூட்ட
உறுதி கிடைத்த படிபோலும்
அள்ளற் பழனப் புள்ளூருக்கு
அரசே வருக வருகவே
அருளா னந்தக் கடல்பிறந்த
அமுதே வருக வருகவே. (7)

**தெளிவுரை**

(1) வள்ளையின் தண்டு போன்ற காதில் அணிந்த காதணி மீது போரிடப் போகின்ற மடமான் நோக்கத்தையுடைய மருதநில மங்கையரின் பூமாலை மலர் கூந்தலில் மொய்க்கும் வண்டுகள் ஒலிக்க, (அதைக்கேட்டு) மடுவிலிருந்து தாவிச் செல்லும் கீற்றுக் களையுடைய வாளை மீன்கள் இருள் நிறைந்த

(2) பள்ளமாகிய கடல் நீர்ப்பரப்பு என்று எண்ணி அகன்ற வானத்தின் மீது குதிக்க, வான கங்கையின் இனிய நீர் கிடைத்த தன்மையானது வீட்டின் பயனைத் துய்க்கும்

(3) உள்ளக் கருத்தால் வேறொன்றை உண்மைப் பொருள் என்று எண்ணவும் தம் அறிவில் உள்ள தெய்வமானது முற்றுவிக்க உறுதிப்பொருளானது கிடைத்த தன்மையை ஒக்கின்ற,

(4) சேற்றை உடைய வயல்கள் சூழ்ந்த புள்ளூருக்கு மன்னனே, வருவாயாக! அருளானந்தக் கடல் பிறந்த அமுதே வருவாயாக! வருவாயாக!

**விளக்கம்**

(1) வள்ளைக் குழை - வள்ளைக் கொடிஇலையைப் போன்ற காது. தராவடி போதல் - தாவிச் செல்லல். வெடிபோம் - துள்ளிச் செல்கின்ற. கடைசியர் - உழத்தியர். குழல் வண்டு - கூந்தலில் உள்ள வண்டுகள். ஓலமிட - ஒலி எழுப்ப. மடுவில் - நீர்நிலையில்.

(2) இருள் தூங்கு அழுவம் நீர்ப்பரப்பு - இருள் பொருந்திய கடல் நீர்ப்பரப்பு. பாகீரதி - வானகங்கை. பரிசு - இயல்பு. வீட்டின் பயன் துய்க்கும் - வீடுபேற்றின் பயனை அநுபவிக்கும்.

(3) உள்ளவும் - நினைக்கவும். பிறிது ஒன்றை - உண்மைப் பொருள் அல்லாத ஒன்றை. உணர்வில் - அறிவில். உறுதிகிடைத்த - வீடுபேறு கிடைத்த.

(4) அள்ளல் - சேறு. பழனம் - வயல். (7)

407. நஞ்சில் தோய்த்துக் கொலைதீற்றும்
நயன வேலும் கரும்புருவ
நாமச் சிலையும் அகலல்குல்
நகுபொன் தேரும் இகல்கடந்து
வஞ்சிக் கொடிநுண் ணிடைசாய்த்து
மதர்த்துக் களித்த மால்களிறும்
மற்றும் படைகள் பற்பலவும்
வகுத்துக் கொண்டு மடலவிழ்ந்த
கஞ்சத் தவிசில் திருஅன்னார்
கடலந் தானைக் கைநிமிரக்
காமன் படைவீ டெனப்பொலியும்
காட்சி யானும் அப்பெயரிட்டு
அஞ்சொல் தமிழோர் புகழ்வேளூர்க்கு
அரசே வருக வருகவே
அருளா னந்தக் கடல்பிறந்த
அமுதே வருக வருகவே. (8)

**தெளிவுரை**

(1) நஞ்சில் தோய்த்துக் கொலை பூசிய கண்கள் என்ற வேற்படை, கரிய புருவம் என்ற பெயரையுடைய வில், அகன்ற அல்குல் என்ற பொன் தேர், பகைவரை வென்று

(2) வஞ்சிக் கொடி போன்ற இடையை வருத்தி மதர்த்துக் களித்த மத மயக்கத்தையுடைய கொங்கைகள் ஆன யானைகள், மற்றுமுள்ள படைகள் பற்பலவற்றைக் கொண்டு இதழ் விரித்த

(3) தாமரை மலர்ப் பீடத்தில் வீற்றிருக்கின்ற திருமகளைப் போன்ற மடந்தையர் என்ற படைக்கடல் மிக்குவரக் காமனின் படைவீடு எனக் கூறும்படி விளங்கும் தோற்றத்தாலும் அப்பெயர்

(4) இட்டு அழகிய சொல் இலக்கணம் வல்ல தமிழ் நூலோர் புகழ்ந்து கூறும் வேளூரின் மன்னனே, வருவாயாக! வருவாயாக! அருள் ஆனந்தக் கடலில் பிறந்த அமுதமே, வருவாயாக!

**விளக்கம்**

மன்மதனின் படையாகிய மகளிர் நிரம்பி இருத்தலின் காமனுக்கு உரிய படை வீடு என்ற பொருளும் வேள்ஊர் என்பதற்கு அமையும் என்பது இங்குக் கூறப்பட்டுள்ளது. வேள் - மன்மதன்.

(1) நஞ்சில் - விடத்தில். கொலை தீற்றும் - கொல்லும் செயல் ஊட்டப்பட்ட. நயன வேல் - கண் என்ற வேல். நாமச்சிலை - அச்சம் தரும் வில். அல்குல் தேர். இவ்வடியில் மகளிர் உறுப்புக்களுள் சிலவற்றைப் படைக்கலங்களாகவும் சிலவற்றைத் தேர் முதலிய படைகளாகவும் உருவகம் செய்கின்றார்.

(2) வஞ்சிக் கொடி நுண்ணிடை - வஞ்சிக் கொடியைப் போன்ற சிறிய இடை. சாய்த்து - வருத்தி. மால் களிறு - கொங்கை களான பெரிய யானை. வகுத்துக் கொண்டு - படை அணி வகுத்துக் கொண்டு.

(3) கஞ்சத்தவிசு - தாமரை இருக்கை. திரு அன்னார் - திரு மகளைப் போன்ற மடந்தையர். கை - படைவகுப்பு. அப்பெயர்

என்றது வேளூர் என்ற பெயர். அஞ்சொல் - அழகிய சொல். தமிழோர் - புலவர். (8)

### சந்தவிருத்தம்

408. உலகு குளிர எமது மதியி லொழுகு மமுத கிரணமே
உருகு மடிய ரிதய நெகிழ உணர்வி லெழுந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே
அலகில் புவன முடியும் வெளியி லளியு மொளியி னிலயமே
அறிவு ளறிவை யறியு மவரு மறிய அரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை அனைய மதலை வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே. (9)

**தெளிவுரை**

(1) உலகமானது குளிருமாறு எம் அறிவில் ஒழுகும் சந்திரனே! உருகும் அடியாரின் இதயமானது நெகிழும்படி அறிவினிடத்துத் தோன்றும் நல்ல கதிரவனே!

(2) நூல்களால் நிறைந்த உணர்வு முதிரும்படி முதிர்கின்ற இனிய தேனே! குற்றமற்ற ஞானியர் முழுகுவதற்குரிய பெரிய அருள் நீர் பெருகும் கடலே!

(3) அளவு இல்லாத உலகங்கள் முடியும் வெளியில் முதிர்ந்த ஒளிக்குப் பிறப்பிடமே! அறிவுக்கு அறிவாய் இருப்பதை அறிபவரான ஞானியரும் அறிவதற்கு அரிய பிரமமே!

(4) மலையின் மகளான பார்வதியின் கண்மணியைப் போன்ற மகனே! வருவாயாக! வருவாயாக! வளங்கள் யாவும் பொருந்திய பரிதிபுரியில் வீற்றிருக்கின்ற குமரனே வருவாயாக!

**விளக்கம்**

(1) உலகம் - உலகத்தவர். மதியில் - அறிவில். உருகும் - மனம் அன்பால் உருகும். உணர்வு - அறிவு. உதயமே - சூரிய உதயமே; கதிரவனே.

(2) நிறை - மனத்தைப் பொறி வழியே போகாமல் நிறுத்துதல். கழுவு துகளர் - குற்றம் நீங்கியவர். துகளைக் கழுவியவர். சலதியே - கடலே.

(3) அலகு இல் - அளவு இல்லாத. புவனம் - உலகம். ஒளியின் நிலையமே - ஒளியின் பிறப்பிடமே.

(4) மலையின் மகள் - பார்வதி. மதலை - மகன். வளமை தழுவு - வளம் பொருந்திய. (9)

409. இழுமெ னருவி சொரியு மிமயமுதல்வி புதல்வன்
வருகவே
இயலு நடையும் வடிவு மழகு மெழுத அரியன்
வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
ஒருவ னிருவ ரொடுகை தொழுநல் உபய சரணன்
வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியு நகையன் வருக
வருகவே
விளரி பயிலு மளியு ஞிமிறும் விரவு குரவன்
வருகவே
மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன்
வருகவே. (10)

**தெளிவுரை**

(1) இழும் என்ற ஒலியையுடைய அருவிகளைச் சொரியும் இமய மலையில் பிறந்த பார்வதியின் மகனே! வருவாயாக! இயலையும் நடையையும் வடிவையும் அழகையும் எழுதுதற்கு அரியவனே! வருவாயாக!

(2) ஒழுகும் அருள் வெள்ளத்தில் மூழ்கியுள்ள தாமரை முகனே வருவாயாக! ஒப்பில்லாத சிவபெருமான் நான்முகன் திருமால் ஆகிய இருவரோடு கை குவித்து வணங்கும் நல்ல ஈர் அடியை உடையவனே, வருவாயாக!

(3) விழுது விட்ட வெண்ணிலவைச் சொரிகின்ற நகையை யுடையவனே, வருவாயாக! விளரிப் பண்ணைப் பயில்கின்ற கரிய வண்டும் பொன் வண்டும் கலந்து வாழ்கின்ற குரவ மாலையை உடையவனே வருவாயாக!

(4) மழலைச் சொல் மிகும் இனிய சொல்லையுடையவனே! வருவாயாக! வளம் பொருந்திய பருதிபுரியின் கண் வீற்றிருக்கும் குமரனே, வருவாயாக!

**விளக்கம்**

(1) இமும் - ஒலிக்குறிப்பு. இமய முதல்வி - இமவானின் மகள். எழுத அரியன் - எழுத இயலாத அரிய தன்மையுடையவன்.

(2) கமலவதனன் - தாமரை போன்ற முகம் உடையவன்.

உபய சரணன் - இரு திருவடிகளை உடையவனே!

(3) வெணிலவு - 'வெண்ணிலவு' என்பதன் விகாரம். நகையன் - சிரிப்பை யுடையவனே. விளரி - ஒருபண்; ஏழிசையில் ஒன்று. நெஞ்சில் பிறப்பது. அளி, ஞிமிறு - வண்டின் இனங்கள்.

(4) மதுர வசனன் - இனிய சொல்லை உடையவனே. (10)

## 7. அம்புலிப்பருவம்

(வானத்தில் உள்ள நிலவைக் குழந்தையுடன் விளை யாடுதற்குச் செவிலித்தாயர் முதலியவர் அழைக்கும் பருவம். அம்புலி - நிலவு; இச்சொல் அழகுடையது என்று பொருள்படும்.)

### ஆசிரிய விருத்தம்

410. மண்டலம் போற்றுருவம் அமுதமய மாய்மழு
மதிக்கடவு ளெனவருதலால்
வானாறு தலைமடுக் கப்பொங்கும் ஆனந்த
மாக்கட லிடைத்தோன்றலால்

தண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்கரத்
தாமரை முகிழ்த்திடுதலால்
சகலபுவ னத்திலும் உயிர்ப்பயிர் தழைப்பநல்
தண்ணளி சுரந்திடுதலால்
துண்டமதி நதியொடு பொதிந்தவே ணிப்பரஞ்
சோதிகண் பொறியாதலால்
தோன்றலிவன் நின்னையொத் துளனால் நினக்குமொரு
துணையிவன் போலில்லைகாண்
அண்டரண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொடு
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (1)

**தெளிவுரை**

(இது முருகனுக்கும் சந்திரனுக்கும் சிலேடை.)

முருகப் பெருமானுக்கு

(1) எல்லா உலகங்களும் வணங்குவதற்குரிய வடிவமானது முத்தி வடிவமாக முற்றறிவையுடைய தெய்வம் என வருதலாலும்

வான கங்கை தலைமடுத்துப் பொங்கும் இன்பக்கடல் ஆகிய சிவபெருமானிடத்தில் தோன்றுவதாலும்,

(2) தடை இல்லாத குறத்தி வாயாகிய குமுதமலர் விரியும்படி கையாகிய தாமரையைக் கூப்புதலாலும் எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்களாகிய பயிர்கள் செழிக்க நல்ல திருவருளைத் தோற்றுவிக்கின்றமையாலும்

(3) பிறைமதியைக் கங்கையுடன் அணிந்த சடையையுடைய சிவபெருமானின் கண்களில் தோன்றிய தீப்பொறியாக வந்ததாலும் தோன்றலான இவன் நின்னை ஒத்துள்ளதால் நினக்கும் இவனைப் போல் ஒரு துணையில்லை (ஆதலால்)

(4) தேவர் உலகத்துடன் எல்லா உலகங்களையும் படைத்தவனான இவனுடன் விளையாட வருவாயாக! அழகு மிக்கு

விளங்கும் கந்தபுரி செழிக்கின்ற எழுந்தருளிய கந்தனுடன் ஆட வருவாயாக!

**விளக்கம்**

சந்திரனுக்கு,

அமுத வடிவமாகி நிறைந்த சந்திரன் ஆகிய தெய்வம் என்று யாவரும் கூறுமாறு வருவதாலும், வான் கங்கை தன் பக்கம் சேர மிகுந்த ஆனந்தமாக் கடலிலிருந்து தோன்றி வருவதாலும், கொடியிடத்துள்ள அல்லி மலர்கள் விரியவும் ஒளியுள்ள தாமரை மலர்கள் குவிய வருதலாலும், மக்கட்கு உயிர் என்று சொல்லுகின்ற பச்சைப்பயிர்கள் செழிக்கும்படி குளிர்ச்சியைப் பெருக்கிக் கொடுப்பதாலும், சிவபெருமான் கண்களில் ஒரு கண் பொறி என விளங்குவதாலும் இவனுடன் விளையாடுவதற்கு வருவாயாக!

(1) மண்டலம் - பூமி; சூரிய மண்டலம் முதலியவை. அமுதம் - அமிர்தம்; அழிவின்மை.

முழுமதிக்கடவுள் - நிறைந்த சந்திரனான கடவுள்.

(2) பூரண அறிவுடைய கடவுள்.

வானாறு - பெரிய நதிகள்; வான கங்கை.

தலைமடுக்க - சேர; தலையில் சேர்த்த.

பொங்கும் ஆனந்த மாக்கடல் - மேல் எழும் முழங்கும் சங்கையுடைய பெரிய கடல்; பொங்கிய ஆனந்தமாகிய பெரிய கடல் போன்ற சிவபெருமான்.

நந்த - சங்குகளைக் கொண்ட.

(2) கொடிச்சி வாய்க்குமுதம் உள்ள - கொடியில் உள்ள குமுத மலர் மலர; குறமகளாகிய வள்ளியின் திருவாய் மலரும்படி.

கொடிச்சி - கொடி; குறுக்கை; கொறுக்கைச்சி என நின்றாற் போல.

கரத்தாமரை முகிழ்த்திடுதலால் - ஒளியையுடைய தாமரை மலர் குவிதலால். கரம் - ஒளி. திருக்கரமான தாமரை அஞ்சலி செய்வதால்.

உயிர்ப் பயிர் - உயிரையுடைய பயிர்கள். ஆன்மாக்கள் என்னும் பயிர்கள். சந்திரனால் பயிர்கள் தழைக்கும் என்பர்.

(3) சோதி - சிவபெருமான். கட்பொறி - கண்ணான பொறி; கண்ணிலிருந்து வெளிப்பட்ட தீப்பொறிகள்.

(4) அண்டர் அண்டம் - வானவர் உலகு. அகிலாண்டம் - அகிலம் + அண்டம்; எல்லா உலகங்கள். அம்புலீ - சந்திரனே! வாவே - வா + ஏ; ஏ - அசை.

இந்தப் பருவம் நான்கு உபாயங்கள் அமையப் பாடப்படும். அவை சாம, பேத, தான, தண்டம். இந்நான்கு உபாயங்களைக் கையாண்டு சந்திரனைக் குழந்தையுடன் விளையாட வரும்படி கூறுவதாகும். சாமம் என்பது சமப்படுத்திக் கூறுதல். பேதம் என்பது வேறுபடுத்திக் கூறுதல். தானம் என்பது வேண்டிய ஒன்றைக் கொடுப்பதாகக் கூறுதல். தண்டம் என்பது தண்டிப் பதாகக் கூறுதல்.

ஆனந்த மாக்கடல் - சிவபெருமான். (1)

411. சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளஇருந்
தோகைமேல் கொண்டருளினாய்
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதுமச்
சோதிவே லையுமுகந்தாய்
குற்றமில் குணத்தைக் குறித்தஇர வலர்முகம்
கோடா தளித்தல்செய்தாய்
கோகனக நாயகன் வரக்கூ விடுங்குக்
குடம்கொடிய தாகவைத்தாய்
உற்றிடு மிதழ்க்குமுதம் விண்டுதண் தேனொழுக
ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்
உன்செய்கை எம்பிரான் தன்செய்கை போலுமால்
உனையுமிவ னொவ்வாதிரான்
அற்பொதி களத்தவ னளித்தகும ரேசனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (2)

### தெளிவுரை

(1) புகழ் பெற்ற பெருந்தேவர் நின்கலையாகிய அமுதத்தைக் கொள்ள இருந்து மகிழ்ச்சியை அடைந்தாய். எதிரே தோன்றிய மலை போல அலை மோதும் அந்த ஒளியுள்ள கடலையும் விரும்பினாய்.

(2) குற்றம் அற்ற குணத்தையுடைய இரவில் மலர்கின்ற மலர்களின் முகம் கோடாது காத்தாய். தாமரைத் தலைவனான கதிரவன் வரக் கூவும் சேவற் கோழியைக் கொடிய பொருள் ஆக வைத்தாய்.

(3) பொருந்திய இதழ்களையுடைய குமுத மலர் விரிந்து குளிர்ந்த தேன் ஒழுகும்படி ஒளிநிலவைத் தோற்றுவித்தாய். நின் செய்கைகள் யாவும் எம் முருகப் பெருமானின் செய்கைகளை ஒத்துள்ளன. எனவே இவன் உன்னையும் ஒவ்வாமல் இருக்க மாட்டான்.

(4) இருள் போல் விளங்கும் திருக்கழுத்தை உடைய சிவ பெருமான் பெற்ற குமரக் கடவுளுடன், அம்புலியே, ஆடுதற்கு வருவாயாக! அழகு மிக்கு விளங்கும் கந்தபுரி செழிக்கத் தோன்றி யருளிய கந்தனுடன், அம்புலியே, ஆட வருவாயாக!

### விளக்கம்

(1) சொல்தரு பெரும் புலவர் - புகழைப் பெற்ற பெரிய தேவர்; சொல்லைத் தருகின்ற பெரிய புலவர்கள். கலை அமுது கொள விருந்தோகை மேல் கொண்டருளல் - கதிர்களாகிய அமுதத்தை விருந்தாகக் கொள்ள மகிழ்ச்சியைக் கொள்ளல்; சாத்திரங்களாகிய அமுதத்தைக் கொள்ளக்கரிய மயிலின் மீது எழுந்தருளியிருத்தல். மலை போல அலை மோதும் சோதி வேலையும் உகந்தாய் - சந்திரனுக்கு மலையைப் போல பெரிய அலைகளை மோதும் அந்த ஒளியுடைய கடலையும் விரும்பி னாய்; முருகனுக்கு மலையையும் அதனைப் போல் கடலையும் ஊடுருவிய ஒளியையுமுடைய வேற்படையை விரும்பிய செயலைக் கொள்ள வேண்டும்.

(2) இரவலர் முகம் கொடாது - இரவுப் போதில் மலர்கின்ற மலர்கள் வாடாமல். இரப்பவர்களின் முகம் கோணாமல். அளித்தல் - கொடுத்தல்; அருளல் அல்லது காத்தல். கோகன நாயகன் - தாமரையின் தலைவன்; கதிரவன். குக்குடம் - கோழிச் சேவல். கொடியதாக வைத்தாய் - கொடுமை உடையதாய் வைத்தாய்; கொடியில் வைத்துள்ளான் முருகன்.

(3) குமுதம் வண்டு தண்தேன் ஒழுக - குமுதமலர் மலர்ந்து அதிலிருந்து குளிர்ந்து தேனை ஒழுக. முருகனுக்கு வாயினின்று நீர் ஊற. நிலா நகை - நிலவாகிய ஒளி; நிலவைப் போன்ற நகை.

(4) அல் - இருள்; கருமை.

முருகனுக்குக் கூறும் போது.

சொன்மாலை சூட்டும் பெரும்புலவரான நக்கீரர் முதலிய வர்களின் தமிழ்க்கலைச் சுவையான அமுதத்தைக் கொள்வதற் காகப் பெரிய மயிலின் மீது எழுந்தருளினான். எதிரே தோன்றிச் சினம் மிக்கு கிரவுஞ்ச மலையை மோதியதைப் போல் அலை மோதும் கடலையும் மோதி அழித்த அந்த ஒளியுள்ள வேற் படையையும் விரும்பினான். குற்றம் இல்லாத குணம் உடைய இரப்பவரிடத்தில் நடுவு நிலைமையாக இருந்து அவர்களைக் காத்தருளினான். கதிரவன் உதிக்கும் போது கூவும் கோழியைக் கொடியாய் உயர்த்திக் கட்டியுள்ளான். வாயான செவ்வல்லி மலர் விரிந்து குளிர்ந்த தேன் போன்ற எச்சில் ஒழுகு நிலவு ஒளி போல் புன்னகை செய்தான். (2)

412. கங்கைமுடி அடிகட்கொர் கண்ணாய் இருத்திஅக்
கண்ணினுள் மணிஇவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதிஇவன்
என்றுமொண்
கலைமுழுது நிறையநின்றான்
எங்குமிர வோனெனத் திரிதிஇவன் அடியவர்
எவர்க்குமிர வினையொழித்தான்
இருநிலத்து அங்குரிக் கும்பயிர் வளர்த்திஇவன்
எவ்வுயிரும் வாழச்செய்தான்

பொங்கமுத மமுதா சனர்க்குதவி னாய்இவன்
புத்திமுத் தியும்அளித்தான்
புவனம் படைத்தஇவன் நின்னின்மிக் கானெனப்
புகல்வதோர் பொருளன்றுகாண்
அங்கண்மறை ஒலிட் டரற்றநின் றவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (3)

## தெளிவுரை

(1) அம்புலியே! நீ கங்கையைத் தலையில் சூடிய சிவ பெருமானுக்கு ஒரு கண்ணாக உள்ளாய்.

இம்முருகன், அந்தக் கண்ணின் மணியாக உள்ளான். நீ சில நாள்களில் கலைகள் நிறையப் பெறுகிறாய்; பின்பு குறைகிறாய். இவனோ எந்நாளும் ஒட்பமாகிய கலைகள் எல்லாம் நிறைய விளங்குகின்றான்.

(2) நீ எங்கும் இரவோன் என்று திரிகின்றாய். இப்பெருமான் அடியவர் எவர்க்கும் இரக்கும் செயலை ஒழித்தான். நீ பெரிய நிலத்தில் முளைக்கும் பயிர்களை வளர்க்கின்றாய்! இவன் எல்லா உயிர்களையும் வளர்த்தான்.

(3) நீ அமுதத்தைத் தேவர்க்குக் கொடுத்தாய். இவன் அறிவையும் வீடு பேற்றையும் தந்தான். உலகங்களைப் படைத்த இவன் நின்னைவிட மிக்கவன் என்று கூறுவது ஒரு பொருள் அன்று.

(4) அழகிய விழி போன்ற வேதங்களும் முறையிட்டு அரற்றும்படி நின்றவனுடன், சந்திரனே, விளையாட வருவாயாக! அழகு மிக்கு விளங்கும் கந்தபுரியானது செழிக்க எழுந்தருளியுள்ள கந்தனுடன் ஆட வருவாயாக!

**விளக்கம்**

(1) கங்கைமுடியடிகள் - கங்கையைத் தலையில் அணிந்த சிவபெருமான். கண்ணாய் இருத்தி - கண்ணாக விளங்குகின்றாய். சந்திரன் சிவபெருமானுக்கு ஒருகண் என்பர். கலைகள் - கதிர்கள். நிறைதி - நிறைகின்றாய். குறைதி - குறைகின்றாய். கலைமுழுதும் - சாத்திரங்கள் முழுவதும்.

(2) இரவோன் - இரவு நேரத்துக்கு உரியவன்; யாசகன். திரிதி - திரிகின்றாய். இரவினை - யாசித்தலை. அங்குரிக்கும் - முளைக்கும்.

சந்திரன் ஓரறிவு உயிர்களை வாழச் செய்பவன்; முருகன் எல்லா உயிர்களையும் வாழச் செய்பவன். இஃது இருவர்க்கும் உள்ள வேறுபாடு.

(3) அமுதாசனர் - அமுத அசனர். அமுதத்தை உணவாக உடைய தேவர்கள். தேவர் சந்திரனின் ஒளியை உண்பவர் என்ப. புத்திமுத்தி - போகமும் (ஞானமும்) வீடுபேறும். நின்னின் மிக்கான் - உன்னைவிட உயர்ந்தவன். இதனால் இப்பாடல் பேத உபாயத்தில் அமைந்தமை விளங்கும். காண் - அசை.

(4) ஓலிட்டு - ஓலம் இட்டு என்பதன் விகாரம்; முழங்கி என்பது பொருள். அங்கண் - அழகிய விழி; அழகிய (கர்ம, ஞான) காண்டம் முதலிய உறுப்புக்கள் எனவும் கூறலாம்.

வேதம் ஓலமிட்டு அரற்றுதல் என்பது இப்பெருமான் பெருமை தனக்கு எட்டாமையால்! (3)

413. பாயிருள் போத திருட்டன்றி அகவிருள்
படலம் கிழிப்பதுணராய்
பனிவிசும் பிற்பொலிவது ஒன்றலால் புவனப்
பரப்பெலாம் பொலிவதோராய்
சேயிதழ்க் குமுதம் திறப்பதல் லாதுஉத்
திருமலர் திறக்கவறியாய்
சிறைவிரி சகோரப்பு ளன்றிஎவ் வுயிரும்
திளைத்தின்ப மாரச்செயாய்

நீயிவற் கொப்பன்மை செப்புவதென் இப்பரிசில்
நின்பெருந் தவம்என்சொல்கேன்
நெடியவன் முதல்தேவர் குறுகிநிற் பவுமுனை
நினைத்தழைத் தருளினன்காண்
ஆயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவனொடு
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே (4)

**தெளிவுரை**

(1) பரவிய இரவுக் காலத்து இருட்டை நீக்குவதல்லாது நின் இருட் செறிவான அஞ்ஞானத்தை நீக்குவதை நீ அறியவில்லை. குளிர்ச்சியுடைய வானத்தில் விளங்குவது ஒன்றையே அல்லாமல் உலகப்பரப்பு முழுவதும் விளங்குவது நீ அறியவில்லை.

(2) சிவந்த இதழ்களை யுடைய குமுத மலரை மலரச் செய்வதே அல்லாது மனம் என்னும் அழகிய தாமரை மலரை விரிக்க நீ அறியவில்லை! இறகை விரிக்கும் சகோரப் பறவைக்கு உணவு அளிப்பதே அல்லாது எல்லா உயிர்களும் பேரின்பம் நுகருமாறு நீ செய்வதில்லை.

(3) நீ இக்குமரனுக்கு ஒப்பில்லாமையைச் சொல்வதால் என்ன பயன்? இந்தத் தன்மையில் உன் தவப் பயன் யாது என்று கூறுவேன். திருமால் முதலிய தேவர்கள் குறுகி நிற்பவும் உன்னை நினைந்து உன்னுடன் விளையாடுமாறு அழைத்தான்.

(4) ஆயிரம் மறைகளுக்கும் ஒரு பொருளாய் இருப்பவனுடன், சந்திரனே, விளையாட வருவாயாக! அழகு மிக்கு விளங்கும் கந்தபுரி செழிக்க எழுந்தருளிய கந்தனுடன், சந்திரனே, விளையாட வருவாயாக!

**விளக்கம்**

(1) பாய் இருள் - பரந்த இருள். போதத்து - போது என்பது போதத்து என வந்தது. அகஇருள் - உள்ளத்தில் உள்ள இருள்;

அஞ்ஞானம். படலம் - பரப்பு. பொலிவது - விளங்குவது. ஓராய் - அறியாய்.

(2) சேய் இதழ்க்குமுதம் - சிவந்த இதழ்களை உடைய குமுத மலர். சகோரப்புள் - சகோரப் பறவை. சகோரப் பறவை நிலவை உண்ணும்.

சந்திரனிடம் இல்லாதனவாய்க் கூறப்பட்ட இயல்புகளும் செயல்களும் முருகனிடம் உள்ளவையாம்.

(3) ஒப்பன்மை - ஒப்பில்லாமை. இப்பரிசில் - இத் தன்மையில். சொல்கேன் - சொல்வேன். நெடியவன் - திருமால். காண் - அசை. இப்பாடலில் பேதம் கூறப்பட்டது. (4)

414. தருமன்னு பொன்னுலகு மண்ணுலகும் ஒக்கத்
தலைத்தலை மயங்கத்தொகும்
சன்னிதி அடைந்தவர்கள் பையுள்நோய் முற்றும்
தவிர்ந்தக மகிழ்ந்துதவிராக்
கருமன்னு மூழிப் பெரும்பிணியும் ஆற்றிடுதல்
கண்டனை இருத்தியால்நின்
கயரோக முடன்முயல் கறையும் துடைத்திடக்
கருதிடுதி யேல்எம்பிரான்
திருமுன்ன ரள்ளியிடு வெண்சாந்து மற்றைத்
திருச்சாந்து நிற்கவற்றாச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறும்
திவலைஒன் றேஅமையுமால்
அருவென்ன உருவென்ன அன்றென்ன நின்றவனொடு
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (5)

**தெளிவுரை**

(1) கற்பக மரம் நிற்கும் விண்ணுலகும் மண்ணுலகும் ஒத்திருக்கும்படி பல இடந்தோறும் தலைமயங்கக் கூடுகின்ற

இவன் சந்நிதியை அடைந்தவர்களின் பிறவித் துன்பம் முழுவதையும் நீக்கி அகம் மகிழ்ந்து நீங்காத

(2) கருவில் நிலைபெற்ற ஊழிப் பெரு நோயும் நீக்கி விடுதலையும் கண்டிருக்கின்றாய். ஆதலால் நின் கயரோகமுடன் முயல் களங்கத்தையும் போக்கிக் கொள்ள நினைப்பாயானால், எம்பெருமான்

(3) சந்நிதிக்கு எதிரே அள்ளிக் கொடுக்கின்ற வெண்ணீறும் பிற சாந்துகளும் வேண்டா; இவை நிற்க, எக்காலத்தும் வடியாத சித்தாமிர்தம் என்ற பெருமையான தீர்த்தத் துறையில் பொருந்திய சிறு நீர்த்துளி ஒன்றே போதும். ஆகவே,

(4) அரு எனவும், உரு எனவும், இவ்விரண்டும் அல்ல எனவும் நின்றவனாகிய குமரக் கடவுளுடன், சந்திரனே, ஆட வருவாயாக! அழகு மிக்கு விளங்கும் கந்தபுரி செழிக்க எழுந்தருளிய கந்தனுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

(1) தரு - கற்பக மரம். பொன் உலகு - தேவர் உலகு. ஒக்க - ஒருசேர. தலைத்தலை மயங்க - இடந்தோறும் இடந்தோறும் ஒன்றுகூட.

(2) கரு மன்னும் ஊழிப்பெரும்பிணி - கருப்பையில் தங்குவதான நெடுங்காலமாக இருந்து வரும் பிறவி நோய். கயரோகம் - க்ஷயரோகம்; நாளுக்கு நாள் உடல் குறைந்து வரும் நோய். முயற்கறை - முயலாகிய களங்கம்.

(2) கரு - கருப்பம். கண்டனை இருத்தியால் - கண்டிருக் கின்றாய்.

(3) திருமுன் - சந்நிதி. வற்றா - என்றும் வற்றாத. சித்தாமிர்தத் தடம் - சித்தாமிர்தம் என்ற நீர்நிலை. வைத்தீசுவரன் கோயிலில் உள்ளது. வெண்சாந்து - விபூதி. இது கோயிலில் உள்ள விபூதிக் குண்டத்திலிருந்து எடுப்பது. மற்றைத் திருசாந்து என்பது அங்கச் சந்தானத் தீர்த்தத்தினின்று எடுக்கும் மண். இம்மண்ணை

உண்டவர் நோய் நீங்கிடப் பெறுவர். மற்றைச் சாந்து என்பது சந்தனம், குங்குமம் முதலியவை.

உன் கயரோகமும் முயற்கறையும் நீங்க வேண்டுமாயின் இவன் சந்நிதியின் வெண்ணீற்றை அணிந்து கொள். சித்தாமிர்தத் தீர்த்தத்து ஒரு துளியை அள்ளி உன் உடலில் தெளித்துக் கொள் என்பது கருத்து. (5)

415. ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்பது
ஒருதெய்வ முண்டெனஎடுத்
துரையாலுணர்த்துவதை ஒழியவெவ ரெவர்கட்கும்
ஊன்கண் ணுளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லால்புவியில்
வேறில்லை யென்றுணர்தியால்
பொழியாத புயல்தங்கு புவனமும் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகும் மண்ணுலகும் எவ்வுலகு
வேண்டினும்
பொருளன்று இவற்குமற்ற
அழியாத வீடும் தரக்கடவன் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (6)

**தெளிவுரை**

(1) தொலையாத உலகங்களில் உள்ள உயிர்களுக்கு உயிராய் நிற்பதாகிய ஒரு தெய்வம் உண்டு என்று சொல்லால் எடுத்து அறிவிப்பதை விட்டு உடம்பில் உள்ள கண்ணுக்கும் மனமாகிய கண்ணுக்கும்

(2) கண்ணாக எதிர் நின்று அருள் சுரந்து அவர்கள் விரும்பிய வரங்களைத் தந்தருளுபவன் உலகத்தில் இத் தெய்வமே

அல்லாது உண்மையாகக் கண்ட தெய்வம் வேறு ஒன்று இல்லை என்று அறிவாயாக!

(3) திருமால் உலகமும் பிரமன் உலகமும் சுவர்க்க உலகமும் மத்திய உலகமும் இவற்றுள் எந்த உலகம் பெற விரும்பினாலும் இவற்றைக் கொடுப்பது ஒரு பொருள் அன்று. இவற்றுக்கு மாறாக

(4) அழியாத வீட்டையும் இவன் அளிக்க வல்லான். எனவே, சந்திரனே, இவனுடன் விளையாட வருவாயாக! அழகு மிக்க கந்தபுரி சிறந்தோங்க எழுந்தருளியுள்ள கந்தனுடன் விளை யாட வருவாயாக!

**விளக்கம்**

(1) ஒழியாத - தொலையாத. உரையால் - சொல்லால். ஊன்கண் - உடலில் உள்ள கண். உளக்கண் - மனக்கண்.

(2) தண்ணளி - குளிர்ந்த கருணை. மெய்கண்ட தெய்வம் - உண்மையாய்க் கண்ணில் கண்ட தெய்வம். உணர்தியால் - அறிவாய்; ஆல் - அசை.

(3) பொழியாத புயல் - மழை பெய்யாத மேகம்; திருமால் அவரது புவனம் வைகுண்டம். திசை முகப்புத் தோள் - நான்கு திசைகளுக்கும் நான்கு முகம் உடைய தேவன்; பிரமன். அழியாத வீடு - அழிவில்லாத மோட்சம். (6)

416. நெட்டுடல் பைங்கண் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கிஆர்த்து
நிற்கும் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு என்புநெரியக்
கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்துஅலறு
காட்சிநீ காணாயலை
மட்டுடைத் தூறும் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப

வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியால்
மற்றிவன் முனிந்தால்உனக்கு
அட்டதிக் கினிலுமொரு திக்கிலையெம் ஐயனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (7)

**தெளிவுரை**

(1) நெடிய உடலையும் பசிய கண்களையும் உடைய கரிய பேய்களைச் செம்மயிர் வரிசையையுடைய தூணில் கட்டி ஆர வாரம் செய்து நிற்கும் குறும்பூதம் ஒன்றை விடுத்து உடலில் உள்ள நெடிய விலா எலும்பு கெடும்படி

(2) 'கட்டு' எனவும் 'பிடி' எனவும் 'கொடிற்றை உடைத்து அடி' எனவும் சொல்லிக் கண நாதர் கடுகுதலும், விரைந்து கடல் வாய் திறந்தாற் போல் குகை போன்ற வாயைத் திறந்து அப் பேய்கள் அலறும் காட்சியை நீ பாராமல் இல்லை; பார்த்திருக் கின்றாய்.

(3) முறுக்குடைந்துத் தேன் சுரக்கும் பெரிய தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகன் முதலியவர் வாய் பொத்தி நிற்கவும் (அவர்களை விடுத்து) நின்னை வா என்று அழைக்கவும் வாராமல் உள்ளாய். இவன் சினந்தான் என்றால் உனக்கு

(4) எட்டுத் திக்குகளிலும் ஒரு புகலிடம் இல்லை. எனவே, எம் இறைவனான குமரனுடன், சந்திரனே, ஆட வருவாயாக! அழகு மிக்க கந்தபுரி மேலோங்கி விளங்க எழுந்தருளியுள்ள முருகனுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

(1) நெட்டுடல் - நெடிய உடம்பு. கரும் பேய்கள் - கருநிற முடைய பேய்கள். தூணம் வீக்கி - தூணில் கட்டி. ஆர்த்து - ஆரவாரம் செய்து. குறள்பூதம் - குறுகிய வடிவுடைய பூதம். பழுஎன்பு - விலா எலும்பு.

(2) கணநாதர் - பூதகணத் தலைவர். முடுகி - விரைந்து வந்து. கடல் வாய் திறந்தெனப் பிலவாய் திறந்து - கடல் வாயைத் திறந்து. காணாயலை - காணாமல் இல்லை. கொடிறு - கன்னம்.

(3) மட்டு - தேன். கமலன் - பிரமன். இருத்தியால் - இருக்கின்றாய். ஆல் - அசை.

(4) அட்ட திக்கு - எட்டுத் திக்கு. திக்கிலை - கதி இல்லை.

நான்முகன் முதலியவர் இவனுடன் வாய் புதைத்து நிற்ப அவர்களை விடுத்து நின்னிடம் உள்ள அருளால் நின்னை விளையாட வருமாறு அழைக்கின்றான். நீ வாராது போனால் இவன் சினம் கொள்வான். கொள்ளின் உன்னைக் காப்பாற்றுதற்கு ஒருவரும் இல்லை. எனவே இவனுடன் விளையாட வருவாயாக! என்பதாம்.

(1-2) வைத்தீசுவரன் கோயிலில் பிசாசால் பிடிக்கப்பட்டவர் வழிபட்டு அதனின்றும் நீங்கி அருள் பெறும் நிகழ்வை எண்ணி இங்ஙனம் உரைத்தார். இப்பாட்டின்கண் தண்ட உபாயம் அமைந்துள்ளது. (7)

417. குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர்
குடித்திட விடுத்துநின்றான்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபொங் கப்புடைத்தான்
இன்றைக் குழந்தையென்று எண்ணாது குலிசன்முதல்
எண்மரும் பிறருமொருஞான்று
எதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை; அதுகிடக்க,
முன்தக்கன் வேள்விக் களம்கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்டநாள்
முழுமதிக் கடவுள்நீ அவமதிப் புண்டது
மொழிந்திடக் கடவதன்றால்
அன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (8)

**தெளிவுரை**

(1) இம்முருகன், மலையைப் பிளந்த முனையையுடைய வேற்படையைச் சூரன் ஆவியை உண்ணும் பொருட்டு ஏவி நின்றான். குண்டிகையையுடைய வஞ்சனான பிரமனைக் குடுமித் தலையில் பச்சை இரத்தம் சிந்தக் குட்டினான்.

(2) இன்று பிறந்த குழந்தை என நினையாமல் இந்திரன் முதலிய எட்டுத் திக்குப் பாலகரும் பிறரும் ஒருநாள் எதிர் நின்று போரிட்டு, அவர்கள் அடைந்த துன்பத்தை நீ அறியாமல் இருக்கின்றாய், அல்லை. அது போக,

(3) முன் காலத்தின் தக்கனது வேள்விக்களமானது கொலைக்களம் என்று கூறுமாறு முடியையுடைய தேவர் அடி பட்டனர். அந்த நாளில் பூரண சந்திரனே, நீ அவமானப்பட்டாய். அது கூறத் தக்கது அன்று.

(4) அன்று நிகழ்ந்த செயல் இன்றும் நிகழும் எனத் தோன்றுகிறது. ஆதலால் சந்திரனே இப்போது சிவனுடன் விளையாட வருவாயாக! அழகு மிக்க கந்தபுரி தழைத்து விளங்க எழுந்தருளியுள்ள முருகனுடன் ஆட வருவாயாக!

**விளக்கம்**

குன்று - கிரவுஞ்ச மலை. சூர்உயிர் - சூரபன்மனின் உயிர். குடித்திட - உண்டிட. குடுமி - உச்சி. முருகன் ஏவிய வேற்படை கிரவுஞ்ச மலையை ஊடுருவிச் சென்றபோதே அதில் மறைந்து நின்ற சூரனையும் ஊடுருவிச் சென்றது என்பது ஒரு சாரார் கொள்கை. அதற்கேற்பவும் இங்கு பொருள் கொள்ளலாம். குண்டிகை - நீர்க்கரகம். பிரமன் கையது குண்டிகை. பசுங்குருதி - பச்சை இரத்தம். பொங்க - பெருகி வழிய. புடைத்தான் - குட்டினான்.

(2) குலிசன் - இந்திரன். குலிசப்படையை உடையவன். எண்மரும் - அட்டதிக்குப் பாலகர் எட்டுப் பேரும். ஒரு ஞான்று - ஒருபோது. அறியாதிருத்தியலை - அறியாமல் இல்லை.

(3) முடி அமரர் - முடியை அணிந்த தேவர். பொத்துண்ட நாள் - அடிபட்ட போது. முழுமதிக் கடவுள் நீ அவமதிப்புண்டது - தக்கன் வேள்விக் களத்தில் இருந்த சந்திரனை வீரபத்திரக்கடவுள் தேய்த்தார்.

(4) கணக்கு - நியாயம்.

இதில் முருகப் பெருமான் ஆற்றிய - தண்டித்த - செயல்கள் கூறப்பட்டன. எனவே இது தண்ட உபாயம் அடங்கியது என்க. (8)

418. தள்ளும் பவக்கடல் உழக்கும்எனை முத்தித்
தடங்கரை விடுப்பவனுனைத்
தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடின்
தண்ணளி சுரந்துகருணை
வெள்ளம் கொழிக்கும் கடைக்கண் சிவப்பஇவன்
வெகுளாது விடினும்அழுது
விழிசிவப் பக்காணின் இரவிபகை சாய்த்தஇள
வீரன் பொறுப்பானலன்
கள்ளம் பழுத்தகண் கடைசியர் சிறார்திரைக்
காவிரித் தண்துறைதொறும்
கதிர்நித் திலம்குவி மணல்குன்ற மேறியக்
கலைமதிக் கலசஅமுதை
அள்ளும் தடம்பணைச் சோணாடன் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழைவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே. (9)

தெளிவுரை

(1) தள்ளப்பட்ட பிறவிக் கடலில் விழுந்து வருந்தும் என்னை மோட்சக் கரையில் செலுத்துபவன் உனக்கு அருள் செய்ய வரவழைக்கவும் நீ வாராது போனால் குளிர்ந்து அன்பு ஊறி அருள்

(2) வெள்ளம் பொழியும் கடைக்கண் சிவக்க இவன் சினம் கொள்ளாது போயினும், இவன் அழுது விழி சிவப்பதைக் காணின், பானுகோபனைக் கொன்ற இளைய வீரன் வீரவாகு பொறுத்துக் கொள்ளமாட்டான்.

(3) கள்ளத்தை உடைய கண்களையுடைய கடைசியரது மக்கள் அலைகளை யுடைய காவிரி ஆற்றின் குளிர்ந்த துறை தோறும் ஒளியுள்ள முத்துக்கள் குவிந்து கிடக்கின்ற மணல் குன்றின் மேல் ஏறி அந்தக் கலைமதியான கலசத்தில் உள்ள அமுதத்தை

(4) அள்ளிக் கொள்வதற்குரிய பெரிய வளங்கள் நிறைந்த சோழ நாடனான இவனுடன் சந்திரனே, ஆட வருவாயாக! அழகு விளங்கும் புள்ளிருக்கு வேளூர் சிறந்தோங்கும்படி தோன்றி அருளிய கந்தனுடன் கூடிச் சந்திரனே விளையாட வருவாயாக!

**விளக்கம்**

(1) பவக்கடல் - பிறவிக்கடல். உழக்கும் - வருந்தும். முத்தித் தடங்கரை - முத்தி என்ற பெரிய கரை. தலையளிப்பான் - அருள் செய்யும் பொருட்டு.

(2) கொழிக்கும் - மிகும். வெகுளாது விடினும் - சினம் கொள்ளாது போனாலும். இரவிபகை - பானுகோபன். இளவீரன் - வீரவாகு தேவர். பொறுப்பான் அலன் - பொறுத்துக் கொள்ள மாட்டான்.

(3) கடைசியர் - உழத்தியர். சிறார் - சிறுவர். கதிர் நித்திலம் - கதிரையுடைய முத்து.

(4) அள்ளும் - அள்ளிக் கொள்ளும். தடம் பணை - பெரிய வயல். சோணாடன் - சோழ நாட்டவன். இதிலும் தண்ட உபாயம் அமைந்துள்ளது. (9)

419. தன்னொத்த தெய்வச் சிறாருமிள வீரரும்
தாள்நிழல் கீழ்நிற்பஇச்
சகதண்ட மண்டல மடுக்கழியு நாளமரர்
தமைஅழக் காண்பவனிவன்

நின்னைப் பொருட்படுத் தொருவிரல் தலைசுட்டி
நீள்கழல் தாளுதைந்து
நெடுமலர்க் கண்பிசைந் தழுதழு தழைத்தனன்
நினக்கிதில் வியப்பில்லைகாண்
பின்னல் திரைச்சுர நதித்தண் துறைத்தேவர்
பேதைக் குழாங்கள்என்னப்
பெருகும் தடம்புனல் காவிரிப் பூவிரி
பெருந்தண் துறைச்சிறைவிரித்து
அன்னக் குழாம்திளைத் தாடுசோ ணாடனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலி ஆடவாவே. (10)

**தெளிவுரை**

(1) தன்னைப் போன்ற தெய்வச் சிறுவரும் இளைய வீரரும் திருவடியில் சேர்ந்து நிற்க, இந்த உலகமும் தேவர் உலகமும் மற்ற உலகங்களும் நிலை குலையும் நாளில் தேவர்களை அழக் காண்பவன் இம்முருகப் பெருமான்.

(2) உன்னை ஒரு பொருளாக எண்ணி ஒரு விரல் தலை சுட்டிக் காட்டி நீண்ட கழல் அணிந்த காலை உதறி நீண்ட தாமரை போலும் கண் பிசைந்து அழுது அழுது அழைத்தான். உனக்கு இதில் வியப்பு இல்லை!

(3) ஒன்றுடன் ஒன்று பின்னியதைப் போல்வரும் அலை களையுடைய ஆற்றின் குளிர்ந்த துறையில் தேவ மங்கையர்களின் கூட்டத்தைப் போல் பெருகி வரும் நீர்ப் பெருக்கையுடைய காவிரி ஆற்றின் மலர்கள் மலர்ந்துள்ள குளிர்ந்த துறைகளில்

(4) அன்னப்பறவைகளின் கூட்டங்கள் முழுகி ஆடுவதற்கு இடமான சோழ நாடனான இம் முருகனுடன், சந்திரனே, விளை யாடற்கு வருவாயாக! அழகு விளங்கும் கந்தபுரிப் பதிவளம் கொண்டு விளங்கத் தோன்றியவனுடனே விளையாடுதற்கு வருவாயாக!

**விளக்கம்**

(1) தெய்வச்சிறார் - தேவவீரர். இளவீரர் - வீரவாகுத் தேவர். இச்சக தண்டல மண்டலம் - இந்த வுலகமும் தேவர் உலகமும் மற்ற உலகங்களும். அமரர் - தேவர்.

(2) நீள் கழல் தாள் உதைத்து - நீண்ட கழலை அணிந்த காலை நிலத்தில் உதைத்து.

(3) பின்னல் திரை - ஒன்றுடன் ஒன்று பின்னியது போன்று வரும் அலை. தேவர் பேதைக்குழாம் - தெய்வமகளிர் கூட்டம். சிறை - இறகு.

(4) அன்னக்குழாம் - அன்னப்பறவைக்கூட்டம்.

அழகு பொலி - அழகு விளங்கும்.

இப்பாடலும் தண்ட உபாயத்தையே உணர்த்துகிறது. (10)

## 8. சிற்றில் பருவம்

(சிற்றில் பருவம் என்பது சிறுவர் சிறுமியர் கட்டி விளை யாடும் போது, அதனைச் சிறுவர் காலால் அழித்துக் கெடுத்தலைக் கூறும் பருவம்.)

420. குறுமென் நடையும் நெடுவெணிலாக்
கோட்டு நகையும் வாள்தடங்கண்
குளிர முகந்துண்டு ஒளிர்சுட்டிக்
குஞ்சி திருத்தி நறுங்குதலை
முறுகு நறைத்தேன் கனிபவள
முத்துண்டுஉச்சி மோந்துகொண்டுன்
முகமும் துடைத்து விளையாட
முன்றில் புறத்துப் பொன்ததும்பி
இறுகும் புளகக் கும்பமுலை
எம்பி ராட்டி விடுத்ததுமற்று

இளையார் மறுக மறுகுதொறும்
இடுக்கண் செயற்கோ எந்தாய்நின்
சிறுகிண் கிணிச்செஞ் சீறடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (1)

**தெளிவுரை**

(1) குறுகிய மென்மையான நடையையும், நெடிய வெண்ணிலவைச் செய்யும் நகையையும், வாள் போலும் பெரிய கண்கள் குளிரும்படி அள்ளியுண்டு, ஒளிர்கின்ற சுட்டியுடன் தலைமுடியைத் திருத்தி, நல்ல குதலை மொழி.

(2) முதிர்கின்ற மணத்தையுடைய தேன் போன்ற கொவ்வைக் கனி போன்ற பவளத்தை முத்தமிட்டு உச்சி மோந்து, உன் முகம் துடைத்து, விளையாடும் பொருட்டு முற்றத்தின் புறத்தில் தேமல் பரந்து

(3) இறுகிய புளகம் போர்த்த குடம் போன்ற கொங்கையை யுடைய எம் பெருமாட்டி அனுப்பினது இளஞ்சிறுமியர் வருந்தத் தெருத்தோறும் துன்பத்தைச் செய்வதற்குத் தானோ! எம் தந்தையே, நின்

(4) சிறிய கிண்கிணி அணிந்த சிவந்த அடியால் சிறியேமாகிய எம் சிறு வீட்டை அழியாதிருப்பாயாக! செந்நெற் பயிர்கள் பொருந்திய வயல்கள் சூழ்ந்த புள்ளூரனே! சிறியேம் சிறிய வீட்டைச் சிதையாதிருப்பாயாக!

**விளக்கம்**

குறுமென்னடை - தளர் நடை. திருத்தல் - ஒப்பனை செய்தல். குஞ்சி திருத்தி - தலைமுடியை ஒப்பனை செய்து. முறுகு - முதிரும். நறைத்தேன் - நறுமணம் உடைய தேன். கனி பவள முத்து உண்டு - கொவ்வைக் கனி போன்ற பவளத்தை ஒத்த வாய் முத்தத்தைப் பெற்று. முன்றில் புறத்து - வீட்டின் முன்பக்கத்து. பொன் ததும்பி - தேமல் படர்ந்து.

(3) இறுகும் - இறுகிய. புளகக்கும்பமுலை - பருத்த குடம் போன்ற கொங்கை. எம்பிராட்டி - எம் தாயான பார்வதி. இளையார் - சிறுமியர். மறுகுதொறும் - தெருத்தோறும். இடுக்கண் - வீட்டைக் கலைக்கும் துன்பம். செயற்கோ - செய்வதற்கோ. எந்தாய் - அப்பனே!

(4) சிறியேம் - சிறியவரான எம்முடைய. சிதையேலே - அழிக்க வேண்டா.

'எம் அம்மையார் உன்னை அலங்கரித்துத் தெருவில் விட்டது எம் போன்றவர் சிற்றிலைக் கால் கொண்டு அழிப் பதற்கோ? அன்று. ஆதலால் எம் சிற்றிலைச் சிதைக்காதே' என்பதாம். (1)

421. கொழுநாண் மலர்க்கற் பகமுநறைக்
குரவு நாறும் நறுங்குஞ்சிக்
கோமான் மகனே நங்கள்குலக்
கொழுந்தே என்று குறையிரந்து
தொழுவா னவர்தம் முடிசூட்டும்
சோதி முடியில் துகளெழநின்
துணைத்தாள் வண்டல் துறைப்புழுதித்
தூளி படினும் படுகசுடர்க்
கழுவா மணியு நிலவுவிரி
கதிர்நித் திலமும் உமையம்மை
கண்ணில் உறுத்த அடிகேள்நின்
காலி லுறுத்தல் கடனன்றால்
செழுநான் மறையின் பெருஞ்செல்வச்
செருக்கே சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (2)

**தெளிவுரை**

(1) செழுமையான கற்பக மலரும் மணம் உடைய குரவ மலரும் கமழ்கின்ற அழகிய குடுமியையுடைய இறைவனுடைய

மகனே! எங்கள் குலக் கொழுந்தே! என்று சொல்லிக் குறைகூறி இரந்து

(2) வணங்கிய தேவர்கள் தம் முடியைத் தரிப்பதற்குக் காரணமான ஒளி பொருந்திய நின்திருமுடிமீது துகள் எழும்படி நின் இரண்டு திருவடிகளும் வண்டல் விளையாடும் இடத்தில் உள்ள புழுதியான தூளி பட்டாலும் படட்டும்;

(3) ஒளியுடைய தூய்மை செய்யப்படாத மணியும் ஒளியுள்ள முத்தும் உமையம்மையாரின் கண்ணில் உறுத்தும்படி, அடிகளே, நின் திருவடியில் உறுத்துதல் முறைமை ஆகாது. ஆதலால்,

(4) செழுமையான நான்கு வேதங்களின் பொருளான பெருஞ் செல்வக் களிப்பே! சிறியேமின் சிறு வீட்டை அழிக்க வேண்டா! செந்நெற்பயிர்கள் பொருந்திய வயல்கள் சூழ்ந்த புள்ளூரனே, சிறியவரான எம் சிற்றிலை அழிக்க வேண்டா!

**விளக்கம்**

(1) நறைக்குரவு - நறுமணம் உடைய குராமலர். குரவு - குரா. நாறும் - மணக்கும். கோமான் - சிவபெருமான். குறை இரந்து - குறை கூறி இரந்து.

(2) தொழுவானவர் - வணங்கும் தேவர். முடி சூட்டும் - முடியை அணிந்து கொள்ளும். தேவர் முருகப் பெருமான் காலில் விழுந்து வணங்கும் போது அவர்தம் முடி திருவடியில் படுதலை 'முடிசூட்டும்' என்றார். துகள் எழ - துகள் உண்டாக. துணைத்தாள் - இருதிருவடிகள். வண்டல் துறை - விளையாடும் இடம். புழுதித்தூள் - புழுதியின் தூசி.

(3) சுடர்க்கழுவாமணி - சுடரையுடைய தூய்மை செய்யப் படாத மணி. நிலவு விரி கதிர் நித்திலம் - நிலவு ஒளியைப் பரப்பும் கிரணத்தையுடைய முத்து. அடிகேள் - சுவாமியே! கடன் அன்று ஆல் - முறையன்று; ஆல் - அசை.

(4) செழு நான்மறையின் பெருஞ்செல்வச் செருக்கே - செழுமையாகிய நான்கு வேதங்களின் பொருளான பெருஞ் செல்வக் களிப்பே.

யாம் கட்டியுள்ள சிறிய வீட்டை நீ அழிக்கும் போது, அதன் புழுதி நின் முடியினும் அடியினும் படியும். ஆனாலும் அது குறித்து நாம் வருந்தவில்லை. அங்குள்ள மணியும் முத்தும் உன் திருத் தாயான உமாதேவியார்க்குக் கண்ணில் உறுத்தல் போன்று வருத்துமே என்று வருத்தம் அடைகின்றோம். ஆதலால் எம் வீட்டை அழிக்க வேண்டா. (2)

422. வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டல் மனைஅவ் வசுரேசன்
வான்கூட் டுண்பான் நடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே
கொழிக்கும் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியேம் மனைமுன்றில்
குவியா நின்ற மணிக்குவைஅக்
குருகு பெயர்க்குன் றமுமன்றால்
சுழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வால் வளைத்தெண் திரைக்கரத்தால்
சுரபி சொரிபால் மடையடைத்த
சோற்றி னோடும் கலந்தூட்டிச்
செழிக்கும் தடங்கா விரிநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (3)

## தெளிவுரை

(1) வழிக்கு ஒதுக்கமாக யாங்கள் அமைத்த வீடு அந்த அசுரர் விண்ணுலகைக் கொள்ளை கொண்டு உண்ணக் கடலின் நடுவில் ஏற்படுத்திய நகரம் அன்று. இகழாமல்

(2) கொழித்தற்குரிய சிறிய முறத்தில் அள்ளி எடுத்து வந்து அடியேம் வீட்டு முற்றத்தில் குவிக்கின்ற மணிக்குவியல் அந்தப் பறவையின் பெயர் உடைய கிரவுஞ்ச மலையும் அன்று.

(3) சுழிகளுடன் கூடிய சூழ்ந்திருக்கின்ற அகழியிடத்து விழ ஒளிர்கின்ற வெள்வளையை யுடைய தெளிவாகிய அலைகள் ஆகிய கையால் பசுக்கள் சொரிகின்ற பாலானது மடைகளை அடைத்துக் கொண்ட சோற்றுடன் கலந்து ஊட்டி

(4) செழிக்கும் பெரிய காவிரி நாடனே! செந்நெல் வயல் பொருந்திய புள்ளூரனே, சிறியவரான எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா.

**விளக்கம்**

(1) வழிக்குப் புறம்பாய் - நீ நடக்கும் வழிக்கு இடையூறாக. வண்டல் மனை - சிற்றில். அசுரேசன் - சூரபன்மன். வான் கூட்டு உண்பான் - தேவ உலகைக் கொள்ளை அடிக்கும் பொருட்டு. நகர் - வீர மகேந்திரம் என்ற நகரம். அது சூரபன்மனுக்கு உரியது. கடல் நடுவில் அமைக்கப்பட்டது அவனால்.

(2) முற்றில் - சிறு சுளகு; முறம். குருகுபெயர்க் குன்றம் - கிரவுஞ்சமலை. மணிக்குவை - மணிக்குவியல். குவியாநின்ற - குவிக்கப்படுகின்ற.

(3) சுழி குண்ட கழிவாய் - குழிகளையுடைய ஆழமான அகழியில். விடுப்ப - விழ. சுடர்கால் வளைத்தென - ஒளிர்கின்ற வெண்மையான வளையையுடைய. சுரபி - பசுக்கள். சொரிபால் - சொரியும் பால். மடை அடைத்த - மடையை அடைத்துக் கொண்ட. சோறு - தாழை முதலியவற்றின் சோறு. காவிரி என்ற மடந்தை தன் வளைக்கரத்தால் பாலும் சோறும் கலந்து கடல் உண்ணுமாறு ஊட்டும் என்பது நயம். (3)

423. மூரிக் களிறோ மழவிடையோ
முடுகிற் றெனப்பார்த் துழிஉனது
முகத்தி னழகெம் வடிக்கண்ணால்
மொண்டுண் டனம்யாம் எனவுமிகப்

பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொன் புயத்தைக் கண்ணேறு
பட்டேம் எனவும் அடிகள்பகை
பாராட் டுவதோர் பண்பன்றால்
வேரிக் கொழுந்தாற்று இளம்பாளை
விரிபூங் கமுகும் பால்பாயும்
வேழக் கரும்பும் இருள்பிழம்பை
விழுங்கிக் கக்கும் சுடர்ப்பருதித்
தேருக் கெழில்செய் சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (4)

### தெளிவுரை

(1) வன்மையுடைய யானையோ இளமையுடைய காளையோ முடுகி வந்தது என்று நாம் பார்த்த போது நின் முக அழகை யாம் எம் மாவடுவைப் போன்ற கண்களால் முகந்து உண்டோம் என்றும், மிகுந்த

(2) பொறையுடையதாய் உயர்ந்து பருத்த பைம்பொன் மலை போலும் தோள்களை நாங்கள் எச்சிலாக்கினோம் என்றும், தாங்கள் எங்கள் மீது பகைமை பாராட்டுதல் ஒரு நற்குணம் ஆகாது. எனவே

(3) நறுமணம் உள்ள செழுமையான தாறுகளையுடைய இளம் பாளைகள் விரிந்துள்ள பொலிவாகிய பாக்கு மரங்களும் பால் பெருகிய வேழக்கரும்புகளும் இருள் கூட்டத்தை விழுங்கிக் கக்கும் சுடரையுடைய கதிரவனின்

(4) தேருக்கு அழகு செய்யும் சோழ நாட்டவனே! சிறியவராகிய எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா! செந்நெல் வயல் பொருந்திய சோழ நாட்டை யுடையவனே, சிறியவராகிய எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா!

**விளக்கம்**

(1) மூரி - வன்மை. களிறோ - ஆண்யானையோ. மழவிடையோ - இளங்காளையோ. வடிக்கண் - மாவடுவைப் போன்ற கண்; கூரிய கண் எனவும் கொள்ளலாம்.

(2) பாரித்து - பருத்து. பைம் பொன் புயம் - பசும் பொன் போன்ற தோள். கண்ணேறு பட்டேம் - திருஷ்டி தோஷம் உண்டாகச் செய்தோம்; கண் எச்சில் ஆகச் செய்தோம். அடிகள் - சுவாமியே.

(3) வேரி - தேன். தாறு இளம்பாளை - குலையாகிய இளம்பாளை. வேழக்கரும்பு - இரசதாளிக் கரும்பு. ஒரு வகைக் கரும்பு. மூங்கிலும் கரும்பும் எனவும் கூறலாம்.

(4) தேருக்கு எழில் செய் - தேருக்குக் கரும்பும் வாழையும் கட்டி அழகுபடுத்துதல் மரபு. ஆதலால் 'தேருக்கு எழில் செய்' என்றார். எழில் செய்தல் - அலங்கரித்தல். (4)

424. பொன்னங் கொடிபோ ல்நுடங்குமிடைப்
புத்தேள் மகளிர் விளையாடப்
புனைமா ளிகையும் சூளிகையும்
புதுக்கிக் கொடுத்தாய் பொதுஞானம்
மெய்ந்நின் றவருள் விழிப்பாவை
விளையாட் டயர அழியாத
வீடும் கொடுத்தாய் எம்மனையும்
விடுத்துச் சென்றால் மிகையுண்டோ
பின்னும் திரைத்தீம் புனல்கங்கைப்
பேராற் றூற்று நறைக்கோட்டுப்
பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப்
பிறழும் வாளைப் பகடுஉதைத்த
தென்னம் பழம்வீழ் சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (5)

**தெளிவுரை**

(1) பொன்னால் ஆன அழகிய கொடியைப் போலத் துவளும் இடையை யுடைய தேவ மங்கையர் விளையாடும் பொருட்டு அலங்கரிக்கப்பட்ட மாளிகைகளையும் சூளிகை களையும் நீ புதுப்பித்துத் தந்தாய். பொதுவான,

(2) மெய்யறிவுடன் நின்றவரின் அகக் கண்ணின் பாவை விளையாடலைச் செய்யக் கூடாத வீட்டையும் தந்தாய். இத்தகைய நீ எம் வீட்டையும் விட்டுவிட்டுப் போனால் குற்றம் ஏதும் உண்டோ?

(3) பின்னல் இடும் அலைகளையும் இனிய நீரையும் உடைய கங்கையான பெரிய ஆற்றில் தேனைப் பொருந்திய பெரிய கொம்புகளுடன் கூடிய கற்பக மரத்தின் கழுத்து முறியும்படி துள்ளும் வாளை மீன்களால் மோதப்பட்ட

(4) தென்னம்பழங்கள் விழுகின்ற சோழ நாட்டானே! சிறியவராகிய எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா! செந்நெல் வயல்களை யுடைய புள்ளூரனே, சிறியவராகிய எம் சிறிய வீட்டைச் சிதைக்க வேண்டா!

**விளக்கம்**

(1) பொது ஞான மெய்ந்நின்றவர் - பொது ஞானத்திலும் மெய்ஞ் ஞானத்திலும் முறையே நின்றவர். மெய் என்ற மெய்ஞ் ஞானத்தை. பொது ஞானத்தினின்றும் நீங்கி மெய்ஞ்ஞானத்தில் நின்றவர் என்றும் பொருள் கொள்ளலாம். உள் விழிப்பாவை - உள்முகவிழியான மெய்ஞ் ஞானக் கண்ணினுள் விளங்கும் பாவை. அது விளையாட்டயர்தல் என்பது சிவானந்தத்தைத் துய்த்தல்.

(2) பொன்னங்கொடி - பொன்கொடி. நுடங்கும் இடை - அசையும் இடை. புத்தேள் மகளிர் - தேவமாதர். புத்தேள் மகளிர் விளையாட மாளிகை முதலியவற்றைப் புதுக்கித் தந்தது என்றது தேவர்களைக் குடியேற்றியது.

(2) அழியாத வீடு - மோட்சம். மிகை - குற்றம்.

(3) தீம்புனல் - இனிய நீர். நறை - மணம்; தேன். கோடு - கிளை.

சோழ நாட்டுத் தென்னை விண்ணுலகக் கற்பக மரத்துக்கு மேல் உயர்ந்துள்ளது. ஆதலால் வாளைப்பகடு துள்ளக் கற்பகத்தின் கழுத்து ஒடிவதாக உரைத்தார். (5)

425. கானக் குறப்பெண் குடியிருந்த
கன்னிப் புனத்துத் தினைமாவும்
கமழ்தேன் தெளிவு முண்டுசுவை
கண்டா யென்றே மதுவல்லால்
மீனத் தடங்க ணவண் மிச்சில்
மிசைந்திட் டதுவு நசைமிக்கு
விரைத்தீங் குமுதத் தமுதடிகள்
விருந்தா டியதும் விண்டோமோ
கூனற் பிறையின் கோடுரிஞ்சும்
கொடிமா டத்து வெயில்விரிக்கும்
குருமா மணியால் சுரநதியில்
கொழுந்தா மரைகள் முறுக்குடைந்து
தேனக் கலரும் சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (6)

**தெளிவுரை**

(1) காட்டில் வாழும் வள்ளிக் குறப்பெண்ணானவள் இருந்த தினைப் புனத்தில் தினை மாவும் நன்மணம் உடைய தேனின் தெளிவும் உண்டு சுவை அறிந்தாய் என்று நாங்கள் உரைத்தோம். அதுவே அல்லாமல்,

(2) மீன் போன்ற கண்ணையுடைய அக்குறப்பெண்ணின் எச்சிலைத் தின்றதையும் ஆசை மிக்கு மணம் கமழ்கின்ற இனிய

வாயான குமுத மலரின் எச்சிலான அமுதத்தைத் தாங்கள் விருந்தாய் உண்டதையும் கூறினோமா!

(3) வளைந்த பிறைச்சந்திரனின் நுனி உறிஞ்சுகின்ற கொடிகள் கட்டிய மாடங்களின் மீது வெயில் பரப்புகின்ற ஒளியுடைய பெரிய மணிகளால் கங்கையாற்றில் உள்ள செழுமையான தாமரை மலர்கள் கட்டவிழ்ந்து

(4) தேனுடன் விளங்கி மலர்கின்ற சோழ நாடனே! சிறியவராகிய எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா! செந்நெல் வயல் பொருந்திய புள்ளூரனே! சிறியவராகிய எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா!

**விளக்கம்**

(1) கானக் குறப்பெண் - காட்டில் வாழும் குறப்பெண்ணான வள்ளி. கானம் - காடு; இசையுமாம். கமழ்தேன் தெளிவும் - மணம் கமழும் தெளிவான தேனும்.

(2) மிசைந்திட்டதுவும் - உண்டதுவும். விரைத்தீங்குமுதம் - மணம் பொருந்திய இனிய குமுத மலர் போன்ற வாயிதழ். அடிகள் - சுவாமிகள். விருந்தாடியது - சுவைத்தது. விருந்து உண்டது. விண்டோமா - கூறினோமா.

(3) கூனல் பிறையின் - வளைந்த பிறைத்திங்களின். கோடு உரிஞ்சும் - முனை உரிஞ்சுகின்ற. குருமாமணி - மாணிக்கம். சுரநதியின் - கங்கையாற்றின். முறுக்குடைந்து - கட்டவிழ்ந்து.

(4) தேன் நக்கு அலரும் - தேனுடன் விளங்கி மலரும். மாணிக்கத்தின் ஒளியால், சூரிய ஒளியால் தாமரை மலர்வது போல், கங்கையில் உள்ள தாமரை மலர்ந்தது என்பதாம்.

குறமகளான வள்ளி நாயகி கொடுத்த தேனும் தினை மாவும் உண்டாய் என்று சொன்னதே அல்லாமல் நீ அவள் எச்சில் உண்டதையும் உதட்டைச் சுவைத்ததையும் நாங்கள் கூற வில்லையே! அங்ஙனமிருக்க, நீ சினந்து எங்கள் வீட்டைச் சிதைக்க வருதற்குக் காரணம் இல்லை. எனவே எம் சிற்றிலைச் சிதைக்க வேண்டா என்றனர் சிறுமியர். (6)

426. பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்
பெருமா னார்க்கும் உலகேழும்
பெற்ற தாய்க்கு நீயருமைப்
பிள்ளை யெனினெம் பேராய
வெள்ள மமைத்த சிறுசோறு
வேண்டி னிடுகே மலதுஎளியேம்
விளையா டிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தால் பொறுக்க விதியுண்டோ
கள்ள விழிச்சூ ரரமகளிர்
காமன் கொடியேற் றெனவியப்பக்
கற்ப தருவிற் படர்ந்தேறு
காமர் கொடிச்செங் கயல்பாயும்
தெள்ளு புனல்கா விரிநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (7)

தெளிவுரை

(1) இளம்பிறைச் சந்திரனைச் சிவந்த சடையில் செருகும் சிவபெருமானார்க்கும் ஏழ்உலகங்களையும் பெற்ற அன்னையான பார்வதிக்கு நீ அருமைப் பிள்ளையே என்றாலும், எமது பெரிய ஆய

(2) வெள்ளத்தால் அமைக்கப்பட்ட சிறு சோற்றை நீ வேண்டினால் படைப்போம். அதுவன்றி எளியேம் விளையாடும் இடத்தில் சிறுகுறும்புகள் செய்தால் பொறுத்துக் கொள்ள சட்டம் உண்டோ?

(3) வஞ்சம் பயின்ற கண்களையுடைய அச்சத்தை உண்டாக்குகின்ற தேவமங்கையர்கள் காமனின் கொடியேற்றம் என்று வியக்குமாறு கற்பக மரத்தின் மேல் படர்ந்து ஏறும் காமர் வல்லிக் கொடிமீது சிவந்த கயல் மீன் பாயும்

(4) தெளிந்த நீரையுடைய காவிரி நாடனே! சிறியவராகிய எம் சிற்றிலைச் சிதைக்க வேண்டா! செந்நெல் வயல்கள் பொருந்திய புள்ளிருக்கு வேளூரனே, சிறியவரான எம் சிற்றிலைச் சிதைக்க வேண்டா!

**விளக்கம்**

(1) பிள்ளைமதி - பிறைச்சந்திரன். பெருமான் - சிவ பெருமான். உலகேழும் பெற்ற தாய் - உமாதேவி.

(2) பேராய வெள்ளம் - பெரிய தோழியர் கூட்டம். அமைத்த் - சமைத்த. இடுகேம் - அளிப்போம். விதி - நியாயம்.

(3) கள்ளவிழிச் சூரரமகளிர் - வஞ்சம் பொருந்திய கண்ணையுடைய சூரர மங்கையர்; அவர் தெய்வ மங்கையர். காமன் கொடியேற்று - மன்மதன் விழாவுக்குரிய கொடியேற்றம். காமன் கொடி - காமவல்லியில்.

கற்பக மரத்தில் படர்ந்தேறிய காமவல்லிக் கொடியில் காவிரி ஆற்றுக் கயல்மீன்கள் பாயும் காலத்தில் காமனுக்குரிய கொடிக் கம்பத்தில் மீன்கொடியை ஏற்றியது போல் விளங்கியது என்க.

(4) தெள்ளுபுனல் - தெளிந்த நீர். (7)

427. மடல்வாய் அவிழ்ந்த குழல்பேதை
ஒருத்தி திருத்தும் பகிரண்ட
மணல்சிற் றிலையோர் கணத்தின்கண்
மட்டித் தாடு மைந்தனருள்
விடலாய் தமியேம் சிற்றில்முற்றும்
விளையாட் டாக வொருநீயும்
வீட்டா நிற்பத் தொடங்கினையால்
வித்தும் முளையும் வேறன்றே
கடமா மருப்பும் சுடர்மணியும்
கதிர்நித் திலமு மகளிர்முலைக்
களபத் தொடுகுங் குமச்சேறும்
கரைத்து விடுத்தக் கடல்குட்டம்

திடராச் செயுங்கா விரிநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (8)

**தெளிவுரை**

(1) மலர் மடல்கள் வாய் விரித்த கூந்தலையுடைய பேதைப் பெண் ஒருத்தி திருத்துகின்ற பகிரண்டங்களாகிய மணல் சிறு வீட்டை ஓர் இமைப் போதில் அழித்தாடும் சிவபெருமான் ஈன்ற மகனே!

(2) தமியேம் சிற்றில் முழுவதும் திருவிளையாடலாக ஒப்பில்லாத நீயும் அழிக்கத் தொடங்கினாய்! ஆகவே விதையும் அதனிடம் தோன்றும் முளையும் வேறா! அல்ல!

(3) மதயானைக் கொம்புகளையும் ஒளியுள்ள மணிகளையும் விளக்கமான முத்துக்களையும் மங்கையர் கொங்கையில் பூசப் பட்ட கலவைச் சாந்துடன் குங்குமக் குழம்பையும் கரைத்து விட்டு அந்தக் கடல் என்ற பள்ளத்தை

(4) மேடாகச் செய்யும் காவிரி நாடனே! சிறியவரான எம் சிற்றிலை அழிக்க வேண்டா! செந்நெல் வயல் சூழ்ந்த வேளூரனே, சிறியவராகிய எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா!

**விளக்கம்**

(1) மடல் வாய் அவிழ்ந்த - மலரின் இதழ் மலரப்பெற்ற. குழல் - கூந்தல். பேதை ஒருத்தி - உமையம்மை. பகிரண்டம் - வெளியே உள்ள அண்டகோளம். ஓர் கணத்தின் - ஓர் இமைப் போதில். மட்டித்து - தேய்த்து. மைந்தன் - வன்மையை யுடைய சிவபெருமான். மைந்து - வன்மை.

(2) வீட்டாநிற்ப - அழிக்க. வித்தும் முளையும் வேறு அன்றே - மகனறிவு தந்தையறிவு ஆதலால் தந்தை செயலை மகன் மேற்கொண்டுள்ளான் என்பது கருத்து.

(3) கடமாமருப்பு - மதயானையின் கொம்பு. கடற்குட்டம் - கடலாகிய பள்ளம்; பள்ளமான கடல்.

(4) திடர் - மேடு. (8)

428. வாமாண் கலைப்பேர் அகலல்குல்
மடமா னோக்கின் அரமகளிர்
மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு
வந்த இடுக்கண் மாற்றினையால்
கோமான் நினக்கப் பெருந்தேவர்
குலமே யன்றி யடியேமும்
குற்றே வலுக்கா மகம்படிமைக்
குடியாக் கொண்டால் குறையுண்டோ
காய்மாண் குலைச்செவ் விளநீரைக்
கடவுள் சாதி மடநல்லார்
கதிர்ப்பூண் முலையென் றேக்கறப்பைங்
கமுகு நகைவாண் முத்தரும்பும்
தேமாம் பொழில்தீம் புனனாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (9)

## தெளிவுரை

(1) அழகுமாட்சிமைப்பட்ட மேகலையை அணிந்த பெரிய அகன்ற அல்குலையும் மடமானின் பார்வையையும் உடைய தேவ மங்கையர் மகிழ்ச்சியுடன் இருக்க, தேவர்க்கு வந்த துன்பத்தை ஒழித்தாய். ஆதலால்,

(2) பெருமானே! உனக்கு அந்தப் பெரிய தேவர் கூட்டமே அல்லாமல் அடியேமும் குற்றேவலுக்கு ஆகும் அணுக்கத் தொண்டு செய்யும் அடியவராகக் கொண்டால் குறையுண்டோ!

(3) சிறந்த காய்கள் பொருந்திய குலையில் உள்ள செவ்விள நீரைத் தேவமங்கையர் அணிகள் அணிந்த கொங்கை என்று

எண்ணி ஏக்கற்று நிற்ப, அதைக் கண்டு பசுமையான பாக்கு மரங்கள் சிரிப்பதைப் போல் ஒளியுள்ள முத்துக்களை அரும்பும்.

(4) இத்தகைய இயல்பு வாய்ந்த தேமாஞ் சோலைகள் சூழ்ந்த இனிய நாடனே! சிறியவராகிய எம் சிற்றிலைச் சிதைக்க வேண்டா! செந்நெல் வயல் சூழ்ந்த வேளூரனே, எம் சிற்றிலை அழிக்க வேண்டா!

**விளக்கம்**

(1) வாமான் - வாமம் + மாண்; அழகு மாட்சிமைப்பட்ட. கலை - மேகலை. மடமான் - இளமையுடைய மான். அரமகளிர் - தேவமங்கையர். மகிழ்பூத்திருப்ப - மகிழ்வுடன் இருக்க. புத்தேட்கு - தேவர்க்கு அல்லது இந்திரனுக்கு. இடுக்கண் - துன்பம். அஃது அசுரரால் வந்தது.

(2) அகம்படிமைக்குடி - அணுக்கத் தொண்டு செய்யும் அடியவர். உள் வேலை செய்யும் குடும்பம். இவர்கள் அகம்படியர் என அழைக்கப்படுவர்.

(3) காய்மாண் குலைச் செவ்விளநீர் - காயால் சிறந்த குலைகளில் உள்ள செவ்விளநீர். கடவுள் சாதி - தேவர். ஏக்கற - ஏமாந்து நிற்க. அதைக் கண்டு கமுகு சிரிப்பது போல் முத்து அரும்பியது. கமுக மரத்தில் முத்து உண்டாகும் என்பர். இளநீரைக் கொங்கை எனக் கருதுவது வழக்கு.

(4) தேமா - ஒருவகை மாமரம். (9)

429. கருவீற் றிருந்த பெருங்கருணை
கடைக்கண் பொழிய வீற்றிருக்கும்
கடவுள் நீயே பகிரண்டம்
கண்டாய் எனின்வண் டடைகிடப்ப
மருவீற் றிருந்த குழல்மகளிர்
வண்டல் துறைக்கு மணல்சிற்றில்
மனைகோ லுவது மற்றடிகேள்
வகுக்கும் தொழிற்கு மாறன்றே

குருவீற் றிருந்த மணிமாடக்
கொடிமா நகரம் தொறுமலர்ந்த
கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல்
கோடி உருவம் கொண்டுசெழுந்
திருவீற் றிருந்த சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (10)

**தெளிவுரை**

(1) கருப்பம் பொருந்தி வீற்றிருந்த பெரிய அருள் மழையைப் பெய்யும்படி வீற்றிருக்கின்ற கடவுளான நீயே பகிர் அண்டங்களை உண்டாக்கினை. அங்ஙனமேல், வண்டுகள் அடை கிடைக்கும்படி

(2) மணம் பொருந்திய கூந்தலையுடைய மங்கையர்கள் வண்டல் விளையாட்டுக்கு மணல் சிறுவீடு கட்டுவது தாங்கள் படைக்கும் தொழிலுக்கு மாறுபட்டதன்றே!

(3) சிறந்த மணிகள் பதித்த மாளிகைக் கொடிகள் கட்டிய பெரிய நகர் தோறும் விரித்த செழுமையான தாமரையான கோயிலில் பல கோடி வடிவம் கொண்டு செழுமையான

(4) திருமகள் வீற்றிருக்கின்ற சோழ நாடனே! சிறியவரான எம் சிறிய வீட்டை அழிக்க வேண்டா! செந்நெல் வயல்கள் பொருந்திய புள்ளூரனே, சிறியவராகிய எம் சிற்றிலைச் சிதைக்க வேண்டா!

**விளக்கம்**

(1) கரு - கருப்பம்; முதிர்வு. கருணையைக் கடைக்கண் பொழிய. கண்டாய் - படைத்தாய்.

(2) மரு - நறுமணம். வண்டல் துறை - விளையாட்டில். வகுக்கும் தொழிற்கு - படைக்கும் தொழிலுக்கு. மாறு - விரோதம். கோலுவது - படைப்பது. அடிகேள் - சுவாமிகளே!

(3) குரு - நிறம். தாமரைப்பூங்கோயில் - தாமரை மலரான கோயில்.

(4) திருவீற்றிருந்த - திருமகள் வீற்றிருக்கின்ற. மக்களுக்கு வேண்டுவன ஆகிய உணவுப் பொருள்கள் அணிவகைகள் எல்லாவற்றிலும் உள்ளமையால் பல் கோடி உருவங்கொண்டு என்றார். (10)

## 9. சிறுபறைப்பருவம்

(குழந்தை சிறுபறை கொட்டி விளையாடும் பருவம் சிறுபறைப்பருவம். இதில் தாயர் முதலியவர் சிறுபறை கொட்டி விளையாடு எனக் கூறுவதாக அமைத்துப் பாடப் படுவது வழக்கம்.)

430. ஊற்றும் பசுந்தேன் உவட்டநெட் டிதழ்விரியும்
ஒண்காந்தள் முச்சியுச்சி
ஒருவன்நீ மும்முதல் கடவுளும் இளைப்பாற
உலகெலாம் தலையளித்துப்
போற்றும் திறத்தினப் பழமறைக் கிழவன்
புரிந்தபகி ரண்டங்கள்தாம்
புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி
புதுநிலாக் கற்றையிட்டுத்
தூற்றும் பெயர்க்கரு முகில்படாத் தையும்வெண்
துகில்படா மாக்கிவீக்கித்
தொடுகடல் புவனப் பெருந்தட்டொடு அண்டச்
சுவர்த்தலத் துக்கும்வெள்ளை
தீற்றும் சுதைத்தவள மாடமலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் கும்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (1)

தெளிவுரை

(1) ஒழுகும் பசுந்தேனானது தளும்ப நீண்ட இதழ்கள் விரியும் ஒளியுடைய காந்தள் மலரை அணிந்த உச்சியையுடைய

ஒப்பற்றவனான நீ மூன்று முதற்கடவுளர்களும் இளைப்பாற எல்லா உலகங்களையும் அருள் செய்து காப்பாற்றுவை. இத்தன்மையால்

(2) அந்தப் பழைய வேதத் தலைவனான நான்முகன் படைத்த வெளியண்டங்களைப் புதுக்குவன போலத் தோன்றப் பெரிய வெளி முகட்டுக்கு விரித்த புதுநிலாவின் கற்றையை அமைத்து,

(3) மழைத்துளி சிந்தும் கரிய மேகமான படாத்தை வெள்ளாடையாகச் செய்து கட்டித் தோண்டப்பட்ட கடல் உலகமான பெரிய தட்டுடன் அண்டச் சுவருக்கும் வெள்ளை தீற்றுகின்ற

(4) சுண்ணச் சாந்து அமைந்த வெண்ணிறமாடங்கள் மிக்கு விளங்கும் வேளூரனே, சிறுபடை கொட்டியருளுவாயாக! தென் மொழிக்கும் பழைமையான வடமொழிக்கும் தலைவனே, சிறுபறை கொட்டியருளுவாயாக!

**விளக்கம்**

(1) உவட்ட - பெருக்கெடுப்ப. ஒட்டிதழ் - நீண்ட இதழ். முச்சி - ஐவகை மயில் முடிகளுள் ஒன்று. இளைப்பாற - ஓய்வு கொள்ள. தலையளித்து - பாதுகாத்து.

(2) பழமறைக்கிழவன் - பழைய வேதத்துக்கு உரிய நான் முகன். போற்றும் திறத்தின் - போற்றும் வன்மையைப் போல. புதுக்குவ கடுப்ப - புதுக்கிடுவதைப் போல். வெளி முகட்டுக்கு - வானம் என்ற மேற்பரப்புக்கு.

(3) கருமுகில் படாம் - கரிய மேகமான மேற்கட்டியையும். வீக்கி - கட்டி. தொடுகடல் - சகல புத்திரரால் தோண்டப்பட்ட கடல்.

(4) வேளூரில் வெண்மையான சுண்ணச் சாந்து பூசப்பட்ட மாடங்கள் மேல் உயர்ந்து நிற்கின்றன. அதனால் அவற்றின் மீது சந்திரனும் மேகங்களும் தவழ்ந்து செல்லும் என்பதும் அவற்றின் ஒளி எங்கும் பரவுதலால் அவர்களுக்குச் சுண்ணம் தீற்றுவது போல் தோன்றும் என்க.

(4) தென் கலை - தமிழ்மொழி. வடகலை - வடமொழி.

உலகு எல்லாம் தலையளித்துப் போற்றும் திறம் என்பது அயன் அரி அரன் ஆகிய மூவர் செயல்களையும் தானே செய்தலாம். (1)

431. விளைக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை
வெள்ளம் சுருங்கவீங்கி
வேதண்டம் எட்டினொடு மூதண்ட கூடத்தும்
விளையாடி உலகமேழும்
வளைக்கும் கருங்கடல் பெரும்புறக் கடலோடும்
வாய்மடுத் தெதிரெடுப்ப
வருபுனல் காவேரி வளநாட நாடொறு
மதிக்கடவுள் ஏறியேறி
இளைக்கும் பளிக்கறை முயற்கறை யறக்காலும்
இளநிலா வெள்ளம்மூழ்கி
எறிதிரைப் பாகீ ரதிப்புனல் குடைந்திடும்
இடைக்கொடி நகில்கொடியெனத்
திளைக்கும் துகில்கொடி முகில்கொடிசெய் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் கும்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (2)

தெளிவுரை

(1) படைக்கப்பட்ட பெரிய உலகங்கள் யாவற்றையும் சேரக் கரைத்த ஊழிப் பெருக்கும் சுருங்குமாறு பொங்கி, எட்டுக் குலமலைகளுடன் பழைமையான அண்ட முகட்டினும் போய் விளையாடி ஏழு உலகங்களையும்,

(2) வளைக்கும் கரிய கடல் பெரிய புறக்கடலுடன் கலந்து எதிர்த்து ஏறிவரும்படி பெருகிவரும் நீரையுடைய காவிரியாறு பாய்கின்ற வளநாடனே! நாள்தோறும் சந்திரன் ஏறி ஏறி

(3) இளைத்தற்குரிய பளிக்கறைகள் முயற்களங்கம் ஒழிய, இளநிலவு ஒளியில் முழுகி வீசும் அலைகளையுடைய கங்கை

யாற்றில் முழுகி இடையாகிய கொடியும் கொங்கைகளை யுடைய பெண் கொடிகளைப் போல்,

(4) நிறைந்த துகிற்கொடிகளும் மேகக் கூட்டங்களை மறைத்தல் செய்யும் வேளூரனே! சிறு பறையை முழக்கி அருளுவாயாக! தமிழ் மொழிக்கும் பழைய வடமொழிக்கும் தலைவனே, சிறுபறையை அறைந்தருளுவாயாக!

**விளக்கம்**

(1) விளைக்கும் - படைக்கப்பட்ட. ஒக்க - ஒருசேர. கடை வெள்ளம் - ஊழி முடிவில் வந்த வெள்ளம். வீங்கி - பெருகி. வேதண்டம் எட்டு - எட்டுக்குலமலைகள். அவை: 1. கயிலை, 2. இமயம், 3. மந்தரம், 4. விந்தம், 5. நிடதம், 6. ஏமகூடம், 7. நீலகிரி, 8. கந்தமாதனம். மூதண்டம் - பழைய அண்ட கூடம்.

(2) வளைக்கும் - சூழும். மதிக்கடவுள் - சந்திரன்

(3-4) இங்குள்ள பளிங்கு அறையின் வெள்ளிய ஒளியாகிய வெள்ளத்தில் மூழ்கி நிற்கும் துகில் கொடி, வான கங்கையில் முழுகும் மங்கையரைப் போன்றது என்பதாம்.

முயற்கறை - முயல் வடிவில் உள்ள களங்கம். பாகீரதி - கங்கையாறு. குடைந்திடும் - நீராடும். இடைக்கொடி நகிற் கொடி - இடையான கொடியையும் கொங்கைக் கொடியையும் உடைய பெண். துகிற் கொடிக்கு நகிற்கொடி உவமை. துகிற்கொடியானது மேக மண்டலத்தைப் பொருந்தி அம்மேகத்தைக் கோத்து நின்ற முகிற்கொடி ஆனது. துகிற்கொடி என்பது எழுவாய்.

(4) திளைக்கும் - நிறைந்த. (2)

432. இருளும் தரங்கக் கருங்கடல் முகட்டெழும்
இளம்பிறை முயல்குழந்தைக்கு
ஏறவிடும் ஓடமென வான்மீன் தடந்திரை
எடுத்தெறியு நெடுமீனெனத்
தரளம் பதிந்திட்ட மணிமுறுவ லவரோடு
தருநிழல் செல்வர்உய்க்கும்

தமனிய விமானமும் வெயிற்கதிர்ப் போர்வையான்
தனியாழி திசையுருட்ட
உருளுங் கொடித்தேரும் வீற்றுவீற்று எழில்புனைந்து
ஓட்டுபொன் தெப்பமென்ன
உலகேழு மலையெட்டு ஒழுகுகதிர் விழுதுவிடும்
ஒண்ணிலாப் புணரிகோப்பத்
திரளும் பளிக்குமா டங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் கும்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (3)

**தெளிவுரை**

(1) இருளும் அலைகளையுடைய கரிய கடலின் முகட்டில் எழும் இளம்பிறையாகிய முயல் என்ற குழந்தைக்கு ஏற்றிடும் ஓடம் போன்றும், விண்மீன்கள் பெரிய அலைகளால் எடுத்து எறியப்பட்ட நீண்ட மீன்களைப் போன்றும்,

(2) முத்துக்கள் பதித்தாற் போன்ற அழகிய பற்களையுடைய மங்கையருடன் கற்பகமரநிழலில் வாழ்கின்ற செல்வர்களாகிய தேவர்கள் செலுத்துகின்ற பொன் விமானமும் வெயில் கதிர்ப் போர்வை உடையவனாகிய கதிரவன் ஒப்பற்ற ஆணைச் சக்கரத்தை உருட்டுவதாக,

(3) உருளும் கொடியுடைய தேர்களும், வேறு வேறாகிய அழகு பெற்ற ஓட்டப்படுகின்ற பொன் தெப்பமும் போன்றும், ஏழ் உலகத்திலும் எட்டு மலைகளிலும் ஒழுகும் ஒளியின் விழுது விடுகின்ற ஒள்ளிய நிலாக்கடல் சேர்த்துக் கொள்ளத்

(4) திரண்ட பளிங்கு மாடங்கள் விளங்குகின்ற வேளூரனே! சிறிய பறையை முழக்குவாயாக! தென்மொழிக்கும் வட மொழிக்கும் தலைவனே, சிறுபறையை முழக்கியருளுவாயாக!

**விளக்கம்**

பிறைச்சந்திரன் ஓடம். வான்மீன் - நட்சத்திரம். தரங்கம் - அலை. கடல் முகடு - கடலின் மீது.

ஓடம் - தெப்பம். நெடுமீன் - நீண்டமீன்கள். நட்சத்திரம் மீன்களைப் போன்றன.

(2) தரளம் - முத்து. தமனிய விமானம் - பொன் விமானம். தரு நிழல் செல்வர் - கற்பக மரநிழலில் வாழும் தேவர். உய்க்கும் - செலுத்தும். வெயிற்கதிர் போர்வையான் - கதிரவன். தனி ஆழி - ஒற்றைச் சக்கரம்.

(3) வீறு வீறு - தனித்தனியே. நிலாப்புணரி - நிலவு ஆகிய வெள்ளம்; வெண்மையான ஒளியின் தொகுதி.

(2-3) தேவர்கள் செலுத்தும் விமானங்களும் கதிரவனின் தேரும் பொன் தெப்பங்கள் போல் விளங்கின. (3)

433. மொய்ம்பிற் பெரும்புவனம் ஒக்கச் சுமக்கின்ற
மோட்டாமை முதுகுஉளுக்க
முடவுப் படங்கிழித் தரவரசின் ஆனாயிர
முடித்தலையு மூளைபொங்கக்
கம்பக் கடாயானை எட்டும் பிடர்த்தலை
கழுத்தொடு முரிந்துகவிழக்
கதிர்மணிச் சூட்டுநெட்டரவுஎட்டும் வடவைக்
கடுங்கனல் கண்பிதுங்க
அம்பொன் தடம்புரிசை எழுபெருந் தட்டுருவி
அண்டகூ டத்தளவலால்
அவரவர் வழங்குதற் கிடுதலைக் கடையென
அடுக்கேழு நிலைஏழுமாம்
செம்பொன் திருக்கோ புரங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் கும்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (4)

**தெளிவுரை**

(1) வன்மையினால் பெரிய உலகங்களை ஒரு சேரச் சுமக்கின்ற பெரிய ஆமை முதுகு நெளியவும், வளைவான படம்

கிழிபட்டு ஆதிசேடனின் ஆயிரம்தலைகளும் மூளை கொதிக்கவும்,

(2) கம்பத்தில் கட்டப்படுகின்ற மதயானை எட்டும் பிடர்த் தலையானது கழுத்துடன் ஒடிந்துக் கவிழ்ந்து விழவும், ஒளி பெற்ற மணியுடைய உச்சியுடைய நீண்ட எட்டுப்பாம்புகளும் வடவை யாகிய சுடும் தீயையுடைய கண்கள் பிதுங்கவும்,

(3) அழகிய பொன்னால் செய்யப்பட்ட பெரிய மதிலானது ஏழாம் பெருந்தட்டுக்களை ஊடுருவி அண்ட முகட்டில் சேர்தலால் அவ்வவ்வுலகத்தவர் இயங்குவதற்கு அமைக்கப்பட்ட தலைக் கடை என்னும்படி ஏழடுக்கும் ஏழ்நிலையும் ஆன

(4) செம் பொன்னால் ஆன கோபுரங்கள் விளங்குகின்ற புள்ளிருக்கு வேளூரனே! சிறுபறையை முழக்கியருளுக! தென் மொழியான தமிழுக்கும் பழைமையான வடமொழிக்கும் தலைவனே, சிறுபறையை முழக்கியருளுக.

**விளக்கம்**

(1) மொய்ம்பின் - வன்மையால். ஒக்க - ஒருசேர. மோட்டு ஆமை - பெரிய ஆமை; ஆதிகூர்மம்; ஆதிசேடனுக்குக் கீழே இருந்து இது உலகத்தைச் சுமப்பது. அரவரசு - ஆதிசேடன். மூளை பொங்க - மூளை கொதிக்க.

(2) கம்பக் கடாயானை - கட்டுத் தறியில் கட்டப்படும் மத யானை. யானை எட்டும்பூமியைச் சுமப்பவை. முரிந்து - வளைந்து. அரவு எட்டு - எட்டு வகையான நாகங்கள். அவை: 1. வாசுகி, 2. அனந்தன், 3. தக்கன், 4. சங்கபாலன், 5. குளிகன், 6. பதுமன், 7. மகாபதுமன் 8. கார்க்கோடகன். இவை முறையே கிழக்கு முதலிய எட்டுத் திசைகளையும் தாங்க,

இவற்றின் நடுவே ஆதிசேடன் பூமியைச் சுமக்கின்றான். இவை காசிபனுக்கும் கத்துருவுக்கும் பிறந்தவை. இவை கண்ணால் விடம் கக்கும் திட்டி விடச் சாதிப்பாம்புகள். எனவே இவற்றை வடவைக்கடுங்கனல் கண் பிதுங்க என்றார்.

(3) புரிசை - மதில். எழுபெருந்தட்டு - ஏழுஉலகமாகிய தட்டுக்கள். மதில் ஏழ் உலகத்தையும் கடந்து மேலே சென்றதால் அந்நகருக்குள் புகுதற்கு வழி இல்லை யாயிற்று.

(3-4) ஏழுலகத்தாரும் போய்வருதற்கு ஏழுநிலைகள் அமைந்த கோபுரம். தலைக்கடை - வாயில்.

(4) பொலி - விளங்கும்.

முதுகு உளுக்க, மூளை பொங்க, முரிந்து கவிழ, கண் பிதுங்க, புரிசை அண்ட கூடத்து அளவியது என இயைக்க. (4)

434. தரிக்கும் சுடர்ப்பருதி முழுமதிக் கடவுளொடு
தடமதில் கடந்தகநகர்
சாரஅரி தாற்புவன கோடிகட்கு ஒளிசெயக்
சதுமுகன் கற்பந்தொறும்
விரிக்கின்ற விருசுடரு மொருவழித் தொக்கென
வியன்கதிர்ப் படலமூடி
வீங்கிருள் விழுங்குசெம் மணிமாட நிரையுமொளி
விளைபசுங் கதிர்வெண்புரி
புரிக்கும் செழுந்தரள மாடமும் வெயிலினொடு
பொழிநிலாப் போர்ப்பமுற்றும்
போதுதெரி யாமையில் குமுதமொடு சதவிதழ்ப்
போதுமே இருபோதையும்
தெரிக்கும் தடம்பணை உடுத்ததமிழ் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் கும்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (5)

தெளிரை

(1) பொருந்தும் ஒளியையுடைய கதிரவன் முழுமதியுடன் பெரிய மதிலைத் தாண்டி நகரினுள் சேர்தல் அரிது. ஆதலால் கற்பந் தோறும்

(2) விரிக்கின்ற இருசுடரும் ஓரிடத்துக் கூடினாற் போன்று பெரிய ஒளித் தொகுதி மூடி அதிகரித்த இருட்டை விழுங்கும் செம்மணிகள் பதிக்கப் பெற்ற மாளிகை வரிசையும் ஒளியுண்டாகிய பசுமையான கதிர்களையுடைய வெண் சங்குகள் ஈனுகின்ற செழுமையான முத்து மாளிகைகளும் வெயிலுடன் போர்க்கும் நிலவினால் மூட முழுதும் பொழுது தெரியப் படாமையால் நூற்றிதழ்த் தாமரைகளும் இரு பொழுதையும்

(4) தெரிவிக்கின்ற பெரிய வயல்கள் சூழ்ந்த தமிழ் வழங்கும் புள்ளிருக்கு வேளூரனே! சிறுபறையை முழக்கியருளுவாயாக! தமிழ்மொழிக்கும் பழைய வடமொழிக்கும் தலைவனே, சிறு பறையை முழக்கியருளுவாயாக!

**விளக்கம்**

கதிரவனும் சந்திரனும் நகருக்குள் புக முடியாதபடி மதில்கள் உயர்ந்துள்ளன. ஆதலாலும் மாணிக்க மணி இழைத்த மாடங் களும் முத்துப் பதித்த மாடங்களும் வெயிலையும் நிலவினையும் ஒருங்கே வீசுதலாலும் இரவும் பகலும் தெரியாமல் அந்த ஊரார் அஞ்சுவர். ஆயினும் பகலில் மலரும் தாமரையும் இரவில் மலரும் குமுத மலரும் மலர்தலால் பொழுதைப் புலப்படுத்துவனவாயின.

(1) பருதி - கதிரவன். அரிதால் - அரிது + ஆல்; அரிது; ஆதலால்.

(2) இருசுடரும் - சந்திரனும் கதிரவனும். செம்மணி மாடம் நிரை - மாணிக்கங்கள் இழைத்த மாட வரிசை. கதிர் வெண்புரி - வெண் கிரணங்களாகிய புரியை. புரி என்றது கயிறு.

(3) செழுந்தரள மாடம் - செழுமையான முத்துக்கள் பதித்த மாடம். இருபோது - இரவும் பகலும். சத இதழ்ப்போது - நூறு இதழ்களை யுடைய தாமரை.

(3-4) குமுதம், தான் மலர்வதால் இரவையும் தாமரை, தான் மலர்வதால் பகற் காலத்தையும் புலப்படுத்தின. தடம்பணை - பெரிய வயல்கள். (5)

## வேறு

435. மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை
மடமயி லினம்அகவ
மால்கடல் ஒலிடு மொலியென விரக
மடந்தையர் மனநெகிழப்
பழமறை யார்ப்பென ஆகுதி வேட்டெழு
பண்ணவ ருளமகிழப்
பரநா தத்தொலி யெனவனு பூதி
பலித்தவர் நெக்குருக
அழலவிர் சோதியெம் ஐயன் நடஞ்செய
ஆயிர மங்கையினோர்
அண்ணல் துவைத்திடு குடமுழ வொடுசுடர்
ஆழி யவன்கொட்டும்
முழவென அமரரு முனிவரு மார்ப்ப
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (6)

### தெளிவுரை

(1) குளிர்ச்சியுடைய முகில்கள் ஒலிக்கின்ற ஒலி என்று நினைத்து விரிந்த தோகையையுடைய இளமயில் கூட்டங்கள் ஆடும். பெரிய கடல் ஒலிக்கும் ஒலி என்று எண்ணி விரகம் கொண்ட மங்கையர் உள்ளம் உருகுவர்.

(2) பழைய வேதங்களின் ஒலி என்று எண்ணி ஆகுதியை விரும்பி எழுந்த தேவர்கள் உள்ளம் மகிழ்வர். பரநாதத்து ஒலி என்று எண்ணி அனுபவம் பலிக்கப் பெற்றவர் மனம் நெகிழ்ந்து உருகுவர்.

(3) தீ விளங்கும் ஒளியுருவாகிய எம் இறைவன் கூத்தாட ஆயிரம் கைகளை யுடைய ஒரு பெரியோன் முழங்கும் குட முழாவுடன் ஒளியுடைய சக்கரத்தை உடைய திருமால்

(4) கொட்டும் முழவொலி என நினைத்துத் தேவரும் முனிவரும் ஆரவாரிப்பர். இவ்வாறு நிகழச் சிறுபறை முழக்கி யருளுவாயாக! மூவகைத் தமிழும் வழங்கும் பரிதிபுரியில் வீற்றிருக்கின்ற முருகப் பெருமானே! சிறுபறையை முழக்கு வாயாக!

**விளக்கம்**

இப்பகுதியில் முருகக் கடவுள் சிறுபறையை முழக்க அதனால் நிகழ்வன கூறப்படுகின்றன.

(1) மழை முகில் - மழை பெய்யும் மேகம். பிளிறும் - முழங்கும். சிறுபறை ஒலியைக் கேட்ட மயில்கள் மேகத்தின் முழக்கம் என்று எண்ணி ஆடின.

விரக மடந்தையர் - தலைவரைப் பிரிந்து பிரிவுத் துன்பத்தை யுடைய மகளிர். விரகம் - பிரிவு.

(2) ஆர்ப்பு - ஆரவாரம்; ஒலி. ஆகுதி வேட்டு - வேள்வியில் இடப்படும் அவிசை விரும்பி. பண்ணவர் - தேவர். அனுபூதி பலித்தவர் - ஞான அனுபவம் கைவரப் பெற்றவர்.

(3) எம் ஐயன் - சிவபெருமான். ஆயிரம் அங்கையின் ஓர் அண்ணல் - ஆயிரம் கைகளையுடைய வாணாசுரன், துவைத்திடு - முழக்கும். சுடர் ஆழியவன் - கதிரையுடைய சக்கரப் படையை யுடைய திருமால்.

(4) முழவு என - முழவின் ஒலி என; முழவு - தண்ணுமை.

(6)

436. பெருவெளி முகடு திறந்திட் டண்டப்
பித்திகை வெடியாமே
பேரண் டத்துள வேதண் டங்கள்
பிதிர்ந்துதி வாகாமே
குருமணி சிதறிய என்ன உடுத்திரள்
கொட்டுண் டுதிராமே

குவடு படுந்திசை செவிடு படச்சிலர்
குடர்கள் குழம்பாமே
திருவிர லொடுநக கண்களி னுஞ்செங்
குருதி ததும்பாமே
சேயொளி நின்று துளும்பிட நின்சிறு
செங்கை வருந்தாமே
முருகலர் தாரவன் ஒருமுறை மெல்ல
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்வரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (7)

**தெளிவுரை**

(1) பெருவெளியில் முகடு பிளந்திட்டு அண்டச் சுவர் வெடிக்காமலும், பெரிய அண்டங்களில் உள்ள மலைகள் பொடியாகி உதிராமலும்,

(2) நல்ல நிறம் கொண்ட மணிகள் சிதறின என்னும்படி விண்மீன் கூட்டம் மேலிருந்து கொட்டப்பட்டாற் போல் உதிராமலும், குலமலைகள் பொருந்திய எட்டுத் திசையிலும் உள்ள சிலர் செவிடாகிக் குடர் குழம்பாமலும்

(3) அழகிய விரலுடன் நகக்கண்களிலும் செங்குருதி ததும்பாமலும், செவ்வொளி நின்று ததும்பிட நின்சிறு செங்கை வருந்தாமலும்

(4) மணத்துடன் மலர்ந்த மலர் மாலையை யுடையவனே! ஒருமுறை மெல்லச் சிறு பறையை முழக்கியருளுவாயாக! முத்தமிழும் வழங்கும் பருதிபுரியில் வீற்றிருக்கும் முருகனே, சிறு பறையை முழக்குவாயாக!

**விளக்கம்**

(1) பெருவெளி - அண்டச்சுவர். அண்டப்பித்திகை - அண்டச்சுவர். வெடியாமே - மிக்க ஒலியால் பிளவு படாமல். பிதிர்ந்து - தூளாகி.

(2) குருமணி சிதறிய என்ன நன்னிற மாணிக்க மணிகள் சிதறியதைப் போல். கொட்டுண்டு - கொட்டிப் போய். சிலர் - மலையில் வாழ்பவர்.

(3) விரலால் அடிக்கும் போது அடி வலிதாயின் நகக் கண்ணினின்று இரத்தம் குழம்பும். அவ்வாறு நிகழாதபடி சிறுபறை முழக்குக என்றார்.

இப்பாடலில் சிறுபறை முழக்கும் முறையை விளக்குகிறார். (7)

437. வம்மி னெனப்புல வோரை அழைத்திடு
வண்கொடை முரசமென
வடகலை தென்கலை யொடுபயி லும்கவி
வாணர்கள் ஓடிவர
அம்மென் மடப்பிடி பொன்னுல கீன்றவள்
நங்கை மணம்புணரும்
அணிகிளர் மணமுர சென்னஎம் ஐயனொடு
அம்மை மனம்குளிரத்
தெம்முனை சாயச் சமர்விளை யாடிச்
செங்கள வேள்விசெயும்
திறல்முர செனஇமை யவர்விழ வயரச்
செழுநகர் வீதிதொறு
மும்முர சமுமதிர் காவிரி நாடன்
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (8)

தெளிவுரை

(1) வாருங்கள் எனப் புலவர்களை அழைக்கும் வளவிய கொடை முரசு என்று எண்ணி, வடகலையைத் தென்கலையுடன் பயில்கின்ற புலவர்கள் ஓடி வரவும்,

(2) அந்த மெல்லிய இளம்பிடி போன்று பொன்னுலகத்தில் பெற்ற தெய்வப் பெண்ணை மணப்பதற்கு உரிய அழகிய முரசம் என்று நினைத்து எம் தந்தையான சிவபெருமானுடன் உமை யம்மை மனம் மகிழ,

(3) பகைவரது முன்படை முரிந்து ஓடும்படி போர் செய்து செங்கள வேள்வி செய்யும் வெற்றி முரசமாய் நினைத்துத் தேவர்கள் திருவிழாக் கொண்டாட,

(4) மூன்று வகையான முரசுகளும் தெருத்தோறும் ஒலிக்கும் காவிரி நாடனே! சிறுபறையை முழக்குக. முத்தமிழும் பொருந்தி யுள்ள பருதிபுரியில் வீற்றிருக்கின்ற முருகனே, சிறுபறையை முழக்குக.

**விளக்கம்**

(1) வம்மின் - வாருங்கள். கொடை முரசம் - கொடுத் தற்காக அடிக்கப்படும் முரசு; தியாக முரசம் என்பர் இதனை.

(2) பொன் உலகு அணங்கு - தேவஉலகத்துப் பெண்ணான தெய்வ யானை. எம் ஐயன் - சிவபெருமான். அம்மை - பார்வதி.

(3) தெம்முனை சாய - பகைவர் போர்க்களத்தில் தோற்க. செங்கள வேள்வி செயும் - இரத்தத்தால் சிவந்த களத்தில் பகைவரை வென்று அவ்வெற்றியைக் கொண்டாடிக் களவேள்வி செய்யும்.

(முடிபு) கொடை முரசும் முதலியன என மும்முரசமும் முழங்கும் காவிரி நாடனே சிறுபறை முழக்குக. (8)

**சந்த விருத்தம்**

438. பெருகுசுவைத்தெளி நறவொழுகக்கனி கனியமுதே
பிடிநடைகற்றிட அடிகள்பெயர்த்திடு மடவனமே
கருவரைநெக்குடன் உருகமிழற்றுமொர் கிளியரசே
கருணைசெயத்தகும் உளியனிடத்தெனு
மொழிபுகலா
அருளில்புனத்தவர் மகளிரு பொற்பதம் வருடல்செயா
அவள்முனெடுத்துநின் முடியின்முடித்திடு
கரமலரால்
பருவமிரப்புய சயிலன்முழக்குக சிறுபறையே
பருதிபுரிச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே. (9)

**தெளிவுரை**

(1) பெருகும் சுவையுள்ள தெளிந்த தேன் ஒழுகக் கனிந்த கனி அமுதமே! பெண் யானைகள் நடை கற்குமாறு அடிகளை எடுத்து வைக்கும் இள அன்னமே!

(2) கரிய மலை நெகிழ்ந்து ஒருங்கே உருகும்படி குழறிப் போகின்ற கிளியரசே! எளியேனிடத்தில் அருள் செய்யத் தகும் என்ற சொற்களைச் சொல்லி,

(3) இரக்கம் இல்லாத குறவர் மகளுடைய இரண்டு அடிகளையும் வருடி அவளுக்கு முன் நின்று உயர்த்தி உன் தலை மீது கூப்பிய கையாகிய மலரால்

(4) பெரிய வயிரமலை போலும் தோள்மலையை யுடையவனே! சிறுபறையை முழக்குக! பரிதி புரியில் உள்ள இளங் குமரனே! சிறுபறையை முழக்குக.

**விளக்கம்**

(1-3) முருகப் பெருமான் வள்ளியைப் பாராட்டுதல் கூறப்படும்.

(1) நறவு ஒழுக - தேன் ஒழுக. கனி கனியமுதே - கனிந்த கனியின் அமுதமே. பிடிநடை - பெண்யானை நடை. அடிகள் பெயர்த்திடு - மெல்ல நடக்கின்ற; மடஅனமே - இளைய அன்னப் பறவை போன்றவளே!

(2) கருவரை நெக்கு உடன் உருக - கரிய மலை நெகிழ்ந்து. ஒருங்கே உருகும்படி. மழலை இசை போன்றது. ஆதலின் கல் உருகிற்று. மிழற்றும் - இனிய சொற்களைக் கூறும். கருணை செயத்தகும் - எளியேனுக்கு அருள் செய்தல் தக்கது. புகலா - கூறி.

(3) அருள் இல் புனத்தவர் - இரக்கம் இல்லாத குறவர். எடுத்து - அடியை எடுத்து.

(4) பருவயிரப் புய சயிலன் - பருத்த வயிரம் வாய்ந்த தோள் மலையை யுடையவன். (9)

439. இழுமென்மொழித்தெளி தமிழின்வடித்திடு நவரசமே
இதயஇருட்டற வுணர்விலுதித்திடு சுடரொளியே
கழுவுமணிக்கலன் நடுவிலிழைத்திடு குலமணியே
கனிதருமுக்கனி யொடுவடிகட்டிய சுவையமுதே
ஒழுகுநறைச்செழு மலர்விரியக்கமழ் புதுமணமே
உருகுமுளத்தருள் பெருகிஉவட்டெழு சலநிதியே
பழமறைகட்கொரு முதல்வன்முழக்குக சிறுபறையே
பருதிபுரிச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே (10)

**தெளிவுரை**

(1) இழும் என்ற ஒலியுடைய சொற்களையுடைய தெளிந்த தமிழினின்றும் வடித்த ஒன்பான் சுவையே! உள்ளத்தில் உள்ள அறியாமை இருள் ஒழிய அறிவினிடத்தில் உதிக்கின்ற ஒளி யுடைய கதிரவனே!

(2) கழுவப்பட்ட மணிகளால் இயன்ற அணிகளின் இடையே இழைத்திட்ட உயர்ந்த மாணிக்கமே! கனிந்த முப் பழங்களுடன் கலந்து வடித்த சுவையுள்ள அமுதமே!

(3) ஒழுகும் தேனையுடைய செழுமையான மலர்கள் மலர எழுகின்ற புது மணமே! உருகுகின்ற உள்ளத்துள் அருள் மிக்கு பெருக்கெடுக்கின்ற கடலே!

(4) பழைமையுடைய வேதங்களுக்கு முதல்வனே! சிறு பறையை முழக்கியருளுவாயாக! பருதி புரியில் வீற்றிருக்கின்ற சிறு குமரனே! சிறுபறையை முழக்கியருளுவாயாக!

**விளக்கம்**

(1) 'இழும்' என்பது ஒலிக்குறிப்பு. தெளிதமிழ் - தெளிந்த தமிழ். நவரசமும் - ஒன்பது சுவை. இதய இருட்டு - உள்ளத்தில் உள்ள அறியாமை. சுடர் ஒளியே - கதிரவனே!

(2) கழுவு மணி - தூய்மை செய்யப்பட்ட மணி. தீட்டப்பட்ட மணி. குலமணியே - மாணிக்கமே.

(3) ஒழுகு நறைச் செழுமலர் - ஒழுகும் தேனையுடைய செழுமையான மலர். உவட்டெழு - பெருக்கெடுக்கும். சலநிதி - கடலே. (10)

## 10. சிறுதேர்ப்பருவம்

(குழந்தை சிறிய (விளையாட்டுத்) தேரை உருட்டி விளை யாடும் பருவம். தாயர் முதலியவர் சிறிய தேரை உருட்டியருளுக எனக் கூறுவது வழக்கம்.)

440. போரோடு படைதுறந் துடல்திறந் தோடுசெம்
புனலோட ஓடிநிமிரும்
புணரிப் பெருந்தானை அவுணப் படைத்தலைவர்
பூதப் படைத்தலைவர்முன்
தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
தழல்விழிக்கு எதிர்செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநும்
தாலிக்கு வேலிகொலெனாப்
பேரோடு கொங்கைக்க ணீரோடு வெள்ளருவி
பெருகக் கடைக்கணிற்கும்
பெய்வளை யவர்க்கோத அவர்விழிகள் தொறுமிளம்
பேதையர்கள் கண்தொறுமெனத்
தேரோடும் ஒருபெருஞ் சிலையோடு நின்றவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (1)

தெளிவுரை

(1) போர்க்களத்தில் ஆயுதங்களை எறிந்து விட்டு உடம்புகள் பிளக்கப்பட்டு வழியும் குருதி ஓடும்படி ஒடி நிமிர்ந்த கடல் போன்ற பெரிய படையை யுடைய அவுணர் படைத் தலைவர்கள் பூதப்படைத் தலைவர்க்கு முன்னம்,

(2) பூமாலையுடன் அவிழ்ந்து விட்ட குடுமிக்கும் இமைக்கின்ற தீப்போலும் கண்ணுக்கும் முன்னேறி நடவாத அடிக்கும். வாளை நழுவுமாறு விட்ட பெருங்கைக்கும் அஞ்சுதல் உங்கள் தாலிகளுக்கும் வேலி என்று

(3) பசலை பூத்த கொங்கைகளின் மீதும் கண்ணீராய் ஓடுகின்ற வெள்ளருவி பெருகும்படி (தம் கணவரை எதிர்பார்த்து) வாயிலில் நிற்கின்ற பெண்டிர்க்குச் சொல்ல, அம்மங்கையரின் கண்கள் தோறும் இளம் பெண்களுடைய கண்கள் தோறும் நிற்பதைப் போன்று

(4) தேருடனும் ஒரு பெரு வில்லுடனும் நின்றவனே! சிறு தேரை உருட்டியருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்த புரியில் வீற்றிருக்கின்ற இளங்குமரனே, சிறு தேரை உருட்டியருளுவாயாக!

**விளக்கம்**

போரில் தலைமுடி அவிழ்ந்தவரையும் கண் இமைத்தாரையும் பின் அடி இட்டவரையும் வாளை நழுவ விட்டவரையும் கொல்லுதல் அறம் ஆகாது. ஆதலால் அத்தகைய அவுணரை முருகப் பெருமான் பிழைத்துப் போகும்படி விட்டான். அச்செய்தி இப்பாடலில் கூறப்படுகின்றது.

(1) போரோடு படைக்கலம் துறந்து - போரையும் ஆயுதங்களையும் கைவிட்டு. உடல் திறந்து - உடல் பிளக்கப்பட்டு. புணரிப் பெருந்தானை - கடல் போன்ற பெரியபடையையுடைய. அவுணப் படைத்தலைவர் - அசுரப்படைத்தலைவர். பூதப் படைத்தலைவர் - சிவகணப்படை.

(2) தார் - மாலை. குஞ்சி - குடுமி; தலைமயிர். தாள் - அடி. வாள் சோர் தடக்கை - வாளை நழுவ விட்டபெரிய கை. நாமம் - அச்சம். நும் தாலிக்கு வேலி எனா - அச்சத்துக்கு இடமான உம் தாலிக்கு வேலியாகும் என்று. குடுமி முதலியவை அவுணர் படைக்குரியன. எதிர் செலாத தாளுக்கு - எதிர்த்து முன் செல்லாத அடிக்கு; பின் வாங்கிய காலுக்கு. வேலி - முருகக்

கடவுள் பாதுகாப்பு. கொல் - அசை. தம் கணவரின் உயிர்க்கு இறுதி நேருமோ என்று அஞ்சிய மகளிராதலின் அவர்கள் தாலியானது அச்சத்துக்கு இடமாகியது.

(3) பீரொடு - பீர்க்கப் பூப் போன்ற பசலையுடன். கொங்கைக்கண் - நகிலிடத்து. கடைக்கண் நிற்கும் - தம் கணவர் வரவை எதிர்பார்த்து வாயிலில் நிற்கும். பெய்வளையவர்க்கு - அவுணப்படைத்தலைவரின் மனைவியர்க்கு. விளையாட்டுப் பேதை மகளிர் கண்ணை விட்டு அகலாத இளமையுடன் நின்றது போல் அவுணர் மனைவியரின் கண்ணை விட்டு அகலாதவன் முருகன். இவ்வாறு கூறக் காரணம் தம் கணவரைப் பாதுகாத்த அப்பெருமான் திருவுருவை எண்ணியிருப்பதாகும்.

புறங்காட்டி ஓடிய அவுணப்படைத்தலைவர் கடைவாயிலில் நிற்கும் மங்கையர்க்கு அவிழ்ந்த குடுமிக்கும், இமைத்த கண்களுக்கும், பின் வாங்கிய கால்களுக்கும், ஆயுதம் அற்ற கைகளுக்கும் இவன் அஞ்சுவது உங்கள் தாலிக்கு வேலியாகும் என்று கூறி முருகனைச் சுட்டிக் காட்டி அப்பேதையர் கண்டு மகிழும் படி நின்றவன் முருகன் என்க.

குடுமி குலைந்தவர்களையும் ஆயுதம் கண்டு கண் இமைப் பவரையும் கால் பின் வாங்குபவர்களையும் கொல்லலாகாது என்ற போர் நெறிப்படி முருகன் நடக்கின்றான். அதனால் உங்கள் தாலிக்கு வேலியாய் உள்ளான் என்பதும் நாங்கள் அந்தச் செயலை செய்து தப்பி வந்தோம் என்பதும் கருத்தாகக் கொள்க. (1)

441. கம்பக் களிற்றுக் கடல்தானை வீரர்கண்
கடையில் கடைக்கனல்எழக்
கண்தொட் டுணுஞ்சில மருட்பேய் கரிந்தெழு
கடுங்குருதி வெள்ளமூழ்கித்
தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு
கனல்சிகை யெனப்பதைப்பச்
சூட்டிறைச் சிக்குச் சிணுங்கும் குறள்பேய்க்கொர்
சூர்ப்பேய் கொழுந்தசைகள்கோத்து

அம்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட்டு
ஆடும் பறந்தலைநிலத்
தானைப் பிணக்குன்றும் அவுணப் பிணக்காடும்
அளறுபட் டொழியநின்றோர்
செம்பொன் தடந்தே ருருட்டிவரு சேவகன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (2)

**தெளிவுரை**

(1) கட்டுத் தறியில் கட்டப்படும் யானைகளையுடைய கடல் போன்ற படை வீரர்களின் கண்களில் ஊழித் தீ உண்டாக, இறந்தவர்களின் கண்களைத் தோண்டி உண்ணும் சில மருண்ட பேய்கள், கரிந்து எழும் வேகம் உடைய உதிர வெள்ளத்தில் முழுகி,

(2) தும்பை மாலையைச் சூடிய முடியில் உள்ள செம்மயிர்க் குடுமியைச் சுடும் தீக்கொழுந்து என்றே எண்ணி நடுக்கம் கொண்டு நிற்கும். நிற்க, ஆட்டு இறைச்சியின் பொருட்டு அழும் குறும்பேய்க்கு ஓர் அச்சத்தை உண்டாக்குகின்ற பேயானது கொடுமையான ஊன் துண்டுகளை

(3) அம்பில் கோத்துச் சுடும் உடல்குறையுடன் தொடர்ந்து ஆடும் போர்க் களம்; அக்களத்தில் யானைப்பிணமலையும் அசுரப் பிணக்காடும் சேறுபட்டு அழியும்படி நின்று ஒப்பற்ற

(4) செம்பொன்னால் ஆன பெருந்தேரை உருட்டி வரும் வீரா! சிறு தேரை உருட்டியருளுவாயாக. செல்வம் வளரக் கந்தபுரியில் வளரும் இளங்குமரனே! சிறு தேரை உருட்டி யருளுவாயாக!

**விளக்கம்**

(1) கம்பக்களிறு - கட்டுத் தறியில் கட்டப்படும் ஆண் யானை. கடற்றானை - கடல் + தானை; கடல் போன்ற பெரும் படை. கண்கடையில் - விழியின் இறுதியில். கடைக்கனல் - யுக

முடிவில் தோன்றும் தீ. கண் தொட்டு - பிணங்களின் கண்களைத் தோண்டி. உணும் - உன்னும். மருட்பேய் - மருண்ட பேய். கடுங் குருதி - வேகம் உடைய இரத்தம்.

(2) தும்பைத்தலை - தும்பை மலர் மாலையைச் சூடிய தலை. அதன் செம்மயிரைச் சிவந்த நெருப்பு என்று நடுக்கம் கொண்டது பேய். கனல்சிகை - தீக்கொழுந்து. குறும்பேய் - குட்டையான பேய். சிணுங்கும் - அழுகின்ற. சூர்ப்பேய் - அச்சத்தைத் தோற்று விக்கும் பெரிய பேய்.

(3) தான் - குறள்பேய். கவந்தம் - தலையற்ற உடல். தொந்தமிட்டு ஆடுதல் - உடன் இணைந்து ஆடுதல். பறந்தலை - போர்க்களம். இளம் பேய் தலைக்கறி வேண்டும் என்றது. அதற்கு பெரிய பேய் அம்பில் ஊனைக் கோத்துச் சுட்டது. அதற்குத் தீயாக அமைந்தது தலை மயிராகிய தீக்கொழுந்து. செம்மையான தலைமயிரைத் தீக்கொழுந்து என எண்ணியது. அளறு - சேறு.

(4) செம்பொன் நெடுந்தேர் - செம்பொன்னால் ஆன தேர். உருட்டி வருசேவகன் - முன்னம் செலுத்தி வந்த வீரனே. (2)

442. வண்டேறு செந்நிறப் பங்கித் தலைக்கமல
வனமூடு குருதியாற்று
மால்யானை கையெடுத்து ஆர்த்துநீந் தப்புணரி
மகரமீ னெனநினைந்து
கொண்டேகு சிறுகுடர்ப் பெருவலை எடுத்தெறி
குறட்பேய் நெடுஞ்சினமுறக்
குறுநரி பிடித்தீர்ப்ப அலறுவதும் வீரர்தொடு
கொலைநேமி அவுணர்உயிரை
உண்டேகு வதுமொருவன் விடவோ லிடுங்கரிக்கு
உதவவரு திகிரிஏய்க்கும்
ஒல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட இந்த்ரஞாலத்
திண்டேரை யுருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (3)

### தெளிவுரை

(1) வண்டுகள் மொய்க்கும் செந்நிற மயிர்களையுடைய தலைகளாகிய காட்டின் இடையில் இரத்த வெள்ளத்தில் பெரிய யானைகள் கை தூக்கி ஆரவாரித்து நீந்தும். அந்த யானைகளைக் கடலில் உள்ள மகர மீன் என்று எண்ணி

(2) இரத்தத்தில் செல்கின்ற சிறு குடராகிய பெரிய வலையை வீசியது குட்டைப் பேய். பெருஞ்சினம் கொள்ளும்படி குள்ள நரிகள் பிடித்து இழுத்தாட அலறுவதும் வீரர் விடும் கொலைச் சக்கரம் அவுணர் உயிரை

(3) உண்டு போவதும் ஒப்பற்றவனான திருமால் ஏவ முறை யிட்டுக் கொண்ட யானைக்கு உதவ வந்த சக்கரம் போன்று ஒல் என ஒலிக்கின்ற போர்க்களம். அதில் சூரபன்மன் செலுத்தி வந்த இந்திரஞாலம் என்று கூறப்படும்

(4) திண்ணிய தேரை உருளாமல் நிற்கும்படி நியமித்தவனே! சிறிய தேரை உருட்டியருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்தபுரியில் எழுந்தருளியுள்ள இளங்குமரனே! சிறிய தேரை உருட்டியருளுவாயாக!

### விளக்கம்

இரத்த வெள்ளத்தில் முழுகிச் செல்லும் யானை ஒன்றை ஒரு பேய் குடல் என்ற வலையை வீசி இழுப்பதற்குத் தொடங்க, அப்போது ஒரு நரி அதனை இழுக்கவே அப்பேய் அலறியது.

(1) பங்கி - ஆண்தலை மயிர். சிறு நரி யானையை இழுக்கக் குறள் பேய் அலறியது. வீரர் என்றது முருகப் பெருமானின் படை வீரர்.

(2) சிறுகுடர்ப் பெருவலை - சிறிய குடலாகிய பெரிய வலை. குடலாகிய வலை. நேமி - சக்கரம்.

(3) ஒருவன் - திருமால். கரிக்கு - கசேந்திரனுக்கு. மறம் - வீரச் செயல். சூர் - சூரபன்மன். இந்திர ஞாலம் - இந்திர ஞாலம்

என்ற பெயரை யுடைய சூரபன்மனின் தேர். அவன் அத்தேரில் வர முருகன் அதை நிறுத்திய செய்தியைக் கந்தபுராணத்தில் காணலாம்.

"தொல்லையில் வரம்பெறு சூரன் தன்புடை
செல்லலை ஆங்கவன் முடிகை திண்ணமால்
மல்லலந் திருவுடை மாயத்தேரை நீ
நில்இவண் என்றனன் நிகர்இல் ஆணையான்"

*(கந்தபுராணம் சூரன்வதைப்படலம் 348-9)*

(4) பணித்தவன் - ஆணையிட்டவனே! (3)

443. பைங்கண் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோல்
படரும்தன் வேகத்தி னொக்கப் பறக்கப்
பறந்தலைச் செந்தலையறும்
வெங்கண் தயித்தியர் உடல்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்தூர்ப்ப தெனஉடுஉகப்
பொங்கல் கடற்குட்டம் அட்டதிக் கும்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடல் சேடன் படம்தூக்கி யார்க்கும்
புகைப்படல வடவாமுகச்
செங்கண் பசுந்தோகை வாம்பரி உகைத்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (4)

### தெளிவுரை

(1) பசுமையான கண்களையுடைய இறகினால் உண்டாகும் காற்று ஊழிக்காலக் காற்றையுண்டாக்க, மலைகள் விரிந்த

சிறகுகள் பெற்று எழுவன போல் செல்லும் தன் வேகத்தால் உடன் பறக்க,

(2) போர்க்களத்தில் செந்தலை அறுபட்ட தறுகண்மையுள்ள அவுணர் உடல் குறைகளும் தலைக் குறைகளும் விரைவாய் உயிரைப் பின்பற்றி மேலே செல்லும் கரிய மேகம் போலவும், அந்த மலர் மழை வானத்தைத் தூர்ப்பது போலவும் விண்மீன்கள் சிந்தவும்,

(3) பொங்கும் கடற்பள்ளங்களும் எட்டுத் திக்குகளிலும் தம்மில் போர் செய்யும் பூமி குப்புறவும், வெவ்விய புள்ளிகளை உடைய உடலை உடைய ஆதிசேடனது படத்தைக் கவ்வி எடுத்து ஆரவாரம் செய்தலால் உண்டாகும் புகைக் கூட்டத்தையுடைய வடவைத் தீயை ஒத்த

(4) சிவந்த கண்களையும் பசிய தோகையையும் உடைய மயில் என்ற தாவும் ஊர்தியை (குதிரையை)ச் செலுத்தியவனே! சிறிய தேரை உருட்டியருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்தபுரியில் வீற்றிருக்கின்ற இளங்குமரனே! சிறுதேர் உருட்டி அருளுவாயாக!

**விளக்கம்**

இதில் முருகப் பெருமான் செலுத்திய மயில் ஊர்தியின் செயல் கூறப்படுகிறது.

(1) பைங்கண் - (மயிலின்) பசுமையான கண். சிறைக்கால் - இறகுகளால் எழுப்பப்படும் காற்று. கடைக்கால் செய - ஊழிக் காற்றுப் போல் வீச. கிரிகள் - மலைகள். வேகத்தின் ஒக்க - வேகம் போன்று. பறந்தலை - போர்க்களம்.

(2) தயித்தியர் - அவுணர். உடற்குறை - தலையற்ற உடல். தலைக்குறை - உடலின்று நீங்கிய தலை. மீச் செலும் - மேல் செல்லும். மா செல்என - பெரிய இடிபோல் உடலிலிருந்து பிரிந்து சென்ற உயிரைத் தேடிச் செல்பவை போல் மேலே செல்ல.

(3) கடல் குட்டம் - கடல் பள்ளம். தமில் - தம்மில். போர் செய - போரைச் செய்ய. பார் கவிழ - பூமி குப்புற விழ. வடவா முகம் - வடவாமுகாக்கினி; வடவைத்தீ.

(4) வலம்புரி - 'வாவும்' என்பது. 'வாம்' எனத் தொக்கு வந்தது. பரி - குதிரை. வாம் - தாவி ஓடும். உகைத்தவன் - செலுத்தியவனே! (4)

444. நெய்வைத்த கூந்தல் பிடிக்குதவ நால்கோட்டு
நிகளத் தடங்குன்றுவான்
நிமிரும் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கொல்எனாக்
கைவைத் திடப்பரி முகம்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளும்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டில் பிறந்துபிரியா
மெய்வைத்த காதன்மை அரமகளிர் பேராய
வெள்ளம் திளைத்தாடியோர்
மென்நடைக்கு ஏக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்க ளுடன்உனுலாவும்
தெய்வப் பிடிக்குக் கிடைத்ததொரு மழகளிறு
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (5)

**தெளிவுரை**

(1) நெய் அணிந்த கூந்தலையுடைய பெண் யானைக்குக் கொடுக்கும் பொருட்டாக நான்கு கொம்புகளையுடைய சங்கிலி பூண்ட பெருமலை ஒத்த ஐராவதம், வானம் அளாவும் உயர்ந்த கதிர்களுடன் கூடிய செந்நெல் தாளைச் சர்க்கரை உண்டாகும் நீண்ட இலைகளை யுடைய கரும்போ என்று

(2) கை வைத்துப் பிடுங்குமாறு குதிரை முகத்தைப் போல் குலையை வளைத்துச் சூரியனின் வேகத்தையுடைய குதிரைகளை

நட்புச் செய்தற்குரிய வயல்கள் பரந்த அழகிய காவிரி நாடனே! கற்பகக் காட்டில் தோன்றிப் பிரியாத

(3) உண்மை அன்பை யுடைய தெய்வப் பெண்டிரின் பெரிதாகிய ஆய வெள்ளம் திளைத்து ஆடி ஓர் மென்மையான நடைக்கு ஒப்பற்ற பெண் யானை பின்பற்ற முலை யானைகளுடன் உலவும்

(4) தெய்வ யானைக்கு வாய்த்த ஒப்பில்லாத இளங்களிறே! சிறு தேரை உருட்டியருளுவாயாக! செல்வம் பெருகி உயர்ந்த கந்தபுரியில் வளரும் இளங்குமரனே! சிறு தேரை உருட்டி யருளுவாயாக!

**விளக்கம்**

(1) நெய் வைத்த - நெய்பூசப் பெற்ற. கூந்தல் பிடிக்கு - கூந்தலையுடைய பெண் யானைக்கு. இது கூந்தல் என்ற பொதுமை கருதிக் கூறப்பட்டது. ஐராவதம் தன் பெண் யானையின் பசியைப் போக்குதற்கு இவ்வூர் வயிலில் தோன்றிய நெற்கதிரைக் கரும்பு என எண்ணி வளைத்தது.

நாற்கோட்டு நிகளத் தடங்குன்று - நான்கு கொம்புகளை உடைய சங்கிலி பூண்ட பெரிய மலை போன்ற ஐராவத யானை. நிகளம் - கால் தளை (சங்கிலி). பாகுபடு கன்னல் - சர்க்கரை யுண்டாகும் கரும்பு. நெட்டிலைக் கன்னல் - நீண்ட இலையை யுடைய கன்னல். என்னா - 'செய்யா' என்ற வாய்பாட்டு வினை யெச்சம்; என்று என்பது பொருள்.

(2) பரிமுகம் செய்து - குதிரை முகம் செய்து; அதாவது குதிரை முகம் போல் நெற்கதிர் வளைந்து. நட்புக் கொளும் - கதிரவனின் குதிரைகளை நட்புக் கொள்வதற்குரிய. கற்பகக் காடு - வான் உலகில் உள்ள கற்பகமரக் காடு.

(3) காதன்மை - அன்புடைமை. அரமகளிர் - தேவ மங்கையர். பேராய வெள்ளம் - பெரிய தோழியர் கூட்டம். ஏக்கறுதல் - ஏங்குதல். முலை யானைகள் - முலைகளையுடைய யானை போன்ற தெய்வப் பெண்கள்.

(4) தெய்வப்பிடி - தெய்வ யானை. (5)

445. பற்றுவில் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவீடு கயல்கள்தாவும்
பழனங்க ளோஅத்ர சாலைபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரொடும்
கொற்றவங் கங்குற் கடாயானை யுமகட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோணாட சேணாடு
குங்குமம் கொட்டுதிண்தோள்
பொன்தடங் குன்றினிரு கொங்கைப் பொருப்பும்ஒரு
பூங்குழல் காடும்வெயில்கால்
புனைமணிக் கலையல்குல் மாக்கடலும் ஏந்தியொர்
புனத்தின்கண் மிகநுடங்கும்
சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (6)

**தெளிவுரை**

(1) பிடித்த கரும்பு வில்லையுடைய மன்மதனின் கொடிப் படைக்கு ஊர் முழுவதும் பாசறை; கயல் மீன்கள் தாவும் வயல்களோ அம்புச் சாலை. மலர்ச் சோலை பரப்பு முழுவதும் தென்றல் காற்றான தேருடனே,

(2) வெற்றியைத் தரும் அழகிய இரவு ஆன மதயானையைக் கட்டும் கூடமே. ஆயினும் மருதநிலம் என்ற அரசகுமரன் குடிகொண்டுள்ள சோழ நாடனே! திரட்சி பொருந்திய குங்குமம் அப்பிய திண்ணிய தோள்களாகிய

(3) பெரிய பொன் மலை மேல் இரண்டு கொங்கை மலை ஒப்பில்லாத மலர்க் கூந்தலாகிய காடும், ஒளியை வீசும் அலங்கரிக்கப்பட்ட மணிகள் இழைத்த மேகலை அணிந்த நிதம்பம் என்ற பெருங்கடலும் தாங்கி ஒப்பில்லாத தினைப்புனத்தில் நுடங்கும்

(4) சிற்றிடையுடன் அசைகின்ற மென்மையான கொடி யானது படர்ந்து ஏறுமாறு விளங்கியவனே! சிறு தேரை உருட்டு வாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்தபுரியில் எழுந்தருளி யிருக்கின்ற இளங்குமரனே! சிறிய தேரை உருட்டுவாயாக!

**விளக்கம்**

(1) காமன் கொடிப்படை - காமனின் கொடியையுடைய படையாகிய மகளிர். பழனங்கள் - வயல்கள். காமனுக்குரிய அம்பாகிய தாமரை முதலியவை வளர்தலால், அத்திர சாலை ஆயின. கால் தேர் - தென்றல் காற்றான தேர்.

(2) இருள் என்ற மதயானை. சோலையானது வெயில் நுழைவதற்கு இயலாதபடி செறிந்து இருள் உடையதாய் இருத்தலால் அதைக் கங்குல் மதயானை கட்டும் கூடம் என்றார்.

மருதக் கோமகன் - மருதக்கடவுளான இந்திரன். மருதமாகிய தெய்வம் எனவும் சொல்லலாம்.

(3) கொங்கைப் பொருப்பு - முலைகளாகிய மலைகள். பொன் தடங் குன்று - பொன் போன்ற பெரிய மலை. குழல் காடு - கூந்தல் காடு. வெயில் கால் - வெயிலை வீசும். புனைமணி - மணி பதித்துச் செய்யப்பட்ட. அல்குல் மாக்கடல் - நிதம்பம் என்ற பெரிய கடல்.

(4) சிற்றிடைக்கு - சிறிய இடைக்கு. ஒல்கும் - அசையும்; தளரும். (6)

446. கோல்பாய் பசும்புண் அசும்புகும் பத்தடங்
குன்றுகவுள் மடைதிறந்து
கொட்டுநெட் டருவியொடு தேனருவி யும்திரை
கொழித்துடன் கோப்பமேதிப்
பால்பாய் பெருக்காறு உவட்டெழுதல் தன்துணைப்
பாவைய ரொடுங்குறுகுமப்
பாகீ ரதிக்குநிகர் தண்துறை தொறுந்திசைப்
பாலர்மேற் படையெடுத்து

வேல்பாய் நெடுங்கண் கடல்தானை யொடுமொருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி எடுத்தென எடுத்தெறியும்
வெண்திரை கிழித்துவெடிபோம்
சேல்பாய் தடம்பணை உடுத்தகா விரிநாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (7)

**தெளிவுரை**

(1) குத்துக்கோல் பாய்ந்து உண்டான பச்சைப்புண் கசிந்து கொண்டே இருக்கின்ற மத்தகத்தையுடைய பெரிய யானை கன்ன மடையைத் திறந்து சொரியும் பெரிய அருவியுடன் தேன் அருவியும் அலை வீசி ஒன்றாய்க் கோத்துக் கொள்ள,

(2) எருமைப்பால் பாய்கின்ற பெருக்கம் நிறைந்து எழுதலானது தனக்குத் துணையான யமுனை காளிந்தி என்ற மடந்தையருடன் கூடி வந்த கங்கை போல் தோன்றும் குளிர்ந்த துறை தோறும் திக்குப் பாலகர் மேல் படை தொடுத்து

(3) வேல் போலப் பாய்கின்ற நீண்ட கண்களையுடைய பெண்களாகிய கடல் போன்ற படையுடன் ஒப்பற்றவனான மன்மதன் படையெடுத்துச் செல்லும் பொருட்டு நான்கு திக்குகளிலும் வெற்றியைத் தருகின்ற

(4) மீன்கொடிகளை உயர்த்தியதைப் போல் வெள்ளிய அலைகளைப் போழ்ந்து கொண்டு மேலே தாவுதற்கு இடமான பெரிய வயல்களால் சூழப் பெற்ற காவிரி நாடனே! சிறு தேரையுருட்டியருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் வீற்றிருக்கின்ற இளங்குமரனே! சிறிய தேரை உருட்டுவாயாக!

**விளக்கம்**

(1) கோல் - குத்துக்கோல்; தாற்றுக்கோல்; அங்குசம். பசும்புண் அசும்பு கும்பத்தடம் - பசிய புண்ணினின்று இரத்தம்

கசியும் மத்தகம். குன்று - யானை. நெட்டருவி - மதநீர்ப் பெருக்கு. கவுள் - கன்னம். திரை - அலை. கோப்ப - கோக்க. மேதி - எருமை.

(2) உவட்டெழுதல் - பெருக்கெடுத்தல். பால் ஆறு கங்கையை ஒத்தது. மதநீர் கரியது. ஆதலால் இது யமுனை ஆற்றை ஒத்தது. தன் துணைப் பாவை பாவையர் - யமுனையாறும் சோனையாறும் தன் என்றது கங்கை யாற்றை. பாகீரதி - கங்கை. திசைப் பாலர் - எட்டுதிக்குப் பாலகர்.

(3) ஒருவன் - மன்மதன். வெடிபோம் - துள்ளும். சேல்மீன் - மன்மதனின் கயற்கொடிக்கு உவமை.

யானை மதமும் தேனும் கரியன. காவிரி நீர் வெண்ணிறம் உடையது. இவை ஒன்றாய்க் கலந்த தோற்றம் கங்கை என்ற பெண் தன் துணைவராகிய யமுனை காளிந்தி என்பவர்களுடன் சேர்ந்து வருவது போல் தோன்றும் நீர்த்துறை என்பதாம். (7)

447. மீத்தந்த மாகத்து மேகத்தி னோடும்உடு
மீன்இரியல் போகவுகளும்
வெடிவாளை மதியக டுடைத்தூற்று தெள்ளமுத
வெள்ளருவி யால்பசுந்தண்
காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய்
காவேரி ஆயிரமுகக்
கங்கையா கச்செய்து மீட்டுநாற் கோட்டுவெங்
களிறுபிளி றத்தாவிவான்
பூத்தந்த கற்பகக் காட்டினை உழக்கிவிரி
பொற்றா தெழுப்பிமற்றப்
பூந்துகள் படலத்தி னால்தெய்வ நதியையும்
பொன்னிநதி யாகச்செய்யும்
தேத்தந்த தண்பணைஉ டுத்ததீம் புனல்நாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வள்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (8)

**தெளிவுரை**

(1) மேல் இடத்துள்ள வானத்தில் மேகத்தோடும் விண்மீன்கள் ஓட்டம் எடுக்கத் துள்ளும் வாளைகள் சந்திரனின் வயிற்றைக் கிழித்தும் அங்கிருந்து ஊற்றப்படும் தெளிவான அமுதத்தின் வெள்ளிய அருவிப் பெருக்கால் பசிய தண்ணிய

(2) சோலை தந்த சண்பக மலர்த் தேனானது மழை போல் பெருகும் காவிரி ஆற்றை ஆயிரம் முகங்கள் பொருந்திய கங்கை யாகச் செய்து, மறுபடியும் நான்கு கொம்புகளை உடைய வெண்மையான யானையானது ஒலிக்குமாறு மேல் எழுந்து மேலான

(3) மலர்களைத் தந்த கற்பகக் காட்டினை அலைத்து விரிந்த பொன் போலும் மகரந்தத்தை எழப் பண்ணி அந்த மலர்த்துளிகள் கூட்டத்தால் தெய்வ நதியையும் காவிரி நதியாகச் செய்யும்

(4) இனிமையைத் தந்த குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட இனிய நீரையுடைய நாடனே! சிறிய தேரை உருட்டி யருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்தபுரியில் வீற்றிருக்கின்ற இளைய குமரனே! சிறிய தேரை உருட்டியருளுக!

**விளக்கம்**

(1) மீத்தந்த - மேல் உள்ள வானத்தில் இருக்கும். இரியல் போக - நீங்கிப் போக. வாளை எழுவாய். உகளும் - துள்ளும். வெடிவாளை - துள்ளும் வாளைமீன். மதியகம் - சந்திரனின் உள். தெள்ளமுதம் - தெளிந்த அமுதம்.

(1-2) சந்திரனிடமிருந்து விழும் அமுதத் தாரையால் காவிரி நீர் வெண்ணிறம் பெற்றுக் கங்கை போல் ஆயிற்று.

காத் தந்த சண்பகப் பூ வேரி மாரி செய் - சோலையால் தரப்பெற்ற சண்பகப் பூவின் தேன் மழை போல் சொரியப் பெற்ற.

ஆயிரமுகக் கங்கை - கங்கைக்கு ஆயிரமுகம் இருப்பதாகக் கூறுவது மரபு.

(3) உழக்கி - கலக்கி. பொன் தாது - மகரந்தப்பொடி. பூந்துகள் படலத்தினால் - மகரந்தப் பொடியால். பொன்னி நதி - காவிரியாறு; அது பொன்னை அல்லது வளத்தைத் தருவதால் பொன்னி எனப் பெயர் பெறுகிறது.

(4) தேத் தந்த - தேம் + தந்த; இனிமையைத் தருகின்ற. (8)

448. கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகில் படர்ந்துபூங்
கற்பகத் தும்படர்தலால்
காமன் பெருஞ்செல்வம் அன்னவர்கள் குழுமியக்
கமுகின் கழுத்தில்யாத்த
ஒள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
உதைந்தாட ஆடுந்தொறும்
ஒண்கமு கொடும்துணர்ப் பைங்கற் பகக்காடும்
ஒக்கவசை யத்தலைஅசைத்
தள்ளிலை யலங்கல்வே லெம்பிரா னைப்பாடி
ஆடுகின் றாரெனத்தாம்
அலர்மாரி பொழிவபோ லங்கற் பகத்தெய்வம்
அம்பொன்மலர் மாரிதூர்க்கும்
தெள்ளுதமிழ் விரிபுனல் காவிரித் திருநாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (9)

**தெளிவுரை**

(1) தேனுடனே மலர்ந்த மணம் உள்ள கொடிகள் பாக்கு மரத்தின் மீது படர்ந்து அழகிய கற்பக மரத்தின் மேலும் படர்கிறது. அதனால் காமனின் பெருஞ்செல்வத்தைப் போன்ற மடந்தை யர்கள் ஒன்றாகக் கூடி அந்தக் கமுக மரத்தின் கழுத்தில் கட்டிய

(2) ஒளி பொருந்திய செம்மணிகளால் செய்யப்பட்ட பொன் ஊசலைப் பல தடவையும் உதைத்து ஆடுவர். அங்ஙனம் ஆடும் போதெல்லாம், ஒள்ளிய பாக்குடன் மலர்க்கொத்துக்களையுடைய பசுமையான கற்பக மரக்காடும் கூடவே அசையுமாறு தலை

யாட்டிக்

(3) 'கூர்மையான இலை போன்ற வடிவும் மாலையும் கொண்ட வேற்படையையுடைய எம் இறைவனைப் பாடி ஆடுகின்றார்' என்று எண்ணித் தாமும் மலர் மழை சொரிவதைப் போல் அழகிய கற்பகத் தெய்வமானது அழகிய பொன்மலர் மழையால் தூர்க்கும்.

இத்தகைய இயல்பு வாய்ந்த தெளிந்த தமிழ் பரவிய நீரையுடைய அழகிய காவிரி நாடனே! சிறிய தேரை உருட்டி யருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்தபுரியில் வீற்றிருக்கின்ற இளங்குமரனே!. சிறிய தேரை உருட்டி யருளுவாயாக!

**விளக்கம்**

பாக்கு மரத்தில் படர்ந்த பூங்கொடிகள் பக்கத்தில் உள்ள கற்பக மரத்திலும் படர்ந்துள்ளன. ஆதலால் மகளிர் அந்தப் பாக்கு மரத்தில் ஊசல் கட்டி ஆடினர். அப்போது அந்தப் பாக்கு மரம் அசையவே அதனால் கற்பக மரமும் அசைந்து மலரை உகுத்தல் அம்மகளிர் முருகக் கடவுளைப் பாடி ஆடுவதற்கு மகிழ்ந்து மலர் மழை பொழிவது போல் விளங்கியது என்பது இப்பாடற் பொருள்.

(1) கள் - தேன். நறுங்கொடிகள் - நறுமணம் உள்ள கொடிகள். கமுகு - பாக்கு மரம். காமன் - மன்மதன். யாத்த - கட்டப்பட்ட.

(2) ஒள் ஒளி - மிக்க ஒளியுடைய. செம்மணி - சிவந்த மணி; மாணிக்க மணி. பொன்னூசல் - பொன்னால் இயன்ற ஊசல். கற்பகக் காடும் - கற்பகச் சோலையும்.

(3) அள் இலை அலங்கல் வேல் - கூர்மையான இலை போன்ற உறுப்பும் மாலையும் சூடிய வேல். அலர் மாரி - மலர்மழை. பொழிவபோல் - பொழிதலைப் போன்று. கற்பகத் தெய்வம் - கற்பகமான தெய்வம். அம்பொன் மலர்மாரி - அழகிய பொன் மலர்.

(4) விரிபுனல் - பரவிய நீர். (9)

449\. வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவல் நிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டு முச்சிமோந் தும்திரு
மடித்தலத் தினிலிருத்திப்
பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டிஇப்
பாலரொடும் விளையா டெனப்பணித் தும்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்
தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவி லொருபாதி குளிரஒரு புறநின்ற
தையனா யகியும்வைத்துச்
சீராட்டி விளையாடு சேனா பதிக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே. (10)

**தெளிவுரை**

(1) வார் அணிந்த பெரிய கொங்கையினின்றும் பால் ஒழுகி ஓடுவதைப் போல் முத்துப் போல் பற்கள் நிலவை உமிழ்கின்ற மழலைச் சொல்லையுடைய வாயை முத்தமிட்டும் உச்சியை மோந்தும் மடியில் வைத்து அருமை

(2) பாராட்டியும் தம் கண்மணிப் பாவையை உன் உருவகமாகக் காட்டி, இந்தச் சிறுவரோடும் விளையாடுக என்று நியமித்தும் தம் பார்வை களிப்பில் மூழ்கப் பண்ணுகின்ற

(3) மாலையைச் சூடிய பிறையை அணிந்த திருமுடியை யுடைய தீராத வினை தீர்த்த தம்பிரானும் அந்தத் தம்பிரானது தீ உருவத்தில் ஒரு பாதிகுளிரும்படி ஒரு பக்கத்தில் நின்ற தையல்நாயகியும் தம்மிடத்தில் வைத்து

(4) சீராட்டி விளையாடும் சேனாபதிக் கடவுளே! சிறிய தேரை உருட்டியருளுவாயாக! திருமகள் விளங்க விளங்கும் கந்த

புரியில் வீற்றிருக்கின்ற இளங்குமரனே! சிறிய தேரை உருட்டி யருளுக!

**விளக்கம்**

(1) வார் ஆட்டு தடமுலை - கச்சணிந்த பெரிய கொங்கை. மணிமுறுவல் - அழகிய பற்கள். நிலவு காலும் - வெண்மையான ஒளியை வீசும். முத்துண்டும் - முத்தமிட்டும்.

(2) கண்மணிப்பாவை - கண்ணில் உள்ள பாவை. படிவமாகக் காட்டி - நின் உருவமாகக் காட்டி. செயும் - செய்யும்.

(3) தார் ஆட்டு - மாலை சூடிய. தழல் உரு - தீ வடிவு. புறம் - பக்கம். சேனாபதிக் கடவுள் - படைத்தலைவனாகிய முருகப் பெருமான். (10)

*முத்துக்குமார சுவாமிபிள்ளைத்தமிழ் மூலமும்*
*தெளிவுரையும் விளக்க உரையும் முற்றுப் பெற்றன*

# 7. சிதம்பர மும்மணிக் கோவை

சிதம்பரம் என்ற தலத்தைப் பற்றிய மும்மணிக் கோவை என்பது பொருள். மும்மணிக் கோவை என்பது மூன்று மணிகளால் ஆன மாலையைப் போல் மூவகைப்பட்ட செய்யுட்களால் ஆன மாலை என்பது பொருள். மூன்று வகையான செய்யுட்களாவன; ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக்கலித்துறை என்பன. முதலில் நேரிசை ஆசிரியப்பாவும், இரண்டாவதாக நேரிசை வெண்பாவும், மூன்றாவதாகக் கட்டளைக் கலித்துறையுமாய் இந்நூலில் அமைந்துள்ளன. அந்தாதித் தொடையாய் பாடப்பட வேண்டும் என்பது இலக்கணம்.

### காப்பு

ஒருவர் தான் மேற்கொள்ளும் செயல் இனிது முடிவு பெற இறைவனை வணங்குதல் காப்பாகும். இந்நூலில் கற்பக விநாயகரை வணங்கும் காப்புச் செய்யுள் அமைந்துள்ளது.

### கற்பக விநாயகர் முன்நிற்க!

450. செம்மணிக்கோ வைக்கதிர்சூழ் தில்லைச் சிற்றம்பலவன்
மும்மணிக்கோ வைக்குவந்து முன்நிற்கும் - எம் மணிக்கோ
அஞ்சக் கரக்கற்ப கத்தார் இறைஞ்சும் அஞ்சு
கஞ்சக் கரக்கற்ப கம். (1)

**தெளிவுரை**

செந்நிற மாணிக்க மாலைகளின் ஒளி சூழ்ந்துள்ள தில்லைச் சிற்றம்பலத்தின்கண் வீற்றிருக்கும் சிவபெருமான் மீது யான்

பாடும் மும்மணிக் கோவை என்ற நூல் இனிதே முடிவு பெற, நீலநிற மணி போன்ற கரிய நிறம் உடைய எம் திருமால் அன்னக் கொடியையுடைய நான்முகன், கற்பகச் சோலைக்கு மன்னனான இந்திரன் ஆகியவர் வணங்குகின்ற தாமரை மலரைப் போன்ற ஐந்து திருக்கைகளையுடைய கற்பக விநாயகர் முன் வந்து நின்று காத்தருளுவாராக!

**விளக்கம்**

செம்மணி - செந்நிறம் வாய்ந்த மாணிக்க மணி. கோவை - மாலை. சிதம்பரம் மாணிக்க மாலையின் ஒளி சூழப்பெற்ற இயல் புடையது என்க. தில்லை - சிதம்பரம். சிற்றம்பலவன் - சிற்றம் பலத்தில் நடமிடும் நடராசப் பெருமான்.

மும்மணிக் கோவை - மூன்று வேறு மணிகள் கோக்கப்பட்ட கோவையைப் போல மூன்று வேறு செய்யுட்களால் அந்தாதித் தொடையால் பாடப்படும் நூல். இது தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களுள் ஒன்று. மும்மணி மாலையில் உள்ள மணிகள் புருடராகம், வைடூரியம், கோமேதகம்.

எம்மணிக்கோ - நீலமணி போன்ற நிறம் கொண்ட மேனியனான எம் தலைவரான திருமால். அஞ்சக்கரன் - அஞ்சம் + கரன்; அன்னக் கொடியை உடையவன்; திருமால். ஹம்சம் என்ற வடசொல் அஞ்சம் என்றாயிற்று. அன்னப்பறவை என்பது பொருள். கரம் - கரத்தில் கொண்ட கொடியை உணர்த்திற்று.

கற்பகத்தான் - கற்பகச் சோலையை உடைய தேவர் உலகத்துத் தலைவன் இந்திரன். இம் மூவரும் வணங்கும் விநாயகப் பெருமான். அவர்தம் திருப்பெயர் கற்பக விநாயகர். அஞ்சு கஞ்சக்கரன் - தாமரை மலரைப் போன்ற ஐந்து கைகளை யுடைய விநாயகர். அஞ்சு - ஐந்து என்பதன் போலி. கஞ்சம் - தாமரை.

முடிபு: கற்பகம் இந்நூல் இனிது முடிவு பெற முன் நிற்கும் என இயைகிறது. இஃது இனிது முடிவு பெற விநாயகரை நான் வணங்குகிறேன் என்பதாம். (1)

## இல்லறம், துறவறம்

### நேரிசை யாசிரியப்பா

451. பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பின் நானில வளாகமும்
ஏனைப் புவனமும் எண்ணீங்கு உயிரும்
தானே வகுத்தது உன் தமருகக் கரமே
5 தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுஉன் அமைத்தபொன் கரமே
தோற்றுபு நின்றஅத் தொல்உலகு அடங்கலும்
மாற்றுவது ஆர்அழல் வைத்ததுஓர் கரமே
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்துநின்று
10 ஊட்டுவது ஆகும்நின் ஊன்றிய பதமே
அடுத்தஇன் உயிர்கட்கு அளவுஇல்பே ரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
இத்தொழில் ஐந்தும்நின் மெய்த்தொழில் ஆகப்
பால்உண் குழவி பசுங்குடர் பொறாது என
15 நோய்உண் மருந்து தாய்உண் டாங்கு
மன்உயிர்த் தொகுதிக்கு இன்அருள் கிடைப்ப
வையம்ஈன்று அளித்த தெய்வக் கற்பின்
அருள்சூல் கொண்ட வைஅரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
20 சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்தநின் அமுதவாக்கு அளித்த
நல்லற நூல்களில் சொல்லறம் பலசில
இல்லறம் துறவறம் எனச்சிறந் தனவே
அந்நிலை இரண்டினுள் முன்னது கிளப்பின்
25 கற்றநூல் துறைபோய்க் கடிமனைக் கிழவன்
நற்குணம் நிறைந்த கற்புடை மனைவியோடு
அன்பும் அருளும் தாங்கி இன்சொலின்
விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியும் ஆற்றி இவ்வகை

30 நல்லறம் நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
பிறன்மனை நயவான் அறன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலம் துய்க்கும் பெற்றித் தன்றே
மற்றையது கிளப்பின் மனையறம் நிரப்பி
35 முற்றுணர் கேள்வியின் முதுக்குறைவு எய்திப்
பொருளும் இன்பமும் ஒரீஇ அருளொடு
பொறையும் ஆற்றலும் நிறைபேர் ஒழுக்கமும்
வாய்மையும் தவமும் தூய்மையும் தழீஇ
ஓர்அறி உயிர்க்கு உறுதுயர் ஓம்பிக்
40 காலோய் நடைய னாகித் தோல் உடுத்து
என்புஎழு யாக்கையன் துன்புஉறத் துளங்காது
வரையும் கானும் எய்திச் சருகொடு
கானீர் அருந்திக் கடும்பனிக் காலத்து
மாநீர் அழுவத்து அழுங்கி வேனிலில்
45 ஐவகை அழலின் மெய்வருந்த வருந்தி
இவ்வகை ஒழுகும் இயல்பிற்று அன்றே, அதனால்
இந்நிலை இரண்டும் எம்மனோர்க்கு இயலா
நன்னிலை ஆகலின் அந்நிலை நிற்றற்கு
உரனும் ஆற்றலும் இன்றி வெருவந்து
50 எளிதினில் தமியனேன் அரியது பெறுதற்கு
உளதோ நெறிஒன்று உணர்த்துமின் நீர்என
முத்தலம் தலங்களுள் முத்தித் தலமா
இத்தலம் உடைத்தென இசைத்தனர் சிலரே
அறிஞராங்கு உரைத்த உறுதிக் கட்டுரை
55 உலகியல் வழக்கும் புலனெறி வழக்கும் என்று
இருவகை வழக்கினும் நிலைபெற் றன்றே, அவற்றுள்
ஆரூர்ப் பிறத்தல் நேர்படின் அல்லது
செயற்கையின் எய்தும் இயற்கைத் தன்றே, அதாஅன்று
காசியில் இறத்தல் நோக்கித் தேசம்விட்டு
60 அறந்தலைத் தந்த அரும்பொருள் தாங்கிப்
பிறன்பொருள் கொள்ளாப் பேரறம் பூண்டு
கழிபெருங் கானம் நீங்கி வழியிடைத்

தீம்பசிக் கிரங்கி நோய்ப்பனிக்கு ஒதுங்கிப்
பல்பிணிக்கு உடைந்து செல்லும் காலத்து
65 இடைச்சுரத்து இறவாது இன்உயிர் தாங்கிக்
கிடைத்தனன் ஆயின் அடுத்தநல் ஒழுக்கமோடு
உடல்விடு காறும்அத் தடநகர் வைகி
முடிவது கடைபோக முடிவதோ அரிதே, அதனால்
சிற்றுயிர்க்கு இரங்கும் பெரும்பற்றப் புலியூர்
70 உற்றநின் திருக்கூத்து ஒருகால் நோக்கிப்
பரகதி பெறுவான் திருமுன்பு எய்த
பெற்றனன் அளியனேன் பற்றிலன் ஆயினும்
அன்பிலை கொடியையென்று அருளாய் அல்லை
நின்பதம் வழங்குதி நிமலஎன் தனக்கே
75 மருந்துஉண் வேட்கையன் மனமகிழ்ந்து உண்ணினும்
அருந்துழி ஒருவன் அருவருப்பு உறீஇத்
தன்முகம் சுளித்துத் தலைநடுக்கு உற்றுக்
கண்ணீர் வீழ்த்துக் கலுழ்ந்தனன் மாந்தினும்
வாய்ப்புகு மாயின்அம் மருந்திரு வருக்கும்
80 தீப்பிணி மாற்றுதல் திண்ணமே அன்றி
நொதுமலும் பகையும் போக்கி ஒருபொருள்
விழுத்தகு கேண்மையோர்க்கு உதவல்
வழக்குமன்று ஐய மன்றுஉடை யோர்க்கே. (2)

தெளிவுரை

(1-12 அடிகளில் நடராசப் பெருமான் ஐந்தொழில்களை நிகழ்த்தும் விதம் கூறப்படுதல்)

பூக்கள் மிக்க கற்பகச் சோலையையுடைய தேவர் உலகமும் அச்சத்தைத் தருகின்ற மற்ற உலகங்களும் எண்ணில்லாத உயிர்க் கூட்டங்களும் பிறர் உதவியல்லாது தானாகவே படைத்தது உன் உடுக்கையையுடைய திருக்கையே ஆகும். தனித்தனியே படைக்கப்பட்ட இயங்குதிணை நிலைத்திணை ஆகிய அனைத்தையும் காத்து வருவது நின் அபயத் திருக்கையே ஆகும்.

தோன்றிய அந்தத் தொன்மையான உலகம் முற்றும மாற்றி அமைப்பது - சங்காரம் செய்வது. அரிய தீயையுடைய நின் கையே ஆகும்.

உயிர்கள் ஈட்டிய வினைப்பயன் யாவற்றையும் மறைத்து நின்று பயனை அனுபவிக்கச் செய்வது நின் ஊன்றிய திருவடியே யாகும்.

நின்னை அடைக்கலமாக அடைந்த உயிர்களுக்கு அளவு இல்லாத பேரின்பத்தைத் தருவது, முதல்வ, நின் வளைந்துள்ள (தூக்கிய) திருவடியே யாகும்.

(13-22) இத்தகைய ஐந்து தொழில்களும் நின் மெய்மைத் தொழில்கள் ஆகும். அங்ஙனம் ஆக,

பாலை உண்ணும் இளங்குழந்தையின் குடல் சீரணிக்கும் சத்தி அற்றது என்று நோய்க்குரிய மருந்தை ஒருதாய், தான் உண்டு தன் பாலின் வழியே அக்குழந்தை பெறும்படி செய்வள். அது போல் உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்களுக்கு இனிய அருள் கிட்ட, உலகங்களை எல்லாம் ஈன்றெடுத்த தெய்வத் தன்மை யுடைய கற்பையுடைய அருளைச் சூலாகக் கொண்ட கூரிய செவ்வரிகளை யுடைய பெரிய கண்களையுடைய அழகும் மென்மையும் உடைய சிவகாமவல்லியார் காணும்படி சிற்சபை அழகு பெற்று விளங்கத் திருநடம் செய்யும் ஞான நடனத்தைச் செய்பவனே! நின் அமுத வாக்காய் அமைந்த நல்ல அறநூல்களில் கூறப்படும் அறங்கள் பலவாகும். அவற்றுள் இரண்டு இல்லறம் துறவறம் என்பனவாம்.

(23-33) அந்த இரண்டுள் இல்லறம் பற்றிக் கூறப் புகுந்தால், கற்ற நூலின் துறையில் வல்லவனாய் இல்லறத் தலைவன் நற்குணம் உடைய கற்புத்திறம் வாய்ந்த மனைவியோடு அன்பும் அருளும் தாங்கி, இன்சொல்லுடன் விருந்தினரை உபசரித்து அரிய துறவியரைப் போற்றி அவர்க்கு வேண்டுவன செய்து, ஐந்து வகைப்பட்ட வேள்விகளையும் செய்து, இங்ஙனமாக நல்லறம் நிரம்பும்படி செய்து பலவகைப்பட்ட புகழை நிலைநிறுத்தி, பிறர் மனைவியை விரும்பாத இல்லற வாழ்க்கைக்கும் விலக்கப்படாத

நாள்களில் மகவைப் பெற வேண்டும் என்று எண்ணி இன்பத்தை அனுபவிக்கும் இயல்புடையதாகும்.

(34-45) மற்றத் துறவறம் பற்றிக் கூறுவதானால், இல்லற வாழ்வில் வாழ்ந்து முடித்த பின், முற்றக் கற்று உணர்ந்த கேள்வியின் பேரறிவு அடைந்து, பொருட்செல்வத்தையும், இன்பத்தையும் துறந்து, அருளுடன் பொறுமையும் புலன்கள் வழி செல்லாத மன வலிமையும் நிறைவான பெரிய ஒழுக்கமும் வாய்மையும் தவமும் தூய்மையும் பொருந்தப் பெற்று, மரஞ்செடி முதலிய ஓர் அறிவு உயிர்களுக்கும் துன்பம் ஏற்படாமல் போற்றி, கால் தளர்ந்த நடையை உடையவன் ஆகி, தோலை உடுத்து, எலும்பு மேல் எழுந்து விளங்கும் உடலை உடையவனாய்த் துன்பம் வரும்போது அதற்குத் தளராது, மலையும் காடும் ஆகியவற்றை அடைந்து இலைச்சருகுடனே காற்றையும் நீரையும் குடித்து, கடுமையான பனிக்காலத்தில் மிக்க நீர் நிலையில் முழுகி, வெயில் காலத்தில் ஐந்து வகையான தீயினால் உடல் வருந்த வருந்தி ஒழுகும் ஒழுக்கத்தை உடையதாகும். அதனால்,

(46-73) இவ்விரண்டும் எம்மைப் போன்றவர்க்குப் பொருந்தாத நல்ல நிலையின, ஆதலால் அவ்விரண்டில் நிற்பதற்கு மனவலிமையும் உடல் வலிமையும் இல்லாமல் அஞ்சி எளிதில் அடியேன் பெறுவதற்கு ஒரு நெறி உள்ளதோ என்று நீவிர் அறிவிப்பீர் என்று வினவத் தலங்களும் முத்தித் தலமாக முத்தலங்களை இத்தலம் உடையது எனச் சிலர் கூறினர்.

அறிஞர் இவ்வாறு கூறிய உறுதிக் கட்டுரை உலகியல் வழக்கு, செய்யுள் வழக்கு என்ற இரண்டு வகை வழக்கினும் நிலைபெற்றது.

அவற்றுள், ஆரூரில் பிறத்தல் நல்லூழால் உண்டாயின் அல்லது செயற்கையால் பிறத்தல் இயற்கையாகாது. அதுவே அல்லாது, காசியில் இறக்க வேண்டி நாட்டை விட்டு அறம் தந்த அரும் பொருளைக் கைக் கொண்டு பிறர் பொருளைக் கவராத பேரறம் மேற்கொண்டு வழியில் உள்ள மிகப் பெரிய காடுகளை எல்லாம் நீங்கி, வழியில் உண்டாகும் கொடிய பசிக்கு இரங்கித்

துன்பத்தைத் தரும் குளிருக்கு ஒதுங்கியிருந்து, பல வகையான பிணிகள் உண்டாகப் பெற்று வருந்திச் செல்லும் காலத்தில், வழியிலேயே இறந்து போகாமல் இனிய உயிரைச் சுமந்து ஒருவன் காசியை அடைவானாயின், பொருந்திய அவ்வொழுக்கத்தோடு உடலை விடும்வரை அந்தக் காசியில் தங்கி, இறத்தல் முற்றும் வண்ணம் முடிவது அரிதாகும்.

(74-83) அதனால் சிற்றுயிர்க்கு இரங்கிக் கருணை செய்யும் பெரும் பற்றப்புலியூர் என்ற இச்சிதம்பரத்தில் பொருந்திய நின் திருக்கூத்தை ஒருமுறை தரிசித்து முத்திப்பேறு பெற்றிட நின் திருமுன்பு வரப்பெற்றேன்.

எளியனான யான் நின்னிடம் பற்றிலன் ஆனாலும் 'இவன் அன்பு இல்லாதவன்; கொடியவன்' என்று அருள் செய்யாமல் இராய்! குற்றம் அற்றவனே! நின் திருவடியை எனக்கு வழங்கியருள்வாயாக!

மருந்தினை உண்ண வேண்டிய ஒருவன் மனம் மகிழ்ந்து அதை உண்டாலும், உண்ணும் போது அருவருப்புக் கொண்டு தன் முகத்தைச் சுளித்துத் தலை நடுங்கிக் கண்ணீர் சிந்தி வருந்தி உண்டாலும், மருந்தானது வாய்க்குள் புகுந்துவிடின் அம்மருந்து மகிழ்வுடன் உண்டவனுக்கும் அருவருப்புடன் உண்டவனுக்கும் கொடிய நோயைப் போக்குதல் உறுதி! அன்றி அயன்மையும் பகைமையும் போக்கி ஒருபொருளை மேலான அன்புடையவர்க்கு உதவுதல் மன்றில் இருப்பவர்க்கு வழக்கமும் அன்று. எனவே ஒருபக்கம் கோடல் இன்றி எனக்கு உதவ வேண்டும். அது நினக்குக் கடன்!

**விளக்கம்**

(1-4) பூமலி - மலர்மிக்க. கற்பகப்புத்தேள் வைப்பு - கற்பக மரங்கள் உள்ள தேவர் உலகு. நாமநீர் - அச்சத்தைத் தரும் நீரையுடைய கடல். வரைப்பு - எல்லை. நானில வளாகம் - நான்கு நிலங்களான பரப்பு. ஏனைப் புவனம் - மற்ற உலகங்கள். எண் நீங்கு உயிரும் - எண்ணில்லாத உயிர்களும். தமருகக் கரம் -

உடுக்கையை உடைய கை. தானே வகுத்தது - தானே படைத்தது. இதனால் சிருட்டி கூறப்பட்டது.

(5-13) சராசரம் - சரம் + அசரம்; இயங்கும் பொருள்கள்; இயங்காப் பொருள்கள். அமைத்த பொற்கரம் - அபயத்திருக்கை. இக்கையின் செயல் காத்தல். எனவே இறைவரின் காத்தல் உணர்த்தப்பட்டது.

தோற்றுபு - தோன்றி. தொல் உலகு - பழைய உலகு; அடங்கலும் - முற்றும். மாற்றுவது - அழிப்பது. ஆர் அழல் - அரிய தீ. அழல் ஏந்திய கை உலகை அழிக்கின்றது என்றதால் அழித்தல் தொழில் உணர்த்தப்பட்டது.

ஈட்டிய - சேர்த்த. வினைப்பயன் - வினையினது பயனை. மறைத்து நின்று ஊட்டுவது - மறைத்து வினைப்பயனை அனுபவிக்குமாறு செய்வது. ஊன்றிய பதம் - நிலத்தில் ஊன்றி நிற்கும் திருவடி. எனவே இதனால் இறைவரின் மறைத்தல் தொழில் உணர்த்தப்பட்டது. இம்மறைப்பைத் 'திரோபவம்' என்பர்.

அடுத்த - பொருந்திய; அடைக்கலமாக வந்து சேர்ந்த. அளவில் பேரின்பம் - அளவு இல்லாத பேரின்பம். குஞ்சிதபதம் - வளைந்த திருவடி; அதாவது தூக்கிய திருவடி. இதனால் இறைவரின் அருளல் - அனுக்கிரகம் - உணர்த்தப்பட்டது.

(14-23) பால்உண் குழவி - பாலைக் குடிக்கும் குழந்தை. பசுங்குடர் - மென்மையான குடல். பொறாது என - சீரணிக்கும் சத்தி அற்றது என்று. நோய் உண் மருந்து - நோயை அழிக்கும் மருந்து. தாய் உண்டாங்கு - தாய் மருந்தை உண்டது போல.

நோயைப் போக்கும் மருந்தை, குழந்தையின் வயிறு சீரணிக்கும் சத்தி அற்றது என்று தாய் உண்டு, தன்பாலின் வழி குழந்தையின் நோயைப் போக்குவாள். அது போலச் சிவகாமி அம்மையார் நடராசரின் நடனத்தைத் தரிசிக்க வைத்து அதன் பயனை உயிர்கள் அடையும்படி செய்வார் என்பது கருத்து.

வையம் ஈன்றளித்த - உலகங்களை எல்லாம் ஈன்ற. அருள் சூல் - அருள் பொருந்திய. வைஅரித்தடங்கண் - கூர்மையான வரிகளை உடைய பெரிய கண்கள். திருமாண் சாயல் - அழகினால் மாண்புற்ற மென்மை. திருந்திழை - உமையம்மையார்.

சிற்சபை பொலிய - இறைவன் நடனத்தால் சிற்சபை அழகு பெற்று விளங்க.

அமுதவாக்கு - அமுதத்தைப் போன்ற சொல். அமுதம் இறப்பை நீக்கும். அங்ஙனமே இறைவன் சொல்லும் இறப்பைப் போக்கும். சொல் அறம் - கூறப்பட்ட அறங்கள். சில - இரண்டு. இல்லறம் துறவறம் எனச் சிறந்தவை இரண்டாகும்.

இறைவனால் கூறப்பட்ட அறங்கள் பல; அவற்றுள் இரண்டு சிறந்தன. அவை இல்லறம், துறவறம் என்பனவாகும்.

(24-33) முன்னது - முதலாவதாக உள்ள இல்லறம். கிளப்பின் - கூறப்புகுந்தால்.

மனைக்கிழவன் - இல்லறத்தான். அன்பு - தொடர் புடையவரிடத்து உண்டாவது. தாங்கி - சுமந்து. இன் சொலின் - இன் சொல்லுடனே. விருந்து புறம்தந்து - விருந்தினரை உபசரித்து. அருந்தவர்ப் பேணி - அரிய துறவியர்க்கு வேண்டுவன தந்து போற்றி. ஐவகை வேள்வி - பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம் ஆகியவர்க்குச் செய்யும் வேள்வி.

நிறீஇ - நிலைபெறுத்தி.

பிறன்மனை நயவா - பிறனுடைய மனைவியை விரும்பாத. வரையாநாள் - விலக்கப்படாத நாள்; மனைவியுடன் கூடி இன்பம் அனுபவிக்கக் கூடாது என்று விலக்கப்பட்ட நாள்.

விலக்கப்பட்ட நாளில் அல்லாத நாட்களில்.

மகப்பேறு குறித்து - குழந்தையைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு. பெருநலம் துய்க்கும் - மிக்க இன்பத்தை அனுபவிக்கும்.

பெற்றித்தன்றே - தன்மை உடையது.

(34-46) மற்றையது - துறவறம். மனையறம் நிரப்பி - இல்லற வாழ்வை முடித்து.

முற்றுணர் வேள்வியின் - முழுவதும் உணர்வதற்குரிய வேள்வியினால். முதுக்குறைவு - பேரறிவு. ஒரீஇ - துறந்து. பொறை - பொறுமை. ஆற்றல் - ஐந்து பொறிகளையும் ஐம்புலன் வழி செல்லாதவாறு தடுக்கும் மன வலிமை.

தழீஇ - மேற்கொண்டு. ஓம்பி - காத்து. ஓர் அறிவுயிர் - ஓர் அறிவையுடைய மரம் செடி கொடிகள்.

தோல் உடுத்து - தோலை ஆடையாக உடுத்தி. என்பு எழு யாக்கை - எலும்பு மேலே கண்ணில் புலப்பட எழுந்த உடம்பு. சருகு - இலை முதலியன. கான் - காடு. கானீர் - கால் + நீர்; கால் - காற்று. கடும்பனிக்காலத்து - மிக்க பனி பெய்யும் காலத்தில்.

பனி பெய்யும் காலத்தில் நீர்ப்பரப்பிலிருந்து குளிரைப் பொறுத்தலும், வெயிற் காலத்தில் அழலில் நின்று வெப்பத்தைப் பொறுத்தலும் தவம் செய்பவர்களின் செயல்கள். ஐவகை அழல் - ஐந்து வகைப்பட்ட தீ; நான்கு புறத்தும் தீயும் மேலே கோடை வெயிலும் ஆகிய ஐந்து தீ. இயல்பிற்றன்றே - இயல்பை உடையது.

(46-68) உரன் - மனவலிமை. ஆற்றல் - உடல்வன்மை. வெருவந்து - அஞ்சி. எளியனேன் - தமியேன். அரியது பெறுதற்கு - எளியனான யான் அரியதைப் பெறும் பொருட்டு.

உணர்த்துமின் - தெரிவிப்பீர். என - என்று அறிவுடையாரை யான் கேட்க தலங்களுள் முத்தித் தலமாக முத்தலங்களான இத்தலம் உடைத்து என.

முத்தலம் - ஆரூர், காசி, தில்லை என்று மூன்று தலங்கள்.

காசியில் இறந்தும் கமலையில் பிறந்தும் தேசமலர் தில்லையுள் திருநடம் கண்டும் முத்தி பெறலாம் என்று அருணைக் கலம்பகம் கூறுகின்றது. இத்தலம் - இந்தப்பூமி. இசைத்தனர் - கூறினர்.

உலகியல் வழக்கும் புலனெறி வழக்கும் - உலக வழக்கு, செய்யுள் வழக்கு. நிலைபெற்றன்று - நிலைபெற்றது.

ஆரூர் - திருவாரூர். நேர்படின் அல்லது - நல்லூழால் இயல் பாகவே அமைந்தால் அன்றி. இயற்கையது - இயல்புடையது. அதா அன்று- அதுவல்லாது. காசியில் இறத்தல் வேண்டி - காசியில் இறக்க வேண்டும் என்று விரும்பி.

அறந்தலைத் தந்த - அறம் தந்த. தலை - அசைநிலை. பேரறம் - பெரிய அறம்; சிறந்த அறம். கழிபெருங்கானம் - மிகப் பெரிய காடு. நீங்கி - கடந்து. தீப்பசி - கொடிய பசி. நோய்ப்பனி - துன்பத்தைத் தரும் குளிர். பல்பிணிக்கு உடைந்து - பலவகையாக உண்டாகும் நோய்களுக்கு மனம் குன்றி. இடைச்சுரத்து - இடைவழியில். கிடைத்தனன் ஆயின் - ஒருவன் அடைந்தா னானால். உடல்விடு காறும் - உயிர்நீங்கும் வரையும். அத்தடநகர் - அந்தப் பெரிய நகரம். வைகி முடிவது - தங்கி இறத்தல். கடைபோக - முற்றும் வண்ணம்.

பெரும்பற்றப் புலியூர் - சிதம்பரம். பரகதி- வீடுபேறு. பெறுவான் - பெறுவதற்காக. திருமுன்பு எய்தப் பெற்றனன் - நின் சன்னிதானத்தை அடையப் பெற்றேன். பற்றிலன் ஆயினும் - மற்றையோர் போல் நின்னிடம் நான் அன்பு காட்டாதவன் ஆயினும்.

தில்லையில் தரிசனம் செய்த மாத்திரத்தில் முத்தி கிட்டப் பெறும் என்பது நூல் துணிபு.

நின்பதம் - நின் திருவடி. நிமல - குற்றம் அற்றவனே.

ஒருவன் மருந்தை மணம் மகிழ்வுடன் உண்டாலும் அருவருப்புடன் உண்டாலும் மருந்தின் பயன் கிட்டவே செய்யும். திண்ணம் - உறுதி. நொதுமலர் - அயல். வழக்கு - ஆன்றோர் மரபு. மன்றுடையோர் - அறங்கூறு அவையினர் என்றும், நடனசபையை உடையார் என்றும் பொருள்படும்.

யான் திருக்கூத்தை ஒருகால் வணங்கிய மாத்திரத்தில் பரகதி பெறும் உரிமை உடையவன் ஆவேன். ஆயினும் அறிந்தும் அறியாமலும் மருந்து உண்பவர் இருவருக்கும் மருந்து பயனைத்

தருவது போல், கூத்தின் தரிசனம் அடியேன் குறையுடைய வனாயினும் எனக்கு நன்மையைத் தருதல் வேண்டும். அன்றியும் மன்று உடையோனான நீ ஒருபால் கோடாமல் அருளுதல் நினக்குக் கடமையாகும் என்பது கருத்து.

கேண்மையோன் - நட்புடையார்; அன்பு கொண்டவர். (2)

## நற்புண்டரீகம் ஒக்கும்

### (நேரிசை வெண்பா)

452. மன்றம் பொகுட்டா மதில்இதழா மாடங்கள்
துன்றும் புயல்கள் சுரும்புஅராப் - பொன்தங்கும்
நல்புண்ட ரீகமே ஒக்கும் நடராசன்
பொன்புண்ட ரீக புரம். (3)

**தெளிவுரை**

நடராசப் பெருமானின் சிதம்பரத்தில் உள்ள பொன்னம் பலமே மலரின் பொகுட்டாகவும் மதில்கள் மலர் இதழாகவும் மாடங்களில் பொருந்தும் மேகங்கள் வண்டுகளாகவும் பொன் பொருந்திய நல்ல தாமரை மலரைப் போல் விளங்கும்.

**விளக்கம்**

சிதம்பரம் புண்டரீக புரம் எனவும் கூறப்படும். அது இங்குத் தாமரை மலராகக் கூறப்படுகின்றது. பொன்னம்பலம் மலர் பொகுட்டாகவும், மதில்கள் இதழ்களாகவும் மாளிகைகளில் பொருந்தும் மேகங்கள் வண்டுகளாகவும் கூறப்பட்டுள்ளன.

மன்றம் - பொன்னம்பலம். பொகுட்டு - மலரின் உள்ளே உள்ள கொட்டை. துன்றும் புயல்கள் - பொருந்தும் மேகங்கள். சுரும்பரா - வண்டுகளாக. பொகுட்டா, இதழா, சுரும்பரா என்பனவற்றில் ஈறு தொக்கது.

பொன் தங்கும் - பொன் - இலக்குமி; பொன் பொருந்திய. (3)

## ஒருகாலில் நிற்கக் காரணம்

### (கட்டளைக் கலித் துறை)

453. புரம்ஒன்று இரண்டும் புகையழல் உண்ணப் புவனம்
உண்ணும்
சரம்ஒன்று அகிலம் சலிக்கஎய் தோய்சலி யாநடம்செய்
வரம்ஒன்று இரண்டு மலர்த்தாளும் ஊன்றில்தன்
மாமகுடம்
பரம்ஒன்றும் என்றுகொல் லோகொண்டவாஅப்
பதஞ்சலியே. (4)

**தெளிவுரை**

மூன்று புரங்களிலும் புகையுடன் கூடிய தீ உண்ணும்படி உலகத்தை உண்ட திருமால் ஆன ஓர் அம்பால் உலகம் எல்லாம் நடுங்க எய்த இறைவனே! நின் நடனம் செய்யும் இரண்டு கால் களையும் ஊன்றில் தன் சிறந்த மகுடம் உடைய தலை பாரத்தால் துன்பம் செய்யும் என்று எண்ணியோ ஒரு காலை மட்டும் ஊன்றும் நடன தரிசனத்தை அப்பதஞ்சலி முனிவர் விரும்பினார்.

**விளக்கம்**

பதஞ்சலி முனிவர் ஆதிசேடனின் அமிசமாய்ப் பூமியைத் தாங்குபவர். நடராசர் ஒரு காலை மட்டும் ஊன்றாமல் இரண்டு கால்களையும் ஊன்றினால் பூமியைச் சுமக்கும் அவர்க்குத் துன்பம் உண்டாகும். ஆதலால் ஒரு காலை மட்டும் ஊன்றி நடனம் இடுக என வேண்டிக் கொண்டார் இறைவனிடம். ஆதலால் இறைவர் ஒரு காலை மட்டும் ஊன்றியபடி நடனம் ஆடுகின்றார். ஒரு காலை மட்டும் ஊன்றியதற்குப் பதஞ்சலி முனிவர் வேண்டிக் கொண்டதே காரணமோ! என்று வியக்கின்றார்.

புரம் ஒன்று இரண்டு - ஒன்றும் இரண்டும் மூன்று. மூன்று புரம். அவை அவுணர் மூவர்க்குரியவை. அவற்றைச் சிவபெரு மான் சிரித்து அழித்தார்.

புகையழல் உண்ணல் - புகையுடன் கூடிய தீயில் எரிதல்.

புவனம் உண்ணும் - உலகத்தை உண்ணும். உண்டவன் திருமால். திருமால் திரிபுரசங்கார காலத்தில் சிவபெருமான் கொண்ட வில்லுக்கு அம்பாயினார். ஆதலால் 'புவனம் உண்ணும் சரம்' என்றார். சரம் - அம்பு.

சலிக்க - நடுங்க. சலியா நடனம் - தளராத நடனம். எப்போதும் ஆடிக் கொண்டிருப்பதால் 'சலியா நடனம்' என்றார்.

மலர்த்தாள் - தாமரை போன்ற திருவடி. மாமகுடம் - பெரிய முடி. பரம் ஒன்றும் என்று - பாரத்தினால் துன்பம் அடையும் என்று. 'பாரம்' என்பது 'பரம்' எனக் குறுகி வந்தது. கொண்டவா - கொண்டவாறு. பதஞ்சலி முனிவர் வரம் ஒன்று கொண்டவாறு பரம் ஒன்றும் என்றோ! என இயைக்க. (4)

## தொண்டரும் அடியேனும் பெற்றது ஒன்றே

454. சலியாது முயன்ற தவப்பெருந் தொண்டர்
பல்நா ளோதிக் கலைமுற்றும் நிரம்பி
அளவையின் அளந்துகொண்டு உத்தியில் தெளிந்து
செம்பொருள் இதுஎனத் தேறி அம்பலத்து
5 ஆரா அன்பினோடு அகன்அமர்ந்து இறைஞ்சிப்
பேரா இயற்கை பெற்றனர் யானே
சரியையில் சரியாது கிரியையில் தளராது
யோகத்து உணங்காது ஒண்பொருள் தூக்காது
வறிதே நின்திரு மன்றம் நோக்கிப்
10 பிறவா நன்னெறி பெற்றனன் அன்றே
முட்புறம் பொதிந்த நெட்டிலைக் கைதை
சுரிமுகப் பணிலமொடு சூல்உளைந்து உமிழ்ந்த
தரளம் வெண்மடல் தாங்குவது அம்ம
கருங்கழிக் கரையில் வெண்பொடி பூசி
15 இருந்தவம் உஞற்றியும் யாம்பெறற்கு அரிய
செஞ்சடைக் கிடந்த வெண்மதிக் கடவுள்
வருக என்று அழைத்துப் பெருநயப்பு எய்திக்
கண்ணீர் வாரக் கலந்துடன் தழீஇ
உண்ணென வெண்சோறு ஏந்தித் தண்ணென

20 உடுக்கணத் தொடும்அவ் உடுபதிக் கடவுளை
மடல்தலைத் தாங்கி வைகுவது கடுக்கும்
நெய்தலொடு தழீஇய மருத வேலித்
தெய்வப் புலியூர் வைதிகக் கூத்த
பொன்னிறப் புறவும் கருநிறக் காக்கையும்
25 மன்னுமால் இமய வரைப்புறம் சேர்ந்துழி
இருதிறப் பறவைக்கும் ஒருநிறன் அல்லதை
நிறம்வேறு தெரிப்பது உண்டோ இறைவ,நின்
இன்னருள் பழுத்த சந்நிதி சேர்ந்துழி
இருவேம் பெற்றதும் ஒருபேறு ஆகலின்
30 வேற்றுமை உளதோ இல்லை
ஆற்றல்சால் சிறப்பின் ஐயரோடு எனக்கே. (5)

**தெளிவுரை**

(1-10) தளராமல் முயன்ற தவப்பெருந் தொண்டர்கள் பலகாலம் ஞான நூல்களை ஓதிக் கலை முழுவதும் நிரம்பி, பிரமாணத்தினால் அளந்து கொண்டு யுக்தியால் தெளிவை அடைந்து செம்பொருள் இதுவாகும் என்று தெளிந்து, பொன் அம்பலத்தில் ஆரா அன்புடன் உள்ளம் மகிழ்ந்து வணங்கி, முத்திப் பேற்றைப் பெற்றார்கள். ஆனால் யானோ, சரியை என்ற நிலையை மேற்கொள்ளாது, கிரியை என்பதையும் செய்யாது, யோக நிலையில் நின்று வருந்தாது, சிறந்த பொருளையும் ஆராயாமல், வீணே நின் திருமன்றத்தை நோக்கிப் போந்து பிறவா நல்ல நெறியை நன்கு பெற்றேன்.

(11-23) புறத்தே முள்ளையுடைய நீண்ட இலையை உடைய தாழைச் செடி, சுரிந்த முகத்தையுடைய சங்கு கருக் கொண்டிருந்து வெளிப்படுத்திய முத்து தன் வெண்மையான மடலில் தங்குவது கரிய உப்பங்கழிக் கரையில் வெண்மையான பொடியைப் பூசிப் பெருந்தவம் செய்தும் யாம் பெறுவதற்கு அருமையான சிவபெருமானின் சிவந்த சடையில் உள்ள பிறைச் சந்திரன் வருக என்று அழைத்து மிக்க விருப்பம் கொண்டு அன்புக் கண்ணீர் சொரிய மனம் கலந்து ஒன்றாகத் தழுவி உண்பாய் என்று

வெண்மையான சோற்றை ஏந்திக் குளிர்ந்த நட்சத்திரக் கூட்டங்களுடன், அந்த நட்சத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனை மடலான தலையில் தாங்கி இருப்பது போல் விளங்கும். இவ்வாறு விளங்கும் நெய்தல் நிலம் பொருந்திய மருதத்தை வேலியாகக் கொண்ட தெய்வத்தன்மையுடைய சிதம்பரத்தில் வேதம் விதித்தபடி கூத்து நிகழ்த்துபவனே!

(24-31) இறைவ! பொன் நிறம் கொண்ட புறாவும் கரிய நிறம் கொண்ட காக்கையும் பொருந்திய மேருமலையின் பக்கத்தைச் சேர்ந்த போது இருநிறப்பறவைகளும் ஒருநிறமாய் விளங்கும். அங்ஙனம் இன்றி நிறம் வேறுபட்டுள்ளது எனத் தெரிவிப்பது உண்டோ! நின் இனிய அருள் மிக்க திருமுன்பு சேர்ந்த போது தொண்டரும் யானும் ஆகிய இருவரும் பெற்றது ஒரு பேறே! ஆதலால் ஆற்றல் வாய்க்கப்பெற்ற அத் தொண்டருடன் எனக்கு வேறுபாடு இருக்கின்றதோ!

**விளக்கம்**

(1-10) சலியாது - தளராமல். தவப்பெருந்தொண்டர் - தவத்தையுடைய பெரிய தொண்டர். அளவை - பிரமாணம். உத்தியில் தெளிந்து - யுக்தியில் தெளிந்து. செம்பொருள் - சிறந்த பொருள். உண்மைப் பொருள். அம்பலத்து - சிற்றம்பலத்தில். ஆரா அன்பினோடு - நிறைந்த அன்புடனே. அகன் அமர்ந்து - உள்ளம் விரும்பி. இறைஞ்சி - வணங்கி.

பேரா இயற்கை - வீடுபேறு; முத்தி. பெற்றனர் - அடைந்தார்கள். சரியையில் சரியாது - சரியை மார்க்கத்தில் நடவாது. கிரியையில் தளராது - கிரியை மார்க்கத்தில் செல்லாது. யோகத்து உணங்காது - யோக நெறியை மேற்கொண்டு வருந்தாமல். ஒண்பொருள் தூக்காது - ஞான நூலை ஆராயாமல்; அதாவது ஞான நெறியை மேற்கொள்ளாமல். வறிதே - வீணே; யாதொரு கருத்தும் இன்றி. மேற் கூறப்பட்ட நெறிகளில் நில்லாது. நின் திருமன்றம் நோக்கி - நினது மன்றத்தை கருதி வந்து திருவடியைத் தரிசித்து. நன்னெறி பெற்றனன் - வீடுபேற்றை அடைந்தேன்.

சிதம்பரத்தைத் தரிசித்தவர் முத்தியை அடைவர் என்பதால் இப்படிக் கூறினார்.

தவத் தொண்டர்கள் ஓதுதல் முதலிய பல முயற்சிகளைச் செய்து வீடுபேற்றை அடைந்தனர். ஆனால் அடியனோ அம்பலத் தரிசனம் செய்த அளவில் பிறவா நெறியைப் பெற்றேன் என்பது கருத்து.

(11-23) முட்புறம் பொதிந்த - முள்ளை வெளியில் உடைய. நெட்டிலைக் கைதை - நீண்ட இலையையுடைய தாழை. சுரிமுகப் பணிலம் - சுழிந்த முகத்தை உடைய சங்கு. சூல் உளைந்து உமிழ்ந்த - சங்கு கருக் கொண்டு முதிர்ந்து ஈன்ற. தரளம் - முத்து. வெண்மடல் - வெண்மையான தாழையின் மடல். தாங்குவது - சங்கையும் முத்தையும் ஒன்றாகத் தாங்குவது. அம்ம - அசைநிலை.

வெண்பொடி - தாழையில் உள்ள வெண்நிறத்தாது. கருங் கழி - கரிய நிறம் உடைய உப்பங்கழி. இருந்தவம் உஞற்றியும் - பெருந் தவத்தைச் செய்தும். யாம் பெறற்கரிய - யாங்கள் அடைய இயலாத. செஞ்சடைக் கிடந்த வெண்மதிக் கடவுள் - சிவந்த சடையில் பொருந்தியுள்ள வெண்மையான சந்திரன்.

யாம் பெறுதற்கரிய செஞ்சடை என்றது தாழையின் கருத்து. தாழை மலர் சிவபெருமான் சடையில் இருக்க வேண்டும் என்று தவம் செய்தும் அதைப் பெறவில்லை. இதைத் தாழை இங்குக் குறித்ததாகக் கொள்க.

பெருநயப்பு எய்தி - மிக்க விருப்பத்தை அடைந்து. கண்ணீர் வார - தேனாகிய நீர் - அன்புக் கண்ணீர் சொரிய. கலந்து - மனம் கலந்து. தண் என் உடுக்கணத்தொடு - குளிர்ந்த நட்சத்திரக் கூட்டத்துடன். உடுபதிக் கடவுளை - சந்திரனை. மடல் தலை தாங்கி - மடலைத் தாங்கிக் கொண்டு. வெண் சோறு - தாழையில் உள்ள ஒரு பொருள். வைகுவது கடுக்கும் - இருப்பதைப் போல் விளங்கும்.

தெய்வப் புலியூர் - தெய்வத்தன்மையுடைய சிதம்பரம்.

(24-31) பொன் நிறப் புறவும் - பொன் போன்ற நிறம் உடைய புறாவும். கரு நிறக் காக்கையும் - கரிய நிறம் கொண்ட காக்கையும்.

மன்னும்மால் இமய வரை - பொருந்திய இமய மலை. சேர்ந்துழி - அடைந்த போது. ஒரு நிறன் - ஒரு நிறம். அல்லதை - அல்லது; ஐ - சாரியை. நிறம் வேறு தெரிப்பது - வெவ்வேறான நிறம் உள்ளது எனத் தெரிவிப்பது.

இன்னருள்பழுத்த - இனிய அருள் கனிந்த. சந்நிதி - திரு முன்பு. இருவேம் - யாம் இருவரும். தரித்தவரும் அடியேனும். ஐயரோடு - தொண்டருடன் - தவப் பெருந் தொண்டர் முயன்று தவம் செய்தமைக்கும் நான் சிறிதும் முயலாது தரிசனம் மட்டும் செய்தமைக்கும் பயனால் வேறுபாடு இல்லை. (5)

## பாம்பு ஆட்ட ஆடுவதேன்!

### (நேரிசை வெண்பா)

455. ஓட்டுவிக்கக் கூட்டினைவிட்டு ஓடும் பொறிஅரவைந்து
ஆட்டுவிக்கும் சித்தர்நீர் ஆனக்கால் - கூட்டமிட்டு
மன்றாடும் உம்மை ஒரு மாசுணம்நின்று ஆட்டுவிக்க
நின்றாடு கின்றது என்கொல் நீர். (6)

### தெளிவுரை

மனத்தை ஓடச் செய்ய கூட்டை விட்டு ஓடும் இயல்புடைய புள்ளி பொருந்திய பாம்பை ஆட்டுவிக்கும் வல்லமையுடைய சித்தர் நீவிர் என்றால், கூட்டத்தை கூட்டிக் கொண்டு மன்றில் ஆடும் உம்மை ஒரு பாம்பு இருந்து ஆட்டுவிக்க நீவிர் ஆடுகின்ற தற்கு என்ன காரணம்?

**விளக்கம்**

ஓட்டுவிக்க - ஓடச்செய்ய; மனத்தைப் பலவழிகளில் ஓடச் செய்ய. கூட்டினை - பாம்புக்கூட்டை; உடலை. பொறிஅரவு - புள்ளியுடைய பாம்பு; ஐம்பொறிகள் ஆகிய அரவு. சித்தர் - சித்துக்களைச் செய்வர். பாம்பாட்டிச் சித்தர் எனச் சித்தர் ஒருவர் உண்டு என்பது இங்குக் குறிக்கத் தக்கது. (6)

## தரிசனத்தால் வீடுபெறுவர்

### (கட்டளைக் கலித்துறை)

456. நீர்உண்ட புண்டரி கத்துணைத் தாள்நிழல் கீழ்ப்
பொலியும்
சீர்உண்டு அடித்தொண்டு செய்யா எனக்கும்சிற்
றம்பலத்துளம்
கார் உண்ட கண்டனைக் கண்டனன் ஆலக்
கடல்அமுதம்
ஆர்உண் டனர்மற்று அவர்எவ ரேனும் அமரர்களே. (7)

**தெளிவுரை**

நீரை உண்ணும் இயல்புடைய செந்தாமரை போன்ற இறைவரின் இருதாள்களின் நிழற் கீழ் விளங்கும் சிறப்பு, அவர்க்கு எத்தொண்டும் செய்யாத எனக்கு உண்டு. ஏனென்றால் சிற்றம் பலத்தில் கரிய நிறம் பொருந்திய கழுத்தையுடைய அவ்விறை வரைக் கண்டேன். பாற்கடலில் தோன்றிய அமுதத்தை யார் உண்டாலும் அவர் அமரர் ஆவார் அல்லரோ!

**விளக்கம்**

அமிழ்தத்தை யார் உண்டாலும் அமரர் ஆவர். அதுபோல் சிற்றம்பலத்து இறைவர் தரிசனத்தை யார் பெற்றாலும் வீடுபேறு பெறுவர் என்பது கருத்து.

புண்டரிகம் - தாமரை மலர். துணைத்தாள் - இரு திருவடிகள். பொலியும் - விளங்கும். தாள் நிழற் கீழ்ப் பொலியும் சீராவது வீடுபேறு. தாளே வீடுபேறு என்பது வழக்கு.

கார் உண்ட கண்டன் - கரிய நிறம் உடைய திருக்கழுத்தை உடைய சிவபெருமான்; நீலகண்டன். கடல் அமுதம் - பாற்கடலில் தோன்றிய அமுதம். ஆர் உண்டனர் - யார் உண்டார். அமரர் - இறப்பு நீங்கிய தேவர்; இச்சொல் இறக்காதவர் என்ற பொருளைத் தருவது. (7)

## பெரும்பதம் அன்றிப்பிறிதொன்று வேண்டேன்!

### (நேரிசையாசிரியப்பா)

457. அமரர் கோமகன் அரும்பெறல் வாழ்க்கையும்
இருநிதிக் கிழவன் ஒருபெரு வெறுக்கையும்
ஐங்கணைக் கிழவன் துஞ்சா நலனும்
ஒருவழிக் கிடைப்பினும் வெருவந்து கலங்கிக்
5 கைத்தூண் வாழ்க்கை உத்தம யோகிகட்கு
எத்திறம் வைகினும் இடையூறு இன்றே, யானே
வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும்
ஐஉண் மதுரமும் அல்லன பிறவும்
நாச்சுவை அறிய நல்கின மேற்சென்று
10 அதுவது வாக அழுந்திப் புதிதுண்டு
கழிபெருங் காமம் மூழ்கி முழுவதும்
பாவமும் பழியும் மேவுவது அல்லது
செம்பொருள் தெரிந்து சிற்றறிவு ஒரீஇ
ஐம்புலன் அடக்கி அறந்தலை நின்று
15 தீநெறி விலக்கி நன்னெறிப் படர்தற்கு
உரனில் காட்சி இழுதையன் ஆதலின்
பூவாது பழுக்கும் சூலடிப் பனசம்
பார்கிழித்து ஓடிப் பணிஉலகு அளந்த
வேர்தொறும் வேர்தொறும் வெவ்வேறு பழுத்து
20 முட்புறக் கனிகள் தூக்குவது ஒட்பமொடு
பதஞ்சலி முனிவனைப் பார்கொளத் தந்த
பிலம்கொளக் கொடுக்கும் பலங்கள்பல நிகர்க்கும்
மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண

வரம்ஒன்று இங்குஎனக்கு அருளல்வேண்டும், அதுவே
25 பெருங்குளிர்க்கு உடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத்து இசைத்த ஒருதுணி அல்லது
பிறிதுஒன்று கிடையா தாக வறுமனைக்
கடைப்புறத் திண்ணை அல்லது கிடக்கைக்கு
இடம்பிறிது இல்லை யாக கடும்பசிக்கு
30 உப்பின்று அட்ட புற்கைஊண் அல்லது
மற்றோர் உண்டி வாய்விட்டு அரற்றினும்
ஈகுநர் இல்லை யாகநாள் நாளும்
ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக இத்திறம்
35 உடன்ஈங்கு அளவு உதவிக் கடவுள்நின்
பெரும்பதம் அன்றியான் பிறிதொன்று
இரந்தனன் வேண்டினும் ஈந்திடாது அதுவே. (8)

**தெளிவுரை**

(1-6) தேவரின் மன்னனான இந்திரனின் அரிய வாழ்க்கையும், பெருஞ் செல்வத்துக்குத் தலைவனான குபேரனின் பெருஞ் செல்வமும், ஐந்து மலர் அம்புகளை உடைய மன்மதனின் அழகும் ஒருங்கே கிடைப்பதாயினும் அஞ்சிக் கலங்கி நீங்கிக், கையில் பெற்ற உணவை உண்டு வாழும் வாழ்க்கையையுடைய சிறந்த துறவியர்க்கு எவ்வாறு வாழ்ந்தாலும் இடையூறு இல்லை.

(7-16) யானோ வாதத்தின் தொடர்பு கொண்ட புளிச்சுவை, பித்தத் தொடர்புடைய கைப்புச் சுவை, கபத் தொடர்புடைய இனிப்புச் சுவை அல்லாதவை போன்ற பிறவும் தேர்ந்து நாச்சுவைக் கேற்ப உணவுகளை உண்பதில் மனம் கொண்டு, அத்தகையவற்றை எண்ணி அழுந்திப் புதியவற்றை உண்டு, மிக்க காமத்துள் ஆழ்ந்து முற்றும் பாவமும் பழியும் உண்டாக ஒழுகுவதே அல்லாது மெய்ஞ்ஞானம் தெரிந்து பசுஞானம் நீங்கி ஐந்து புலன்களையும் அடக்கி அறநெறியில் நின்று தீய நெறியை அகற்றி நன்னெறி படர்தற்கு மன வன்மையற்ற அறிவுடைய கீழ் மகன். ஆதலால்,

(17-23) பூ பூக்காமல் காய்க்கும் கருப்பம் வேரில் கொள்ளும் பலாமரம் நிலத்தைக் கிழித்துக் கொண்டு போய் நாக உலகத்தை அளந்த வேர்களில் எல்லாம் வெவ்வேறாகப் பழுத்து முள்ளை வெளியே கொண்ட கனிகள் கனிந்து தொங்குவது, அந்த நாக உலக பதஞ்சலி முனிவனை இம்மண்ணுலகத்துக்குப் பெறுமாறு தந்த நாகவுலகம் கொள்ளும்படி தரும் பலன்களைப் போல் விளங்கும். இத்தகைய பொழில்கள் பல சூழ்ந்த சிதம்பரத்தில் வீற்றிருப்பவரே!

(24-37) எனக்கு ஒரு வரத்தை நீவிர் அருளல் வேண்டும். அதுதான்,

மிக்க குளிர்க்கு வருந்திய அழுக்கடைந்து கரிய துணி பலவற்றையும் தொடுத்துத் தைத்த ஒரு துணியே அல்லாது வேறொன்று எனக்கு இல்லையாக, பாழ்வீட்டின் திண்ணை யல்லாது படுத்துக் கொள்வதற்கு வேறு இல்லையாக, மிக்க கடுமையான பசிக்கு உப்பில்லாது சமைக்கப்பட்ட புல்லரிசிக் கூழே அல்லாது வேறு உணவு வாய் திறந்து அழுது கேட்டாலும் தருபவர் இலராக,

பலநாளும் ஒழுக்கம் நிறையப் பெற்ற சிறந்த பெருங் கேள்வி யுடைய உண்மைத்தவத்தவர் கூட்டத்துடன் இருக்கும் படியான இத்திறம் இறக்கும் அளவும் இருக்குமாறு உதவி, கடவுளாகிய நீவிர் உம் பெருமையுடைய திருவடி அல்லாது வேறொன்றை நான் இரந்து வேண்டினும் ஈந்திடாத வரத்தை எனக்குத் தருதல் வேண்டும்.

**விளக்கம்**

(1-17) அமரர் கோமகன் - இந்திரன். அரும்பெறல் வாழ்க்கை - அரிதில் பெறக்கூடிய செல்வ வாழ்க்கை. இருநிதிக் கிழவன் - குபேரன். வெறுக்கை - செல்வம். ஐங்கணைக் கிழவன் - ஐந்து மலர் அம்புகளையுடைய காமன். துஞ்சா நலன் - குறையாத அழகு.

வெருவந்து - அஞ்சி. கைத்தூண் வாழ்க்கை - கையில் பெற்ற உணவை உண்டு வாழும் வாழ்க்கை; இதைக் 'கரபாத்திரம்' என்பர். உத்தம யோகியர் - சிறந்த துறவியர். இடையூறு இன்றே - துன்பம் இல்லை.

வளியுண் புளிப்பு - வாதத் தொடர்புடைய புளிப்புச் சுவை யுடையஉண்ணும் பொருள்கள். பித்துண் கைப்பு - பித்தத் தொடர் புடைய கசப்புடைய உண்பொருள்கள். ஐயுண் மதுரம் - கபத் தொடர்பு கொண்ட இனிப்புப் பொருள்கள்.

நாச்சுவை அறியநல்கின மேற்சென்று - நாவிற்குச் சுவை அளிக்கும் பொருள்களை விரும்பி. புதிது உண்டு - புதிய உணவை உண்டு. கழி பெருங்காமம் - மிகப்பெரிய காமம். மேவுவது - பொருந்துவது.

செம்பொருள் - மெய்ஞ்ஞானம். சிற்றறிவு - பசுஞானம். ஒரீஇ - விலக்கி. அறந்தலை நின்று - அறநெறியில் அழுந்தி. உரன் இல் - உள்ள வன்மையற்ற. இழுதையன் - கீழ்மகன். படர்தற்கு - செல்வதற்கு.

(17-23) பூவாது பழுக்கும் - பூ பூக்காமல் காய்த்துப் பழுக்கும். சூல் - கருப்பம். அடி - வேர். இப்பலா வேரில் காய்த்துப் பழுப்பது. இதை வேர்ப்பலா என உரைப்பர். பனசம் - பலாமரம். பார் கிழித்து - பூமியைப் பிளந்து. பணி யுலகு - நாக உலகம். அளந்த - ஓடிய. வெவ்வேறு பழுத்து - வெவ்வேறாகப் பழுத்து. முட்புறக்கனிகள் - முள்ளை வெளியே யுடைய பலாப்பழங்கள். தூக்குவது - தாங்குவது.

ஒட்பமொடு - அறிவோடு. பதஞ்சலி முனிவனைப் பார் கொளத்தந்த - பதஞ்சலி முனிவரை இந்த வுலகத்துக்குத் தந்த. பிலம் - நாகவுலகம். பலங்கள் - பிரதிபலன்கள்; பழங்கள். மல்லல் அம்பொழில் - வளப்பம் பொருந்திய அழகிய சோலை. வாணர் - வாழ்பவர் என்பதன் மரூஉ. பெருங்குளிர்க்கு உடைந்த காலை - மிக்க குளிருக்கு வருந்திய போது. கருந்துணி - அழுக்கடைந்த கரிய ஆடை. இசைத்த - தைத்துச் சேர்த்த.

வறுமனை - பாழ்வீடு. கடைப்புறத்திண்ணை - வாயில் பக்கத்தில் உள்ள திண்ணை.

ஈகுநர் - தருபவர். நாளும் - பல நாட்களும். விழுப் பெருங்கேள்வி - சிறந்த பெரிய கேள்வி. குழாம் - கூட்டம். பெரும்பதம் - பெருமையுடைய திருவடி. இரந்தனன் வேண்டினும் - இரந்து வேண்டினாலும். உடல் நீங்களவும் - இறக்கும் வரையிலும். பதமே முத்தியாதலால் அதனை இரந்தார்.

ஈந்திடாத அந்த வரத்தை அருள வேண்டும் என முடிக்க. (8)

## சிற்றம்பலம் பற்றுமோ!

### (நேரிசை வெண்பா)

458. வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே மோலியாம் - கோதண்டம்
ஒற்றைமா மேரு உமாபதியார் நின்றாடப்
பற்றுமோ சிற்றம் பலம். (9)

### தெளிவுரை

சிவபெருமானுக்கு மலைகளே தோள்கள். வானமே அவர்க்குத் திருமேனி. மூதண்டமே திருமுடியாகும். வில் பெரிய மேருமலையாகும். அங்ஙனமாக உமாபதியார் நின்று ஆடுதற்குச் சிற்றம்பலம் போதுமானதோ!

### விளக்கம்

வேதண்டம் - மலை. புயங்கள் - தோள்கள். விண் - வானம். மூதண்ட கூடம் - உலகை மூடியுள்ள பழைமையுடைய அண்ட கூடம். மோலி - திருமுடி. கோதண்டம் - வில். உமாபதியார் - சிவபெருமான். பற்றுமோ - போதுமானதாய் விளங்குமோ. சிற்றம்பலம் - பேரம்பலமும் ஒன்று உண்டு. அதனின் வேறாக உரைக்க வந்தவர் சிற்றம்பலம் என்றார். (9)

## வீணர் செய்கை

### (கட்டளைக் கலித்துறை)

459. பற்றம் பலமிதித் துத்துதித் தேசெவ்வி பார்த்துப் புல்லர்
வெற்றம் பலந்தொறும் மெய் இளைத்து ஏறுவர் வீணர்
கெட்டேன்
குற்றம் பலபொறுத்து என்னையும்
ஆண்டுகொண்டோன் புலியூர்ச்
சிற்றம் பலம் கண்டு பேரம் பலத்தைச் செய்யாதவரே.
(10)

**தெளிவுரை**

என் குற்றம் பலவற்றையும் பொறுத்து என்னையும் ஆண்டு கொண்ட சிதம்பரத்தில் உள்ள சிற்றம்பலத்தைக் கண்டு பெரிய அழகிய பயனாகிய வீட்டைப் பெறாதவர்,

பல்லால் மென்று துப்பிய தாம்பூல எச்சிலை மிதித்துத் துதித்த படி தாம் காண இருக்கும் கொடையாளரின் செவ்வியைப் பார்த்து அற்பரின் பயனற்ற சபை தோறும் உடல் இளைத்துச் செல்வர் வீணர்.

**விளக்கம்**

பற்றம்பலம் மிதித்து - பல் + தம்பூலம் + மிதித்து; பல்லால் மென்று துப்பிய தாம்பூலமாகிய எச்சிலை மிதித்து. செவ்வி - இன்முகத்துடன் இருக்கும் சமயம். புல்லர் வெற்றம்பலம் - அற்பரின் பயன் அற்ற சபை. மெய் இளைத்து - உடல் வாட்டம் அடைந்து. ஏறுவர் - செல்வர். புலியூர் - சிதம்பரம். பேர் அம்பலம் செய்யாதவர் - பெரிய அழகிய பயனாகிய வீடுபேற்றைப் பெறாதவர்.

செய்யாதவர் ஏறுவர்; அன்னார் வீணர் என முடிக்க. கெட்டேன் - இரக்கக் குறிப்பு. (10)

## தொண்டர் கூட்டம் பெற்றவர்க்குப் பெறாதன இல்லை

(நேரிசையாசிரியப்பா)

460. செய்தவ வேடம் மெய்யில் தாங்கிக்
கைதவ ஒழுக்கமுள் வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுள் மன்றில் திருநடம் கும்பிட்டு
5 உய்வது கிடைத்தனன் யானே உய்தற்கு
ஒருபெருந் தவமும் உஞற்றிலன் உஞற்றாது
எளிதினில் பெற்றது என்எனக் கிளப்பின்
கூடா ஒழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற்கு ஏற்பநின் தொண்டரொடு பயிறலின்
10 பூண்டஅவ் வேடம் காண்டொறும் காண்டொறும்
நின்னிலை என்னிடத்து உன்னி உன்னிப்
பன்னாள் நோக்கினர் ஆகலின் அன்னவர்
பாவனை முற்றிஅப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலும் ஆகலின்
15 எவ்விடத்து அவர்உனை எண்ணினர் நீயும் மற்று
அவ்விடத்து உளைஎனற்கு ஐயம்வேறு இன்றே, அதனால்
இருபெருஞ் சுடரும் ஒருபெரும் புருடனும்
ஐவகைப் பூதமோடு எண்வகை உறுப்பின்
மாபெருங் காயம் தாங்கி ஓய்வின்று
20 அருள்முந் துறத்த ஐந்தொழில் நடிக்கும்
பரமா னந்தக் கூத்த கருணை யொடு
நிலையில் பொருளும் நிலையியற் பொருளும்
உலையா மரபின் உளங்கொளப் படுத்திப்
புல்லறிவு அகற்றி நல்லறிவு கொளீஇ
25 எம்ம னோரையும் இடித்து வரை நிறுத்திச்
செம்மைசெய்து அருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க்கு உண்டோ பெறத்தகா தனவே. (11)

**தெளிவுரை**

(1-14) பூணத்தக்க தவ வேடத்தை உடலில் பூண்டு, பொய்யான வஞ்ச ஒழுக்கத்தை மனத்துள் வைத்து, மறைத்தும் வடக்குத் திசையில் உள்ள மேரு மலை திறந்தாற் போல் தில்லைச் சிற்றம்பலத்துள் நடனத்தைக் கும்பிட்டு உய்யப் பெற்றேன். இங்ஙனம் உய்வதன் பொருட்டு யான் ஒரு பெரிய தவத்தைச் செய்யவுமில்லை. செய்யாது எளிதில் பெற்றது என்னே என்று வினவின் அதைச் சொல்லப் புகுந்தால், கூடா ஒழுக்கத்தை மேற் கொண்டும் வேடம் கொண்டதற்கு ஏற்ப உம் அடியாருடன் கூடிப் பழகுதலால், மேற்கொண்ட என் அவ்வேடத்தைக் காணும் போதெல்லாம் நின் தெய்வத் தன்மை என்னிடம் உள்ளது என எண்ணி எண்ணிப் பல காலம் பார்த்தனர். ஆதலால்,

(15-28) எங்கு உள்ளவர் நின்னை எண்ணுகின்றாரோ நீ அங்கு உள்ளாய் என்று கூறுவதற்கு ஐயம் இல்லை. அதனால் சூரிய சந்திரன் என்ற இரண்டு சுடர்களும் ஒரு பெரிய இயமானனும் விண், மண், காற்று, தீ, நீர் என்ற ஐந்து பூதங்களுடன் கூட எட்டு வகையான உறுப்பினை உடைய நீ பெரிய உடலைத் தாங்கி ஓய்வு இன்றி அருளை முன்னே செலுத்திய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் நிகழ்த்தும் பரமானந்தக் கூத்த! அருளுடனே நிலையற்ற பொருள்களும் நிலையான பொருள்களும் தளராத இயல்பில் மனத்துள் கொண்டு, பசுஞானத்தை அகற்றிப் பதிஞானத்தைக் கொள்ளும்படி செய்து, எம் போன்றவரையும் இடித்துரைத்து நன்னெறியில் நிற்கும்படி செய்து செம்மைப்படுத்த உள்ளத்துள் எண்ணி அழகிய கோலத்தைக் கொண்ட நற்றவத் தொண்டர் கூட்டத்தைச் சேர்ந்தவர்க்குப் பெறத் தகாதவை உண்டோ!

**விளக்கம்**

(1-14) செய்தவ வேடம் - கொள்ளும் தவக் கோலம். அது திருநீறு அணிதல் முதலியன கொள்ளல். கைதவஒழுக்கம் - வஞ்சம் உடைய தீய நடை. பொதிந்தும் - வெளியே தோன்றாமல்

மறைத்தும். வடதிசைக் குன்றம் - வடக்குத்திக்கில் உள்ள மேரு மலை. வாய்பிளந்தன்ன - வாயில் திறந்ததைப் போன்ற. கடவுள் மன்று - தில்லைச் சிற்றம்பலம். உய்வதுகிடைத்தனன் - உய்யப் பெற்றேன். உஞற்றிலன் - நான் செய்யவில்லை. பயிறல் - பழகுதல். காண்டொறும் - காணுந் தோறும். நின்னிலை - நின் இறைமை. உன்னி - நினைத்து. பன்னாள் நோக்கினர் - பலநாள் பார்த்தனர். பார்த்தவர் தொண்டர். பாவகப்பயனின் - பாவனை செய்ததன் பயனால். மேவரப் பெற்றனன் - உய்வதற்கு ஏற்ற தகுதி அடையப் பெற்றேன்.

(15-28) நான் பொய் வேடம் கொண்டவன் ஆயினும் அடியாருடன் பழகியதால் அவர்கள் என் புறவேடத்தைப் பார்த்து மெய் என நம்பி என்னைத் தலைவனாகப் பாவித்தனர். என்னிடம் நின் இறைமை இருப்பதாகப் பாவித்தனர். அவர் பாவித்த பாவனை உண்மையில் யான் உய்யும் நெறியை அடையச் செய்தது என்பது கருத்து.

ஒருபெரும் புருடன் - இயமானன்.

இருபெருஞ்சுடர் - சூரியன் சந்திரன் ஆகிய இருசுடர். ஐவகைப் பூதம் - விண், மண், நீர், தீ, காற்று. இறைவனின் வடிவம் எட்டுறுப்புடையது. அவை; சூரியன், சந்திரன், இயமானன், விண், மண், நீர், தீ, காற்று.

காயம் - திருமேனி. அருள் முந்துறுத்த - அருளை முன்னே செலுத்திய. இறைவன் ஆன்மாக்களிடம் உள்ள பேரருளால் படைத்தல், காத்தல் முதலிய ஐந்தொழிலையும் நடத்துகின்றான். ஐந்தொழில் கூத்த - ஐந்தொழிலும் இயலும்படி நடனம் செய்யும் பெருமானே. நிலையில் பொருள் - சரப்பொருள்; இயங்கும் பொருள்கள். நிலையியற் பொருள் - அசரம்; இயங்காப் பொருள்கள்.

கொளீஇ - கொளுத்தி; கொள்ளச் செய்து. எம்மனோரையும் - எம்மைப் போன்ற இழிந்தவரையும். இடித்து வரை நிறுத்த - இடித்துரைத்து நன்னெறியில் நிற்கச் செய்து.

புல்லறிவு - பாசஞானம்; பசு ஞானம். நல்லறிவு - பதிஞானம்.

தொண்டருடன் கூடியவர்க்கு எல்லாப் பேறுகளும் கிடைக்கும் என்றவாறு. (11)

## இடப்பாதம் தூக்கியவாறு ஏன்?

### (நேரிசை வெண்பா)

461. தக்கனார் வேள்வி தகர்த்துச் சமர் முடித்த
நக்கனார் தில்லை நடராசர் - ஒக்கல்
படப்பாய லான்காணப் பைந்தொடிதாள் என்றோ
இடப்பாதம் தூக்கியவா இன்று. (12)

**தெளிவுரை**

தக்கன் செய்த வேள்வியை அழித்துப் போரை முடித்த திகம்பரரான இறைவன் ஆகிய தில்லை நடராசப் பெருமான், உறவினனான படத்தையுடைய பாம்பான படுக்கையை உடைய திருமால் நம் திருவடியைக் காணாமல் இருக்கும் திருமாலுக்கு இப்போது வலப்பாதத்தைக் காட்டாமல் இடப்பாதமாகிய குஞ்சித பாதத்தைக் காட்டத் துணிந்தது ஏன்? அது தம் இடப் பாகத்தினராகிய உமாதேவியருக்கு உரியதாதலால் அதை அவள் கண்டதால் தவறில்லை என்ற காரணமோ!

**விளக்கம்**

தக்கன் - தக்க பிரஜாபதி; தாட்சாயனியான உமையின் தந்தை. தகர்த்து - அழித்து. சமர் - போரை. முடித்த - முற்றுப் பெறுமாறு செய்த. நக்கனார் - ஆடையற்றவர்; திகம்பரர்; அதாவது சிவ பெருமான். ஒக்கல் - உறவினர். படப் பாயலான் - படத்தை உடைய பாம்பைப் படுக்கையாக உடைய திருமால். பைந்தொடி தாள் - சிவபெருமானின் இடப்பாகத்தவளாகிய உமையின் திருவடி. இடப்பாகம் தூக்கியவாறு - இடப்பாகக் காலைத் தூக்கியபடி. 'தூக்கியவா' என்பது 'தூக்கியவாறு' என்பதன் விகாரம். (12)

## சடையின் வண்ணம்

### (கட்டளைக் கலித்துறை)

462. இனம்ஒக்கும் தொண்டரொடு என்னையும்
ஆட்கொண்ட ஈசர்தில்லைக்
கனம்ஒக்கும் கண்டத்துஎம் கண்ணுதலார்சடைக்
காடுகஞ்ச
வனமொக்கும் மற்றுஅவ் வனத்தே குடிகொண்டு
வாழும் வெள்ளை
அனம் ஒக்கும் கங்கை அருகேவெண் சங்குஒக்கும்
அம்புலியே. (13)

**தெளிவுரை**

தகுதியால் தமக்குள் ஒத்த தொண்டர்களுடன் சற்றும் தகுதியற்ற என்னையும் ஆட்கொண்ட தில்லை இறைவர் மேகம் போன்ற கரிய நிறம் வாய்ந்த கழுத்தையுடையவர் நெற்றியில் கண்ணுடைய அப்பெருமானின் சடையாகிய காடு தாமரைக் காட்டைப் போல் விளங்கும். அக்காட்டில் குடிகொண்டு வாழும் வெள்ளை அன்னப் பறவையைப் போல் கங்கை விளங்கும். அருகே உள்ள பிறைச்சந்திரன் வெண்மையான சங்கைப் போல் விளங்கும்.

**விளக்கம்**

இனம் ஒக்கும் - இனத்தால் ஒத்துள்ள. தொண்டர் - சிவனடியார். கனம் ஒக்கும் கண்டம் - மேகத்தைப் போல் கரிய நிறத்துடன் விளங்கும் கழுத்து. கண்ணுதலார் - நடராசர்; நெற்றியில் கண்ணை உடையவர். கஞ்சவனம் - தாமரைக் காடு. வெள்ளை அனம் - வெள்ளை நிறம் உடைய அன்னப்பறவை; ‘அன்னம்’ என்பது ‘அனம்’ எனத் தொக்கு வந்தது. அம்புலி - பிறைச்சந்திரன். (13)

## திருமால் உறங்கியதன் காரணம்!

463. புலிக்கால் முனிவற்குப் பொன்கழல் காட்டிக்
கலிக்கால் நிவந்த கட்டில் வாங்கி
மாயோன் மணிப்படப் பாயலும் எடுத்து
வறும்பாழ் வீட்டில் வைத்துக் கொண்டிருந்து
உறங்காது விழித்த ஒருதனிக் கள்வ!
5 கால்தேர்க் குடம்பைக் காமப்புள் படுக்கத்
தீப்பொறி வைத்த திருநுதல் கண்ண!
ஆதி நான்மறை வேதியன் பயந்த
தாதை யாகிய மாதவர் ஒருவரும்
10 இருங்கா ளத்தி இறைவர்முன் உண்ண
அருஞ்சா பத்தால் அமுதம் ஊன் ஆக்கும்
நல்தவ வேடக் கொற்றவர் ஒருவரும்
ஒருபிழை செய்யாது அருள்வழி நிற்ப அவ்
இருவர்கண் பறித்த தரும மூர்த்தி
15 முட்டையில் கருவில் வித்தினில் வெயர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
நடப்பன கிடப்பன பறப்பன ஆகக்
கண்ணகன் ஞாலத்து எண்ணில்பல் கோடிப்
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு
20 நெல்லிரு நாழி நிறையக் கொடுத்தாங்கு
எண்நான்கு அறமும் இயற்றுதி நீஎன
வள்ளன்மை செலுத்தும் ஒள்நிதிச் செல்வ,
அளியன் மாற்றம் ஒன்று இகழாது கேண்மதி
எழுவகைச் சனனத்து எம்ம னோரும்
25 உழிதரு பிறப்பிற்கு உட்குவந் தம்ம
முழுவதும் ஒரீஇ முத்திபெற்று உய்வான்
நின்னடிக் கமலம் போற்றுப இந்நிலத்து
ஒருபது வைகத்தாம் யோனிதோறு உழன்றும்
வெருவரும் பிறப்பின் வேட்கையன் ஆகிநின்
30 சந்நிதி புக்கும்அத் தாமரைக் கண்ணான்
துஞ்சினன் துயில் ஒரீஇ எழாஅன்
அஞ்சினன் போலும் நின் ஆடல் காண்பதற்கே. (14)

## தெளிவுரை

(1-5) புலிக்காலையுடைய வியாக்கிர பாதர் என்ற முனிவர்க்குப் பொன்கழலைக் காட்டி, துன்பத்திடையே ஓங்கிய பந்தத்தால் ஆன உடலை நீக்கி, திருமாலின் படுக்கையாகிய ஆதி சேடனை (பதஞ்சலிமுனிவரை) எடுத்துச் சூனியமாகிய சிதா காசத்தில் - சிதம்பரத்தில் - இருவருக்கும் அருள் செய்தமையைக் கூறியபடி வைத்துக் கொண்டிருந்து உறங்காமலே இருந்த ஒப்பற்ற கள்வனே!

(6-19) தென்றல் காற்றாகிய தேரைக் கூடாக உடைய காமனாகிய பறவையை வீழ்த்த தீப்பொறி பொருந்திய அழகிய கண்ணை உடையவனே!

பழைய நான்கு மறை வேதியனான நான்முகனைப் பெற்ற தந்தையாகிய திருமால் ஒருவரும்,

பெருமையுடைய காளத்தி தலத்தில் விளங்கும் இறைவரின் முன்பு உண்பதற்கு அரிய வில்லால் கொணர்ந்த உணவு ஊனாக்கும் நல்தவவேடக் கொற்றவரான கண்ணப்ப நாயனார் ஒருவரும்,

ஒரு குற்றத்தையும் செய்யாமல் அருள் வழியே நிற்பவும், அந்த இருவர் கண்களையும் பறித்துக் கொண்ட தரும மூர்த்தியே!

(15-23) முட்டையிலும் கருவிலும் விதையிலும் வியர்வையிலும் நிற்பவையும் நெளிபவையும் (ஊர்பவையும்) தத்துபவையும், தவழ்பவையும், நடப்பவையும், கிடப்பவையும், பறப்பவையும் ஆக இடம் அகன்ற உலகத்தில் எண்ணில்லாத பல கோடிப் பிள்ளைகளைப் பெற்ற பெருமனைக் கிழத்தியான உமை யம்மைக்கு இரு நாழிகை அளவு நெல்லைத் தந்து முப்பத்திரண்டு அறங்களைச் செய்வாய் நீ என்று கொடைத் தன்மையைச் செலுத்தும் ஒளியுடைய செல்வ! இரங்கத் தக்கவனான அடியேன் சொல்லும் விண்ணப்பம் ஒன்றை இகழாமல் கேட்பாயாக!

(24-32) ஏழுவகையான பிறப்பையுடைய எம்மூவரும் உழலும் பிறப்பிற்கு அஞ்சி வந்து பற்றுக்கள் யாவையும் நீங்கி வீடு

பேற்றை அடைந்து உய்ய நின் திருவடித் தாமரையை வணங்குவர். பத்து வகையான பிறவி தோறும் பிறந்து வருந்தியும் அஞ்சுதற் குரிய பிறப்பில் அவா உடையவனாகி நின் திரு முன்பு புகுந்து அத்தாமரை போன்ற கண்களையுடைய திருமால் உறங்கினான். துயில் நீங்கி எழுந்திருக்க மாட்டான். நின் ஆடலைக் காண்பதற்கு அவன் அஞ்சினான் போலும்!

**விளக்கம்**

(1-5) புலிக்கால் முனிவன் - வியாக்கிர பாத முனிவர். இவர் மத்தியந்தன முனிவரின் மகன். இவர் சிவபூசையை மேற் கொண்டவர். தாம் மலர் பறித்துப் பூசை செய்தற்கு ஏற்றவாறு நகங்களில் கண்களும் மரம் வழுக்காமல் ஏறப் புலிக்காலும் இறைவனிடம் வேண்டிப் பெற்றவர். வசிட்ட முனிவரின் உடன் பிறந்தவளை மணந்தவர். இவருடைய மகன் உபமன்னியு முனிவர். சிதம்பரத்தில் இவர் இறைவரின் திருநடத்தைக் கண்டு களித்த வண்ணம் இருப்பவர்.

வியாக்கிரபாதர் என்பதற்குப் புலியின் காலையுடையவர் என்பது பொருள். வியாக்கிரம் - புலி.

கலிக்கால் நிவந்த கட்டில் வாங்கி - துன்பத்தில் ஓங்கிய பந்தத்தால் ஆன உடலைப் போக்கி. பிறவி நோயை நீக்கி என்பது பொருள். கட்டில் - கட்டப்பட்ட இல்லம். உடம்பை இல்லமாக உரைப்பது மரபாகும். ஓசையுடைய காற்றால் பொங்கிய பாற் கடலான கட்டிலை வியாக்கிர பாதரின் மகனான உபமன்யு முனிவருக்காக வருவித்து என்றும் பொருள் கொள்வர்.

மாயோன் மணிப்படப் பாயல் - திருமாலின் படுக்கையான ஆதிசேடன். ஆதிசேடன் மணியையும் படத்தையும் உடையவன்; திருமாலுக்குப் படுக்கையானவன். பாயல் - படுக்கை. வறும் பாழ் வீட்டில் - சூனியமாகிய சிதாகாயத்தில் அவ்விருவருக்கும் அருள் செய்ததைக் கூறினார்.

ஒருவருக்குப் பொன்னால் ஆன அணியைக் காட்டி அவரது கட்டிலை வாங்கி, மற்றொருவரது படுக்கையையும் எடுத்து

இரண்டையும் ஒரு பாழ் வீட்டில் ஒளித்து வைத்துக் கொண்ட கள்வன் என வேறு பொருள் கொள்ளக் கிடக்கின்றது.

(6-14) காற்றேர்க்குடம்பைக் காமப்புள் - கால் + தேர் + குடம்பை + காமன் + புள் - தென்றல் காற்றான தேரைக் கூடாக வுடைய காமன் என்ற பறவையை. படுக்க - வீழ்த்த. தீப்பொறி - நெருப்புப் பொறி; தீப்பொறியையுடைய யந்திரம். திருநுதற் கண்ண - அழகிய நெற்றியில் கண்ணை யுடையவனே.

வேதியன் பயந்த - பிரமதேவனைப் பெற்ற தாதை - தந்தை; திருமால். மாதவர் - திருமால் ஒரு பிராமணனைப் பெற்ற தவத்தவரான ஒருவர் என்பது வேறு பொருள்.

சாபத்தால் வில்லால் அமுதம் (உணவு) ஊனாக்கும் என்பது முற்பிறப்பில் இறைவன் இட்ட கட்டளையை நினைத்துக் கூறியது.

'தன்னிகர் சங்கரன் தானளித்தெமை
இன்னல்செய் வேன்என்று இகழ்ந்து கூறினை
அன்னதால் வேட்டுவ அரசனாகியே'
தென்றிசைக் கயிலையைச் சென்று சேர்ந்துநீ
குன்றல்இல் அன்புருக் கொண்டு நம்மயல்
நன்றிகொள் இலிங்கபூ சனைநற் பத்தியால்
ஒன்றையும் உணர்ந்திடாது உவந்து செய்தரோ'

''கோலமேன முதலிய விலங்கு கொன்றுநீ
சாலவே தசையமுது அருத்திச் சாருநாள்
ஏலவே முத்தியும் ஈதும்''

*- சீகாளத்திப் புராணம்*

என்பனவற்றால் கண்ணப்பர் இறைவனுக்கு அமுதம் ஊனானது முதலியவை தெளிவாகும். சாபம் - இறைவன் அருச்சுனனுக்கு இட்ட சாபம்; வில்லால் என்பது மற்றொரு பொருள்.

அமுதம் ஊனாக்கும் - ஊனை உனக்கு உணவாக்கும்.

நல்ல தவ வேடக் கொற்றவர் - நல்ல தவ வேடத்தையுடைய வேடர் தலைவனான கண்ணப்ப நாயனார்.

இறைவன் தவம் நிறைந்தவர் ஒருவர் கண்ணையும் தவ வேடத்தவரான மன்னர் ஒருவரது கண்ணையும், அவ்விருவரும் பிழையற்றவராக இருந்தும் பறித்தார் என ஒரு பொருள் தோன்ற நின்றது.

தவம் நிறைந்த ஒருவர் - திருமால்; தவ வேடத்தவர் - கண்ணப்பர். திருமால் இறைவனை அருச்சிக்கும் போது ஒரு பூ குறைந்ததாகத் தன் கண்ணைத் தோண்டி மலராகக் கருதி அருச்சனை செய்தார். கண்ணப்பர் இறைவர் கண்ணினின்று வடிந்த குருதியை நிறுத்தத் தன் கண்ணைத் தோண்டி அப்பினார். தருமமூர்த்தி - நிந்தாஸ்துதி; இகழ்வது போல் புகழ்தல். அறமற்றவர் என்பது இகழ்ந்துரை பொருள்.

(15-23) முட்டையில் பிறப்பவை அண்டசம். கருப்பையிற் பிறப்பவை சராயுசம். விதையில் பிறப்பவை உற்பீசம். வேர்வையில் பிறப்பவை சுவேதசம். நிற்பவை, நெளிபவை, தத்துபவை, தவழ்பவை, நடப்பவை, கிடப்பவை, பறப்பவை, உலகத்து உயிர்கள்.

கண் அகல் ஞாலம் - இடம் அகன்ற உலகம். எண்ணில்பல் கோடி - எண்ணில்லாத பல கோடி. பெருமனைக் கிழத்தி - உமையம்மையார்.

இறைவன் இருநாழி நெல்லை இறைவிக்குத் தந்து முப்பத் திரண்டு அறங்களைச் செய்யுமாறு சொன்னது. இந்நிகழ்வு காஞ்சியில் பல பிள்ளைகளைப் பெற்ற தாய்க்கு இரண்டு நாழி நெல்லைத் தந்து முப்பத்திரண்டு அறமும் செய்யும்படி சொன்னாய் என்றது இகழ்வதுபோல் புகழ்வு. எண் நான்கு - முப்பத்திரண்டு. இயற்றுதி - செய்வாயாக.

வள்ளன்மை - கொடைத் தன்மை. ஒண்ணிதிச் செல்வ - ஒளி பொருந்திய செல்வனே; இகழ்வு போலப் புகழ்வு. அளியன் - இரங்கத்தக்கவனான அடியேன். மாற்றம் - விண்ணப்பம். கேண்மதி - கேட்பாயாக.

(24-) எழுவகைச் சனனம் - மேலே கூறப்பட்ட நிற்பவன முதலியவை; தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் எனவும் கொள்ளலாம். சனனம் - பிறவி.

உழிதரு - சுழலும். உட்கு வந்து - அஞ்சி. முழுவதும் ஒரீஇ - முற்றும் நீக்கி. முத்திபெற்று - வீடுபேற்றைப் பெற்று. உய்வான் - உய்ய. அடிக்கமலம் - திருவடியான தாமரை. போற்றுப - வணங்குவர்.

ஒருபது வகை யோனி பேதம் - திருமால் எடுத்த பத்து அவதாரம். யோனி - பிறப்பு. வெருவரும் - அஞ்சத் தக்க. வேட்கையன் ஆகி - விருப்பு உடையவன் ஆகி. புக்கு - புகுந்து. தாமரைக்கண்ணான் - திருமால். துஞ்சினன் - உறங்கினான். துயில் ஒரீஇ - உறக்கத்தை விட்டு. எழாஅன் - எழுந்திரான். அஞ்சினன் போலும் - பயந்தான் போலும். நின் ஆடல் காண்பதற்கு - நின் ஆட்டத்தைக் காண்பதற்கு.

தில்லையில் கோவிந்தராசப் பெருமான் பள்ளி கொண்ட திருக்கோலத்துடன் இருத்தலை எண்ணி இங்ஙனம் உரைத்தார். திருமால் தரிசனம் செய்வதற்கு ஏற்ற கண்களை உடையவனாய் இருந்தும் அதனைப் பயன்படுத்தாமல் துயின்றான். அண்மையி லிருந்தும் பிறப்பறுக்க மாட்டாதவன் ஆனானே என இரங்கு கின்றார். (14)

## பிடி நெடு நாளாக உண்ணும்

### (நேரிசை வெண்பா)

464. ஆட்டுகின்றோர் இன்றிமன்றுள் ஆடும்ஆ னந்தத்தேன்
காட்டுகின்ற முக்கண் கரும்பொன்று - வேட்டதனை
உற்றுநெடு நாளாக உண்ணுமோர் மால்யானை
பெற்றதொரு கூந்தல்பிடி. (15)

**தெளிவுரை**

தில்லை அம்பலத்துள் ஆட்டுபவர் இல்லாது ஆனந்தத் தேன் காட்டுகின்ற முக்கண் கரும்பு ஒன்று (நடராசர்) ஆடிக் கொண்டிருக்கின்றது. ஒப்பற்ற பெரியயானையை (விநாயகரை) ஈன்ற ஒரு கூந்தல் பிடி (கூந்தலை உடைய பெண் யானையான உமாதேவி) அந்த ஆட்டத்தை நெடு நாள்களாகப் பார்த்து உண்ட வண்ணம் இருக்கின்றது!

**விளக்கம்**

ஆட்டுகின்றார் - ஆட்டுபவர். முக்கட்கரும்பு - மூன்று கண்களையுடைய கரும்பு (சிவபெருமான்). ஆனந்தத் தேன் காட்டும் கரும்பு - கரும்பின் உச்சியில் தேன் கூடு இருக்கும். ஆதலால் தேன் காட்டும் கரும்பு என்றார்.

வேட்டதனை - வேட்டு + அதனை. வேட்டு - விரும்பி. அதனை வேட்டு என மாற்றுக. உண்ணும் - உண்பாள். மால் யானை - பெரிய யானை; விநாயகர். கூந்தல் பிடி - கூந்தலை உடைய பெண் யானை; உமையம்மையார்.

ஒரு கரும்பு ஆலையில் ஆட்டுபவர் இல்லாது ஆடுகின்றது. ஓர் யானையைப் பெற்ற பிடி ஒன்று நெடுநாளாக அதை உண்டு கொண்டிருக்கின்றது என்பதாம். (15)

## நமனாரே! நாடுமின்!

### (கட்டளைக் கலித்துறை)

465. பிடிப்பது உமக்குஎனை வேண்டின் வெங் கூற்றெனும் பேர்முடிய
முடிப்பது மத்த முடியார்க்கு வேண்டுமுக் கண்பரனார்
அடிப்பது மத்து ஒன்று எடுத்துத்தென் பான்முக மாக நின்று
கடிப்பது மத்தன்மை யாநம னார்இது நாடுமினே. (16)

## தெளிவுரை

இயமனாரே! உங்கட்கு என்னைப் பிடிப்பது வேண்டின் ஊமத்தம் மலர் அணிந்த முடியையுடைய சிவபெருமானுக்குக் கூற்று என்ற பேர் முடிய உம்மை முடிப்பது வேண்டும். மூன்று கண்களையுடைய சிவனார் அடிப்பது திருவடியாகிய தாமரை களில் ஒன்றைத் தூக்கி! அப்பெருமான் தெற்கு முகமாக நின்று நடிப்பது உம்மைச் சஞ்சரிக்கும் குறிப்பேயாகும். இதை அறிந்து என்னிடம் வர வேண்டா!

## விளக்கம்

நமனார் - இயமன்; விளி. பன்மையில் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு.

உனக்கு என்னைப் பிடிக்க வேண்டின் சிவனார்க்குக் கூற்று என்னும் பேர் முடிய உம்மை முடிப்பது வேண்டும் என இயைக்க.

பிடிப்பது உமக்கு எனை வேண்டின் - உமக்கு எனைப் பிடிப்பது வேண்டின். பிடித்தலாவது உயிரைப் போக்குதல். வெங்கூற்று - கொடிய இயமன்.

என்னை நீர் பிடித்தால் உம்மைச் சிவபெருமான் கொல்வார் என்பது கருத்து.

பேர் முடிய முடிப்பது - பெயர் இல்லாது அழிவதாம். மத்த முடியார் - ஊமத்த மலரை அணிந்த முடியை உடைய சிவ பெருமான். அடிப்பது மத்து ஒன்று எடுத்து - திருவடியாகிய தாமரைகளில் ஒன்றை எடுத்து. அத்தன்மையாம் - உம்மை அழிக்கும் குறிப்பை உடையதாகும்.

இயமன் தென்திசைத் தலைவன். ஆதலால் இறைவன் அத்திசையை நோக்கித் திருவடியைத் தூக்கி ஆடுதல் தம் திருவடியால் அவனை உதைத்து அடக்கும் கொள்கையுடையதாம். இயமனை உதைத்த அடி இடத்திருவடியே என்பது இங்குக் குறிக்கத் தக்கது.

நாடுமின் - இதைத் தேர்ந்து என்னிடம் வாராது ஒழிக என்பதாம்.

தென்பால் முகமாக - தெற்குத் திக்கு நோக்கி. (16)

## தில்லைவாண! நின்னிலை அளத்தற்கரிது!

(நேரிசை யாசிரியப்பா)

466. மின் வீழ்ந் தன்ன விரிசடைக் காட்டில்
பன்மாண் துத்திப் பஃறலைப் பாந்தள்
சிறு மூச்சில் பிறந்த பெருங்காற்று அடிப்ப
விரிதிரை சுருட்டும் பொருபுனல் கங்கை
5 படம் விரித் தாடும்அச் சுடிகைவாள் அரவின்
அழல்கண் கான்ற அவ் ஆரழல் கொளுந்தச்
கழித்துஉள் வாங்கிச் சுருங்கச் சுருங்காது
திருநுதல் கண்ணில் தீக்கொழுந்து ஓட
உருகும்இன் னமுதம் உவட் டெழுந்து ஓடிஅக்
10 கங்கை யாற்றின் கடு நிரப்பு ஒழிக்கும்
திங்களம் கண்ணித் தில்லை வாண
அன்பருக்கு எளியை ஆகலின் இனைய
நின்பெருந் தன்மை நீயே இரங்கி
உண்ணின்று உணர்த்த உணரின் அல்லதை
15 நுண்ணூல் எண்ணி நுணங்க நாடிப்
பழுதின்று எண்ணிப் பகர்தும் யாம் எனின்
முழுதும் யாரே முதுக்குறைந் தோரே
நால்வகைப் பொருளும் நவைஅறக் கிளந்த
வேத புருடனும் யாதும் நின் நிலைஎனத்
20 தேறலன் பலவாக் கூறினன்என்ப, அதாஅன்று
முன்னைநான் மறையும் முறைப்பட நிறீஇய
மன்னிருஞ் சிறப்பின் வாதரா யணனும்
கைஇழந் தனனது பொய்மொழிந் தன்றோ, அதனால்
தெளிவில் கேள்வியில் சின்னூல் ஓதி

25 அளவா நின்னிலை யத்தும் போலும்
அறிவும் ஆயுளும் குறையக் குறையாத
பையுள் நோய் எண்ணில படைத்துப்
பொய்உடல் சுமக்கும் புன்மை யோமே. (17)

**தெளிவுரை**

(1-11) மின்னல் வீழ்ந்ததைப் போன்ற விரிந்த சடை என்ற காட்டில் பல சிறப்பையுடைய துத்தியை உடைய பல தலைகளை யுடைய பாம்பினது சிறிதாக விட்ட மூச்சில் பிறந்த பெருங்காற்று வீச விரி திசைகளை எல்லாம் சுருட்டும் இயல்புடைய மோதும் நீரையுடைய கங்கை, படம் விரித்து ஆடுகின்ற மாணிக்கத்தை உச்சியில் உடைய அந்தக் கொடிய பாம்பின் தீக்கண் வெளிப் படுத்திய அரிய அழலால் வற்றும். சுழிந்து உள் வாங்கிக் குறையும். அவ்வாறு சுருங்கிய சுருக்கத்தில் சுருங்காது நெற்றியில் உள்ள கண்ணின் தீச்சுடர் ஓடுதலால், திங்களினின்று உருகும் அமுதம் பெருக்கெடுத்து ஓடி நீர் குறைந்த கங்கையாற்றின் மிக்க வறுமையை ஒழிக்கும். (நிரப்பும்) இத்தகைய இயல்பு வாய்ந்த திங்களான முடி மாலையைச் சூடிய தில்லையில் வீற்றிருக் கின்றவனே!

(12-28) நீவிர் அடியார்க்கு எளியை. ஆதலால் நின் பெரும் தன்மையை நீயே இரங்கி உள்ளே நின்று உணர்த்த உணர்வோம். அங்ஙனம் இன்றி, நுட்பமான நூலை எண்ணி நுட்பமாக ஆராய்ந்து குற்றம் இல்லாமல் எண்ணிப் பார்த்து யாம் கூறலாம் என்றால், யார் தாம் அத்தகைய பேரறிவு படைத்தவர்?

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு வகையான பொருளும் குற்றம் இல்லாது கூறிய வேதபுருடனும் நின்னிலை யாதும் தெளிந்தவன் அல்லன். ஆதலால் பலவகையாகக் கூறினன்.

அதுவே அன்றி, முற்காலத்தில் நான்கு வேதங்களையும் முறைப்படத் தொகுத்த வியாசமுனிவனும் தன் கையை இழந்தான். அவ்வாறு இழந்தது பொய் சொன்னதால் அன்றோ!

அதனால், தெளிவு இல்லாத நின் நிலையைக் கேள்வியுடன் சில நூல்களை ஓதி நின்னிலை அளக்க முயல்வது பேதைமை யாகும். அறிவும் ஆயுளும் குறையக் குறைவு படாத துன்பம் தரும் நோய்கள் எண்ணில்லாதவற்றை அடைத்து பொய் உடல் சுமக்கும் புன்மை உடையோம் யாம்!

**விளக்கம்**

(1-12) மின்னலின் வீழ்ச்சி போன்ற சடை. துத்தி - பாம்புப் படப் பொறி. பஃறலை - பல தலை. பாந்தள் - சிவபெருமான் தலையில் உள்ள பாம்பு.

பாம்பின் சிறிய மூச்சில் பிறந்த காற்றால் கங்கையாற்றில் அலை சுருண்டது. பொருபுனல் கங்கை - மோதும் நீரையுடைய கங்கை. சுடிகை வாள் அரவு - மாணிக்கத்தின் ஒளியுடைய பாம்பு. அழற் கண் கான்ற - தீப் போன்ற கண் வெளிப்படுத்திய. ஆர்அழல் - அரிய தீ. கொளுந்த - அழற்ற; கொளுத்த. பாம்புக்கண் தீ கொளுத்தியதால் கங்கை நீர் உள் வாங்கிச் சுருங்கியது.

திருநுதற்கண் - அழகிய நெற்றிக் கண்ணினின்று. தீக் கொழுந்து ஓட - தீக்கொழுந்து பாய. உருகும் இன் அமுதம் - இனிய அமுதமானது உருகும்.

உருகிய அமுதப் பெருக்கு ஓடி நீர் குறைந்த கங்கையின் நீர்க் குறைவைப் போக்கி நிரப்பியது. சிவபெருமான் சடையில் உள்ள பாம்பு சிறியதாக மூச்சு விட்டது. அச்சிறு மூச்சு பெருங் காற்றாக கங்கையில் அலையெழுந்தது. அப்பாம்பின் கண்ணினின்று உண்டான தீயால் வற்றியது. நெற்றிக் கண்ணிலிருந்து உண்டான தீக் கொழுந்தால் சந்திரனிடத்துள்ள அமுதம் உருகி அக்கங்கையில் குறைந்த நீர்க்குறைவைப் போக்கி நிறைத்தது.

அமுதம் - சந்திரனிடத்து உள்ளது. உவட்டு - பெருக்கு. கடுநிரப்பு - மிக்க வறுமை; அதாவது நீர் வற்றிய குறைவு.

திங்களங்கண்ணி - திங்களை முடிமாலையாகக் கூறுவது மரபு.

(13-) அல்லதை - அல்லது; ஐ - சாரியை. நுணங்க நாடி - நுட்பமாக ஆராய்ந்து. பழுது இன்று எண்ணி - குற்றம் இல்லாமல் ஆராய்ந்து. பகர்தும் - உரைப்போம். முதுக்குறைந்தோரே - பேரறிவு யுடையவர்?

நால்வகைப் பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு வகையான பொருள்கள். நவை அறக் கிளந்த - குற்ற மில்லாமல் கூறிய. வேதபுருடன் - நான்முகன்; வேதமாகிய புருடன். தேறலன் - தெளியாதவனாய். பலவாக் கூறினன் - பலவகையாகக் கூறியுள்ளான். அதாஅன்று - அதுவுமே அல்லாமல். முன்னை - முன்பு. நான்மறையும் முறைப்பட நிறீஇய - நான்கு மறைகளையும் முறைபடத் தொகுத்த. நிறீஇய - நிறுவிய என்பதன் விகாரம். வாதநாராயணன் - வியாச முனிவர்.

கையிழந்தனன் - கையின் இயக்கத்தை இழந்தான். அவன் கையிழந்த வரலாறு:

ஒருகாலத்தில் வியாச முனிவர் காசியம்பதியில் திருமாலே முதல்வர் என்று கூறிக் கையை உயர்த்தினார். நந்தி தேவர் அவரது தூக்கிய கையை அப்படியே நின்று விடுமாறு செய்தார். அங்ஙனம் இன்றிக் கையை வெட்டியதாகக் கூறுவதுமுண்டு.

தெளிவில் கேள்வி - தெளிவில்லாத கேள்வியுடன். சின்னூல் ஓதி - சில நூல்களைப் படித்து. சின்னூலாவது ஞான நூல் அல்லாதவை. அளத்தும் - அளப்போம். பையுள் நோய் - துன்பம் தரும் நோய். எண் இல் - எண்ணற்றவை. படைத்து - அடைந்து. பொய்யுடல் - நிலையற்ற உடல். புன்மையோம் - அற்பத்தன்மை யுடையோம். (17)

## பொன்னரி மாலை பைந்துழாய் சூடோம்

### (நேரிசை வெண்பா)

467. புனையேம் தருவுதவு பொன்அரி மாலை
வனையேம் பசுந்துழாய் மாலை - பனிதோய்
முடிக்கமலம் சூடினோன் மொய்குழலோடு ஆடும்
அடிக்கமலம் சூடினோ மால். (18)

**தெளிவுரை**

குளிர்ச்சி பொருந்திய முடியில் கங்கை நீரைச் சூடியவன் நடராசப் பெருமான். அவனுடைய உமையுடன் ஆடும் திருவடித் தாமரையைச் சூடினோம். ஆதலால், யாம் வான் உலகத்தில் உள்ள கற்பகமரத்தின் பொன்மலர் மாலையைச் சூடிக் கொள்வோம். (இந்திர பதவியை விரும்ப மாட்டோம்) பசுமையான துளசி மாலையை அணிந்து கொள்வோம். (திருமாலாகும் பதவியை விரும்போம்)

**விளக்கம்**

தரு - கற்பக மரம். பொன் அரி மாலை - பொன் மலரால் ஆன மாலை. கற்பக மலரைச் சூடோம் என்றது இந்திர பதவியை விரும்போம் என்பதைக் குறித்தது. பசுந்துழாய் மாலை - பசிய துளசி மாலை. துளசிமாலை வனையோம் என்றது திருமால் பதவியைப் பெற விரும்போம் என்பதைப் புலப்படுத்தியது.

பனி - குளிர்ச்சி. முடிக்கமலம் - முடியில் கங்கை நீர். கமலம் - நீர்; கங்கை. மொய் குழலாளொடும் - உமையம்மையோடு. அடிக்கமலம் - திருவடித் தாமரை. சிவன் அடிக்கமலமே வீடுபேறு ஆதலால் அதனின் இழிந்த இந்திர பதவி, திருமால் பதவி ஆகியவற்றை விரும்போம் என்றார். (18)

## பதஞ்சலியின் இயல்பு

### (கட்டளைக் கலித்துறை)

468. சூடும் கலைமதி யைத்தொடராதுன்பந் தோகைக்கு
அஞ்சாது
ஓடும் பொறிஅரவு ஒன்றுகெட் டேன்மறை ஓலமிட்டுத்
தேடும் பிரான் திருக் கூத்தினுக் கேமையல் செய்யும்
என்றும்
ஆடும் தொழில்வல்லது ஆகையினால் அவ்
வருமைகண்டே. (19)

**தெளிவுரை**

புள்ளியையுடைய படத்தையுடைய பதஞ்சலி முனிவர் ஆன பாம்பு, ஆடும் தொழில் வல்லவராகையால் என்றும் சிவபெருமான் ஆடும் அருமையைக் கண்டு, சிவபெருமான் சூடும் பிறைச் சந்திரனைத் தொடராது; பசுமையான தோகையையுடைய மயிலுக்கும் (உமையம்மைக்கு) அஞ்சாது.

**விளக்கம்**

ஓர் பாம்பானது சந்திரனை விழுங்கும். மயிலுக்கு அஞ்சும். இது பாம்பின் இயல்பு. இங்குப் பதஞ்சலியான பாம்பு சந்திரனைத் தொடராது; மயிலுக்கு அஞ்சாது என நயம்பட உரைத்தார். சிவபெருமானிடத்தவை அவை ஆகலான் தொடராது, அஞ்சாது என்க.

பாம்பான பதஞ்சலி ஆடலில் வல்லவர்; ஆகையால் சிவ பெருமான் கூத்தைக் காண்பதில் விருப்பம் கொண்டார். மையல் - விருப்பம்; காதல்.

கலைமதி - கலைகளையுடைய சந்திரன். பைந்தோகை - பசுமையான தோகையையுடைய மயில் போன்ற உமை யம்மையார்.

பொறி அரவு - புள்ளியையுடைய பாம்பாகிய பதஞ்சலி முனிவர். பொறி என்பதற்கு அறிவு எனப் பொருள் கொண்டு சிவபெருமான் திருக்கூத்திலே என் அறிவு செல்லுகின்றது எனப் பொருள் கொள்ளலுமாம். (19)

## சிறியேற்கு அருள்வாய்!

469. கண்புலம் கதுவாது கதிர்மணி குயிற்றி
விண்புலம் சென்ற மேல்நிலை மாடத்து
வல்லியின் நுடங்கு மயில்இளஞ் சாயல்
சில்லரித் தடங்கண் திருந்திழை மகளிர்

5 அளவுஇல் பேரழகு ஆற்றியும் வாளா
இளமுலைத் தொய்யில் எழுதிய தோற்றம்
தருநிழல் செய்த அரமிய முற்றத்து
அமரர் மாதரோடு அம்மனை ஆடுழி
இமையா நாட்டம் இருவர்க்கும் ஒத்தலின்
10 நற்குறி தெரிதற்கு நாகுஇளங் குமரர்
விற்குறி எழுதி விடுத்தது கடுக்கும்
வலன்உயர் சிறப்பின் புலியூர்க் கிழவநின்
பொன்னடிக்கு ஒன்றுஇது பன்னுவன் கேண்மதி
என்றுநீ உளைமற்று அன்றே யான்உளேன்.
15 அன்றுதொட்டு இன்றுகாறு அலமரும் பிறப்பிற்கு
வெருவரல் உற்றிலன் அன்றே ஒருதுயர்
உற்றுழி உற்றுழி உணர்வதை அல்லதை
முற்றும் நோக்க முதுக்குறைவு இன்மையின்
முந்நீர் நீந்திப் போந்தவன் பின்னர்ச்
20 சின்னீர்க் கழிநீத்து அஞ்சான் இன்னும்
எத்துணைச் சனனம் எய்தினும் எய்துக
அத்தமற்று அதனுக்கு அஞ்சலன் யானே
இமையாது விழித்த அமரில் சிலர்என்
பரிபாகம் இன்மை நோக்கார் கோலத்
25 திருநடம் கும்பிட்டு ஒருவன்உய்ந் திலனால்
சுருதி உண்மை சொல்லா கொல்என
வறிதே அஞ்சுவர் அஞ்சாது
சிறியேற்கு அருளுதி செல்கதிச் செலவே. (20)

## தெளிவுரை

(1-13) கண்ணாகிய பொறியால் பற்றப்படாது ஒளியுடைய மணிகளைப் பதித்து வானளாவ உயர்ந்துள்ள மேல் நிலை மாடத்தில், கொடி போன்று அசையும் இடையையுடைய மயில் போன்ற சாயலையுடைய சிலவான செவ்வரிகளை பொருந்திய பெரிய கண்களையுடைய மகளிர் அளவில்லாத மிக்க அழகை உடையவராய் இருந்தும், வீணே இளைய கொங்கையில் தொய்யில் எழுதிய தோற்றம், கற்பக மர நிழலில் செய்யப்பட்ட

நிலா முற்றத்துத்தேவ மாதருடன் அம்மனை ஆட்டத்தை ஆடும் போது, இமைக்காத கண்கள் இருவருக்கும் ஒத்திருத்தலால், மானிட மாதர் என்று அடையாளம் அறிந்து கொள்வதற்கு அம் மகளிரின் காதலரான இளைய குமரர் மன்மதனின் கரும்பு வில் அடையாளத்தை எழுதி விடுத்ததை ஒத்து விளங்கும். இத்தகைய இயல்புடைய வெற்றி பொருந்திய சிறப்பையுடைய புலியூர்க்கு உரியவனே! நின் திருவடிக்கு யான் ஒன்றைக் கூறுவேன்! கேட்பாய்!

(14-28) என்று நீ உள்ளாய் அன்றே யானும் இருக்கின்றேன். அன்றிலிருந்து இன்று வரையும் துன்பத்தில் உழலக்கூடிய பிறவிக்கு நான் அச்சம் கொள்ளவில்லை. ஒரு துன்பம் உண்டாகும் போது உணர்ந்து வருந்துவதே அல்லாமல் முழுவதையும் நோக்கும் பேரறிவு எனக்கு இல்லாமையால், கடலில் நீந்திக் கடந்து வந்தவன் சிறிய நீர்நிலையில் நீந்துதற்கு அஞ்சமாட்டான். எனவே இன்னும் எத்துனைப் பிறவி வந்தாலும் வருக! இறைவ! அதற்கு நான் அஞ்சேன்.

கண் இமைக்காத தேவர் சிலர் என் பக்குவம் இன்மையைப் பார்த்துச் சிதம்பரத்தின் அழகிய நடனத்தைத் தரிசித்தவன் ஒருவன் உய்யாது போனால், அங்ஙனம் கூறிய வேதமும் உண்மையைச் சொல்லாதோ! என்று வீணே அச்சம் கொள்வர். ஆதலால் நற்கதிக்குச் செல்ல இருக்கச் சிறியவனான எனக்கு அருள் செய்வாயாக!

**விளக்கம்**

(1-12) தில்லையில் மேன்மாடத்தில் தேவ மகளிருடன் மானிடமகளிர் அம்மனை ஆடுவர். அவர்கள் தேவ மகளிரினின்று வேறுபட்டுத் தோன்றுதற்காக அம் மங்கையரின் காதலர் அவர்களுக்கு மார்பில் தொய்யில் எழுதினர் போலும் என்று கூறுகின்றார்.

குமரர் தம் மங்கையர்க்குத் தொய்யில் எழுதியதற்கு இங்ஙனம் ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறுகின்றார்.

கண்புலம் கதுவாது - கண்பார்வைக்கு எட்டாது; மிக உயரமானது என்பது கருத்து. கதிர்மணி - ஒளிவீசும் மணி. குயிற்றி - பதித்து; பதிக்கப் பெற்று. விண்புலம் - வானம் வரை. சென்ற - உயர்ந்துள்ள. மாடங்கள் கண்பார்வைக்கு எட்டாத உயரத்தை உடையது. மணிகள் பதிக்கப் பெற்றது. வான் அளாவியது.

வல்லியின் நுடங்கு - கொடியைப் போன்று சிறியதாக உள்ள; அல்லது அசையும்.

மயில் இளம் சாயல் - இளைய மயில் போன்ற சாயல். சில் அரித்தடங்கண் - சில செவ்வரிகளை உடைய நீண்டகண். திருந் திழை - நல்ல அணிகள். அளவில் பேரழகு ஆற்றியும் - அளவற்ற மிக்க அழகை உடையவராயிருந்தும். வாளா - வீணே. இள முலைத் தொய்யில் எழுதிய தோற்றம் - இளைய கொங்கைகளில் அவர்தம் காதலர் தொய்யில் எழுதிய அத்தோற்றம்

தருநிழல் - கற்பக மரத்து நிழல். அரமிய முற்றம் - நிலா முற்றம். அமரர் மாதர் - தேவமங்கையர்.

மானிட மகளிர் நிலா முற்றத்தில் தேவ மங்கையருடன் அம்மனை ஆடினர்.

அம்மனை - ஒருமகளிர் விளையாட்டு.

ஆடுழி - ஆடும் போது. இமையாநாட்டம் இருவருக்கும் ஒத்தலின் - மானிட மங்கையர்க்கும் தேவ மங்கையர்க்கும் இமைக் காத பார்வை உள்ளமையால் தேவ மங்கையர் கண் இயல்பாக இமைக்காதது. மானிட மங்கையரோ அம்மனைக் காய்களை இமைக்காமல் பார்த்தனர். ஆதலால் இவ்விரு மங்கையர்க்கும் இமையா நாட்டம் இருந்தது.

தெரிதற்கு - இவர் மானிட மங்கை எனத் தெரிந்து கொள்வதற்கு. நாகிளங்குமரர் - மிக இளைய காதலர்கள். நாகிளம் - ஒரு பொருட் பன்மொழி. விற்குறி - மன்மதனின் வில்லான கரும்பு போன்ற குறி. கடுக்கும் - ஒக்கும்.

வலன் - வெற்றி. புலியூர் - சிதம்பரம்.

(13-28) பன்னுவன் - உரைப்பேன். கேண்மதி - கேட்டருளுக.

அலமரு - சுழலும்; பிறவி மாறி மாறி வரும் இயல்புடைமையால் 'அலமரு' என்றார்.

வெருவரல் - அஞ்சுதல்.

உணர்வதை அல்லதை - உணர்வதே அல்லாமல். அல்லதை - அல்லது + ஐ. ஐ - சாரியை.

முதுக்குறைவு - பேரறிவு. முந்நீர் - கடல். சின்னீர் - சில + நீர்; அதாவது சிறிய நீர். கடலில் நீந்தி வந்தவர் சிறிய உப்பங் கழியை நீந்திக் கடக்க அஞ்சமாட்டார்.

எத்துணைச் சனனம் - எத்தனைப் பிறவிகள். எய்தினும் எய்துக - நான் அடையினும் அடைக. அத்த - தலைவ. அஞ்சலன் - அஞ்சமாட்டேன். இமையாது விழித்த அமரரில் - இமைக்காத கண்விழியையுடைய தேவர்களில்.

பரிபாகம் - பக்குவம்; நின் அருளைப் பெறத் தக்க பருவம்.

அடியேன் நின் திருநடன கோலத்தைக் கண்டும் நின் அருளைப் பெறாமல் மேலும் பிறவியைப் பெறுவேன் ஆனால், அதற்காக நான் அஞ்சமாட்டேன். ஆனால் தேவர்கள், ஒருமுறை திருநடனத்தைக் கண்ட அளவில் முத்தியுண்டு என்று வேதம் கூறுவது உண்மை அன்றோ! ஆயின் இவன் அம் முத்தியைப் பெற வில்லையே! என்று ஐயுற்று அஞ்சுவர். அங்ஙனம் அவர் அஞ்சுவதை எண்ணியேனும் எனக்கு அருளுக என வேண்டு கின்றார்.

வறிதே - காரணம் இல்லாமல். அருளுதி - அருள்வாய். செல்கதிச் செல - நற்கதியில் செல்லுதற்கு அதாவது முத்தியை அடைவதற்கு. (20)

## பதஞ்சலியார் இறைவரை ஆடச் செய்தார்!

### (நேரிசை வெண்பா)

470. சென்றவரைத் தாம்ஆக்கும் தில்லைச்சிற் றம்பலத்து
மன்றவரைத் தாமாக்க வல்லவர்யார் - என்றுமிவர்
ஆடப் பதஞ்சலியார் ஆக்கினார் என்பிறவி
சாடப் பதஞ்சலியார் தாம். (21)

**தெளிவுரை**

தன்னிடம் வந்தவரைச் சீவபோதம் நீக்கிச் சிவபோதம் அடையச் செய்யும் தில்லைச் சிற்றம்பலத்துள் வீற்றிருக்கும் மன்றவரைத் தாமாக்க வல்லவர் யார்? என்றும் இவர் ஆடுவதில் பாதம் சலிப்பில்லாதவர் ஆக்கினார் (என்றும் திருநடனம் செய்தபடி உள்ளார்) என் பிறவியை அறுக்கும் அப்பதஞ்சலியார்.

**விளக்கம்**

பதஞ்சலி முனிவர் பொருட்டு இறைவன் நடனம் ஆடுகின்றார். ஆகையால், பதஞ்சலி முனிவர் என்றும் இவர் ஆடப் பதம் சலியார் ஆக்கினார் என்றார்.

தம்மிடம் வந்தவரைத் தம்மைப் போல ஆக்குவிக்கும் இறைவனைப் பதஞ்சலி முனிவர் தம்மைப் போல் பதஞ் சலியாதவர் ஆக்கினார் என்பது நயம்.

தாமாக்கும் - சீவ போதத்தை ஒழித்துச் சிவபோதத்தை அடையச் செய்தல்.

மன்றவர் - நடராசர். ஆடப்பதம் சலியார் - ஆடுதற்குத் திருவடி சலிப்படைய மாட்டார். பிறவி சாடு அப்பதஞ்சலியார் - பிறவியை ஒழிக்கும் பதஞ்சலியார். (21)

## காமக் கருங்குழியில் சுழலேம்!

### (கட்டளைக் கலித்துறை)

471. தாமக் குழலின்நல் லார்விழி மின்பொரச் சற்றுமினிக்
காமக் கருங்குழி யில்சுழ லேம்கலந் தாடப்பெற்றேம்
நாமப் புனல்கங்கைப் பேராறு பாயநஞ் சம்களத்தும்
வாமத் தமுதமும் வைத்தாடும் ஆனந்த மாக்கடலே. (22)

**தெளிவுரை**

அச்சத்தைத் தரும் நீரை யுடைய கங்கை என்ற பேராறு பாய நஞ்சு கழுத்திலும், இடப்பாகத்தில் அமுதமும் வைத்துக் கொண்டு ஆடல் செய்யும் ஆனந்த மாக்கடலில் ஒன்று கூடிக் கலந்து ஆடினோம். ஆதலால் மாலையை அணிந்த கூந்தலையுடைய பெண்டிரின் விழியாகிய மீன் போரிடச் சிறிதும் இனிக் காமக் கரிய குழியில் இறங்கி ஆடோம்.

**விளக்கம்**

தாமம் - மாலை. குழல் - கூந்தல். நல்லார் - பெண்டிர். விழிமீன் - கண்ணாகிய மீன். நாமம் - புகழ்; அச்சமுமாம். ஆனந்த மாக்கடல் - நடராசர்.

ஒரு பெரிய ஆறு கலக்கும் பெரிய கடலில் ஆடியதால் ஒரு சிறிய குழியின் கண்ணே சுழலேம் என்றார்.

நஞ்சும் அமுதமும் கடலில் தோன்றியதை நினைந்து, கடலாக இதைக் கூறியவர் அவ்விரண்டையும் சேர்த்துக் கூறினார்.

வாமத்து அமுதம் - இடப்பாகத்தில் உள்ள அமுதம் (உமையம்மையார்) நஞ்சம் - நஞ்சு. களம் - கழுத்து. (22)

## நகுவது என் மனன்

### (நேரிசை யாசிரியப்பா)

472. கடம்கலுழ் கலுழிக் களிநல் யானை
மடங்கலந் துப்பின் மானவேல் வழுதிக்கு
இருநிலம் அகழ்ந்தும் எண்இல்பல் காலம்
ஒருவன் காணாது ஒளித்திருந் தோயை
5 வனசப் புத்தேள் மணிநாப் பந்திக்
கவனவாம் புரவியின் காட்டிக் கொடுத்துப்
பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்
ஐந்திணை உறுப்பின் நாற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப் பனுவற்குப்
10 பொருள்எனச் சுட்டிய ஒருபெருஞ் செல்வ
திருத்தொண்டத் தொகைக்கு முதற்பொரு ளாகி
அருமறை கிளந்தநின் திருவாக்கில் பிறந்த
அறுபதிற் றாகிய ஐம்பதிற்று முனிவருள்
ஒருவன்என்று இசைத்த இருபிறப்பாள
15 வரைசெய் தன்ன புரசை மால்களிற்று
அரைசிளங் குமரர் திருவுலாப் போதத்
தவளமா டங்கள் இளநிலாப் பரப்பிச்
செங்கண்யா னைக்கு வெண்சுதை தீற்ற
முதிரா இளமுலை முற்றிழை மடந்தையர்
20 கதிர்செய் மேனிக்குக் கண்மலர் சாத்தக்
கடவுள் களிற்றின் கவின்கொளப் பொலிந்த
உடலக் கண்ணர் ஒருவர் அல்லர்
இருநிலத்து அநேகர்என்று எடுத்துக் காட்டும்
திருவநீள் மறுகின் தில்லை வாண
25 வேய்ச்சொல் தொக்க வாய்ச்சொல் போல
விரிச்சியிற் கொண்ட உரைத்திறம் நோக்கி
வினைமேல் செல்லுநர் பலரே அனையர்க்கு
அவ்வினை முடிவதூஉம் காண்டும் அதாஅன்று
பல்லியும் பிறவும் பயன்தூக் காது

30 சொல்லிய பொருளும் துணிபொருள் உடைத் தெனக்
கொண்டோர் கொளினும் குறைபாடு இன்றே, அதனால்
யாவர் கூற்றுநின் ஏவலின் அல்லதை
நிகழா நிகழ்ச்சி உணராது போலும்!
குழந்தை அன்பின் பெரும்புகழ் நவிற்றிநின்
35 ஆணையின் நின்ற என்னை
நாண்இலை கொல்என நகுவதுஎன் மனனே. (23)

## தெளிவுரை

(1-10) மதம் கலங்கி ஒழுகுகின்ற களிப்புடைய நல்ல யானைகளையும், சிங்கம் போன்ற வன்மையையும் உடைய பெருமையுடைய வேல் ஏந்தியுள்ள பாண்டியனுக்குப் பெரிய நிலத்தைத் தோண்டி எண்ணற்ற பல காலம் ஒருவன் (திருமால்) காணாத வண்ணம் ஒளித்துக் கொண்டிருந்த நின்னை, தாமரையில் வீற்றிருக்கும் நான்முகனின் அழகிய நா என்னும் பந்தியில் விரைந்து ஓடும் குதிரையால் காட்டிக் கொடுத்து, பசிய தமிழில் வல்ல செந்நாப் புலவனான மாணிக்க வாசகர், ஐந்திணை உறுப்புகளால் நான்கு வகைப் பொருளாயும் தரும் அகப்பொருள் கொண்ட ஞான நூலான திருக்கோவையாருக்குப் பொருளாக விளங்குபவன் எனச் சுட்டப்பட்ட பெருஞ் செல்வனே.

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகைக்கு முதன்மை யுடைய பொருளாகி அரிய வேதங்களை உரைத்தருளிய நின் திருவாக்கில் தோன்றிய மூவாயிரம் அந்தணருள் நானும் ஒருவன் என்று உரைத்த இருபிறப்பாளனே!

(15-24) மலை போன்ற புரசை (கழுத்துக் கயிற்றை) உடைய பெரிய யானையின் மீது அரசிளங்குமரர் உலா வருதற் பொருட்டாக, வெண்மை நிறம் கொண்ட மாடங்களில் இளநிலவு பரப்பியது எனச் சிவந்த கண்ணை யுடைய யானைக்கு வெண்மை யான சுண்ணத்தைப் பூச,

முதிராத இளைய முலையை உடைய மகளிர் ஒளி வீசும் அரசிளங் குமரரின் மேனிக்குக் கண்மலரைச்-சாத்த (கண்ணால்

பார்க்க) ஐராவத யானையைப் போல் அழகு உண்டாக விளங்கிய உடலில் கண்களையுடைய இந்திரன் ஒருவர் மட்டுமல்லர் இவ் வுலகத்தில் அவரைப் போன்றவர் பலர் ஆவர் என்று எடுத்துக் காட்டும் செல்வம் பொருந்திய நீண்ட தெருக்களையுடைய தில்லை வாழ் பெரும!

(25-36) மூன்று ஒற்றர் மூலம் அறியப்பட்டுப் பொருளால் ஒத்த உண்மைச் சொற்களைப் போல், விரிச்சியால் (சகுனத்தால்) கொண்ட சொல்லைப் போல், வினையை மேற்கொண்டு செல்பவர் பலரே ஆவார்கள். அவர்களுக்குத் தாம் மேற்கொண்ட வினை முழுவதையும் காண்கின்றோம். அதுவே அன்றிப் பல்லியும் பிற காக்கை முதலியனவும் பயனை ஆராயாமல் சொல்லப்பட்ட பொருளும் துணிந்த பொருளை உடையதே ஆகும் என்று எண்ணியவர் அங்ஙனம் எண்ணுவதில் தவறு ஒன்றும் இல்லை. எனவே, எல்லார் கூற்றும் நின் ஏவலால் நிகழ்வது. அல்லது நிகழாத நிகழ்ச்சியை உணராது போலவும் விளங்கும்.

குழந்தை காட்டும் அன்பைப் போல் பெரும் புகழை எடுத்துக் கூறி, 'நின் ஆணையின் வழி நின்ற என்னை நாணம் அற்றவனாய் உள்ளாய்!' என்று என்னை நோக்கிச் சிரிக்கின்றது.

**விளக்கம்**

(1-6) கடம் - மதநீர். கலுழ் - ஒழுகும். கலுழி - வெள்ளம். களி நல் யானை - மதத்தையுடைய யானை. மடங்கல்அம் துப்பு - சிங்கம் போன்ற வலிமை. அம் - சாரியை. மானவேல் வழுதி - பெருமையுடைய வேலையுடைய பாண்டியன். இருநிலம் - பெரிய வுலகம். அகழ்ந்து - தோண்டி. ஒருவன் - திருமால். ஒளித்திருந் தோயை - ஒளித்துக் கொண்டிருந்த நின்னை. வனசப்புத்தேள் - தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன். மணி நாப்பந்தி - (பிரமதேவனின்) நாவான பந்தியில் உள்ள. பந்தியாவது குதிரை கட்டும் இடம். கவனவாம் புரவி - கவனம் + வாம் + புரவி; விரைந்து ஓடும் குதிரை. கவனம் - குதிரை ஓடும் கதி. வாம் - 'வாவும்' என்பதன் தொகுத்தல் விகாரம்; பொருள் தாவி ஓடுதல்.

காட்டிக் கொடுத்து - சோமசுந்தரக் கடவுள் நரிகளைப் பரிகளாக்கித் தாம் வேதமான பரியின் மீது எழுந்தருளி வந்து பாண்டியனிடம் அவற்றை ஒப்படைத்தார் என்பதை இத்தொடர் சுட்டுகிறது.

(7-10) பைந்தமிழ் நவின்ற - பசிய தமிழைக் கற்ற. செந்நாப்புலவன் - மாணிக்கவாசகர் ஐந்திணையுறுப்பின் நாற் பொருள்பயக்கும். ஐந்து திணைகளான குறிஞ்சி முதலியவற்றை உறுப்பாகக் கொண்டு அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற் பொருள் பயக்கும் அகப்பொருள் பொருந்திய ஞானநூலுக்கு. இந்நூல் திருக்கோவையார். இதை ஐந்திணைக் கோவை எனவும் வழங்குவர்.

இந்நூல் நாற் பொருள் பயக்கும் என்பதை ''இன்பத்தை நுதலியது என்றாராயினும் இன்பம் தலைக்கீடாக அறம் பொருள் இன்பம் வீடென நான்கு பொருளையும் நுதலிற்று'' என்று பேராசிரியர் கூறியவுரை விளக்கம் இங்குக் குறிக்கத் தக்கது.

காமம் சான்ற ஞானப்பனுவல் - காமச்சுவை மிக்க ஞான நூல். மாணிக்க வாசகரிடம் திருக்கோவையார், திருவாசகம் என்பனவற்றின் பொருள் யாது என வினவிய போது அவர் நடராசப் பெருமானைச் சுட்டிக்காட்டினார். ஆதலால் 'ஞானப் பனுவலுக்குப் பொருள் எனச் சுட்டிய' என்றார். (திருவாதவூரர் புராணம் - திருவடி...20-28)

(11-14) அருமறை கிளந்த - அரிய வேதத்தை கூறிய. திருத்தொண்டத் தொகை - சுந்தரர் பாடியது. அது தில்லை வாழ் அந்தணர் என்ற தொடக்கம் கொண்ட பதிகம்.

அறுபதிற்றாகிய ஐம்பதிற்று முனிவர் - தில்லைவாழ் அந்தணர்களாகிய மூவாயிரவர். அறுபது ஐம்பது = மூவாயிரம்.

ஒருவன் என்ற இறைவர் - தில்லை வாழ் அந்தணருள் நான் ஒருவன் எனக் கூறியருளிய.

சுந்தர மூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை பாடுதற்குச் சிவபெருமான் முதல் எடுத்துத் தந்தார். இருபிறப்பாள - அந்தணனே.

(15-24) வரை செய் தன்ன - மலை போன்ற. புரசைமால் கயிறு - புரசையையுடைய பெரிய யானை. அரசிளங்குமரர் - அரசகுமரர். திருவுலாப் போத - திருவுலா வர. தவளமாடங்கள் - வெண்மையான மாளிகைகள். இளநிலாப் பரப்பி - இளைய நில்வு ஒளியை வீசி.

செங்கண் யானைக்கு வெண் சுதை தீற்ற - சிவந்த கண்ணினை உடைய வெண்மையான சுண்ணம்பைப் பூச, யானைக்கு வெள்ளை வண்ணம் பூசும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

முற்றிழை - முழுதும் அணிகள்.

கதிர்செய் மேனிக்கு - ஒளியுடைய மேனிக்கு. கண்மலர் சாத்த - பார்க்காத கண்களால் பார்க்க.

கடவுள் களிறு - ஐராவதம் என்ற யானை. கவின் கொள - அழகு கொள்ள. பொலிந்த - விளங்கிய. உடலக்கண்ணர் - உடலில் கண்களையுடைய இந்திரன். அநேகர் - பலர். என எடுத்துக் காட்டும் - என்று புலப்படுத்தும் அரச இளைஞர் யானைகளில் இவர்ந்து தெருவில் பவனி வர, அங்குள்ள மாடங்களில் ஒளியால் அவ்வியானைகள் வெள்ளை யானை களாய்த் தோன்ற, மகளிர் தம் கண்களை அந்த அரச குமரர்களின் பதித்தலால் - பார்த்தலால் - ஆயிரம் கண் உடைய இந்திரன் ஒருவன் அல்லன்; பலர் எனக் காட்சியளித்தனர்.

இந்திரனின் யானை வெள்ளை யானை. அவன் மேனி யெல்லாம் ஆயிரம் கண்கள் உள்ளன.

திருவம் நீண் மறுகு - செல்வம் மிக்க பெரிய தெரு.

(25-35) வேய்ச் சொல் - ஒற்று அறிந்து வந்து கூறும் சொல். வேய்ச் சொல் தொக்க வாய்ச் சொல் போல - மூன்று ஒற்றர் மூலம் அறியப்பட்டுப் பொருளால் ஒத்த உண்மைச் சொற்களைப் போல்.

'ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.' *(திருக்குறள் - 589)*

விரிச்சி - நற்சொல். உரைத்திறம் - சொல் இயல்பு. வினை மேல் செல்லுநர் - வினையை மேற்கொள்ளச் செல்பவர்.

அனையர்க்கு - அவ்வாறு செல்பவர்க்கு. அவ்வினை முடிவதூஉம் காண்டும் - அவர்கள் மேற்கொண்ட செயல் முடிவதையும் கண்டுள்ளோம். அதாஅன்று - அதுவேயல்லாது. பல்லியும் பிறவும் - பிற - காக்கை முதலியன.

பயன் தூக்காது - பயனை ஆராயாது.

துணிபொருள் உடைத்தென - சிறந்த பொருள் உடையது என. கொளினும் - கொண்டாலும். குறைபாடு இன்றே - குறை ஏதும் இல்லை. யாவர் கூற்றும் - எல்லார் சொல்லும். குழந்தை அன்பின் - இன்னது கூற வேண்டும் என்று அறியாமல் வெறும் அன்பு மாத்திரமே கொண்டவை.

பெரும்புகழ் - மிக்கபுகழ். நவிற்றி - உரைத்து. குழந்தை அன்பு மிகுதியால் கூறும் சொற்கள் உலகத்தவர் கூறும் சொற்களைப் போல் திருந்தியன அல்ல. ஆயினும் அந்த மழலைச் சொற்கள் பெற்றோர்க்கு இன்பத்தை அளிப்பன. அது போல் என் சொற்களும் இன்பம் தரும் என்றார்.

என் மனம், நீ வெட்கம் இன்றி நின் குறைபாடுடைய சொற்களால் இறைவன் புகழைப் பாடினாய் என்று நகுகின்றது. விரிச்சி, பல்லியின் சொல் முதலிய சொற்களும் செயல் மேற் கொண்டவர்க்குப் பொருள் பொதிந்தனவாக விளங்குகின்றன. எனவே, உலகில் நிகழும் சொற்கள் எல்லாம் இறைவனால் நிகழ்வன என்று என் மனம் அறியாது போலும்! யான் முதிராத அன்பு கொண்டு நின் புகழ் பாடினேன் என்றார்.

அல்லதை - ஐ - சாரியை.

நாணிலை கொல் - வெட்கமில்லையோ. நகுவது - இகழ்ந்து சிரிக்கின்றது. மனன் - மனம். (23)

## மதி தேய்ந்தே இருக்கக் காரணம்

(நேரிசை யாசிரியப்பா)

473. மன்றுடையான் செஞ்சடைமேல் வாளரவுக் குள்அஞ்சி
என்றுமதி தேய்ந்தே இருக்குமால் - நின்றுதவம்
செய்யுமுனி வோர்காமத் தீப்பிணிக்கஞ் சித்தமது
பொய்உடலை வாட்டுமா போல். (24)

### தெளிவுரை

. நின்றபடி தவம் செய்யும் முனிவோர் காமம் என்ற கொடிய பிணிக்கு அஞ்சித் தம் நிலையற்ற உடலை வாட்டுவர். அது போல், தில்லைச் சிற்றம்பலத்தில் வீற்றிருக்கும் நடராசப் பெருமான் சிவந்த சடைமீது உள்ள கொடிய பாம்புக்கு உள்ளம் அஞ்சி என்றும் மதி தேய்ந்தபடியே இருக்கும்.

### விளக்கம்

சிவபெருமான் திருமுடியில் இருக்கும் சந்திரன் வளராது இருப்பதற்கு ஒரு காரணம் கற்பனையாய்க் கூறப்படுகின்றது. மன்றுடையான் - தில்லை அம்பலம் உடையவன். வாள் அரவு - கொடிய பாம்பு. உள்அஞ்சி - மனம் அஞ்சி. என்றும் - எக்காலத்தும். இருக்குமால் - இருக்கும்.

முனிவோர் உணவினால் உறக்கமும் மங்கையர் தோள் சுவையும் உண்டாவன என்று எண்ணி இருப்பவர். ஆதலால் விரதம் மேற்கொண்டு உடலை வாட்டுவர்.

காமத்தீப்பிணி - காமமாகிய கொடிய நோய். பொய் உடல் - நிலையற்ற உடல்.

வாட்டுமாபோல் - வாட்டுமாறு போல்; வாட்டுவது போல். (24)

## மூன்று கண்களின் செயற்பாடுகள்!

### (கட்டளைக் கலித்துறை)

474. வாடிய நுண்இடை வஞ்சிஅன் னீர்தில்லை மன்றினுள் நின்று
ஆடிய கூத்தன் அலர்விழி மூன்றில் அரும்பகலும்
நீடிய கங்குலும் கண்ணிரண் டால்உற நெற்றிக் கண்ணால்
கூடிய தீப்பொழுது ஆகும்கொல் மாலைக் கொடும் பொழுதே. (25)

**தெளிவுரை**

தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்கல்

வாட்டம் உடைய நுட்பமான இடையையுடைய வஞ்சிக் கொடியைப் போன்ற தோழியரே! தில்லையம்பலத்துள் நின்று ஆடுகின்ற கூத்தப் பெருமான் பெற்றுள்ள கண்கள் மூன்று. அம்மூன்றில் அரிய பகலையும் இரவையும் இரு கண்கள் புலப் படுத்தும். மாலை என்ற கொடிய பொழுது நெற்றிக் கண்ணால் உண்டாகும் போலும்!

**விளக்கம்**

மாலைப் பொழுது தனக்குத் துன்பத்தைத் தருவது. ஆதலால் அதனைத் தலைவி தீப்பொழுது என்கின்றாள். நெற்றிக்கண் அக்கினிக்கண் ஆதலின் தீப்பொழுது உண்டாயிற்று. தீப்பொழுது - விரகம் என்ற தீயை எழுப்பும் பொழுது. பகலையும் இரவையும் இரண்டு கண்கள் செய்ய, அவ்விரண்டு பொழுதுகளுக்கும் இடையேயுள்ள மாலைப் பொழுதை அந்த இரண்டு கண்களுக்கும் இடையே உள்ள நெற்றிக் கண் உண்டாக்கியது என நயம்பட உரைத்தார். வாடிய - வாட்டம் கொண்ட; நுட்பமான. வஞ்சி - வஞ்சிக்கொடி. ஆடிய கூத்தன் - நடராசப் பெருமான். அரும்பகல் - அரிய பகற் போது. நீடிய கங்குல் - நீண்ட இரவுப் பொழுது. உற - உண்டாக. தீப்பொழுது - தீயைச் சொரியும் பொழுது; தீய பொழுது. கொல் - ஐயப் பொருளில் வந்தது. (25)

## அறிவுச் செல்வத்தை அளித்தருள்!

### (நேரிசை ஆசிரியப்பா)

475\. கொடியும் முரசும் கொற்றவெண் குடையும்
பிறர்கொளப் பொறாஅன் தானே கொண்டு
பொது நீங்கு திகிரி திசைதிசை போக்கிச்
செவியில் கண்டு கண்ணில் கூறி
5 இருநிலம் புரக்கும் ஒருபெரு வேந்தன்
மிக் கோன் ஒருவன் வெறுக்கை நோக்குழித்
தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோன்ற
இழப்புறு விழுமம் எய்தி அழுக்குஅறுத்து
மற்றது பெறுதற்கு உற்றன் தெரீஇ
10 அயிற்சுவை பெறாஅன் துயில்சுவை உறாஅன்
மாண்இழை மகளிர் தோள்நலம் கொளாஅன்
சிறுகாற்று வழங்காப் பெருமூச்சு எறிந்து
கவலையுற்று அழிவதூஉம் காண்டும் விறகு எடுத்து
ஊர்தொறும் சுமந்து விற்றுக் கூலிகொண்டு
15 புற்கையும் அடகும் மாந்தி மக்களொடு
மனையும் பிறவும் நோக்கி அயல்மனை
முயற்சியில் மகனை இழித்தனன் எள்ளி
எனக்கு இணைஇலைஎன வினையன் மற்றொருவன்
மனக்களிப்பு உறீஇ மகிழ்வதூஉம் காண்டும், அதனால்
20 செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவாஎனப் படுமே
ஐயுணர்வு அடக்கிய மெய்உணர்வு அல்லதை
உவாக்கடல் சிறுக உலகுஎலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற்கு அரும்புணை இன்றே, அதனால்
25 இருபிறப்பு இயைந்த ஒருபிறப்பு எய்தும்
நான்மறை முனிவர் மூவா யிரவரும்
ஆகுதி வழங்கும் யாக சாலையில்
தூஉ நறும்புகை வான்உற எழுவது
எழுநாப் படைத்த முத்தீக் கடவுள்

30 கடலமிழ்து உமிழ்ந்தாங்கு அவிஅழிந்து உண்ண
வரும்பெரும் தேவரை வானவர் கோனொடும்
விருந்துஎதிர் கொள்கஎன விடுத்தது கடுக்கும்
வலன்உயர் சிறப்பின் புலியூர்க் கிழவநின்
அருள் பெற்று உய்தற்கு உரியன் யான்எனில்
35 பல்உயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்த
அல்லல் செய்யும் அவாஎனப் படும்அவ்
வறுமையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வம் அளித்தருள் எனக்கே. (26)

## தெளிவுரை

(1-13) கொடியையும் முரசையும் அரச வெண்குடையையும் மற்றவர் கைக் கொண்டு விடப் பொறுத்துக் கொள்ளாதவனாய் தானே கொண்டு பிறர்க்கும் பொது என்ற தன்மை நீங்கிய ஆணைச் சக்கரம் பல திசைகளிலும் செலுத்தி, ஒற்றர் மூலமாக நிகழ்வு களைக் கேட்டறிந்து கண் குறிப்பு அறிபவர்க்குச் செய்ய வேண்டி யதைப் பார்வையால் குறித்து, பெரிய நிலத்தை ஆளும் ஒரு மாமன்னனும் தன்னைக் காட்டிலும் சிறந்து விளங்கும் ஒருவனது செல்வத்தை நோக்கும்போது, தன்னிடம் சேர்ந்துள்ள செல்வம் சிறியது என்று தோன்ற, ஒரு பொருளை இழத்தலைப் போன்று துன்பம் உண்டாகப் பெற்று, பொறாமை கொண்டு அத்தகைய செல்வத்தைப் பெறுவதற்கு வேண்டியவற்றை ஆராய்ந்து, உண்ணும் சுவையைப் பெறாதவனாகவும், உறக்கத்தால் உண்டாகும் இன்பத்தைப் பெறாதவனாகவும், பெண்டிரின் காம இன்பத்தை அனுபவிக்காதவனாகவும் முதலில் சிறு மூச்சு விட்டு, பின் பெருமூச்சுக் கொண்டு கவலையுற்று வருந்துவதையும் பார்க்கின்றோம்.

(13-14) விறகைச் சுமந்து கொண்டு ஊர்தொறும் போய் விற்று அதனால் பெறும் கூலியை - வருவாயைக் - கொண்டு, புல்லரிசிக் கூழும், இலையும் உண்டு மக்களுடன் மனையும் பிறவும், அடுத்து வீட்டில் முயற்சி இல்லாத மகனை இழித்துப் பேசி இகழ்ந்து, எனக்கு இணையாரும் இல்லை என மனம் மகிழ்வதையும் காண்கின்றோம்.

(14-24) அதனால், செல்வம் என்பது உள்ளத்தின் நிறைவே ஆகும். குறைவு படாத வறுமை என்பது அவாவே ஆகும். சொல்லப்படும் புலன்களின் வேறுபாட்டால் ஐந்தாகிய அறிவை ஒடுக்கிய உண்மை ஞானமே அல்லாது; பௌர்ணமியில் பொங்கும் கடல் உலகெலாம் விழுங்கும். எனவே ஆசை என்னும் கடலைக் கடப்பதற்கு அரிய தெப்பம் ஏதும் இல்லை.

இரு பிறப்புடைய ஒரு பிறப்புடைய நான்மறை முனிவர் மூவாயிரவரும் ஆகுதி வழங்கு வேள்விச் சாலையில் தூய்மை யான நறுமணம் உடைய புகையானது வான் அளாவி எழுவதை ஏழு நாக்களையுடைய அக்கினித் தேவன் முன்பு பாற்கடல் உண்ட அமிழ்தை உமிழ்ந்து விட்டு, அவியான அமிழ்தை உண்ண அரிய பெருந் தேவரை இந்திரனோடும் விழுந்து எதிர்கொள்க என அழைப்பதைப் போல் விளங்கும். இத்தகைய இயல்புடைய வெற்றி பொருந்திய தில்லைக்குரிய பெருமானே!

நின் அருளைப் பெற்று உய்வதற்கு நான் உரியவன் என்று நீ எண்ணினால் பல உயிர்களின் கூட்டமும் பிறவியாகிய கடலில் அழுந்தத் துன்பம் செய்யும் 'அவா' எனக் கூறப்படும் அந்த வறுமையினின்றும் நீக்கி, அறிவின் செல்வத்தை எனக்கு அளித்தருள்வாயாக!

**விளக்கம்**

(1-13) கொடி முரசு வெண் குடை - அரசன் சின்னங்கள். வெண்குடை - வெண்மையான குடை. கொற்றம் - அரச உரிமை. பிறர் கொளப் பெறாஅன் - மற்றவர் அடையப் பெறாதவனாய். பெறாஅன் - அளபெடை. பொது நீங்கு திகிரி - பிறர்க்குப் பொது வானது என்ற தன்மை நீங்கப் பெற்ற ஆணை. தனக்கு உரியதான ஆணை. திகிரி - சக்கரம். பொது - பொதுத் தன்மை.

திசைதிசை - பல திக்குகளிலும். போக்கி - செலுத்தி. செவியின் கண்டு - ஒற்றர் மூலமாக நாட்டு நிகழ்வைக் கேட்டறிந்து. கண்ணில் கூறி - குறிப்பால் அறிபவர்களுக்குச் செய்ய வேண்டியவற்றைப் பார்வையால் உணர்த்தி.

இருநிலம் - பெரியவுலகம். புரக்கும் - பாதுகாக்கும்.

வெறுக்கை - செல்வம். நோக்குழி - நோக்கும் போது. தொக்க தன் வெறுக்கை - சேர்ந்துள்ள தன் செல்வம். சுருங்கித் தோன்ற - சிறியதாய் விளங்க.

இழிப்புறு விழுமம் - ஒரு பொருளை இழத்தலைப் போன்ற துன்பம். உறு - உவமை உருபு. அழுக்கறுத்து - பொறாமை கொண்டு. உற்றன தெரீஇ - உரியவாக உற்ற உபாயங்களை ஆராய்ந்து. அது - அந்தப் பெருஞ்செல்வத்தை.

அயிற்சுவை - உண்ணும் உணவின் சுவை. துயிற் சுவை - உறக்கத்தின் இன்பம்.

சிறுகாற்று வழங்கா - முதலில் சிறிதாக சிறுமூச்சு விட்டு. பெருமூச்செறிந்து - பின்பு பெருமூச்சு விட்டு.

மாணிழை மகளிர் தோள் நலம் கொளாஅன் - மங்கையரின் புணர்ச்சி இன்பத்தைக் கொள்ளாதவனாய். கவலை உற்று - கவலை அடைந்து. அழிவதூஉம் - வருந்துவதையும். காண்டும் - உலகில் காண்கின்றோம்.

(13-19) கூலி - விலை. புற்கை - புல்லரிசிக்கூழ். அடகு - கீரை; இலை. மாந்தி - உண்டு. மக்களொரு மனையும் நோக்கி - தன் மக்களையும் வீட்டையும் பாதுகாத்து.

அயல்மனை - அடுத்த வீட்டில் உள்ள. முயற்சியில் மகனை - முயற்சியின்றிச் சோம்பியிருக்கும் மனிதனை. இழித்தனள் எள்ளி - இழிவாக இழித்துப் பேசி. எனக்கிணை இலை என - எனக்கு இணையான ஒருவன் இல்லை என்று.

மனக்களிப்பு உறீஇ - மனமகிழ்ச்சியை அடைந்து. மகிழ்வதூஉம் - மகிழ்ச்சி அடைவதையும். காண்டும் - காண் கின்றோம்.

(19-24) செல்வம் என்பது சிந்தையின் நிறைவே - செல்வம் எனக் கருதப்படுவது உள்ள நிறைவே ஆகும்.

அல்கா நல்குரவு - குறையாத வறுமை. அவா - மிக்க ஆசை. ஐயுணர்வு அடக்கிய - செல்லப்படும் புலன்களின் வேறுபாட்டால் ஐந்தாகிய அறிவை ஒடுக்கிய. மெய் உணர்வு - மெய்ஞ்ஞானம். உவாக்கடல் - பௌர்ணமியில் பொங்கும் கடல். அவாக்கடல் - ஆசை என்னும் கடல். கடத்தற்கு - நீந்திக் கடத்தற்கு. அரும்புணை - அரிய தெப்பம்.

(24-38) இருபிறப்பு இயைந்த ஒரு பெரும்பிறப்பு - பூண் நூல் அணிவதற்கு முன் ஒரு பிறப்பும் அதன்பின்னராகிய ஒரு பிறப்பும் ஆகியவை இணைந்த ஒரு பிறப்பு.

மூவாயிரவர் - தில்லையில் வாழ்ந்த மூவாயிரம் அந்தணர். ஆகுதி - வேள்வித் தீயில் இடும் அவி. யாக சாலை - வேள்விச் சாலை. தூஉம் நறும்புகை - தூய நறுமணம் கமழும் புகை. எழுநா - ஏழுநாக்குகளையுடைய அக்கினி; அக்கினிக்கு ஏழுநாக்கு என்பர். எழுவது - எழுவகை.

முத்தீ - மூன்று வகையான தீ; ஆகவனீயம்; தட்சிணாக் கினியம்; காருக பத்தியம்.

கடல் அமிழ்து உமிழ்து - தாம் முன்பு உண்ட பாற்கடல் அமுதத்தை உமிழ்ந்து விட்டு. அவிஅமிழ்து - ஆகுதியான அமிழ்து.

கடுக்கும் - ஒத்து விளங்கும். புலியூர் - சிதம்பரம். கிழவ - உரியவனே! தலைவனே!

அறிவின் செல்வம் - அறிவாகிய செல்வம். அறிவைச் செல்வமாக உரைப்பது மரபு.

> "நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை
> பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்"

என்பது நாலடியார் (251) (26)

## என்ன செய்தீர்!

### (நேரிசை வெண்பா)

476. என்செய்தீர் தில்லைவனத்து ஈசரே புன்முறுவல்
முன்செய்து எயிலை முடியாமல் - கொன்செய்த
பொன்புயங்க நாண்ஏற்றிப் பொன்மலையைத் தேவரீர்
மல்புயங்கள் நோவ வளைத்து. (27)

**தெளிவுரை**

தில்லையம்பலத்தில் கூத்திடும் பெரும! தேவரீர் அச்சத்தைத் தரும் பொலிவுடைய பாம்பை நாணாக ஏற்றிப் பொன் மலையான மேருவை வளமையுடைய தோள்கள் நோவ வளைத்து அம்பை எய்யாமல் என்ன செய்தீர்? புன்முறுவல் செய்தே முப்புரங்களை அழித்திருக்கலாமே! அப்படிச் செய்யாதது ஏன்?

**விளக்கம்**

வில்லை வளைத்துப் புரம் எரித்த நீர் வில்லை வளைக் காமலே அதைச் செய்திருக்கலாமே! என்பது கவிஞர் கருத்து.

எயில் - திரிபுரங்கள். முடியாமல் - அழிக்காமல்.

இறைவர், தேவர்களின் செருக்கைக் கண்டு அம்பு எய்யாமல் நகைத்துப் புரம் எரித்த நீர் வளைத்த வில்லை வளைக்காமலே செய்திருக்கலாமே என்றார். பொற்புயங்கம் - அழகிய பாம்பு; வாசுகி என்ற பாம்பு. கொன் செய்த - அச்சத்தைத் தருகின்ற. நாண் ஏற்றி - விற்கயிறாக ஏற்றி. மல்புயங்கள் - வளப்பம் பொருந்திய தோள்கள். (27)

## தேன் உண்ட வண்டு களிப்பதில் என்ன வியப்பு!

(கட்டளைக் கலித்துறை)

477. வள்ளக் கலச முலைஎம் பிராட்டி வரிநயனக்
கள்ளச் சுரும்பர் களிக்கின்ற வா சடைக் காட்டிற் கங்கை
வெள்ளத்தை மேலிட்டு வெண்தாது அணிந்து
விராட்புருடன்
உள்ளக் கமலத்தின் ஊறுபைந் தேறலை உண்டு
கொண்டே. (28)

**தெளிவுரை**

சடையாகிய காட்டில் கங்கையை வெள்ளத்தை தாங்கி வெண்மையான திருநீற்றை அணிந்து, உள்ளத் தாமரையான சிற்றம்பலத்தில் ஊறும்படியான தேனை உண்ட வண்ணம், கிண்ணத்தைப் போன்றும் குடம் போன்றும் உள்ள கொங்கையை யுடைய எம் பெருமாட்டி உமையம்மை வரிகளையுடைய விழிகளாகிய கள்ளத்தையுடைய வண்டு மகிழ்வது என்ன வியப்பு?

**விளக்கம்**

தேனை உண்ணும் வண்டு களிப்பதில் என்ன வியப்பு என்பது கருத்து.

வள்ளக்கலசம் முலை - கிண்ணம் போன்றும் குடத்தைப் போன்றும் உள்ள கொங்கை.

வரிநயன கள்ளச் சுரும்பர் - சிவந்த வரிகளையுடைய கண்ணான கள்ளம் வாய்ந்த வண்டு.

களிக்கின்றவா - மகிழ்வதில் என்ன வியப்பு; களிக்கின்ற வாறு என்பது ஈறு கெட்டு வந்தது. மேலிட்டு - தாங்கி. வெண்தாது - வெண்மையான பூந்துகள். விராட்புருடன் உள்ளக்கமலம் - தில்லை அம்பலம். ஊறு பைந்தேன் - ஊறும்படியான பசுமையான தேன். உண்டு கொண்டே - உண்டபடி. விராட்புருடன் - பிரபஞ்ச வடிவான இறைவன்.

ஒரு வனத்தில் ஒரு நதியின் வெள்ளத்தின் மேல் மகரந்தம் உடையதாகி மலர்ந்த கமலத்தில் ஊறிய தேறல் என்று வேறு ஒரு பொருள் கொள்ளக் கிடக்கின்றது.

சிதம்பரச் செய்யுள் கோவையில் 14ஆம் பாடல் இதே கருத்தைக் கொண்டுள்ளது.

"பொன்மன்றம் பொற்றா மரைஒக்கும்; அம்மன்றில்
செம்மல் திருமேனி தேன்ஒக்கும்; அத்தேனை
உண்டு களிக்கும் களிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி விழி." (28)

## குறையாச் செல்வரொடு கூட்டுதி

### (நேரிசை ஆசிரியப்பா)

478. கொண்டல்கண் படுக்கும் தண்டலை வளைஇத்
தடம்பணை உடுத்த மருத வைப்பின்
இடம்புரி சுரிமுக வலம்புரி ஈன்ற
தெண்ணீர் நித்திலம் வெண்ணிலவு எறிப்ப
5 ஊற்றெழு தீம்புனல் பாற்கட லாக
விரிதிரைச் சுருட்டே அரவணை யாகப்
பாசடைக் குழாங்கள் பசுங்கதிர் விரிக்கும்
தேசுகொள் மேனித் திருநிற னாகப்
போற்றாது பொதிந்த சேயிதழ்க் கமலம்
10 மலர்விழி முதல பலஉறுப் பாக
அங்கணோர் வனசத்து அரசுவீற் றிருக்கும்
செங்கால் அன்னம் திருமக ளாகப்
பைந்துழாய் முகுந்தன் பள்ளிகொண் டன்ன
அந்தண் பூந்தடம் அளப்பில சூழ்ந்து
15 பல்வளம் பயின்ற தில்லையம் பதியில்
பொன்னின் மன்றின் பூங்கழல் மிழற்ற
நன்னடம் புரியும் ஞானக் கூத்த

ஒருபெரும் புலவனோடு ஊடல் தீரப்
பரவை வாய்தலின் பாய்இருள் நடுநாள்
20 ஏதம்என்று உன்னாது இருகால் ஒருகால்
தூதின் சென்றநின் துணையடிக் கமலத்து
ஈது ஒன்று இயம்புவல் கேள்மதி; பெரும!
அலையா மரபின் ஆணவக் கொடிஎனும்
பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ
25 ஏகலன் தணந்தாங்கு என்னையும் உணராது
மோகமொடு அழுந்தி முயங்குறும் அமையத்து
அங்குஅவட்கு உரிய தங்கையர் இருவருள்
குடிலை என்னும் மடவரல் ஒருத்தி
எய்தரும் புதல்வியர் ஐவரைப் பெற்றனள்
30 மோகினி என்பவள் மூவரைப் பயந்தனள்
ஆகிய புதல்வியர் அங்குஅவர் மூவருள்
கலைஎனப் பெயரிய கணிகைமற் றொருத்தி
தானும் மூவரைத் தந்தனள் அவருள்
மான்எனப் பட்ட மடவரல் ஒருத்தி
35 எண்மூன்று திறத்தரை ஈன்றனள் இத்திறம்
நண்ணிய மடந்தையர் ஐஎழு வரையும்
கிளப்பருங் காமம் கிழத்திய ராக
அளப்பில் காலம் அணைந்தனன் முயங்குழி
முறைபிறழ்ந்து இவரொடு முயங்குதல் ஒழிகஎன
40 அறிஞர்ஆங்கு உணர்த்த அஞ்சினன் ஒரீஇ
நின்னிடைப் புகுந்தனன் மன்னோ என்னிடை
ஞான வல்லியை நன்மணம் புணர்த்தி
ஆனா ஞேயத்து அரும்பொருள் வழங்கி
இறவா வீட்டினில் இருத்திக்
குறையாச் செல்வ ரொடு கூட்டுதி மகிழ்ந்தே. (29)

### தெளிவுரை

(1-17) மேகங்கள் வந்து தங்கும் இயல்பு வாய்ந்த சோலை சூழப் பெற்ற பரந்த வயல்களையுடைய மருத நிலத்தில், இடத்தை விரும்பிய சுழித்த முகத்தையுடைய வலம்புரிச் சங்கு ஈன்ற

தெளிந்த நீர் ஓட்டம் பொருந்திய முத்துக்கள் வெண்ணிலவு போன்று ஒளி வீச, ஊற்றுடைய இனிய நீர் நிலை பாற்கடலாக விளங்கிட, விரிந்த அலைகளின் சுருட்டே பாம்புப் படுக்கையாக விளங்க, பசுமையான தாமரை இலைகளின் தொகுதி பசுமையான ஒளி பரவும் அழகு பொருந்திய திருமாலின் மேனித் திருநிறமாக விளங்க, பொன் தாது பொதிந்த செம்மையான நிறம் வாய்ந்த செந் தாமரை மலர்விழி முதலிய உறுப்பாகப் பொருந்த, அங்கு ஓர் தாமரையில் அரசு வீற்றிருக்கச் சிவந்த காலையுடைய அன்னப் பறவை திருமகளாக அமைய, பசிய துழாய் மாலையைச் சூடிய திருமால் பள்ளி கொண்டிருப்பதைப் போல் அழகிய மலர்த் தடங்கள் அளவில்லாமல் சூழப் பெற்றுள்ள பல வளங்களைப் பொருந்தியுள்ள தில்லையம்பதி. அப்பதியில் உள்ள பொன்னம் பலத்தில் அழகிய கழல் ஒலிக்க நல்ல நடனம் செய்யும் ஞானக் கூத்திடுபவனே!

(18-29) ஒப்பில்லாத புலவனான சுந்தரர் கொண்ட ஊடல் நீங்கப் பரவை நாச்சியாரின் வாயிலில் பரவிய இருளையுடைய நள்ளிரவில் தமக்கு வரும் துன்பத்தைப் பொருட்படுத்தாது இருமுறை ஒருகாலத்தில் சென்று வந்த நின் துணையடியான திருவடிக்கு யான் ஒன்றை சொல்லுவேன். கேட்டருளுக! பெரும! குறையாத இயல்புடைய ஆணவக் கொடி என்று பலராலும் புகழ்ந்து பேசப்படும் சேரிப்பரத்தையுடன் கூடித் தழுவிப் பிரிந்து போகேனாகி என்னையும் உணராது மோகத்துடன் அழுந்திக் கூடும் சமயத்தில் அங்கு அவளுக்கு உரிய தங்கையர் இருவர்களுள் குடிலை சுத்த மாயை என்னும் நங்கை ஒருத்தி அடைவதற்குரிய பெண்கள் ஐவரைப் பெற்றாள்.

(30-45) மோகினி அசுத்தமாயை என்பவள் காலம் நியதி கலை என்னும் மூவரைப் பெற்றாள். மேற்கூறப்பட்ட புதல்வியர் அங்கு அவர்களுள் மூவர் 'கலை' என்ற பெயரையுடைய கணிகை யான ஒருத்தியும் வித்தை, அராகம், மான் என்ற மூவரைப் பெற்றாள்.

மான் எனப்படும் பெண் ஒருத்தி (பிரகிருதி) இருபத்து நால்வரைப் பெற்றாள். (ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம்

ஐந்து, தன் மாத்திரை ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு ஆக இருபத்து நான்கு.)

இவ்வாறு பெற்றெடுக்கப்பட்ட மங்கையர் ஐயெழுவர். (மேலே சொல்லப்பட்ட குடிலை வழி வந்த ஐவரும், மோகினி வந்த மூவரும், கலை வழி வந்த மூவரும், மான் வழி வந்த இருபத்து நால்வரும்) காமக்கிழத்தியராக அளவில்லாத காலம் வரை கூடிப் புணர்ந்த போது மகள் முதலிய முறையுடையவரோடு புணர்தலை ஒழிப்பாயாக என அறிஞர் அங்கு உணர்த்தினர். அதனால் அஞ்சி நீங்கி, நின்னிடம் வந்தேன். என்னிடத்தில் ஞானமாகிய பெண்ணை நல்ல திருமணம் செய்வித்துக் குறையாத அறியப்படுவதாகிய அரிய பொருளை இறவா வீடான முத்தியில் இருத்திக் குறையாச் செல்வத்தை உடையவருடன் என்னைச் சேர்த்தருளுவாயாக!

**விளக்கம்**

(1-12) வரிகள் தில்லையின் இயற்கை வளம் விளக்கப்படுகின்றது.

மேகங்கள் வந்து தங்கும் சோலைகள் சூழப் பெற்றதும் வயல்கள் நிறைந்ததுமான மருத நிலப்பரப்பு. அதில் வலம்புரிச் சங்கு முத்துக்களை ஈன்றது. அம் முத்துக்களின் வெண்மையான நிறத்தால் நீர்நிலை வெண்மையாய் ஆகிப் பாற்கடல் போல் விளங்கியது. அதில் உண்டாகும் அலையே பாம்புப் படுக்கை யாய்ப் பசுமையான இலைத்தொகுதி திருமாலின் மேனி நிறமாக அமைய, பொன் தாது சிந்தும் செந்தாமரை மலர் கண் முதலிய உறுப்பாகத் திகழ்கிறது. அங்குத் தாமரை மலரில் வீற்றிருக்கும் அன்னப்பறவை திருமகளாகத் திகழ்கிறது. திருமால் பள்ளி கொண்டாற் போல் அளவற்ற மலர்ப் பொய்கைகள் சூழப் பெற்றுப் பல்வளம் பொருந்திய தில்லையம்பதி.

கொண்டல் - மேகம். கண்படுக்கும் - உறங்கும்; தங்கும். தண்டலை - சோலை. வளைஇ - சூழ்ந்து. தடம்பணை - பரந்த வயல்கள். உடுத்த - சூழ்ந்த. இடம்புரி - இடத்தை விரும்பும். சுரிமுகம் - சுழிமுகம். வலம்புரி - வலம்புரிச் சங்கு. ஈன்ற - பெற்ற.

தெண்ணீர் - தெளிந்த நீர் ஓட்டம் கொண்ட. நித்திலம் - முத்து. வெண்நிலவு எரிப்ப - வெண்மையான நிலவைப் போல் ஒளி வீச. தீம்புனல் - இனிய நீர். பாற்கடலாக - பாற்கடல் போல் திகழ. நித்திலத்தின் வெண்மையான ஒளியால் திருமால் பாம்புப் படுக்கை போல் நீர்நிலை அலை விளங்குகிறது. பசுமையான இலையின் தொகுதி திருமாலின் நிறத்தைக் காட்டுகிறது. பாசடை - பசுமை + அடை; பசிய தாமரை இலைகள். அவை திருமாலின் மேனி நிறத்துக்கு உவமை. மலர்விழி முதல உறுப்பாவன: திருமுகம், திருவிழி, திருவாய், திருக்கரம், திருவுந்தி, திருவடி. வனசத்து - தாமரை மலரில். செங்கால் அன்னம் - சிவந்த காலை யுடைய அன்னப்பறவை. பைந்துழாய் - பசுமையான துளசி. முகுந்தன் - திருமால். பள்ளி கொண்டன்ன - படுத்திருப்பதைப் போல். அந்தண் பூந்தண் - அழகிய குளிர்ந்த மலர்ப் பொய்கை.

(18-22) ஒரு பெரும் புலவன் - சுந்தர மூர்த்தி நாயனார். பரவை - சுந்தரமூர்த்தி நாயனாரின் முதல் மனைவி. வாய்தலில் - வாயிலில். பாயிருள் நடுநாள் - இருள் பரந்த நள்ளிரவில். ஏதம் - துன்பம் தருவது. இருகால் - இரண்டு முறை. ஒருகால் - ஒருகாலத்தில். தூதின் சென்ற - தூதாகச் சென்ற. தூதாகச் சென்ற வரலாறு: சுந்தரர் சங்கிலி நாச்சியாரை இரண்டாம் முறையாக மணந்து கொண்டார் என்பதைச் செவியேற்ற முதல் மனைவியான பரவை நாச்சியார் சினம் கொண்டார். அவளது சினத்தைத் தணிவிக்கச் சிவபெருமானை வேண்டினார். சுந்தரர் வேண்டு கோளுக்கு இணங்கி இறைவர் இருமுறை பரவையிடம் தூது போனார்.

(23-45) ஆணவம் என்ற சேரிப்பரத்தையுடன் கூடினேன். அவளுடைய தங்கையர் இருவருள் குடிலை - சுத்தமாயை - என்னும் பெண் ஐந்து பெண்களைப் பெற்றாள். மோகினி - அசுத்த மாயை - என்பவள் மூவரைப் பெற்றாள். அம்மூவருள் - காலம், நியதி, கலை ஆகியவரைப் பெற்றாள். கணிகை எனப்படும் கலை என்பவளும் வித்தை, அராகம், மான் என்ற மூவரைப் பெற்றாள். அவர்களுள் மான் எனப்பட்ட மூலப்பிரகிருதி இருபத்து நான்கு பேரைப் பெற்றாள். இப்படிப் பிறந்த ஐஎழுவரை - முப்பத்தைந்து பேரையும் என் காமக்கிழத்தியராய்க் கொண்டேன். அளவில்லாத

காலம் அவர்களைக் கூடியிருந்தேன். அப்போது மகள் முறையான இவர்களைக் கூடுவது ஒழுக்கக் கேடு என்று அறிஞர் கூறினர். அதனால் அவர்களைக் கைவிட்டேன் நின்னை அணுகினேன். எனக்கு ஞானவல்லியை மணம் செய்வித்து ஞேயம் என்ற அரும் பொருளைத் தந்து முத்தி வீட்டில் இருக்கச் செய்து முத்தி பெற்றவருடன் கூட்டுவாய் என வேண்டுகின்றார்.

ஆணவக் கொடி - ஆணவம் என்ற பெண். ஆணவத்தைச் சேரிப்பரத்தையாக உரைக்கின்றார். பரத்தையைப் பலரும் புகழ்வர். ஆதலால் 'பலர் புகழ் சேரிப்பரத்தை' என்றார்.

ஏகலன் தணந்து - தணந்து ஏகலன்; பிரியாதவனாய். என்னையும் உணராது - தன்னை மறந்து. முயங்குறு அமையத்து - புணரும் போது.

அவட்குரிய தங்கையர் இருவர் - அந்த ஆணவம் என்னும் பெண்ணின் தங்கை இருவர்.

குடிலை - சுத்தமாயை. மடவரல் - மடந்தை. குடிலை ஐந்து பேரைப் பெற்றார். அவர்கள் சுத்தமாயையில் தோன்றிய சிவ தத்துவமாகிய சுத்த வித்தை, ஈசுவரன், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் ஐந்து.

மோகினி - மூவரைப் பெற்றாள். மூவர் காலம், நியதி, கலை.

கலை என்பவள் மூவரைப் பெற்றாள். அவர்கள் வித்தை, அராகம், மான் ஆவர். எண் மூன்று திறத்தர் - இருபத்துநான்கு பேர். மான் - மூலப்பிரகிருதி இருபத்து நால்வரைப் பெற்றாள். அவர்கள்: ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, தன் மாத்திரை ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு. ($5 + 5 + 5 + 5 + 4 = 24$) ஐயெழுவர் - முப்பத்தைந்து பேர். அவர்களைக் காமக்கிழத்தியராக அளவில்லாத காலம் புணர்ந்தேன் என்றார். அப்புணர்ச்சி புதல்வியரைப் புணர்ந்தது போலாகும். ஆகையால் அதைக் கைவிடுக அறிஞர் கூறினார். ஆதலால் கைவிட்டேன் என்றார்.

கிளப்பருங்காமக்கிழத்தி - சொல்லுதற்குரிய காமக் கிழத்தி யராக. அளப்பில் காலம் - அளவில்லாத காலம். முறை பிறழ்ந்து -

முறை தவறி; முறை தவறுதலாவது மகள் முறை யுடையவரைக் கூடுதல்.

ஞானவல்லி - ஞானமாகிய பெண். அஞ்சினன் ஒரீஇ - பயந்து விலகி.

மன்னோ - மன் + ஓ; அசைகள்.

புணர்த்தி - சேர்த்து; மணம் செய்வித்து.

ஞேயம் - அறியப்படுவது. இறவா வீடு - முத்திப் பேறு. குறையாச் செல்வர் - வீடுபேற்றைப் பெற்றவர். கூட்டுதி - சேர்ப்பாயாக. (29)

## ஒருகால் கும்பிட்டால் போதும்

### (நேரிசை வெண்பா)

479. கூடும் கதிஒருகால் கும்பிட்டால் போதும்என
நாடும் அவிநயத்தை நண்ணிற்றால் - ஓடியகண்
காதனார் காணஒரு கால்கட்டிக் கையமைத்து
நாதனார் செய்யும் நடம். (30)

**தெளிவுரை**

நீண்ட கண்ணையே காதாக உடைய பாம்பாகிய பதஞ்சலி முனிவர் காணும்படியாய் ஒரு இடக்காலான குஞ்சித பாதத் திருவடியைக் காட்டி அபயக் கரத்தை அமைத்த கரம் ஒரு திருவடியைக் காட்டுவது போலவும், அபயக்கரம் போதும் என்ற குறிப்பைக் காட்டுவது போலவும் காட்டி நடராசர் செய்யும் நடனத்தை ஒரு முறை கண்டால் கதி கூடும் என்ற குறிப்பைக் காட்டி நிற்கும்.

**விளக்கம்**

கூடும் கதி ஒருகால் கும்பிட்டால் - ஒருகால் கும்பிட்டால் கதி கூடும் என்று மாற்றி இயைக்க. ஒருகால் - ஒரு திருவடி; ஒருமுறை எனவும் பொருள் கொள்ளலாம். அவிநயம் - உறுப்புக்களால் தோற்றுவிக்கும் குறிப்பு.

கண்காதனார் - கண்ணையே செவியாக உடைய பாம்பாகிய பதஞ்சலி முனிவர். நண்ணிற்று ஆல் - பொருந்தியுள்ளது. ஒருகால் - இடக்காலைக் காட்டி; குஞ்சித பாதத்தைக் காட்டி. (30)

## உம்பர் முடிக்கச் சிவந்தன

### (கட்டளைக் கலித்துறை)

480. நடிக்கச் சிவந்தது மன்றுஎம் பிராட்டி நறுந்தளிர்க்கை
பிடிக்கச் சிவந்ததும் அன்றுகொ லாம்எம்பிரான் என்று உம்பர்
முடிக்கச் சிவந்தன போலும்கெட் டேன்புரம் மூன்றுமன்று
பொடிக்கச் சிவந்த நகைத்தில்லை யான்மலர்ப் பூங்கழலே. (31)

**தெளிவுரை**

முற்காலத்தில் மூன்று புரங்களும் எரிந்து சாம்பலாகும்படி சிவந்த (சினந்த) நகையையுடைய தில்லையான் மலர் போன்ற அழகிய கழலணிந்த திருவடிகள் நடம் இடுவதால் சிவந்தவை அல்ல. எம் பெருமாட்டியின் நறுமணத் தளிர்க்கை பற்றியதால் சிவந்தவை அல்ல. எம் இறைவனே என்று தேவர்கள் முடியை வைத்து வணங்கியதால் சிவந்தன.

**விளக்கம்**

சிவந்ததும் அன்று - சிவந்த செயல் அன்று. உம்பர் - தேவர். எம்பிராட்டி - எம் இறைவி; உமையாள். நறுந்தளிர்க்கை - நறுமணம் வாய்ந்த தளிர் போன்ற கை. முடிக்க - முடியை வைத்து வணங்க. புரம் மூன்றும் - முப்புரங்கள். பொடிக்க - எரிந்து சாம்பல் பொடியாகும்படி. நகை - சிரிப்பு. பூங்கழல் - மலர் போன்ற திருவடி. வெண் நகையைச் சிவந்த நகை என்றது ஒரு நயம். சிவந்த - சினந்த எனவும் கொள்ளலாம். (31)

*சிதம்பர மும்மணிக் கோவை மூலமும் தெளிவுரையும் விளக்கவுரையும் முற்றுப் பெற்றன*

# 8. சிதம்பர செய்யுட் கோவை

## வெண்பா விகற்பம்

482. பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன்று
இறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர். 1

**தெளிவுரை**

வீடுபேற்றைப் பெறக் கருதியவர் கொன்றை மலரால் ஆன மாலையைச் சூடியவனின் தில்லையில் உள்ள பொன்னம்பலத்தை வணங்குவாராக.

இது சீர் முழுவதும் எதுகை ஒன்றத் தொடுத்தமையால் தலையாகு எதுகை. பூங்கொன்றைக் கண்ணியான் எனவும் பொன் மன்றிறைஞ்சிடுக எனவும் வெண்சீர் வெண்டளையும் இயற்சீர் வெண்டளையும் விரவி வருதலின், இஃது ஒழுகிசைச் செப்பல் ஓசைத்து. இதனானே, வெண்பா இரண்டிடிச் சிறுமையுடைத் தென்பதூஉம் கொள்க. இதனுள் கண்ணியவர் என்னும் ஒரு மொழியைக் கண்ணி எனவும் 'யவர்' எனவும் வகையுளி, செய்து சீர்கொள்ளப்படுதலின், இது மலர் என்னும் வாய்பாட்டான் முடிந்த ஒரு விகற்பக் குறள்வெண்பா. (1)

483. அறனன்று மாதவன் என்ப துலகெந்தை
தாள்காணான் நாணுக் கொள. 2

**தெளிவுரை**

திருமால் சிவபெருமானின் திருவடியைக் காண மாட்டாமல் நாணம் கொண்டான். எனவே அவனை உலகத்தவர் மாதவன் எனக் கூறுதல் நியாயம் ஆகாது.

மாதவன் - இது பெருந்தவத்தை உடையவன் என்ற பொருள் கொண்டு இப்படிக் கூறினார். மாதவன் என்பது வடமொழித் தொடர். இது திருமகள் கணவன் என்று பொருள்படும்.

இஃது இருவிகற்பக் குறள் வெண்பா. மோனை முதலிய தொடையும் தொடைவிகற்பமும் போலாது தொடுத்தமையால், இது செந்தொடை. (2)

484. கண்ணுதல் காட்சி கிடைத்த விழிக்கில்லை
வெல்கூற்றின் தோற்றம் கொளல். 3

**தெளிவுரை**

நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமானின் தோற்றத்தை - தரிசனத்தைக் கண்டவர்க்கு அவர் உயிரைக் கவர்ந்தது போகப் பிறரை வெல்லும் இயமன் வந்து தோன்றமாட்டான்.

**இலக்கணம்**

இதுவும் அது. அனு எழுத்தால் இணை மோனை அமைத்து, ஏனைத் தொடையும் தொடை விகற்பமும் போலாது தொடுத் தமையால், இது மருள் செந்தொடை.

(ஏனைத் தொடையும் தொடை விகற்பமும் போலாது - பிற தொடைகள் இல்லாது அமைத்தமையால்.) (3)

485. திருமுடியில் கண்ணியும் மாலையும் பாம்பு
திருமார்பில் ஆரமும் பாம்பு - பெருமான்
திருவரையில் கட்டிய கச்சையும் பாம்பு
பொருபுயத்தில் கங்கணமும் பாம்பு. 4

**தெளிவுரை**

சிவபெருமானின் திருமுடியில் அடையாள மாலையும் பாம்பு. திருமுடியில் சுற்றப்பட்ட மாலையும் பாம்பு. அவர்தம் திரு மார்பில் அணிந்துள்ள மாலையும் பாம்பு எம்பெருமான்

இடையில். கட்டியுள்ள கச்சையும் பாம்பு. போர் செய்யும் வன்மை யுடைய தோளில் அணிந்துள்ள காப்பும் பாம்பு.

**இலக்கணம்**

இது குறள் இரண்டாய், இடையே தனிச்சொல் பெற்று ஒரு விகற்பமாய் நடத்தலின் ஒரு விகற்பத்து இருகுறள் நேரிசை வெண்பா. அடிதோறும் ஈற்றுச் சீர் ஒரு சொல்லே வரத் தொடுத் தமையால் அடி இயைபு. இது காசு என்னும் வாய்பாட்டுக் குற்றியலுகர இயற்சீரான் முடிந்தது.

(அடிதோறும் ஈற்றுச்சீர் என்றது 'பாம்பு') (4)

486. கறையரவுக் கஞ்சுறா தஞ்சுறூஉம் திங்கள்
இறைவி நறுநுதலைக் கண்டு - பிறைமுடியோன்
கைம்மான் நடம்உவந்த காற்புலிக்கஞ் சாதஞ்சும்
அம்மான் விழிமானைக் கண்டு. 5

**தெளிவுரை**

திங்கள் சிவபெருமான் அணிந்துள்ள நஞ்சின் கறையுடைய பாம்புக்கு அஞ்சாது உமையம்மையின் நல்ல நெற்றியைக் கண்டு அஞ்சும். பிறைத் திங்களைச் சூடிய இறைவன் கையில் உள்ள மானானது நடனத்தை விரும்பிய புலிக்கால் முனிவர்க்கு வியாக்கிர பாதர்க்கு அஞ்சாது இறைவியின் கண் ஆன விழியாகிய மானைக் கண்டு அஞ்சும்.

நடம் - சிவபெருமானின் கூத்து. காற்புலி - புலியைப் போன்ற காலையுடைய. வியாக்கிர பாதர்.

(திங்கள், பாம்புக்கு அஞ்சுவது. அதற்கு அஞ்சாது இறைவியின் நெற்றிக்கு அஞ்சுதல் என்பது தன்னைப் போல் அப்பிறை விளங்குகிறது என்பதால்.)

(மான் புலிக்கு அஞ்ச வேண்டும். ஆனால் அம்மான் மானுக்கு - மானாகிய விழிக்கு - அஞ்சுவது தன்னைப் போல் அம்மானின் விழியும் விளங்குவதனால்.)

### இலக்கணம்

இதுவும் அவ்வாறே இருவிகற்பத்தால் நடந்தமையான், இரு விகற்பத்து இருகுறள் நேரிசை வெண்பா. அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால் அடியெதுகை. இதனுள் முதல்தொடை இரண்டாம் எழுத்து மாத்திரையே ஒன்றத் தொடுத் தமையால் இடையாகு எதுகையுமாம். (5)

487. வணங்கு சிறுமருங்குல் பேரமர்க்கண் மாதர்
அணங்கு புரிவ தறமால் - பிணங்கி
நிணங்காலு முத்தலைவேல் நீள்சடைஎம் கோமாற்கு
இணங்காது போலும் இரவு. 6

### தெளிவுரை

வளைந்த சிறிய இடையை உடைய பெரிய கண்ணையுடைய விருப்புடைய உமையம்மையார் செய்வது முப்பத்திரண்டு அறங்கள் ஆகும். ஆதலால், நிணத்தைக் கக்கும் மூன்று உச்சிகளை யுடைய சூலப்படையையுடைய நீண்ட சடையையுடைய எம் இறைவனுக்குப் பிறரிடம் போய் இரப்பது என்பது பொருந்தாத ஒன்றாகும்.

(மனைவி அறத்தைச் செய்யக் கணவன் மற்றவரிடம் போய் இரத்தல் தக்கதன்று என்பதாம்.)

### இலக்கணம்

இது குறள் இரண்டாய் முதற்குறள் ஈற்றின் கண் ஓர் ஆசிடையிட்டுத் தனிச்சொல் பெற்று ஒரு விகற்பமாய் நடத்தலான், ஒரு விகற்பத்து ஓர் ஆசிடையிட்ட நேரிசை வெண்பா. இதனுள் முதலடி நடுவிருசீரும் முரணத் தொடுத்தமையால் இடைப்புணர் முரண். இது பிறப்பு என்னும் வாய்பாட்டு முற்றுகர இயற்சீரான் முடிந்தது.

முதலடி நடு இருசீரும் முரணத் தொடுத்த தொடர் 'சிறு மருங்குல் பேரமர்க்கண்' என்பதாகும்.

ஆசு: 'ஆசு' என்றால் உலோகங்கள் ஒன்றோடு ஒன்று பற்றுவதற்கு வைக்கப்படும் பற்று (பொடி) போலத் தளைபெற நில்லாத சீரினைத் தலைபெறுதற்காக ஓரசையோ ஈரசையோ கூட்டுவதை ஆசு என்பர். (6)

488. வரத்திற் பிறப்பொன் றருள்கெனினும் வள்ளல்
இரத்தில் கபாலத்தைக் காணூஉப்புரத்தை
இரும்புண்ட ரீகபுரத் தெய்தினார்க் கீயான்
அரும்புண்ட ரீகத் தயன். 7

### தெளிவுரை

அரிய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகன் தனக்குப் பிறவியைக் கொடு என ஒருவர் வேண்டிக் கொண்டாலும் சிவ பெருமான் கையில் உள்ள கபாலத்தை நான்முகன் தலை யோட்டைப் பார்த்துத் தில்லைச் சிற்றம்பலத்தை அடைந்தவர்க்கு அவன் தரமாட்டான்.

(பிரமனின் தலை ஒன்றைக் கிள்ளி அதனைச் சிவன் கையில் கொண்டுள்ளான். அதனால் அதனைக் கண்டு மேலும் அவன் மற்றத் தன் தலையையும் கிள்ளிவிடக் கூடும் என்பதால் பிறர் தனக்குப் பிறவி வேண்டும் என வேண்டிக் கொண்டாலும் தரமாட்டான். இரும்புண்டரீகபுரம் - பெரிய இருதய கமலமான தில்லையம்பதி. புரத்தை - உடலை.

### இலக்கணம்

இதுவும் அவ்வாறே இருவிகற்பமாய் நடத்தலான் இரு விகற்பத்து ஓர் ஆசிடை நேரிசை வெண்பா. இதனுள் முதலடி முதற்சீரும் ஈற்றுச்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் ஒரூஉ மோனை. (7)

489. கூற்றம் குமைத்த குரைகழல்கால் கும்பிட்டுத்
தோற்றம் துடைத்தேம் துடைத்தேமால் - சீற்றம்செய்
ஏற்றினான் தில்லை இடத்தினான் என்னினியாம்
போற்றினால் நல்கும் பொருள். 8

**தெளிவுரை**

யாம், இயமனை அடக்கிய ஒலிக்கின்ற கழல் அணிந்த சிவ பெருமானின் காலை வணங்கிப் பிறவியைப் போக்கிவிட்டோம்; போக்கிவிட்டோம். சினம் உடைய காளை ஊர்தியையுடைய தில்லையம்பதியில் வீற்றிருக்கின்ற சிவபெருமான், போற்றினால் தரக்கூடிய பொருள் யாது உளது? ஏதும் இல்லை.

**இலக்கணம்**

இது முதல் குறள் ஈற்றின் கண் இரண்டு ஆசிடையிட்டு ஒரு விகற்பமாய் நடத்தலால் ஒரு விகற்பத்து ஈராசிடை நேரிசை வெண்பா. (8)

490. நீரில் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. 9

**தெளிவுரை**

நம்மவர்களே! மனித யாக்கையின் இளமைத் தன்மையானது நீரில் தோன்றும் குமிழினைப் போல் தோன்றியுடனே மறையும் இயல்பு கொண்டது. நிறைவான செல்வம் நீரிலே சுருட்டும் படியான பெரிய அலைகள் நிலையற்று அழிவது போல் அழியத் தக்கது. உடம்பானது நீரில் எழுதப்படும் எழுத்தினைப் போல் நிலையற்றது. ஆதலால் நிலைமை இங்ஙனமாக நீங்கள் எம் பெருமான் தில்லைப் பொன்னம்பலத்தை வணங்காதது ஏன்?

**இலக்கணம்**

இதுவும் அவ்வாறே இருவிகற்பமாய் நடத்தலால் இரு விகற்பத்து ஈர் ஆசிடை நேரிசை வெண்பா. (9)

10. வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி அவனை வணங்கு முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய். 10

## தெளிவுரை

தில்லையில் உள்ள பொன்னம்பலத்தைக் கண்ட மலர் போன்ற கண்கள் வாழ்க. எம் இறைவனின் புகழைக் கேட்ட நீண்ட காதுகள் வாழ்க. அப்பெருமானை வணங்கும் முடியையுடைய தலை வாழ்க! அப்பெருமானின் சிறப்பைப் பாடும் வாய் வாழ்க!

இது நான்கடியாய்த் தனிச் சொல் இன்றி ஒரு விகற்பமாய் நடத்தலின் ஒரு விகற்பத்து இன்னிசை வெண்பா. இஃது அடி தோறும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் அடிமோனை. இதனுள் அடிதோறும் ஈற்றுச்சீர் முரணத் தொடுத்தமையாற் கடை முரணுமாம். (10)

492. பூந்தண் பசுந்துழாய்ப் போது நறாவிரி
தேந்தண் திரண்டோள் தேவற்கும் தேவிக்கும்
காந்தள் பதமலர்கள் காமுற்றார் காமுறார்
பாந்தள் முடிச்சூடும் பூ. 11

## தெளிவுரை

அழகிய குளிர்ந்த பசிய துழாய் மலரில் தேன் சிந்தும் மாலை சூடிய திரண்டதோளையுடைய திருமாலுக்கும் உமையம்மை யாருக்கும் கணவனான சிவனின் அடிமலர்களை விரும்பிய வர்கள், ஆதிசேடன் என்ற பாம்பால் முடியில் தாங்கப் பெறும் பூவை (பூமியை) விரும்பமாட்டார்.

(ஒரு மலரை விரும்பியவர் வேறு ஒருமலரை விரும்பார் என்று நயம்படக் கூறப்பட்டது. பாந்தள் முடிசூடும் பூமியை விரும்பார் என்பது இவ்வையத்தில் பிறத்தலை விரும்பமாட்டார் என்பதாம்.

'து' என்ற குற்றெழுத்துத் தனியே நின்றும், 'பூந்' என நெட்டெழுத்து ஒற்றடுத்து நின்றும், 'தண்' எனக் குற்றெழுத்து ஒற்றடுத்து நின்றும் நேரசை நான்கும் வந்தன. 'விரி' எனக் குறில் இணைந்தும், 'நறா' எனக் குறினெடில் இணைந்தும், 'பசுந்' எனக் குறிலிணைந்து ஒற்றடுத்தும், 'துழாய்' எனக் குறில் நெடில் இணைந்தும் ஒற்றடுத்தும் நிரையசை நான்கும் வந்தன. ஓரசைச்சீர் இரண்டனுள் 'பூ' என நேரசைச் சீரும் வந்தவாறு காண்க. இது 'நாள்' என்னும் வாய்பாட்டால் முடிந்தது. (11)

493. புனல்வாழும் புக்குடைந்தோர் தாளூன்றி நின்று
வனசங்காள் செய்தவநீர் வாழியரோ வாழி
பொருவிடையோன் தெய்வப் புலியூரை ஒப்பாள்
திருமுகத்துக் கொப்பச் செயின். 12

**தெளிவுரை**

நீர்ப்பரப்பில் மலர்ந்துள்ள தாமரைகளே! போர் செய்யும் காளை ஊர்தியை உடைய சிவபெருமானின் தெய்வத் தன்மை யுடைய தில்லையம்பதியை ஒத்தவளான உமையம்மையின் திரு முகத்தைப் போல் விளங்க நீர்ப்பரப்பில் மலர்ந்து புகுந்து ஒரு தாளில் நின்று தவம் செய்வீராயின், உம் தவம் வாழ்க!

நீரில் இருத்தலும் மலர்தலும் ஒரு தண்டில் பூத்தலும் ஆகிய தாமரையின் இயல்புகளை நீர்நிலை நிற்றலும் உடல் மெலிதலும் ஒற்றைக் காலில் நிற்றலும் ஆகிய தவம் செய்வோர் முயற்சி களாகப் பொருள் தோன்றுமாறு சொற்கள் அமைந்துள்ளன. இது தலைவன் தலைவியின் நலம் பாராட்டியது.

**இலக்கணம்**

இது பல விகற்பத்து இன்னிசை வெண்பா. தமிழ் வழக்கால் இரு விகற்பமும் பல விகற்பம் எனப்பட்டது. இதன் முதல் அடி முதற்சீர் இரண்டும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் இணை மோனை. இது முதல் தொடை ஒர் எதுகைத்தாயும், ஏனைத்

தொடை வேறோர் எதுகைத் தாயும் வந்தமையால் இரண்டடி எதுகை என்க. இதனுள்ளே தாள்ஊன்றி எனத் தேமாங்காயும், வனசங்காள் எனப் புளிமாங்காயும், புனலழுவம் எனக் கருவிளங் காயும், புக்குடைந்தோர் எனக் கூவிளங்காயுமாக வெண்சீர் நான்கும், 'செயின்' என நிரையசைச் சீரும் வந்தன. (12)

494. **ஆதி முதலுணர்ந்தியா மன்புசெயப் பெற்றவா**
**ஓஒ பெரிதும் அரிதே எளிதேயோ!**
**வேதம் துறைசெய்தான் மெய்துணியான் கைதுணிந்தான்**
**பேதுற்றும் வெஃகேம் பிற.** 13

**தெளிவுரை**

வேதத்தைத் தெரிந்து முறைப்படுத்தியவன் வியாச முனிவன். அவனும் உண்மையை அறியானாகிக் கைதடியப் பட்டான். இங்ஙனமாக, ஆதி முதலான சிவபெருமானை உணர்ந்து அவரிடம் அன்பு செய்யப் பெற்றது மிகவும் அரிதே! இது எளியதாகுமோ! எனவே, யாம் மயங்கியும் பிற தெய்வங் களை விரும்பமாட்டோம்.

**இலக்கணம்**

இதுவும் அது. இதனுள் இரண்டாமடி ஈற்றுச்சீர் இரண்டும் முரணத் தொடுத்தமையால் கடையிணை முரண். இதனுள்ளே 'ஆ' என நெட்டெழுத்தும், 'தி' எனக் குற்றெழுத்தும், 'ஆ' என உயிரெழுத்தும், 'ஓஒ' என அளபெடையெழுத்தும், 'வெஃகேம்' என ஆய்த எழுத்தும், 'உணர்ந்தியாம்' எனக் குற்றியலிகரமும், 'அன்பு' எனக் குற்றியலுகரமும், 'துறை' என ஐகாரக் குறுக்கமும், வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்துகளும், மெய்யும் உயிர் மெய்யுமாகிய அசைக்கு உறுப்பாம் எழுத்துப் பதின் மூன்றும் காண்க. 'முதலுணர்ந்தியாம்' எனக், கனிச்சீர் வெள்ளையின் விரவி வரலாகாமையின் குற்றியலிகரம் (தி) அலகு பெறாது எனத் தள்ளிக் கருவிளங்காய் எனக் சீர் கொள்க. (13)

**495. பொன்மன்றம் பொற்றா மரைஒக்கும் அம்மன்றில்
செம்மல் திருமேனி தேனொக்கும் அத்தேனை
உண்டு களிக்கும் களிவண்டை யொக்குமே
எம்பெரு மாட்டி விழி. 14**

**தெளிவுரை**

தில்லைப் பொன் மன்றம் பொன் தாமரை மலரைப் போன்றது. அம்மன்றத்தில் உள்ள சிவபெருமானின் செந்நிறம் உடைய திருமேனி தேனைப் போன்றது. எம் இறைவியான சிவகாமி அம்மையின் விழி அந்தத் தேனை உண்டு மகிழும் களிப்புடைய வண்டை ஒத்ததாகும்.

**இலக்கணம்**

இதுவும் பல விகற்பத்து இன்னிசை வெண்பா. இதன் முதல் அடியிரண்டும் மூன்றாம் எழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால், மூன்றாமெழுத்து ஒன்று எதுகை. (14)

**496. ஆடகச் செம்பொன் அணிமன் றிடங்கொண்ட
பாடகச் சீறடியாள் பாகத்தான் - சூடகக்கைக்
கங்கையாள் கேள்வன் கழல்தொழூஉக் கைகூப்பி
நின்றிறைஞ்சச் சென்றிறைஞ்சும் கூற்று. 15**

**தெளிவுரை**

ஆடகம் என்ற பொன்னினால் ஆன அழகிய அம்பலத்தில் இடங்கொண்ட பாடகம் என்ற அணியை அணிந்த சிறிய அடியினையுடைய சிவகாமியை ஒரு பக்கத்தில் கொண்டவனும், காப்பு என்ற அணி அணிந்த கையையுடைய கங்கையின் துணை வனுமான கூத்தனின் கழல் அணிந்த அடிகளைக் கைகூப்பி நின்று வணங்கித் துதிக்கும் இயல்புடையவரை இயமன் போய் வணங்குவான்.

**இலக்கணம்**

இதுவும் இரண்டாம் அடியின் இறுதி தனிச் சொல் பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. இதன் மூன்றாமடி முதற்சீரும் மூன்றாம் சீரும் முதல் எழுத்து ஒன்றத் தொடுத்தமையால் பொழிப்பு மோனை. இதனுள் 'செம்பொன்' எனத் தேமாவும், 'அணிமன்' எனப் புளிமாவும், 'கழறொஆஉக்' எனக் கருவிளமும், 'ஆடகச்' எனக் கூவிளமுமாக ஆசிரிய வுரிச்சீர் நான்கும் வந்தன.

சிதம்பர தரிசனம் பெற்றவர்க்குத் துன்பம் இல்லை என்பதாம். (15)

497. காதல் மகளிர் கலக்கக் கலக்குண்டு
பேதுற்றார் நெஞ்சும் பிழைத்தகன்றார் நன்னெஞ்சும்
போதம் படரும் புலியூரே - தாதுண்டு
வண்டுறங்கு நீர்சடையோன் வைப்பு. 16

**தெளிவுரை**

காதல் உடைய மகளிர் கலக்கிடக் கலக்கம் கொண்டு மயக்கம் அடைந்தவரின் நெஞ்சு காமனது மலர் அம்பினால் துன்புறுத்தப்படும். மகளிரின் காதலினின்று தப்பிப் பிழைத்தவர் நல்ல நெஞ்சத்தில் சிவஞானம் பொருந்தும். இத்தகைய இயல்பு வாய்ந்த தில்லையே தேனையுண்டு வண்டுகள் உறங்கும் நீண்ட சடையை உடைய சிவபெருமானின் இருப்பிடமாகும்.

**இலக்கணம்**

இது மூன்றாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. இதன் முதலடி இரண்டாம் எழுத்துத் தகர அகரமும் (த), இரண்டாம் எழுத்துத் தகர உகரமுமாக (து) வந்தமையால் வருக்க எதுகை. (16)

488. காமர் உயிர்செகுக்கும் கண்ஒன்றே - காமருசீர்
மாதர் நலனழிக்கும் கண்ஒன்றே - மாதருக்
கின்னா இரவொழிக்கும் கண்ஒன்றே - இந்நிலத்தில்
தன்னே ரிலாதான் தனக்கு. 17

## தெளிவுரை

இவ்வுலகத்தில் தனக்கு ஒப்பில்லாத சிவபெருமானுக்கு மன்மதனின் உயிரை அழிக்கும் கண் ஒன்று உள்ளது. அது தீயாகிய நெற்றிக்கண். காதலரைப் பிரிந்த மங்கையரின் அழகை அழிக்கும் கண் ஒன்று உள்ளது. அது இடக்கண்ணான சந்திரன். பிரிந்து வாடும் மங்கையரின் துன்பம் தரும் இரவுப் போதை ஒழிப்பது ஒருகண் (அது வலக்கண்ணான கதிரவன்.)

## இலக்கணம்

இஃது அடிதோறும் ஒரூஉத் தொடையமைய முதல் மூன்று அடிகளிலும் தனிச் சொல் பெற்றுப் பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. முதல் மூன்றாமடி ஈற்றயற்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாய் மோனை.

ஈற்றயல் சீரில் மோனை இல்லாமை. கதுவாய் - குறைதல். கீழ் - ஈற்றுச் சீர்க்கு அயல். மேல் - இரண்டாம் சீர். இது நாற்சீர் அடியில் கொள்ளப்படுமுறை. (17)

499. செக்கர்ச் சடையில் பசுங்குழவி வெண்திங்காள்
முக்க ணொருவற்கு நின்னோ டிருசுடரும்
ஒக்க விழித்தலா லுய்ந்தேம் ஒருநீயே
அக்க ணொருமூன்று மாயின்மற் றுய்வுண்டே
மைக்கண் மடாவா ருயிர்க்கு. 18

## தெளிவுரை

தலைவி காமம் மிக்க கழிபடர் கிளவியால் நிலவை நோக்கிக் கூறுதல்.

சிவந்த சடையில் அணியப்பட்டுள்ள இளம் பிறையான வெண்மையான திங்களே!

மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கு நின்னுடன் இரண்டு சுடர்களான சூரியனும் அக்கினியும் ஒக்க இருத்தலால் யாங்கள் உய்ந்தோம். நீ ஒருவன் மட்டும் அக்கண்கள் மூன்று மாயினால் மைப்பூசப் பெற்ற கண்களை உடைய மங்கையர்க்கு உயிர் உய்தல் ஏற்படும்.

சிவபெருமான திங்களுடன் சூரியனையும் அக்கினியையும் பெற்றுள்ளதால் உய்ந்தோம். நீயே அம்மூன்று கண்களாகவும் விளங்கின் எமக்கு உயிர் பிழைப்பு இல்லை என்றாள் தலைவி.

(18)

500. பொன்புரிந்த செஞ்சடைக்கு வெள்ளிப் பரிபுரக்கும்
வெண்டிங்கட் கண்ணியான் வெல்கொடியு மானேறே
அங்கவன்ற னூர்தியுமற் றவ்வேறே அவ்வேற்றின்
கண்டத்திற் கட்டும் கதிர்மணிக்கிங் கென்கொலோ
பைந்தொடியார் செய்த பகை. 19

## தெளிவுரை

பொன்னை விரும்பிய சிவந்த சடைக்கு வெள்ளி இழை இழைக்கும் வெண்மையான திங்கள் அணிந்த சடையை உடைய சிவபெருமானின் வெற்றி பெறுதற்குரிய கொடியும் காளையாம். அங்கு அப்பெருமானின் ஊர்தியும் அந்தக் காளையே ஆகும். அந்தக் காளையின் கழுத்தில் கட்டும் ஒலியையுடைய மணி வளையலை அணிந்த மடந்தையர்க்குப் பகை செய்வதற்கு என்ன காரணம்!

## இலக்கணம்

இது பல விகற்ப ஐந்தடிப் பஃறொடை வெண்பா. இதன் முதல் அடி முதற்சீரும் மூன்றாஞ்சீரும் முரணத் தொடுத்தமையால் இது பலவிகற்பத்து ஐந்தடிப் பஃறொடை வெண்பா. இதன் முதலடி முதற்சீரும் மூன்றாஞ்சீரும் முரணத் தொடுத்தமையால் பொழிப்பு

முரண். நான்காமடி இறுதிச்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கூழை மோனை. இஃது அடிதோறும் இரண்டாமெழுத்து மெல்லினம் வரத் தொடுத் தமையால் இன எதுகை. (19)

501. கருந்தாது கொல்லுங் கருங்கைத்திண் கொல்லர்
வருந்தா தியன்ற தொருவல்விலங்கு பூண்டு
திருந்தாதார் முன்றில்தொறுஞ் சென்றுசிலர் தூங்க
இருந்தேம் களிதூங்கி யாமேமற் றம்ம
அருந்தா தலர்தில்லை யம்பலத்தில் தூங்கும்
பெருந்தேன் முகந்துண்ணப் பெற்று. 20

### தெளிவுரை

கரிய இரும்புத் தொழில் ஆற்றும் கரிய திண்மையான கொல்லர் வருத்தம் இல்லாமல் செய்த ஒரு வலிய விலங்கைப் பூண்டு கொண்டு தம் பகைவர் வீட்டில் முன் பக்கத்தில் போய்ச் செயலற்று இருக்கின்றார்கள். அவர்கள் நிலை அதுவாக, யாம் அரிய பெண் விளங்கும் தில்லை அம்பலத்துள் விளங்கும் பெருந் தேன் அடையின் தேனை அருந்தி மகிழ்வுடன் இருக்கின்றோம்.

சிவபெருமான் பெருந்தேன் என்று கூறப்படுகின்றார். அப் பெருமானை வணங்காதவர் சிலர் பகைவர்க்கு அடிமைப்பட்டுத் தளை பூண்டு விளங்க, அப்பெருமானைத் தரிசித்து யாம் பெரு மகிழ்ச்சியை அடைந்தோம் என்பது கருத்து.

### இலக்கணம்

இஃது ஒரு விகற்பத்து ஆறடிப் பஃறொடை வெண்பா. (20)

502. வின்மதனை வென்ற தலர்விழியே ஒன்னார்தம்
பொன்னெயில் தீமடுத்த தின்னகையே பூமிசையோன்
தார்முடி கொய்தது கூருகிரே ஆருயிருண்
கூற்றுயி ருண்ட தடித்தலமே பேற்றான்
பரசும் பினாகமுஞ் சூலமு மென்னே
கரமலர் சேப்பக் கொளல். 21

**தெளிவுரை**

கரும்பு வில்லையுடைய காமனை வென்றது சிவ பெருமானின் நெற்றியில் பொருந்திய கண் ஆகும். பகைவராகிய அவுணரின் பொலிவுடைய மூன்று புரங்களைத் தீயினால் எரித்தது இனிய அவர்தம் சிரிப்பாகும். தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகனின் மாலை சூடிய தலையைக் கொய்தது கூர்மையான நகம் ஆகும். அரிய உயிர்களை எல்லாம் உண்ணும் இயமன் உயிரை உண்டது திருவடியாகும். இங்ஙனமாகக் காளை ஊர்தியை உடைய சிவபெருமான் மழுப்படை, வில், சூலம் ஆகியவற்றைக் கை சிவக்கக் கொண்டிருப்பதேன்!

**இலக்கணம்**

இது பலவிகற்பத்து ஆறடிப் பஃறொடை வெண்பா. இது முதலடி ஈற்று அயற்சீர் ஒழிந்து மற்ற முச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாய் எதுகை. இரண்டாமடி முதற்சீரும் மூன்றாஞ்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத் தமையால் பொழிப்பெதுகை. மூன்றாமடி முதலியற்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் மேற்கதுவாய் எதுகை. நான்காமடி முதற்சீரும் ஈற்றுச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் ஒரூஉ எதுகை. (21)

503. வானே நிலனே கனலே மறிபுனலே
ஊனேஅவ் வூனி லுயிரே உயிர்த்துணையே
ஆனேறு மேறே அரசே அருட்கடலே
தேனே அமுதே அளியோங்கள் செல்வமே
யானே புலனும் நலனும் இலன்அன்றே
ஆனாலு மென்போன்மற் றார்பெற்றார் அம்பலத்துள்
மாநாட கங்காணும் வாழ்வு. 22

**தெளிவுரை**

வானமே! நிலமே! தீயே! மேலும் கீழும் விழும் அலைகள் மடங்கும் நீரே! உடலே! அந்த உடலில் உள்ள உயிரே! உயிர்க்குத்

துணையே! காளையூர்தியில் ஏறும் காளையே! அரசே! அருள் உடைய கடலே! தேனே! அமுதமே. எளியவராகிய எங்கள் செல்வமே! யான் அறிவும் நற்குண நற்செய்கையும் அற்றவன். என்றாலும் என்னைப் போன்று பொன்னம்பலத்துள் சிறந்த நடனத்தைக் காணும் பேற்றை வேறு எவர் பெற்றார்? எவரும் இலர்.

'வாழ்வு பெற்றார் யார்?' என இயையும்.

## இலக்கணம்

இஃது ஒரு விகற்பத்து ஏழடிப்பஃறொடை வெண்பா. இதன் முதலடி நாற்சீரும் இறுதி எழுத்து ஒன்றத் தொடுத்தமையால் முற்றியைபு. இரண்டாம் அடி முதலயற்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாய் இயைபு. மூன்றாமடி முதற்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் இறுதி எழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கூழை இயைபு. நான்காமடி ஈற்றயற்சீர் ஒழிந்து ஏனைமுச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் மேற் கதுவாய் இயைபு. ஐந்தாமடி முதற்சீரும் இறுதிச் சீரும் இறுதி யெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் ஒரூஉ இயைபு. இது காசு என்னும் வாய்பாட்டு முற்றுகர இயற்சீரான் முடிந்தது. (22)

504. வண்டுஞ் சுரும்பு ஞிமிறுங் குடைந்தார்ப்பத்
தண்டேன் இறைக்கு மிதழி நறு ங்கண்ணி
எண்டோள்முக் கண்ணாகிமயம் புனைமன்றில்
அண்டர்கள் கண்களிப்பத் தொண்டர் அகங்குளிர்ப்ப
நின்றாடு மாடற் குருகா திருத்திரால்
வன்திண் மறலி புடைத்துக்கொடி றுடைக்கும்
அன்றும் உருகீர்கொல் லாம். 23

## தெளிவுரை

வண்டும் சுரும்பும் ஞிமிறும் கிண்டி ஆரவாரம் செய்யக் குளிர்ந்த தேன் சிந்தும் இதழ்களையுடைய கொன்றை முடி மாலையையுடைய எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும்

உடைய சிவபெருமானின் இமயம் போன்ற அம்பலத்தில் தேவர்கள் கண்களிக்கத் தொண்டர்களின் உள்ளம் மகிழ நின்றாடும் கூத்தைக் காண்பதற்கு உருகாமல் இருக்கிறீர். நீவிர் வன்மையான திண்ணிய இயமன் அடித்துக் கன்னத்தை உடைக்கும் போது வருந்துவீர் போலும்!

**இலக்கணம்**

இது பலவிகற்பத்து ஏழடிப் பஃறொடை வெண்பா. இதன் இரண்டாமடி இறுதிச் சீர்இரண்டும் இறுதி எழுத்து ஒன்றத் தொடுத்தமையால் இணையியைபு. மூன்றாமடி முதற்சீரும் இரண்டாஞ்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் இணை எதுகை. நான்காமடி இறுதிச்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் இரண்டாம் எழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கூழை எதுகை. அதுவே இரண்டாஞ்சீரும் இறுதிச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் பொழிப்பியைபு. ஐந்தாமடி முதற்சீரும் இறுதிச்சீரும் முரணத் தொடுத்தமையால் ஒரூஉமுரண். (23)

505. கங்கைக்குக் கண்மலர் சாத்தக் கருங்குவளை
செங்குவளை பூத்தாள் செயலென்னே - எங்கோமான்
பங்குற்றும் தீராப் பசப்பு. 24

எம் பெருமான் கங்கையைப் பார்த்தருளினார். அவ்வளவில் உமையாள் தன் கருங்குவளை மலர் போன்ற கண் செங்குவளை மலர் போல் ஆகச் சிவப்பும் கொண்டாள். எம்பெருமாட்டி எம்பெருமானைச் சேர்ந்திருந்தும் பசலை தீரவில்லை.

கண்மலர் சாத்த - பார்க்க. கருங்குவளை செங்குவளை பூத்தாள் - ஊடலால் விழி சிவந்தாள் உமையாள். கோமானின் பங்கில் உற்றும் பசப்புத் தீரவில்லை.

**இலக்கணம்**

இது மூன்றடியாய் இரண்டடியின் இறுதித் தனிச் சொல் பெற்று ஒரு விகற்பத்தால் வந்தமையால் ஒரு விகற்ப நேரிசைச் சிந்தியல் வெண்பா. (24)

506. கம்பக் கரடக் களிற்றின் கபாயணிந்த
அம்பொன் புயத்தாற் கமைந்ததால் - அம்பை
முலையானைக் கோடணிந்த மார்பு. 25

### தெளிவுரை

உமையம்மையின் முலைச் சுவடும் யானைக் கோட்டின் அடையாளமும் உள்ள மார்பு கட்டுத் தறியில் கட்டும் மதச் சுவட்டையுடைய யானைத் தோல் சட்டையையுடைய தோள் உடைய எம்பெருமானுக்குப் பொருத்தமாக அமைந்தது.

(களிற்றின் கபாய் - யானைத் தோலால் ஆன பெரிய சட்டை.) (25)

507. போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்
கூற்றங் குமைக்க வருமுன் நமரங்காள்
ஏற்றுவந்தான் பொற்றா ளிணை. 26

### தெளிவுரை

நம்மவர்களே! இயமன் உயிர் கொண்டு போக உம்மிடம் வருவதற்கு முன்பு காளையூர்தியை யுடைய சிவபெருமானின் அழகிய திருவடிகளை வணங்குங்கள், வணங்குங்கள், வணங் குங்கள்.

### இலக்கணம்

இது தனிச்சொல் இன்றி மூன்றடியாய் ஒரு விகற்பத்தான் வந்த ஒருவிகற்பத்து இன்னிசைச் சிந்தியல் வெண்பா. இதன் முதலடிநாற்சீரும் ஒரு சொல்லே வரத் தொடுத்தமையால் இரட்டைத் தொடை. (26)

508. உம்பர் பெருமாற்கு ஒளிர்சடிலம் பொன்பூத்த
தன்பொற் புயம்வேட்டேம் தார்முலையும் பொன்பூத்த
பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து. 27

**தெளிவுரை**

தேவரின் தலைவனான சிவபெருமானுக்கு விளங்கும் சடை பொன்னுடையதாய் விளங்கியது. அப்பெருமானின் அழகிய திருத்தோளை விரும்பினோம். விரும்பி எம் மாலையணிந்த மார்பும் பொன்னிறமான கொன்றை மாலை போல் பொன்னிற மாயது. (பசலை பூத்தது)

**இலக்கணம்**

இஃது இரண்டு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா. இதன் முதலடியின் இறுதியெழுத்து இரண்டாமடிக்கு முதலாகவும் அவ்வடியின் இறுதிச்சீர் மூன்றாமடிக்கு முதலாகவும் தொடுத்தமையால் அந்தாதித் தொடை. (27)

509. கருமிடற்றன் செஞ்சடையன் வெண்நீற்றன் என்னும்
மழுவலத்தன் மானிடத்த னென்னும் - முழுவலத்த
மன்றுடையான் தார்வேட்ட மான். 28

**தெளிவுரை**

இது செவிலி கூற்று; தோழி கூற்றுமாம்.

பொன்னம்பலத்தை உடைய சிவனின் கொன்றை மாலையை விரும்பிய மான் போன்ற பெண், காதல் மிக்கு, கரிய கழுத்தை யுடையவன் என்றும், சிவந்த சடையை உடையவன் என்றும், வெண்ணீறு அணிந்தவன் என்றும், மழுப்படையை வலக்கையில் உடையவன் என்றும், மானை இடக்கையில் உடையவன் என்றும் கூறுவாள்.

**இலக்கணம்**

இதுபல விகற்பத்து இன்னிசைச் சிந்தியல் வெண்பா. இதன் முதல்தொடை இரண்டாமெழுத்தின் மேல் நின்ற உயிர் ஒன்றத் தொடுத்தமையால் உயிர் எதுகை. இதன் முதலடி இறுதிச்சீர் ஒழிந்து ஏனை முச்சீரும் முரணத் தொடுத்தமையால் கூழை முரண்.

## வெண்பாஇனம்

510. செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக்கு அடிமுடி யின்றே. 29

### தெளிவுரை

செம்பொன்னால் வேயப் பெற்ற செழுமையுடைய அழகிய சிற்றம்பலத்தில் உள்ள மேருமலையான நடராசப் பெருமானுக்கு ஆதியும் அந்தமும் இல்லை.

### இலக்கணம்

இது விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் உடைத்தாய் அடியிரண்டாய்த் தம்மில் ஒத்து வந்தமையால் குறள் வெண் செந்துறை. (29)

511. கம்பைமாநதி யின்கரைச்சிறு கன்னிபார
முலைத்தழும்பணி
உம்பர்கோன்விடை ஒன்றுலகேழு முண்டதுவே.

### தெளிவுரை

காஞ்சியம்பதியில் உள்ள கம்பை மாநதியின் கரையில் சிறு கன்னியான காமாட்சியம்மையின் கொங்கைத் தழும்பு பொருந்திய சிவபெருமானின் காளை ஊர்தியான ஒன்று (திருமால்) ஏழ் உலகங்களையும் உண்டது.

### இலக்கணம்

இஃது அடியிரண்டாய்ச் சீர் வரையறையின்றி ஈற்றடி குறைந்து வந்தமையால் குறள் வெண்டாழிசை. (30)

512. முன்புல கீன்ற முகிழ்முலைக் கன்னியோடு
இன்புறும் யோகி எழுபுவிக் கரசே. 31

### தெளிவுரை

முன்பு உலகங்களை எல்லாம் ஈன்ற தாமரை அரும்பைப் போன்ற முலையையுடைய கன்னியான பார்வதியுடன் இன்பம் கொள்ளும் யோகியான சிவபெருமான் ஏழு உலகங்களுக்கும் அரசன் ஆவான். (கன்னியாய் இருந்தே உலகு ஈன்றதும் யோகி கன்னியுடன் இன்பம் அடைவதும், அரசராய் இருப்பதும் வியப்பை உண்டு பண்ணுவன.)

### இலக்கணம்

இஃது ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் இன்றிக் குறள் வெண் செந்துறையோடு மாறுபட்டு வந்த குறள் வெண்டாழிசை.

(31)

513. பின்றாழ் நறுங்கூந்தற் பிடிதழீஇ மால்யானைக்
கன்றீனு முக்கட் களிறு. 32

### தெளிவுரை

பின்னே தாழ்ந்த இயற்கை நறுமணத்தையுடைய கூந்தலை யுடைய பெண் யானையைத் தழுவிக் கூடி மூன்று கண்களை யுடைய ஆண் யானை, பெரிய ஆண் யானைக் கன்றை ஈன்றது.

கூந்தல் பிடி - உமையம்மை. கன்று - விநாயகப் பெருமான். முக்கட் களிறு - சிவபெருமான்.

### இலக்கணம்

இது குறள் வெண்பா செப்பலோசையிற் சிதைந்து வந்த குறள் வெண்டாழிசை.

இவை இரண்டும் குறள் வெண்பாவினம். (32)

514. கனகமார் கவின்செய் மன்றில்
அனகநாட கற்கெம் அன்னை
மனைவி,தாய் தந்தை மகள். 33

**தெளிவுரை**

பொன்னால் இயன்ற அழகிய திருச்சிற்றம்பலத்தில் கூத்து இயற்றும் அழகிய எம்பெருமானுக்கு எம் அன்னையான உமையம்மை மனைவியும் தாயும் தங்கையும் மகளும் ஆவாள்.

**இலக்கணம்**

இது மூன்றடியாய் வெண்பாவேபோல் முடிந்தமையால் வெள்ளொத்தாழிசை. இதனுள் 'ஆர்' என நேரசைச்சீர் நின்று மேலே 'கவின்' நிரையசை வர மாச்சீர் போல இயற்சீர் வெண்டளை ஆயினவாறு காண்க. (33)

515. அம்பேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
கொம்பே றுடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே இறந்து விடல். (1)

வாணேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
நீணாகம் பூண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வீணே இறந்து விடல். (2)

கோளாருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
ஆளாக வாண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வாளா இறந்து விடல். (3)

**தெளிவுரை**

அம்பைப் போன்ற மை பூசப் பெற்ற கண்களையுடைய மடந்தையர் பொருட்டு அழிவுற்ற மனமே! கொம்பையுடைய காளையூர்தியை உடைய சிவபெருமானின் கழல் அணிந்த திருவடி களை வணங்கி வீடுபேற்றை அடையாமல் யாதொரு பயனும் இன்றி இறந்து விடுதல் ஏன்?

வாள் போன்ற கண்களையுடைய மகளிர் பொருட்டாக அழிவுற்ற நெஞ்சமே! நீண்ட பாம்பை அணியாய் அணிந்தவனின் கழல் அணிந்த திருவடிகளை வணங்கி வீடுபேற்றைப் பெறாமல் யாதொரு பயனுமின்றி இறந்து போதல் ஏன்?

கொலைத் தன்மையுடைய கண்களையுடைய மகளிர்க்காக வருந்தும் மடமனமே! அடிமையாக நம்மை ஆட்கொண்ட சிவனின் கழல் அணிந்த திருவடிகளை வணங்கி வீடுபேற்றை அடையாமல் யாதொரு பயனும் இன்றி இறந்து விடுவது ஏன்?

**இலக்கணம்**

இது சிந்தியல் வெண்பா ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வந்த வெள்ளொத்தாழிசை. இதில் 'ஆளாக' 'ஆண்டான்' என முதல் இருசீரும் முரணத் தொடுத்தமையால் இணைமுரண். (34)

516. பரசிருக்குந் தமிழ்மூவர் பாட்டிருக்குந் திருமன்றின்
பரசொன் றேந்தி
அரசிருக்கும் பெருமானார்க் காட்செய்யா ரென்செய்வார்
முரசிருக்கும் படைநமனார் முன்னாகும் அந்நாளே. 35

**தெளிவுரை**

பரவித்து திக்கும் தமிழான தேவாரம் ஆன ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர்களின் பாட்டு விளங்கும் சிற்றம் பலத்தில் மழு என்ற ஓர் ஆயுதத்தை ஏந்தி அரசராய் விளங்கும் சிவபெருமானுக்கு ஆட்படாதவர் முரசையுடைய இயமனுக்கு முன் ஆகும் அந்நாளில் அவனைத் தடுத்தற்கு என்ன செய்வார்?

**இலக்கணம்**

இது முதலடி அறுசீராய் ஏனையடி நாற்சீராய் வந்த மூன்றடி வெண்டுறை. (35)

517. படர்தரும்வெவ் வினைத்தொடர்பாற் பவத்தொடர்பப்
பவத்தொடர்பாற் படரா நிற்கும்
விடலரும்வெவ் வினைத்தொடர்பவ் வினைத்தொடர்புக்
கொழிபுண்டே வினையேற் கம்மா
இடர்பெரிது முடையேன் மற் றென்செய்கேன் என்செய்கேன்
அடலரவ மரைக்கசைத்த வடிகளோ வடிகளோ. 36

**தெளிவுரை**

முன் வினையின் தொடர்பினால் பிறவித் தொடர்பு உண்டாகும். அப்பிறவித் தொடர்பால் தொடர்ந்து வரும் விடுதற்கு அரிய கொடிய வினைத் தொடர்பு. அந்த வினைத் தொடர்பு தீ வினையுடைய எனக்கு ஒழிவும் உண்டோ! நான் மிக்க துன்பம் உடையேன்! என்ன செய்வேன்! பாம்பை இடைக்குக் கட்டிய அடிகளே! அடிகளே! நான் என்ன செய்வேன்!

**இலக்கணம்**

இது முதலடியிரண்டும் அறுசீராய் ஏனையடி நாற்சீராய் வந்த நான்கடி வெண்டுறை. (36)

518. கூற்றிருக்கு மடலாழிக் குரிசில்முத லோரிறைஞ்சுக்
கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்கும் தில்லைவனத் தசும்பிருக்கும்
பசும்பொன் மன்றத் தொருதா ளூன்றி
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகிர்
அண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழல் கோதையோ டுங்கறைக்
கண்டனா டுந்திறம் காண்மினோ காண்மினோ. 37

**தெளிவுரை**

கூற்றின் தன்மை தங்கியுள்ள வலிமை வாய்ந்த சக்கரப் படையை யுடைய திருமால் தன்னில் தோன்றிய ஒளி துளிப்பதைப் போன்ற தோற்றத்துடன் கூடிய பசிய பொன்னால் ஆன சிற்றம் பலத்தில் ஒரு காலை ஊன்றி, வண்டு பாட, ஒளியுடைய மகுடம் ஆட, பிறைத்திங்கள் துண்டம் ஆட, (சிவபெருமான்) உடுத்த புலித் தோல் ஆட, வெளி வுலகங்களும் ஆட, நிலைகுலைந்து அகிலம் ஆட, கரிய மேகம் ஓடுதற்குக் காரணமான கூந்தலை யுடைய சிவகாமி அம்மையோடு நஞ்சுக்கறை பொருந்திய

கழுத்தையுடைய கூத்தப் பெருமான் ஆடும் இயல்பைக் காணுங்கள்! காணுங்கள்!

**இலக்கணம்**

இது முதலடியிரண்டும் அறுசீராய் ஓரோசைத்தாய் ஏனையடி நாற்சீராய் வேறோரோசைத்தாய் வந்தமையால் ஏழடி வேற்றொலி வெண்டுறை. (37)

519. உருவலன் அருவல னொருவன்மற் றிருவருக்கு
அரியன் எனவுணர்ந் தறைகுந ரறைகமற்
பரவைதன் மனைவயிற் பாவல னேவலின்
இருமுறை திரிதலின் எளியனென் றெளியனும்
பரவுவன் மன்றம் பணிந்து. 38

**தெளிவுரை**

ஒப்பற்ற கூத்தன் உருவம் உடையவன் அல்லன்; அருவமான வனும் அல்லன். நான்முகனுக்கும் திருமாலுக்கும் அரியவன் என்று உரைப்பார் உரைக்க. அப்பெருமான் சுந்தரமூர்த்தி நாயனாரான புலவர் ஏவுதலால் பரவை நாச்சியாரின் மனைக்குத் தூதாய் இருமுறை போய் வந்தனன். ஆதலால் அவன் எளியன் ஆவான் என்று எளியேனும் சிற்றம்பலத்தைப் பணிந்து துதிப்பேன்.

**இலக்கணம்**

இதுவும் ஈற்றடி ஒரு சீர் குறைந்து வந்தமையால் ஓரொலி வெண்டுறை. இதன் முதலடி நாற்சீரும் முரணத் தொடுத்தமையால் முற்றுமுரண். அதுவே நாற்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் முற்றெதுகையுமாம். (38)

520. அங்கட் கமலத் தலர்கமல மேயீரும் நீரேபோலும்
வெங்கட் சுடிகை விடவரவின் மேயீரும் நீரேபோலும்
திங்கட் சடையீரும் தில்லைவனத் துள்ளீரும் நீரேபோலும் 39

**தெளிவுரை**

(சிவபெருமானே மும்மூர்த்திகள்)

அழகிய இடத்தையுடைய நீரில் மலரும் தாமரையை விரும்பியிருக்கின்ற நான்முகனும் நீவிரே போலும்! கொடிய உச்சியை உடைய நஞ்சுடைய பாம்பின் பாயலில் பொருந்தியுள்ள திருமாலும் நீவிரே போலும்! திங்கள் அணிந்த சடையுடையவரும் தில்லை வனத்துள் உள்ளவரும் நீவிரே போலும்.

**இலக்கணம்**

இஃது அடிதோறும் தனிச்சொற்பெற்று (நீரே போலும்) மூன்றடியால் வந்தமையால் மூன்றடி வெளிவிருத்தம். (39)

521. வெஞ்சம னஞ்ச வேலொ டெதிர்ந்தான் - நமரங்காள்
அஞ்ச லெனுஞ்சொல் லார்சொல வல்லார் - நமரங்காள்
மஞ்சிவ ரிஞ்சி மன்றம் இறைஞ்சீர் - நமரங்காள்
நஞ்சம் அயின்றார் நல்குவர் மாதோ - நமரங்காள். 40

**தெளிவுரை**

கொடிய யமன் நாம் அஞ்சும்படி தன் கையில் சூலப் படையுடன் வந்தான், நம்மவர்களே! அஞ்ச வேண்டா என்ற சொல்லைக் கூற வல்லார் யார்? நம்மவர்களே! அவர் கூத்தப் பெருமான். மேகம் தவழ்ந்து ஏறுகின்ற மதிலையுடைய சிற்றம் பலத்தை நீங்கள் வணங்குவீராக, நம்மவர்களே! நம்மவர்களே, பாற்கடலில் எழுந்த நஞ்சை உண்டவர் நமக்கு அருள்வார்! நம்மவர்களே!

சிதம்பர தரிசனம் யமபயத்தைப் போக்கும் என்பது கருத்து.

**இலக்கணம்**

இது நான்கடியாய் அடிதோறும் தனிச்சொல் பெற்று வந்தமையால் நான்கடி வெளிவிருத்தம். (தனிச் சொல் - நமரங்காள் என்பது)
(40)

### ஆசிரியப்பா விகற்பம்

522. பொற்றாது பொதிந்த சிற்சபை பொலியப்
பச்சிளங் கொடியொடு படரும்
செக்கர் வார்சடைக் கற்பகத் தருவே. 41

**தெளிவுரை**

பொன் உலோகம் பொருந்திய சிற்சபையானது விளங்கப் பசிய இளங்கொடி படரும் சிவந்த நீண்ட சடையையுடைய கற்பகத் தருவில்!

**இலக்கணம்**

இஃது ஈற்றயலடி முச்சீராய் ஏனைய அடி நாற்சீராய் வந்தமையால் நேரிசையாசிரியம். இஃது அடிதோறும் முதற்சீர் முர்ணத் தொடுத்தமையால் அடிமுரண். இதனுள் பொதிந்த சிற் சபை என நேரொன்றாசிரியத்தளையும் 'சிற்சபை பொலிய' என நிரையொன்றாசிரியத்தளையும் வந்தவாறு காண்க. இதனானே ஆசிரியம் மூன்றடிச் சிறுமையுடைத்து என்பதூஉம் அறிக. (41)

523. பூவந் தண்ண் புனமயி லகவ
மாஅங் குயில்கள் சாஅய்ந் தொளிப்பக்
கோஒ டரங்கள் முசுவொடும் வெரீஇக்
காஅல் தழீஇக் கவிழ்ந்ந் தொடுங்கச்
சூஉல் முதிர்ந்து காஅல் வீஇழ்
வாஅன் தாஅழ் மழைப்பெயல் தலைஇத்
தேஎன் தாஅழ் பூஉங் காஅ
வளங்ங் கனிந்த மணிமன்றுள்
விளங்ங் கொளியை உளங்கொளல் தவமே. 42

**தெளிவுரை**

அழகிய குளிர்ந்த புனத்தில் உள்ள மயில்கள் அகவ, மாமரத்தில் உள்ள குயில்கள் மெலிந்து ஒளிந்து கொள்ள, மரக்

கொம்புகளில் வாழும் குரங்குகள் முசு என்ற குரங்குடன் அஞ்சிக் குளிர் காரணமாகக் கால்களையும் கைகளால் தழுவிக் கவிழ்ந்து ஒடுங்கக், கருப்பம் முதிர்ந்த மழைக்கால் வானினின்று விழும் மழையானது பெய்திடத் தேன் சிந்தும் பூஞ்சோலை சூழ்ந்த வளம் கொழித்த அழகிய சிற்றம்பலத்துள் விளங்கும்படியான ஒளி யுடைய கூத்தப்பெருமானை மனத்தில் கொள்ளல் தவமாகும்.

இதுவும் அது. இஃது அடிதோறும் முதற்கண்ணே அளபெடுத்தமையால் அடியளபெடை. இதனுள் இணையளபெடை முதலாகிய விகற்பம் ஏழும் முறையானே வந்தவாறு காண்க. ஏனைத் தொடை ஏழும், விகற்பம் இருபத்தெட்டும் முன்னர்க்காட்டப்பட்டன. (42)

524. **தண்ணென் கடுக்கை கண்ணீர் கலுழ்தர**
**வெண்மதிக் கண்ணி சூடும்**
**கண்ணுதற் கடவுள்**
**புண்ணியப் பொதுவி லாடும் பூங்கழல் இறைஞ்சுதும்**
**விண்மிசைப் போகிய வீடுபெறற் பொருட்டே.** 43

**தெளிவுரை**

குளிர்ந்த கொன்றை மாலை தேனான நீரைச் சொரிய வெண்ணிறம் உடைய தலை மாலையைச் சூடும் நெற்றிக் கண்ணை யுடைய சிவபெருமான் நன்மையுடைய அம்பலத்தில் ஆடுகின்ற அழகிய கழலணிந்த திருவடிகளை, தேவர் உலகத்துக்கு மேல் அமைந்துள்ள முத்தியை அடைதற் பொருட்டாக வணங்குவோம்.

**இலக்கணம்**

இது முதலடியும் ஈற்றடியும் அளவடியாய்க் குறளடியும் சிந்தடியும் இடையிட்டுத் தொடுத்தமையால் இணைக் குறளாசிரியம். இவ்வகவலுள் 'புண்ணியப் பொதுவி லாடும் பூங்கழ லிறைஞ்சுதும்' என நெடிலடியும் அருகி வந்தவாறு காண்க. குறளடி முதல் நான்கும் இதனுள்ளே வந்தன; ஏனைக் கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்துள் காண்க. (43)

525. மாயிரு விசும்பின் தூநிலாப் பரப்பிப்
பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும்
மின்செய் கொண்மூ வெள்ளிவீழ் வீழ்ப்பப்
புலியூர் மன்றின் ஒலிகழல் மிழற்றப்
பரம நாடக மிருவரைக் காட்டும்
எரிநிறத் தைம்முகத்து எண்டோள் முக்கண்
கருமிடற் றொருவநின் செஞ்சடைப் பொலிதலின்
நோயு மருந்து மொருவழிக் கிடைத்தென
ஆருயிர் தரித்தனள் அன்றே அதாஅன்று
தெள்ளமு தன்னவர் உள்ளுயிர் குடிக்குமித்
திங்க ளொன்றே திருமுடிக் கணியின்
கங்கை யாளும் உயிர்வா ழாளே. 44

## தெளிவுரை

மிகப் பெரிய வானில் தூய்மையான நிலவு ஒளியைப் பரப்பிப் பரவியுள்ள இருளைப் போக்கும் குளிர்ந்த பிறைத் திங்களான முடிமாலையும், மின்னலைத் தோற்றுவிக்கும் மேகம் வெள்ளி விழுதை விழுத்துவதைப் போல் மழை பொழிய, அதனால் பொன் போன்ற மலரையுடைய கொன்றைப் பூவும், தில்லைப் பொன்னம்பலத்தில் ஒலிக்கும் கழல் ஒலிக்கப் பரமானந்தக் கூத்தினைப் பதஞ்சலி வியாக்கிர பாதர் ஆகிய இருவர்க்குக் காட்டும் தீயைப் போன்ற மேனி நிறத்தையும் எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் கரிய கழுத்தையும் உடைய ஒருவனே! நினது சிவந்த சடையில் விளங்குகின்றன. அதனால் நோயும் அது போக்குதற்குரிய மருந்தும் ஓரிடத்தில் கிடைத்ததனால் இவள் அரிய உயிரைத் தாங்கியிருந்தாள். அதுவே அல்லாமல் தெளிந்த அமுதத்தைப் போன்றவளின் உயிரைப் பறிக்கும் இத் திங்கள் ஒன்றை மட்டும் நீ முடியில் அணிந்தால் கங்கையும் உயிருடன் இருக்க மாட்டாள்.

## *இது தோழி கூற்று*

**இலக்கணம்**

இது முற்றும் நேரடியாய் வந்தமையின் நிலை மண்டில ஆசிரியவிருத்தம், இதனுள் 'பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும்' என இயற்றளை வெள்ளடியும், 'பொன்செய் மலர்ப் பூங் கொன்றையும்' என வஞ்சியடியும், மயங்கி வந்தவாறு காண்க. 'எரிநிறத் தைம்முகத்து எண்டோள் முக்கண்' என முதற்சீர் ஒழிந்து ஏனைமுச்சீரும் முரணத் தொடுத்தமையால் கடைக்கூழை முரண். (44)

526. **தீர்த்தம் என்பது சிவகங் கையே**
**ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே**
**மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே.** 45

**தெளிவுரை**

தீர்த்தம் என்று சிறப்பித்துப் பேசப்படுவது தில்லையில் உள்ள சிவகங்கை ஆகும். போற்றி வணங்கத் தக்கது என்று சிறப்பித்துப் பேசப்படுவது பெரும்பற்றப் புலியூரான சிதம்பரம் ஆகும். மூர்த்திகளில் சிறந்தது எனச் சிறப்பித்துப் பேசப்படுவது நடராசப் பெருமானின் திருவுருவாகும்.

**இலக்கணம்**

இது முதலிடை கடையடிகளை மாறி மாறி உரைப்பினும் பொருள் திரியாமையின் அடிமறி மண்டில ஆசிரியம். (45)

## ஆசிரியப்பா இனம்

527. **சத்தமு மாகியச் சத்தத் தாற்பெறும்**
**அத்தமு மாகலின் அனந்தன் கண்களே**
**உத்தம னைந்தெழுந் துருவம் காண்பன.** 46

### தெளிவுரை

திருவைந்தெழுத்தின், ஒலியுருவமும் பொருளும் கூத்தப் பெருமானாதலின், ஒலியைக் கேட்பதற்கும் அவ்வொலிப் பொருளான மூர்த்தியைக் காண்பதற்கும் ஒருங்கே ஆற்றல் பெற்றவை பதஞ்சலி முனிவர் கண்களே ஆகும்.

### இலக்கணம்

இது மூன்றடியாய்த் தம்மில் ஒத்துவந்தமையால் ஆசிரியத் தாழிசை. (46)

528. (1) சிற்றம் பலத்து நடிக்கும் சிவபெருமான்
கற்றைச் சடைக்கு முடிக்கும் சுடர்த்திங்கள்
மற்றப் புனல்மங்கை வாணுதலை யொக்குமால்.

(2) பேரம் பலத்து நடிக்கும் சிவபெருமான்
வார்செஞ் சடைக்கு முடிக்கும் சுடர்த்திங்கள்
நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச் சொக்குமால்.

(3) பொன்னம் பலத்து நடிக்கும் சிவபெருமான்
மின்னும் சடைக்கு முடிக்கும் சுடர்த்திங்கள்
அந்நங்கை செங்கைக்கு அணிவளையு மொக்குமால்.47

### தெளிவுரை

(1) தில்லைப் பொன்னம்பலத்தில் கூத்து இயற்றும் சிவ பெருமானின் கற்றையான சடையில் அணிந்து கொள்ளும் ஒளியுடைய திங்கள் நீர்க் கங்கையின் ஒளியுடைய நெற்றியை ஒத்ததாகும்.

(2) தில்லைப் பேரம்பலத்தில் நடிக்கும் சிவபெருமான் தம் நீண்ட சிவந்த சடைக்கு அணிந்து கொள்ளும் ஒளியுடைய பிறைச் சந்திரன் நீர் மங்கையான கங்கையின் கொங்கையில் அணிந்து கொள்ளும் முத்துப் பதித்த கச்சைப் போன்றதாகும்.

(3) தில்லைப் பொன்னம்பலத்தில் கூத்து இயற்றும் சிவ பெருமான் தம் மின்னும் சடையில் அணிந்து கொள்ளும் ஒளி யுடைய பிறைத்திங்கள் அக்கங்கை தன் செங்கையில் அணிந்து கொள்ளும் வளையலைப் போன்றதாகும்.

சந்திரன் கங்கையின் நெற்றியையும் முத்துக் கச்சையும் வளையையும் ஒத்தது என்பதாம். சிற்றம்பலம் பேரம்பலம், பொன்னம்பலம் என்பவை தில்லையில் உள்ள வெவ்வேறு அம்பலங்கள்.

**இலக்கணம்**

இஃது ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த ஆசிரியத் தாழிசை. (47)

529 நாகம் பொதிசடைமேல் நாண்மதியும் வாண்மதியோ
 ணங்கை கங்குல்
மேகஞ்செய் கூத்தன் மிலைச்சுந் தலைக்கலனும்
 விளங்கும் தோற்றம்
ஆகம் பகுந்தளித்த வந்நாளி லம்பலத்தான்
மாகம் பதியும் மதியும் பகுந்தளித்த
 வண்ணம் போலும். 48

**தெளிவுரை**

பாம்பு அணியப்பட்ட சடையில் பிறை மதியும் உமை யம்மையின் இருள் போன்ற மேகத்தைப் போன்ற கூந்தலில் சூடிக் கொள்ளும் ஒளியுடைய பிறைமதி என்ற தலையணியும் விளங்கு கின்ற தோற்றம், தம் உடம்பில் இடப்பாகத்தைப் பகிர்ந்து தந்த அந் நாளில் அம்பலத்துக்குரிய கூத்தப் பெருமான் வானத்தில் உலவும் பிறைத்திங்களையும் பகுத்துத் தந்தாற் போன்ற தன்மையுடைய தாகும்.

**இலக்கணம்**

இது நான்காடியாய் ஈற்றயலடி குறைந்து வந்த ஆசிரியத்துறை. (48)

530. மாயிரு ஞாலத்து மன்னுயிர்கள் கண்களிப்ப
மன்று ளாடும்
நாயகன் கண்டங் கறுத்தன்றே பொன்னுலகை
நல்கிற் றம்மா
நாயகன் கண்டங் கறாதேலந் நாட்டமரர்
சேயிழை மாந்தருக்குச் செங்கைகளும் கொங்கைகளுஞ்
சிவக்கும் போலும். 49

**தெளிவுரை**

மிகப்பெரிய இவ்வுலகத்தில் பொருந்திய உயிர்க்ள் கண் கண்டு மகிழத் தில்லை மன்றுள் ஆடும் நாயகன் திருக்கழுத்துக் கறுத்து அக்காலத்தில் தேவர்களுக்கு உயிரைக் கொடுத்தது. அங்ஙனம் அவர் கழுத்து நஞ்சையுண்டு கறுக்காமல் இருந்தால் தேவர்களின் பெண்டிர்க்குச் சிவந்த கைகளும் கொங்கைகளும் சிவந்திருக்கும்!

நஞ்சையுண்டு எம்பிரான் கழுத்துக் கறுக்காது இருந்திருக்கு மாயின், தேவர் இறந்துபடுவர். அவர் பெண்டிர் மார்பில் அடித்துக் கொண்டு வருந்துவர் என்பதாம். கைகளும் மார்பும் சிவக்கக் காரணம் மார்பில் அடித்துக் கொண்டு அழுதலால்! (49)

531. உண்டாங் கெனினு மிலதென் றறிஞர்கள்
பொய்யெனப் புகலவு மெய்யெனப் பெயர்பெற்று
உன்னாமுன மின்னாமென வுளதாய்
மாய்வது நிலையில் யாக்கை
கண்டாங் கிகழுங் கிழமுதி ரமையத்
தைவளி பித்தென மெய்தரும் வித்திற்
கடலில் திரையென வுடலில் திரையொடு
கலியா நின்றன நலிவுசெய் நோய்கள்

புண்டாங் கயின்முக் குடுமிப் படையொடு
எயிறலைத் தழல்விழித் துயிருணக் கனல்சேர்
புகையாமென நிழலாமெனத் திரியா நின்றது
கொலைசெய் கூற்றம்
விண்டாங் ககலுபு மெய்ப்பொருள் துணிவோர்
மின்பொலி பொன்புனை மன்றிலெம் முயிராம்
விமலன் குஞ்சித கமலம் கும்பிட
வேண்டுவர் வேண்டார் விண்மிசை யுலகே. 50

**தெளிவுரை**

உடல், உண்டு என்றாலும் அதனை இல்லை என்று அறிஞர் உரைக்கும் பொய்யானது எனக் கூறவும், மெய் என்ற பெயரை யுடைய நினைக்கும் முன்னம் மின்னலைப் போல் உள்ளதாய்த் தோன்றி அழிவது அந்நிலையற்ற யாக்கை.

கண்ட மாத்திரத்தில் இகழும் முதுமை மிக்க பருவத்தில் கபம் வாதம் பித்தம் என்ற இவை காரணமாக உடலில், கடலில் உண்டாகும் அலை போல் உடலில் சுருக்கம் உண்டாவதுடன் வருத்தும் நோய்களும் மிகுகின்றன.

உடலைப் புண்ணாகக் குத்தும் கூர்மையான மூன்று உச்சிகளையுடைய திரி சூலப்படையொடு பற்களைக் கடித்துக் கொண்டு தீப்போல் விழித்துப் பார்த்து, உயிரைக் கொண்டு போவதற்காகத் தீயையுடைய புகையைப் போலவும் நிழலைப் போலவும் இயமனானவன் வந்தனன்.

பிற பொருளைத் துறந்து உண்மையான பொருளான இறைவனை நாடும் அறிஞர் மின் போல் விளங்கும் பொன்னால் இயன்ற அம்பலத்தில் எம் உயிரான மலமற்ற சிவபெருமானின் தூக்கிய திருவடித் தாமரையைக் கும்பிட விரும்புவர் சொர்க்கப் பதவிக்கு மேல் உள்ள வீட்டையும் விரும்ப மாட்டார்.

அடியார் நடராசனின் பதத்தைக் கும்பிட விரும்புவதே அல்லாது வீடுபேற்றையும் விரும்பார் என்க.

'கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'

என்பது பெரிய புராணம்.

**இலக்கணம்**

இது முதலடியும் மூன்றாமடியும் பதினான்கு சீராய் ஏனை இரண்டடியும் பதினாறு சீராய் வந்தமையின் இடையிடை குறைந்து வந்த ஆசிரியத்துறை. (50)

532. திங்கட் அடைக்கற்றைப் புறத்தே டிருமார்பிற்
பைங்கண் தலைகள் பலவு நகுவ போலுமால்
பைங்கட் டலைகள் நகுவகண்டு
அங்கண் கமலத் தயனு மாலு மழுவரால். 51

**தெளிவுரை**

பிறைச் சந்திரன் சூடப் பெற்ற சடைத் தொகுதியினையுடைய சிவபெருமானின் மணம் பொருந்திய மார்பில் பசுமையான கண்களையுடைய தலைகள் பல சிரிப்பனவாய் விளங்கின. அங்ஙனம் அவை சிரிப்பதைக் கண்ட அழகிய இடத்தையுடைய தாமரையில் வீற்றிருக்கும் நான்முகனும் திருமாலும் வருந்தி அழுவர்.

தலைகள் என்பவை முற்காலத்தில் இருந்த நான்முகன் திருமால் தலைகள். அவற்றைக் கண்ட நான்முகனும் திருமாலும் தம் நிலையாமையை உணர்ந்து தமக்கும் அந்நிலை வரும் என்பதால் அழுதனர். (51)

533. கனம ளித்தபைங் காவில்வெண் தரளமும்
பவளமும் கமுகீனப்
புனம ளித்தபூங் கொன்றைபொன் சொரிதரப்
புண்ணிய மலர்தில்லை

வனம ளித்ததே யெனினுமோ ரானந்த
மாக்கடல் திளைத் தாடும்
அனம ளித்தவேழ் பொழிற்குமோர் பலமென்ப
தம்பொனம் பலந்தானே. 52

## தெளிவுரை

மேகங்கள் வந்து தங்கும் பசுமையான சோலையில் வெண்மையான முத்தும் செம்மையான பவளமும் பாக்கு மரங்கள் ஈனும். அக்காட்டில் உள்ள பூங்கொன்றைப் பொன்னைச் சொரியும். இத்தகைய இயல்புடையது தில்லைவனம். அவ்வனம் அளித்த ஓர் ஆனந்த மாக்கடலில் சிவபெருமானின் - திளைத்து ஆடும் அன்னம் அளித்த ஏழ் சோலைக்கும் ஓர் பழம் எனக் கூறுமாறு விளங்குவது அப்பொன்னம்பலம் ஆகும்.

ஒரு வனத்தில் உள்ள பழம் ஏழு சோலைகளுக்கும் உரியதாயிற்று என்னும் பொருள் இதில் அமைந்துள்ளது.

கனம் - மேகம். ஆனந்த மாக்கடல் - சிவபெருமான். அனம் - அன்னப்பறவை போன்ற சிவகாமி. ஏழ்பொழில் - ஏழு சோலைகள். ஏழ் உலகங்கள். அனம் அளித்த ஏழ் பொழில் - உமா தேவியாரால் பெறப்பட்ட ஏழ் உலகங்கள். பலம் - பாழ்; பயன்.

## இலக்கணம்

இஃது அறுசீர்க்கழி நெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம்.

(52)

534. கோமுனி வருக்குமரி தாய்முதும றைப்பனுவல்
கூறிய பரப்பிரமமாம்
ஓமெனு மெழுத்தின்படி வாய்நட நவிற்றுபுலி
யூரன்மகு டச்சடில மேல்
மாமதி யினைத்தனது கேடென எடுப்பமத
மாமுகன் முகக்கை தொடரத்
தூமதி பணிப்பகை யெனாவர நதிப்புகவோர்
தோணியென விட்டகலுமே. 53

**தெளிவுரை**

சிறந்த முனிவர்க்கும் அறிவதற்கு அரிய பழைமையுடைய வேத நூல் உரைக்கின்ற மேலான கடவுளான ஓம் என்ற எழுத்தின் வடிவாய் நடம் புரியும் பெரும்பற்றப் புலியூரனது சடைமுடி மீது உள்ள சிறந்த பிறைத் திங்களைத் தன் கொம்பாகும் என்று கருதி யானை முகனான விநாயகப் பெருமான் தம் தும்பிக்கையால் தொட்டார். அப்பிறைத் திங்களோ விநாயகரின் துதிக்கையை இது பாம்பான பகையானது என்று எண்ணிக் கங்கையாற்றில் புகுந்தது. அந்தப் பிறைத் திங்களை ஓடமாகும் என்று நினைத்து விநாயகர் அப்பிறையை விட்டு அகன்றார்.

கோமுனிவர் - சிறந்த முனிவர். மறைப்பனுவல் - வேதநூல். பரப்பிரமம் - கூத்தப்பெருமான். புலியூரன் - கூத்தப்பெருமான். கோடு - கொம்பு. மதமாமுகன் - யானை முகனான விநாயகர். முகக்கை - தும்பிக்கை. பணிப்பகை - பாம்பாகிய தன் பகை. எனா - என்று.

**இலக்கணம்**

இஃது எழுசீர்க்கழிநெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம். (53)

535. அருவருக்கு முலகவாழ் வடங்க நீத்தோர்க்கு
ஆனந்தப் பெருவாழ்வா மாடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்ணெனுமெண் வகையுறுப்பின் வடிவுகொண்ட
ஒருவனுக்கு மொருத்திக்கும் உருவொன் றாலவ்
வுருவையிஃது ஒருத்தன் என்கோ ஒருத்தி என்கோ
இருவருக்கு முரித்தா ஒருவ ரென்றோர்
இயற்சொலில தெனின்யான்மற் றென்சொல் கேனே. 54

**தெளிவுரை**

வெறுக்கக் கூடிய உலக வாழ்வை முற்றும் துறந்தவர்க்கு ஆனந்தப் பெருவாழ்வாகிய ஆடலை ஆடிக்காட்ட, கதிரவன்,

சந்திரன், காற்று, வான், இயமானன், தீ, நீர், மண் என்ற எட்டு வகையான உறுப்பையுடைய வடிவு கொண்ட சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் வடிவம் ஒன்றே. அவ்வடிவை 'இஃது ஒருத்தன்' என்று கூறுவேனோ! ஒருத்தி என்று கூறுவேனோ! இருவரையும் உளப்படுத்தும் ஒருவர் என்ற இயற் சொல் ஒன்று இல்லை என்றால் யான் வேறு எச்சொல்லால் கூறுவேன்?

**இலக்கணம்**

இஃது எண்சீர்க்கழி நெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம்.
(54)

536. வனங்கு லாவரும் அணங்க னார்விழி
மயக்கிலே முலை மயக்கிலேவிழு மாந்தர்கள்
களங்கு லாமுட லிறந்து போயிடு
காடு சேர்முனம் வீடு சேர்வகை கேண்மினோ
துளங்கு நீள்கழல் தழங்கஆடல் செய்
சோதி யானணி பூதி யான்உமை பாதியான்
விளங்கு சேவடி உளங்கொ ளீரியமன்
விடுத்த பாசமும் அடுத்த பாசமும் விலக்குமே. 55

**தெளிவுரை**

வளமையுடைய தெய்வமகளிர் போன்றவர் விழி கலப்பிலும், முலை தழுவுதலிலும் விழும் மக்களே, கேளுங்கள். பொய்மையான உடல் இறந்து போவதற்குச் சுடுகாட்டை அடைவதற்கு முன்னம் வீடுபேற்றை அடையும் விதத்தைக் கேட்பீராக! அசையும் நீண்ட கழலானது ஒலிக்க ஆடல் செய்யும் பேரொளியுடையவனும் திருநீற்றை அணிந்தவனும், உமையை ஒரு பாகத்தில் உடையவனுமான சிவபெருமானின் விளங்கும் சேவடியை உள்ளத்தில் கொள்வீர்களாக! இயமன் விடுத்த பாசமும் நம்மிடம் தொன்று தொட்டு இருந்து வரும் பாசமும் அப் பெருமான் விலக்கியருள்வார்.

**இலக்கணம்**

இது ஒன்பதின் சீர்க்கழி நெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம். (55)

537. கைத்தலத்த ழற்க ணிச்சி வைத்திடப்பு றத்தொ ருத்தி
கட்படைப்ப டைக்கி ளைத்த திறலோராம்
முத்தலைப்ப டைக்க ரத்தெ மத்தர்சிற்ச பைக்குள் நிணிற்கும்
முக்கணக்க ருக்கொ ருத்தர் மொழியாரோ
நித்திலத்தி னைப்ப தித்த கச்சறுத்து அடிக்க னத்து
நிற்குமற்பு தத்த னத்தி னிடையேவேள்
அத்திரத்தி னைத்தொ டுத்து விட்டுநெட்ட யில்கணித்தி
லக்கணுற்றி டச்செய் விக்கு மதுதானே. 56

**தெளிவுரை**

முத்துப் பதிக்கப்பட்ட மார்புக் கச்சினை அறுத்து அடிப் பகுதி யானது கனத்து விளங்கும் அற்புதமான கொங்கையினிடையே காமன் அம்பு எய்து விட்டு நீண்ட விழிகள் முத்தினைப் போல் கண்ணீர் சிந்தச் செய்திடும் அச்செயலைக்,

கையில் தீயையும் கணிச்சி என்ற படையையும் வைத்துஅயல் ஒருத்தியின் கடைக்கண்ணாகிய படைக்கலத்துக்கு வலி இழந்த ஆற்றல் உடையவராம் திரிசூலப்படையைக் கையில் உடைய எம் தந்தையானவர் நிற்கும் சிற்சபையில் விளங்கும் மூன்று கண்களையுடைய திகம்பரர்க்குக் கூறமாட்டாரோ! இது பதின்சீர்க்கழி நெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம். (56)

**கலிப்பா விகற்பம்**

**தரவு**

538. கொன்செய்த கலைஅல்குற் கொலைசெய்த மதர்வேற்கண்
மின்செய்த சிறுமருங்குல் பெருந்தேவி விழிகுளிர்ப்பப்
பொன்செய்த மனிமன்றில் நடஞ்செய்த புகழோய்கேள்.

தாழிசை

1. முருகுயிர்க்கு நறுந்தெரியல் மொய்குழலின் மையுண்கண்
பொருகயற்குன் திருமேனி புதுவெள்ளப் புணரியே.

2. தேன்மறிக்கும் வெறித்தோங்க லறல்கூந்தற் றிருந்திழையுண்
மான்மறிக்குன் திருமேனி மலர்முல்லைப் புறவமே.

3. பிறையளிக்கும் சிறுநுதலப் பெண்ணமுதின் பேரமர்க்கண்
சிறையளிக்குன் திருமேனி தேனளிக்கும் பொதும்பரே.

அதனால்

சுரிதகம்

மதுவிரி கோதை மடவரற்கு அம்ம
புதுவிருந் துண்ண உண்ண
அதிசயம் விளைக்குநின் அற்புதக் கூத்தே. 57

தெளிவுரை

பெருமையுடைய மேகலை அணியப் பெற்ற அல்குலையும், கொலை செய்யும் இயல்புடைய மதர்த்த வேலைப் போன்ற கண்ணையும் மின்னல் போன்ற சிறிய இடையையும் உடைய சிவகாமி அம்மையின் கண்குளிர்ச்சியுடைய பொன்னால் ஆன அழகிய அம்பலத்தில் கூத்து இயற்றும் புகழை உடையவனே! கேட்பாயாக!

தாழிசை

1. நறுமணத்தை வீசும் நல்ல மாலையணிந்த உமை அம்மையின் மைபூசப்பட்ட மாறுபடும் கயல்மீன் போன்ற கண்ணுக்கு நின் திருமேனியானது புதிய வெள்ள நீரையுடைய கடல் ஆகும்.

(அம்மையின் கண்கள் கூத்தப்பெருமா ı திருமேனி அழகில் ஈடுபடும் என்பது கருத்து.)

2. தேன் சிந்தும் நறுமணம் உடைய மா யை அணிந்த கருமணலைப் போன்ற கூந்தலையுடைய உ மயம்மையின் கண்ணான மான் கன்றுக்கு நின் திருமேனி ம களையுடைய முல்லைக் காடாகும்.

(அம்மையின் கண் இறைவன் மே ில் திளைக்கும் என்பது பொருள்.)

3. பிறைத் திங்களைப் போன்ற சிறிய நற்றியையுடைய பெண்ணான உமையம்மையின் பெரிய விரு த்தைத் தரும்கண் ஆன இறகுடைய வண்டுக்கு உன் திருமேனி நனைத் தருகின்ற சோலையாகும்

(உமையம்மையின் கண்கள் இறை திருமேனியைக் கண்டு மகிழும் என்க.)

அதனால்

சுரிதகம்

தேன் சிந்தும் மாலையை அணிந்த ளமையுடைய உமையம்மைக்குப் புதிய விருந்து உண் உண்ண வியப்பை விளைவிக்கும் தன்மையுடையது நின் அ நக் கூத்து.

**இலக்கணம்**

இது, தரவு ஒன்றும் தாழிசை ன்றும் தனிச் சொல்லும் சுரிதகமுமாய் வருதலின் நேரிசை ஒத்த ிசைக் கலிப்பா. இதனுள் பிறையளிக்குஞ் சிறுநுதல் பெண்ண ின் பேரமர்க்கண் என இரண்டாஞ் சீரும் ஈற்றுச்சீரும் முர தொடுத்துப் பின்முரண் வந்தவாறு காண்க. இதனானே, ரவு மூன்றடிச் சிறுமை யுடைத்தெனவும், தாழிசை இரண்டடி றுமையுடையத் தெனவும் கொள்க. (57)

### தரவு

539. பேதைமீர், பேதைமீர்
பூமன்னு திசைமுகனும் புயல்வண்ணப் பண்ணவனும்
காமன்னும் புரந்தரனும் கடவுளரும் புடைநெருங்க
இருகோட்டுக் கிடைந்தவிடு கடையவர்பல் லாண்டிசைப்ப
ஒருகோட்டு மழகளிறும் இளங்கோவு முடன்போத
அம்பொன்மணி மதில்தில்லை நடராச ணணிமறுகில்
செம்பொன் மணிப் பொலந்திண் தேர்த் திருவுலாப் போதுங்கால்.

### தாழிசை

1. பாரித்த பேரண்டஞ் சிறுபண்டி கொளப்பெய்து
வாரித்தண் புனல்துஞ்சு மாலுக்கு மால்செய்வீர்
வேரித்தண் குழலார்கை வளைகொள்ள விழைந்தேயோ
பூரித்து வீங்குவதும் புயமென்பார் சிலமாதர்.

2. சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்க்குத் துணைவராய்
நன்மாலைக் குழலியர்பால் நள்ளிருளிற் செலவல்லீர்
பன்மாத ருயிர்கொள்ளல் பழியன்றே பகைகொள்ளும்
வின்மார னுயிர்கொண்ட விழிக்கென்பார் சிலமாதர்.

3. அங்கமலன் முடைத்தலையே பலிக்கலனா ஐயமிடும்
மங்கையர்கள் நலங்கவர்வான் பலிக்குழலு மாதவத்தீர்
தங்கலர்தங் கியமும்மைப் புரமன்றே தலையன்பின்
நங்கையர்தம் புரமுமது நகைக்கென்பார் சிலமாதர்.

### ஈரடி அம்போதரங்கம்

அருங்கலை கவர்ந்துநீ ரளிக்கப் பெற்றதும்
இருங்கலை யினிதெமக் கென்ப ரோர்சிலர்
நன்னிறங் கவர்ந்துநீர் நல்கப் பெற்றநும்
பொன்னிற மினிதெனப் புகல்வர் ஓர்சிலர்.

### நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்

தேரினை நோக்கியே திரிவர் சிற்சிலர்
ஏரினை நோக்கியே யெழுவர் சிற்சிலர்
தாரினை நோக்கியே தளர்வர் சிற்சிலர்
மாரினை நோக்கியே மருள்வர் சிற்சிலர்.

### முச்சீர்ஓரடி அம்போதரங்கம்

நலனழிந்து நிற்பார் சிலர்.
நாண்துறந்து நிற்பார் சிலர்.
கலனழிந்து நிற்பார் சிலர்.
கண்கலுழ்ந்து நிற்பார் சிலர்.

### இருசீர் ஓரடி அம்போதரங்கம்

பாடு வார்சிலர். ஆடு வார்சிலர்.
பரவு வார்சிலர். விரவு வார்சிலர்.
வாடு வார்சிலர். ஓடு வார்சிலர்.
மகிழு வார்சிலர். புகழு வார்சிலர்.

### ஆங்கொருசார்

### சுரிதகம்

முதிரா இளைமுலை மழையுஞ் தீஞ்சொல்
மங்கை மற்றிவள் நங்குலக் கொழுந்து
கணங்குழை யவரொடும் வணங்கினை நிற்பச்
சோர்ந்தது மேகலை நெகிழ்ந்தன தோள்வளை
சாந்தமுங் கரிந்தது தரளமும் தீந்தன
இவ்வா றாயினள் இவளே செவ்விதின்
ஆம்பற் பூவின் முல்லையு முகைத்தில
இளையோள் சாலவு மம்ம
முதியோள் போலும் காம நோய்க்கே.

இது செவிலித்தாய் கூற்று

தரவு

**தெளிவுரை**

மங்கைமாரே, மங்கைமாரே

தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகனும், மேகம் போன்ற நிறம் உடைய திருமாலும், கற்பகச் சோலையுடைய தேவர் உலகத்தில் உள்ள இந்திரனும், பிற தேவரும் பக்கத்தில் நெருங்க, கொங்கைகளாகிய இரண்டு மலைச்சிகரங்களுக்கு மெலிந்து சிறுத்த இடையையுடைய மகளிர் புகழ்ந்து கூற, ஒரு கொம்பையுடைய இளைய ஆண் யானையான இளங்கோவும் உடன் வர, அழகிய பொன்னால் ஆன மதிலையுடைய தில்லை யம்பதியில் உள்ள கூத்தப் பெருமானின் தெருவில் செம் பொன்னால் ஆன அழகிய பொன் திண்தேர் உலா வரும்போது,

(58)

தாழிசை

**தெளிவுரை**

பரவிய பெரிய வுலகத்தைத் தன் சிறிய வயிறு கொள்ளும் படியாக உண்டு பாற்கடலான குளிர்ந்த நீர்ப்பரப்பில் அறிதுயில் கொள்ளும் திருமாலுக்கும் காதல் மயக்கத்தைச் செய்யும் இறைவ!

தேனையுடைய குளிர்ந்த கூந்தலையுடைய பெண்டிர் கை வளையைக் கவர்ந்து கொள்ள விரும்பியோ நின் பருத்துப் பெருப்பதும் தோள் என்று சில மாதர் உரைப்பார்கள்.

2. சொன் மாலையை - தேவாரப் பாடலை - தொடுத்துச் சூட்டிய சுந்தரமூர்த்தி நாயனார்க்குத் துணைவராய் நல்ல மாலையைச் சூடிய கூந்தலையுடைய பரவை நாச்சியாரிடம் நள்ளிரவில் தூதாகச் செல்ல வல்லவரே!

பெருமானே! பகை கொண்ட கரும்பு வில்லையுடைய மன் மதனின் உயிரைக் கவர்ந்த விழிக்குப் பல மங்கையரின் உயிரைக் கவர்தல் பழியாகுமே என்று சில மங்கையர் மொழிவர்.

(ஒரு பெண்ணான பரவைக்கு நன்மை செய்த தேவரின் கண் பல மாதர்க்குத் துன்பத்தை யுண்டாக்குல் முரண்பாடன்றோ! என்பது கருத்து)

3. நீரில் உள்ள தாமரையில் வீற்றிருக்கின்ற நான்முகனின் புலால் நாற்றம் வீசும் தலையைப் பிச்சை ஏற்கும் கலனாக ஏந்தி பிச்சை யிடுகின்ற தாருகாவன முனிவரின் மனைவியரான மங்கையர்கள் உடல் நலத்தைக் கவர்ந்து கொள்ளும் பொருட்டுப் பிச்சை ஏற்றுத் திரியும் சிறந்த தவத்தையுடையவரே!

மேலான அன்பையுடைய மாதரின் உடம்புகள், பகைவர் வாழ்ந்த திரிபுரம் அன்று நீ நகைத்து எரிப்பதற்கு என்று சில மங்கையர் உரைப்பர்.

### ஈரடி அம்போதரங்கம்

மாதருள் ஒருசிலர், எம் அரிய ஆடையைக் கவர்ந்து கொண்டு உம்மால் தரப்பெற்றதும் திகம்பரமே எங்களுக்கு இனிது என்பர்.

ஒருசிலர், எம் மேனியின் நன்னிறத்தைக் கவர்ந்து கொண்டு உம்மால் எமக்குத் தரப்பெற்றதும் பொன்னிறம் (பசலை) எமக்கு இனிது என்று உரைப்பர்.

### நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்

மாதருள் சிற்சிலர் பெருமானே, நின் தேரை நோக்கித் திரிவர் சிற்சிலர், நின்னழகினை நோக்கி ஊக்கம் கொள்வர் சிற்சிலர், நின் கொன்றை மாலையை விரும்பி அது பெறாததால் தளர்ச்சி கொள்வர் சிற்சிலர், நின் மார்பைப் பார்த்து மயங்குவர் சிற்சிலர்.

### முச்சீரடி அம்போதரங்கம்

மடந்தையருள் சிலர், தம் அழகு கெட்டு விளங்குவர்.

சிலர், நாணத்தைத் துறந்து நிற்பர்.

சிலர், தம் வளை முதலியன கழன்று போக விளங்குவர்.

சிலர், கண்ணீர் வார்த்து நிற்பர்.

### இருசீர் அடி அம்போதரங்கம்

சிலர், நின்னைப் புகழ்ந்து பாடுவர்.

சிலர், களிப்பில் ஆடுவார்.

சிலர், நின் சீரைச் சொல்லித் துதிப்பர்.

சிலர், மனத்தில் எண்ணி நின்னுடன் கலப்பர்.

சிலர், நின்னை எண்ணி வாடுவர்.

சிலர், நின்மீது கொண்ட பித்தால் தம்நிலை கெட்டு ஓடுவார்.

சிலர், நின்னை எண்ணி மகிழ்வர்.

சிலர், நின்னைப் புகழ்ந்து பேசுவார்.

### (தனிச்சொல்)

ஆங்கொருசார்

### சுரிதகம்

இம்மங்கை வளர்ச்சி அடையாத கொங்கையுடையவள். மழலையாகிய இனிய தீஞ்சொல் பேசுபவள். இவள் எங்கள் குலத்துப் பெண். இத்தகையவள் தொகுதியான காதணியணிந்த மங்கையருடன் வணங்கி நிற்பாள். நிற்க, அவ்வளவில் இவளது மேகலை நெகிழ்ந்து வீழ்ந்தது. தோள் வளைகள் நெகிழ்ந்தன. இவள் பூசிக் கொண்ட கலவைச் சாந்தும் உடல் வெம்மையால் கரிந்து போயிற்று. இவள் அணிந்து கொண்டிருந்த முத்துக்களும் தீய்ந்து போயின. இவ்வாறு ஆயினாள் இவளே. இத்தகையவள்

நன்கு செவ்வாம்பல் பூவைப் போன்ற வாயினின்று முல்லைப் போன்ற பற்கள் வெளிப்பட நகைக்கவில்லை. மிகவும் இளையவள் இவள். ஆயினும் காமநோய்க்கு இவள் முதியவள் ஆவாள் போலும்!

**இலக்கணம்**

இது தாழிசைக்கும் தனிச்சொற்கும் இடையே நால்வகை அம்போதரங்கமும் பெற்று வருதலின் அம்போதரங்கம் ஒத்தாழிசைக் கலிப்பா. இதன் முதற்கண் பேதைமீர், பேதைமீர் என அடி கூனாய் வந்தவாறு காண்க. (58)

தரவு

540. தொல்லுலகம் படுசுடிகைச் சுடர்மணி விளக்கேந்தும்
பல்பொறிய படவரவும் அடுபுலியும் பணிசெய்ய
அந்தரதுந் துபிமுழங்க அமரர்பலர் மழைசிந்த
இந்திரனு மலரவனுங் கரியவனு மேத்தெடுப்பச்
சூடகத் தளிர்ச்செங்கைத் துணைவிதுணைக் கண்களிப்ப
ஆடகத் திருமன்றத்து அனவரத நடஞ்செய் வோய்!

தாழிசை

1. முன்மலையுங் கொலைமடங்க லீருரியு மும்மதத்த
வன்மலையுங் கடமலையின் முடையுடலின் வன்றோலும்
பொன்மலையின் வெண்முகிலுங் கருமுகிலும் போர்த்தென்ன
வின்மலையும் புயமலையின் புறமலைய விசித்தனையே.

2. கடநாக மெட்டும்விடம் கால்நாக மோரெட்டும்
தடநாக மவைஎட்டுந் தரித்துளபூந் துகிலொன்றும்
உடனாக அடல்புரியுங் கொடுவரியி னுடுப்பொன்றும்
அடல்நாக அரவல்குற் கணிகலையா வசைத்தனையே.

3. வருநீலப் புயல்மலர மலரிதழிக் கண்ணியையும்
அருநீல முயற்களங்க மகன்றமதிக் கண்ணியையும்
கருநீலக் கண்ணிஉமை செங்கைவரு கங்கையெனும்
திருநீலக் கண்ணியையுஞ் செஞ்சடைமேற் செறித்தனையே.

அராகம்

1. கறைவிட முகளரி கனல்விழி யொடுமிளிர்
பிறையெயி றொடுமிடல் பெறுபக டொடுமடல்
எறுழ்வலி யொடுமுரு மிடியென வருமொரு
மறலிய துயிர்கொள மலர்தரு கழலினை.

2. உலகமா டுயிர்களும் உலைதர வலம்வரும்
மலர்மகள் கொழுநனு மகபதி முதலிய
புலவரு மடிகளொர் புகலென முறையிட
அலைகடல் விடமுனம் அமுதுசெய் தருளினை.

3. விசையிலெ மிறைவியும் வெருவர இரசத
அசலம தசைதர அடல்புரி தசமுக
நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென
வசையில்பொன் மலரடி மணிவிரல் நிறுவினை.

4. இலவிதழ் மதிநுத லிரதியொ டிரதம
துலைவற நடவிடு மொருவனும் வெருவர
அலைகடல் நெடுமுர சதிர்தர வெதிர்தரு
சிலைமத னடையடல் செயுநுதல் விழியினை.

ஈரடி அம்போதரங்கம்

அருவரு வுருவமு மாகி நின்றுமவ்
வருவமு முருவமு மகன்று நின்றனை.
சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையும் துறந்து நின்றனை.

ஓரடி அம்போதரங்கம்

அந்நலம் விழைவர்க் கறமு மாயினை.
பொன்னலம் விழைந்தவர் பொருளு மாயினை.
இன்னலம் விழைந்தவர்க் கின்பு மாயினை.
மெய்ந்நலம் விழைந்தவர் வீடு மாயினை.

முச்சீரடி அம்போதரங்கம்

முத்தொழிலின் வினைமுதனீ. மூவர்க்கு முழுமுதனீ.
எத்தொழிலு மிறந்தோய்நீ. இறவாத தொழிலினைநீ.
இருவிசும்பின் மேயோன்நீ. எழில்மலரின் மிசையோய்நீ.
அரவணையில் துயின்றோய்நீ. ஆலின்கீ ழமர்ந்தோய்நீ.

இருசீரடி அம்போதரங்கம்

பெரியைநீ. சிறியைநீ. பெண்ணுநீ. ஆணுநீ.
அரியைநீ. எளியைநீ. அறமுநீ. மறமுநீ.
விண்ணுநீ. மண்ணுநீ. வித்துநீ. விளைவுநீ.
பண்ணுநீ. பயனுநீ. பகையுநீ. உறவுநீ.

எனவாங்கு

சுரிதகம்

கற்பனை கழன்றுநின் பொற்கழல் இறைஞ்சுதும்
வெண்மதிக் கடவுள் மீமிசைத் தவழ்தரத்
தண்முகில் குலங்கள் தாழ்வுறப் படிதலிற்
செங்கா லன்னமும் வெண்மருப் பேனமும்
கீழமேல் துருவ வாரழற் பிழம்பாய்
நின்றநின் தன்மையை யுணர்த்தும்
பொன்திகழ் புலியூர் மன்றுகிழ வோனே. 59

**தெளிவுரை**

தரவு

பழைமையான உலகம் பொருந்தும் உச்சியில் ஒளிரும் மாணிக்க மணி என்ற விளக்கை ஏந்திய பல பொறிகளையுடைய படத்தையுடைய ஆதிசேடன் என்ற பாம்பும் கொல்லும் தன்மை யுடைய புலியும் (வியாக்கிர பாதரும்) தொண்டு செய்ய, தேவ துந்துபி என்ற முரசு முழங்க, தேவர்கள் பூமழை பொழிய, இந்திரனும் நான்முகனும் திருமாலும் துதித்துக் கொண்டிருப்ப,

கைவளை அணிந்த தளிர் போன்ற சிவந்த கையையுடைய சிவகாம வல்லியின் இரண்டு கண்களும் கண்டு மகிழ ஆடகப் பொன்னால் ஆன தில்லை மன்றில் நாள்தோறும் நடனத்தைச் செய்வனே!

### தாழிசை

(1) பெருமானே! முன்னம் எதிர்த்துப் போரிட்ட கொலைத் தன்மையுடைய சிங்கத்தின் தோலும், மூன்று மதநீர்களையுடைய வன்மையுடைய மலை போன்ற மதயானையின் புலால் நாற்றம் வீசும் வலிய தோலும், பொன் மலையின் வெண்மேகமும் கரிய மேகமும் போர்த்தது போன்று வில்லை அணிந்த தோளின் புறத்தே அசையும்படி அணிந்தாய்.

(2) மதத்தையுடைய எட்டு யானைகளும் எட்டுப்பெரும் பாம்பும், பெரிய மலைகளான அவை எட்டும் ஆகியவற்றைத் தரித்து, அழகிய ஆடை ஒன்றும் போர் செய்யும் கொடுமையுடைய புலியின் தோல் ஒன்றும் வெல்லும் ஆற்றல் வாய்ந்த பாம்பு போன்ற பின்பக்கத்திற்கு இடைக்கு அணியும் ஆடையாக உடுத்தனை.

(3) நீலநிறம் பொருந்திய மேகம் வெளிப்பட மலர்கின்ற கொன்றையான கண்ணியையும், அரிய கரிய நிறம் வாய்ந்த முயலாகிய களங்கம் நீங்கப் பெற்ற பிறைத் திங்களான கண்ணி யையும், கரிய நீலக் கண்களையுடைய உமாதேவியின் செவ்விய திருக்கரத்தில் தோன்றிய கங்கை என்னும் அழகிய நீலநிறம் பொருந்திய கண்களையுடையவளையும் சிவந்த சடையின் மீது அணிந்தருளினாய்.

### அராகம்

1. கரிய விடம் போன்ற முகம், தீயை வெளிப்படுத்தும் விழி ஆகியவற்றுடனே விளங்கும் பிறைத்திங்கள் போன்ற பற்களுடன் வன்மையுடைய எருமைக்கடாவுடன் போரிடும் மிக்க வன்மை யுடன் வரும் இடிபோல் முழக்கமிட்டு வரும் ஒரு யமனின் உயிரைக் கவர்ந்து கொள்வதற்குத் தோன்றும்படி திருவடியை யுடையை.

2. உலகத்துடன் உயிர்களும் வருந்த, சுற்றி வரும் தாமரை மலர்மகளின் கணவனான திருமாலும், இந்திரன் முதலிய தேவரும், 'அடிகளே, உமக்கு அடைக்கலமானோம்!' என்று முறையிடப் பாற்கடலினின்று எழுந்த நஞ்சினை முன்பு உண்டனை.

3. (இராவணன்), கயிலை மலையைத் தூக்கிய விசையினால் உமையம்மையும் அஞ்சிட அம்மலை அசையப் போர் செய்யும் இராவணனின் அழகிய மணிமுடியணிந்த தலை நெறு நெறு நெறு என்று பொடிபட குற்றமற்ற பொன் மலர் அடியின் பெருவிரலை ஊன்றினாய்.

4. இலவ மலர் போன்ற இதழையும் பிறை போன்ற நெற்றியையும் உடைய இரதியுடன் தேரைத் தடையின்றிச் செலுத்தும் வசந்தனும் அஞ்சுமாறு அலைகளையுடைய பெரிய முரசு அதிரக் கரும்பு வில்லையுடைய காமனை வெல்லும் நெற்றிக் கண்ணையுடையாய்!

### ஈரடி அம்போதரங்கம்

வடிவம் வடிவம் இன்மையுமாகி நின்றும் அவ்வடிவமும் வடிவம் இன்மையும் அகன்று விளங்கினாய். சொல்லுடனே பொருளுமாய் விளங்கி நின்றும், அச்சொல்லையும் பொருளையும் துறந்து நின்றாய்.!

### ஓரடி அம்போதரங்கம்

அறத்தின் நன்மையை விரும்பியவர்க்கு அறமாய் விளங்கினாய்; பொன் நலம் விழைந்தவர் பொருளுமாக ஆனாய். இல்வாழ்வின் நன்மையை விரும்பியவர்க்கு இன்பம் ஆயினாய். உண்மையான இன்பத்தை விரும்பியவர்க்கு வீடுபேறாகவும் விளங்குகின்றாய்.

### முச்சீர்ஓரடி அம்போதரங்கம்

நீ படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழிலின் கருத்தாகவும் ஆவாய்.

நீ அயன் அரி அரன் ஆகிய மூவர்க்கும் முதல்வன் ஆவாய்.

நீ எச்செயலையும் கடந்தவன் ஆவாய். அழியாத தொழிலை உடையாய் நீ.

நீ பெரிய வானத்தில் பொருந்தியவன் ஆவாய். நீ அழகிய மலரில் உள்ள பிரமனாகியுள்ளாய். நீ பாம்பணையில் துயிலும் திருமால் ஆவாய். நீ கல்லால மரத்தின் கீழ் அமர்ந்திருக்கும் தட்சிணாமூர்த்தியும் ஆவாய்.

### இரு சீரடி அம்போதரங்கம்

பெரியவனும் நீ. சிறியவனும் நீ. பெண்ணாக உள்ளவனும் நீ. ஆணாக உள்ளவனும் நீ.

அரியவனும் நீ. எளியவனும் நீ. அறமும் நீ. மறமும் நீ. வானமும் நீ. மண்ணுலகமும் நீ. விதையும் நீயே ஆவாய். அதன் விளைவும் நீயே ஆவாய்.

மண்ணாய் விளங்குபவனும் நீயே. அப்பண்ணின் பயனாக உள்ளவனும் நீ. பகையானவனும் நீ. உறவாக இருப்பவனும் நீ.

### தனிச்சொல்

### எனவாங்கு

### சுரிதகம்

பொன்னால் ஆன பெரும்பற்றப் புலியூரில் வீற்றிருப் பவனே! கற்பனைக்கு அப்பாற்பட்ட நின் அழகிய பொன் திரு வடியை வணங்குகின்றோம். வெண்மையான நிறம் உடைய திங்கள் மேலே தவழ, குளிர்ந்த மேகக் கூட்டங்கள் தாழப் படிந்து தங்குதலால், சிவந்த கால் அன்னப்பறவையும் வெண்ணிறக் கொம் புடைய பன்றியும் (வராகமும்) கீழேயும் மேலேயும் ஊடுருவி தேடிப்போக அரிய அழல் பிழம்பாக நின்றது நின் தன்மையைப் புலப்படுத்தும்.

**இலக்கணம்**

இது தாழிசைக்கும் அம்போதரங்கத்திற்கும் இடையே அராக உறுப்புப் பெற்றுக் கலியுறுப்பு ஆறும் குறைவின்றி வந்தமையால் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா. இவ்வண்ண ஒத்தாழிசைக்

கலிப்பாவிற்கும், அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும் சிறுமை பெருமையின்றி ஆறடித்தரவே வந்தவாறு காண்க. (59)

541. சேல்செய்த மதர்வேற்கண் சிலைசெய்த சுடிகைநல்
மால்செய்த குழற்பேதை மகிழ்செய்த நடஞ்செய்யும்
தருணஇளம் பிறைக்கண்ணித் தாழ்சடைஎம்
பெருமானின்
கருணைபொழி திருநோக்கிற் கனியாத கன்னெஞ்சம்
வாமஞ்சால் மணிக்கொங்கைக்கு ஒசிந்தொல்கு
மருங்குலவர்
காமஞ்சால் கடைநோக்கிற் கரைந்துருகா நிற்குமால்
அவ்வண்ண மாறிநிற்ப தகமென்றா லகமகம்விட்டு
எவ்வண்ண மாறிநிற்ப தின்று. 60

### தெளிவுரை

சேல்மீன் போன்ற மதர்த்த வேல் போன்ற கண் வில்லைப் போன்ற சுட்டி அணிந்த நெற்றி மயக்கத்தைச் செய்யும் கூந்தல் ஆகியவற்றையுடைய உமையம்மை மகிழுமாறு நடனத்தைச் செய்கின்ற மிக்க இளைய பிறைத்திங்களை அணிந்த தாழ்ந்த சடையையுடைய எம்பெருமானின் கருணை சொரியும் அழகிய நோக்கிற்கு இரங்காத கல் போன்ற நெஞ்சம், அழகு மிக்க அழகிய கொங்கைக்கு ஒசிந்து நல்கும் இடையையுடைய பெண்டிரின் காமம் மிக்க கடைக்கண் பார்வைக்குக் கரைந்து உருகி நிற்கும். அப்படி மனம் மாறி நிற்குமாயின், அம்மனம் பாவத்தைக் கை விட்டு எப்படி மாறி இன்று நிற்கும்?

### இலக்கணம்

இது கலித்தளை தட்டுத் துள்ளலோசைத்தாய் வெண்பாவே போல் முடிந்தமையால் வெண்கலிப்பா. (60)

542. அற்புத மணிமன்றில் அடிகளின் அடியுன்னார்
மைக்கடல் விடமென்னும் வடவைத்தீ எழவஞ்சி
நொஎன அடிவீழ்ந்தார்க் குதவிலர் நாணார்கொல்
கைத்தல அபயத்தார் வரதத்தர் கைசெய்யாச்
சித்திர மன்ன சிலர். 61

### தெளிவுரை

வியப்பை அளிக்கும் தில்லை அழகிய மன்றத்தில் கூத்தியற்றும் அடிகளே, நின் திருவடியை நினையாதவர் கரிய கடலின் விடம் என்று கூறத்தக்க வடவைத்தீ தோன்றி அஞ்சித் 'துன்பம்' உண்டாகியது! என்று அடியில் விழுந்தவர்க்கு உதவார். அவர்கள் தம்பால் சரணடையும் இயல்புடையவரைக் காக்கும் குறிப்புடைய அபய வரதங்களை உடையவராய் இருத்தலில் பயன் இல்லை! அன்னார் கையால் செய்யப்படாத ஓவியம் போல் செயல் அற்றவர் ஆவர்.

சிவபெருமான் அல்லாத மற்றத் தேவர்கள் தமக்கு வந்த துன்பத்தையே போக்கிக் கொள்ள அறியாராய்த் தம்மிடம் துன்பம் போக்கிக் கொள்ள வருபவர்க்கும் உதவார். அன்னார் அபய வரத கரங்களுடன், விளங்குதலில் பயன் ஏதும் இல்லை; அவர்கள் ஓவியம் போல் செயல் அற்றவர் என்க.

### இலக்கணம்

இது பிற தளை விரவி வந்த வெண்கலிப்பா. இதனுள் 'நொ' எனக் குற்றெழுத்து விட்டிசைத்த வழித் தனியே நின்று முதற்கண் நேரிசையாயிற்று. அவ்விட்டிசை வல்லொற்றோடு ஒத்து எதுகையாய் நடத்தலின் இது விட்டிசை வல்லொற்று எதுகை. (61)

543. தொடலைக் குறுந்தொடித் தோகாய்நம் பாவை
படலைச் சிறுமுச்சி உச்சிப் பசுங்கிள்ளை
பேதைக் குழாத்தோடு நென்னற் பொழுதின்கண்
வீதிக்கே நின்று விளையாட் டயருங்கால்.
5. அஞ்சனக் கண்ணாளுந் தாமும் அணிதில்லைச்
செஞ்சடைக் கூத்தனார் வெள்விடைமேற் சேறலும்
உண்ணெக் குருக வெதிர்ப்பட் டுடையானைக்
கண்ணிற் பிணித்து மனத்திற் கொடுபுக்கு
இறைவளை சிந்த அணிதுகில் சோரப்
10. பிறறறியா வண்ணம் புணர்ந்தும் புணராள்போல்
மையுண்கண் ணீர்சோரச் சோர்தலும் வார்குழலார்

பைந்தண் குளிரி படுத்துக் கிடத்தலும்
செந்தீப் பிழம்பின் கிடத்திச் செருச்செய்வது
15. அந்தோ கொடிதுகொடி தென்செய்தீ ரன்னைமீர்
பொன்னஞ் சிலையே சிலையாப் புரமெய்தான்
தண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ, தம்மினென
மின்தந்த நுண்ணிடையாய் எங்கோன் விரைத்தொங்கல்
தன்தந்தை தாளெறிந்தாற் கன்றித் தரானென்றேற்கு
20. அன்றே பகைநோக் களித்தாள்மற் றம்ம
சிறியாள் பெரும்பித் தறிந்திருந்துஞ் செவ்வி
அறியா துரைத்தே னது. 62

## தெளிவுரை

மாலை போல் தொடர்ந்த சிறுவளையலை உடையவளே! நம் பாவை போன்றவள் தழை கலந்து தொடுத்த சிறு முச்சியை யுடைய உச்சி பொருந்திய பசுமையான கிளி விளையாட்டு மகளிருடன் நேற்று வீதியில் போய் விளையாடினாள். அப்போது

5. மைபூசப் பெற்ற கண்களையுடைய உமையம்மையும் அழகிய தில்லையில் வீற்றிருக்கின்ற சிவந்த சடையையுடைய கூத்தனார் வெண்மையான காளையூர்தியில் வந்தனர். வரவும், மனம் நெகிழ்ந்து உருக நேரில் எதிர்ப்பட்டு இறைவனைக் கண்ணில் கட்டி மனத்தில் கொண்டு புகுந்து, முன்கைச்சந்துடைய கையில் அணிந்த வளையல் கழன்று விழ, அணிந்த ஆடையானது தளரப், பிறர் அறியாத வண்ணம் புணர்ந்தும் புணராதவளைப் போன்று, மை தீற்றப் பெற்ற கண்ணீர் வடியத் தளர்ச்சி அடைந்தாள். அடையவும், நீண்ட கூந்தலையுடைய பெண்டிர் காவல் பொருந்திய வீட்டினுள் கொண்டு செலுத்தினர். பசிய குளிர்ந்த குளிரியில் படுத்துக் கிடத்தலும், செந்நிறத் தீயில் கிடத்திப் போர் செய்வது ''அந்தோ, கொடிது, கொடிது! என்ன செய்தீர், தாய்மாரே! மேருமலையை வில்லாக வளைத்துக் கொண்டு முப்புரங்களையும் எரித்த சிவபெருமானின் குளிர்ந்த கொன்றை மாலையைக் கொண்டு வந்தாரோ! கொண்டு வந்திருந்தால் என்னிடம் கொடுங்கள்'' என்றாள்.

மின்னல் போன்ற சிறிய இடையையுடையாய்! எம் மன்னனான சிவன் மணமுடைய கொன்றை மாலையைத் தன் தந்தையைக் கொன்றவர்க்கு - சண்டீசர்க்கு - அல்லது தரமாட்டான் என்றேன். இங்ஙனம் கூறிய எமக்கு அப்போது பகைமையுடைய நோக்கு அளித்தாள். சிறிய அவளது நிலையை அறிந்திருந்தும் நிலைமை அறியாது உரைத்த எனக்குப் பகைப் பார்வை அளித்தாள். சிறியவளின் பித்தை நான் அறிந்திருந்தும் அவளது சமயம் அறிந்து கொள்ளாமல் அதை உரைத்தேன்.

பிறர் அறியா வண்ணம் புணர்தல் - மனத்தால் ஒன்றுபடுதல். தன் தந்தை தாள் எறிந்தான் - தன் தந்தையின் காலை வெட்டிய சண்டீசன். குளிரி - நீர்ப்பூடு.

**இலக்கணம்**

இது செப்பலோசைத்தாய் ஒரு பொருள் நுதலி அவ்வாறு வந்தமையால் கலிவெண்பா. (62)

544. அடிகொண்ட குனிப்பன்றே அரிபிரமர் முதலானோர்
முடிகொண்ட தலைவணக்கின் குனிப்பெல்லா
முறைமுறை போய்
கடிகொண்ட பொழில்தில்லை நடராசன் கழற்காலில்
குடிகொண்ட படிபோலும் இடத்தாளிற் குஞ்சிதமே. 63

**தெளிவுரை**

இடப்பக்கத்துத் தூக்கிய திருவடியில் உள்ள வளைவு, திருமால், நான்முகன் முதலியவர் முடி அணிந்த தலையால் வணங்கிய வணக்கத்தால் உண்டானவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகப் போய் நறுமணம் பொருந்திய சோலை சூழ்ந்த தில்லை நடராசப் பெருமானின் கழல் அணிந்த காலில் குடியிருந்த தன்மை போல் விளங்கும்.

**இலக்கணம்**

இது கலித்தளை தட்டுத் தனிச் சொல்லும் சுரிதகமும் பெறாது தனியே வந்த தரவு கொச்சகம். (63)

545. மல்லாண்ட திரள்திண்டோள் துழாய்முதலு மணிநாவிற்
சொல்லாண்ட மறைமுதலும் பலராங்குத் தொலைவெய்த
பல்லாண்டு செலச்செல்லா இளையோரும் பனிப்பெய்த
அல்லாண்ட நள்ளிருளில் அழலொடுந் தொழிலினையே.

அதனால்

சுரிதகம்

பல்பே ரூழி செல்லினு மடிகட்
கொல்லையுஞ் செல்லா தாகு மாகலின்
அளவில் கால மலக்கணுற் றழலுமென்
தளர்வு நோக்காய் போலு நோக்கின்
கருணைசெய்து அருளா யல்லை
அருணலம் பழுத்த ஆடவல் லோயே. 64

**தெளிவுரை**

வளப்பம் மிக்க திரண்ட தோளையுடைய துழாய் அணிந்த திருமாலும் அழகிய நாவில் வேதத்தைக் கூறும் வேதமுதல்வனான நான்முகனும் ஆகப் பலர் மடிந்து போக, மேலும் பல ஆண்டுகள் செல்ல அழிவற்ற சனகாதி முதலிய முனிவரும் நடுக்கம் கொள்ள நள்ளிருளில் அழலில் ஆடும் தொழிலை உடையாய்!

அதனால்

சுரிதகம்

அருள் நன்மை மிக்கு ஆடுதலில் வல்லவனே! பலயுகங்கள் சென்றாலும் அடிகளாகிய தங்கட்குச் சிறிய பொழுதும் கழியாது; ஆதலால் அளவில்லாத காலமும் துன்பம் அடைந்து வருந்தும் என் தளர்ச்சியைக் காணாய் போலும். கண்டிருப்பின் அருள் செய்ய வல்லை!

துழாய் முதல் - திருமால். மறைமுதல் - நான்முகன். பனிப்பெய்த - நடுங்க. அழல்ஆடும் - தீயில் ஆடும். (64)

தரவு

546\. 1. குழைதூங்கு கழைமென்றோட் கோமாரி
கொலைக்கண்கள்
இழைதூங்கு முலைக்கண்வைத் தேஎய்தா
நாணெய்த
உழைதூங்கு குயிலேங்க உருமுத்தீ யுகநக்கு
மழைதூங்கு பொழில்தில்லை மணிமன்றுள்
நடஞ்செய்வோய்.

2\. மீனேற்றின் துவசத்தான் தனிதுஞ்ச விழித்தோய்நின்
ஆனேற்றின் துவசமோ அடலேற்றி னூர்தியோ
கானேற்ற பைங்கூழின் கவளமாக் கணத்தின்கண்
வானேற்ற பகிரண்டம் வாய்மடுக்க வல்லதே.

எனவாங்கு

சுரிதகம்

பைந்துழாய் மவுலிப் பண்ணவ னுவப்ப
அந்தணர் பழிச்சவு மறத்தின் புங்கவன்
முனியான் முனிவன் போலும்
அனைய தன்றே ஆன்றோர் கடனே. 65

இத தரவிணைக் கொச்சகம்.

தெளிவுரை

1\. காதணி தொங்கும் மூங்கில் போன்ற மென்மையான தோள்களையுடைய கௌமாரி (காளி) கொலைக்கண்கள் அணிகள் பொருந்திய கொங்கையில் வைத்து அடையாத நாணத்தை அடைந்தாள். அடைய, குயில்கள் ஏக்கம் கொண்டு கூவ, இடி வீழச் சிரித்து, மேகம் தங்கும் சோலையையுடைய தில்லைப் பொன்னம்பலத்தில் நடனம் செய்வாய்.

2\. மீனக் கொடியையுடைய காமன் 'இறந்து போகுமாறு தீவிழியை விழித்தவனே! நின் காளைக் கொடியோ அல்லது

வெல்லும் ஆற்றல் உடைய ஊர்தியோ காட்டில் உள்ள பசும் பயிராகிய உணவாக ஒரு கணப்போதில் வானில் ஏற்ற வெளி யண்டம் வாயில் இட்டு உண்ண வல்லதாகும். (தரும தேவதை ஆகிய இடபம் கொடியாகவும் திருமால் வாகனமாகவும் இருத்தலை எண்ணி இவ்வாறு கூறினார்.)

எனவாங்கு

சுரிதகம்

பசிய துளசியை அணிந்த முடியையுடைய திருமால் மகிழ்வடையவும் அந்தணர் துதிக்கவும் கொடியாய் உள்ள தரும தேவதை, சினங் கொள்ளாதவனாயினும் சிறிதே சினம் கொள்வான் போலும்! அங்ஙனம் சினம் கொள்ளல் ஆன்றோர் கடன் அன்று; ஆதலால் சினம் கொள்ளான்.

கொடியும் ஊர்தியுமாக உள்ளார் இருவரையும் புகழாமல் ஊர்தியை மாத்திரம் புகழ்தலால் அறக்கடவுள் முனிதற்குக் காரண முளதாயிற்று. அங்ஙனம் முனிதல் ஆன்றோர் கடனன்றாதலின் அதை ஒழித்தான் என்பதாம்.

இது தரவிணைக் கொச்சகம். (65)

தரவு

547. மறைதங்கு திருமன்றில் நடங்கண்டு மகிழ்பூத்துக்
கறைதங்கு படவரவ மிமையாது கண்விழிப்பக்
குறைதங்கு கலைநிறையின் கோளிழைக்குங்
கொல்என்று
நிறைதங்கு தலையுவவு நிரம்பாது நிரப்பெய்தும்
பிறைதங்கு சடைக்கற்றைப் பெரும்பற்றப் புலியூரோய்.

எனவாங்கு

தாழிசை

1. வெள்ளெருக்குங் கரும்பாம்பும் பொன்மத்து
மிலைச்சிஎம
துள்ளிருக்கும் பெருமானின் திருமார்பி னுறவழுத்தும்
கள்ளிருக்கும் குழலுமையாள் முலைச்சுவட்டைக்
கடுவொடுங்கும்
முள்ளெயிற்ற கறையரவ முழையென்று நுழையுமால்.

அதாஅன்று

2. சிலைக்கோடு பொருமருப்பில் புகர்முகனின்
திருமார்பில்
முலைக்கோடு பொருசுவட்டைக் கண்டுநின்
முழவுத்தோள்
மலைக்கோடி விளையாடும் பருவத்து மற்றுந்தன்
கொலைக்கோடு பட்டஎனக் குலைந்துமனங்
கலங்குமால்.

அதாஅன்று

3. விடமார்ந்த சுடரிலைவேல் விடலைநின் மணிமார்பில்
வடமார்ந்த முலைச்சுவட்டைக் கண்டுதன்
மருப்பெந்தை
தடமார்பம் இடர் செய்யச் சமர்செய்தான் கொல்லென்று
கடமார்வெங் கவுள்சிறுகண் கயாசுரனை வியக்குமால்.

அதனால்

சுரிதகம்

சிலைமுகம் கோட்டுமச் சில்லரித் தடங்கண்
முலைமுகம் கோட்டினள் நகுமால்
மலைமுகம் கோட்டுநின் மற்புயம் மறைந்தே.

**தெளிவுரை**

வேதத்தின் ஒலி தங்குகின்ற பொன்னம்பலத்தில் நின் திருக் கூத்தைப் பார்த்துக் கருமை பொருந்திய படத்தையுடைய பாம்பு இமையாது கண் விழித்துப் பார்த்தது. பார்க்க, குறைவுடைய கலைகள் யாவும் மீண்டும் நிரம்பப் பெற்றால் பாம்பு தன்னைக் கொன்று விடும் என்று நினைத்து நிறைவுடைய பூர்ணிமைக்குரிய முழுவடிவத்தையும் பெறாமல் கலை குறைதலான வறுமையை அடையும். அத்தகைய பிறைத் திங்கள் பொருந்திய சடைத் தொகுதியையுடைய பெரும்பற்றப் புலியூரனே!

எனவாங்கு

(என்று)

தாழிசை

1. வெள்ளெருக்கப் பூவும் கரும்பாம்பும் பொன்மத்தம் பூவும் அணிந்து எம் உள்ளத்துள் இருக்கும் சிவபெருமானின் திரு மார்பில் பொருந்த அழுத்தும். தேன் பொருந்திய கூந்தலையுடைய உமையாளின் முலை அடையாளத்தை, நஞ்சுடைய முள் போன்ற பற்களையுடைய கரிய பாம்பானது தன் புற்று என்று எண்ணி (அம்முலை அடையாளத்தில்) நுழையும். (உமையம்மையின் தழுவலால் அவளுடைய முலைகள் இறைவரின் மார்பில் தழும்பு ஏற்பட்டது. அதனைத்தன் புற்று எனப் பாம்பு எண்ணியது.)

அதுவே அன்றி

2. வில் போல் வளைந்த போரிடும் கொம்பையுடைய விநாயகப் பெருமான் நின் அழகிய மார்பில் உள்ள உமை யம்மையின் கொங்கையால் உண்டாக்கப்பட்ட அடையாளத்தைப் பார்த்து, நின் முழவு போன்ற தோள் மலையில் ஓடி விளையாடும் இளம் பருவத்தில், தன் கொல்லும் தன்மையுடைய கொம்பு பட்டதனால் உண்டானது என்று எண்ணி உள்ளம் கலங்குவான்.

அதுவே அன்றி

3. நஞ்சு தோய்ந்த கதிரையுடைய இலை போன்ற வேற் படையையுடைய முருகன், நின் அழகிய மார்பில் வடம்

பொருந்தும் கொங்கையால் ஏற்படுத்தப்பட்ட அடையாளத்தைக் கண்டு கயாசுரன், தன் தந்தையின் மார்பில், பள்ளம் உண்டாகும் படி போரைச் செய்தானோ என்று மதம் பொருந்திய கன்னத்தையும் சிறிய கண்ணையும் உடைய கயாசுரனை வியப்பான்.

அதனால்

சுரிதகம்

மலையுச்சி போன்ற நின் மற்போரில் வல்ல தோளில் மறைந்து, வில் போன்ற புருவத்தை வளைத்துச் சில வரிகளை யுடைய பெரிய கண்களையுடைய உமையம்மையார் முலையை அசைத்துச் சிரிப்பாள்.

**இலக்கணம்**

இது தரவு ஒன்றும் தாழிசை மூன்றும் இடையிடை தனிச் சொல்லும் பெற்றுச் சுரிதகத்தால் இறுதலின் (முடிதலால்) சிஃறாழிசைக் கொச்சகம். (66)

தரவு

548. ஒருநோக்கம் பகல்செய்ய ஒருநோக்கம் இருள்செய்ய
இருநோக்கில் தொழில்செய்தும் துயில்செய்தும்
இளைத்துயிர்கள்
கருநோக்கா வகைக்கருணைக் கண்ணோக்கம்
செயுஞானத்
திருநோக்க அருணோக்கம் இருநோக்கும் செயச்செய்து
மருநோக்கும் பொழில்தில்லை மணிமன்றுள்
நடஞ்செய்வோய்.

தாழிசை

1. கடிக்கமலப் பார்வைவைத்துங் கண்ணனார் காணாநின்
அடிக்கமல முடிக்கமலம் அறியாதே அறிதுமே.

2. முத்தொழிலின் முதல்தொழிலோன் முடியிழந்தான்
தனைஇகழ்ந்த
அத்தொழிலிற் கெனில்தமியே மறிதொழிற்கும்
வல்லமே.

3. இருக்கோல மிட்டுமின்னு முணராதால் எந்தைநின்
திருக்கோல மியாமுணர்ந்து சிந்திக்கக் கடவமே.

4. நான்மறைக்குந் துறைகண்டார் தோளிழந்தார்
நாவிழந்திங்
கூன்மறைக்க மறைப்புண்டே முய்த்துணர்வு பெரியமே.

5. தாமடிகள் மறந்துமறித் தலைகொண்டார் கலைவல்ல
மாமடிகள் யாமடிகள் மறவாமை யுடையமே.

6. பலகலையும் குலமறையும் பயின்றுணர்ந்தும்
பயன்கொள்ளாது
உலகலையும் சிலகலையும் உணராதேம் உணர்துமே.

அதனால்

சுரிதகம்

அம்மநின் தன்மை எம்மனோ ருணர்தற்கு
அரிதே யெளிதே யாதல்
பெரிதே கருணை சிறிய மாட்டே.

### தெளிவுரை

சிவபெருமானின் வலத்திருக்கண்ணான கதிரவன் பகற் பொழுதையுண்டாக்க, இடத்திருக் கண்ணான சந்திரன் இருளை யுண்டாக்க இரண்டு போதுகளிலும் உயிர்கள் தொழில்களைச் செய்தும் உறங்கியும் வாட்டம் அடைந்து மீண்டும் கருவை (பிறவியை) அடையாத வகையில் அருள் நோக்கம் செய்கின்ற ஞான நோக்கம் என்னும் இரண்டும் உண்டாகச் செய்து மணம்

கமழும் சோலை சூழ்ந்த தில்லை அழகிய மன்றில் நடம் செய்பவனே!

(அருள் நோக்கம் ஞானநோக்கம் இரண்டும் உண்டாகச் செய்பவன் கூத்தப் பெருமான் என்க.)

தாழிசை

1. நறுமணம் பொருந்திய தாமரைக் கண் பார்வை யுடையவனாயிருந்தும் திருமால் காணாத நின் அடித்தாமரையை மலங்களை நீக்கிக் கொள்ள அறியாத யாங்கள் அறிவோமா?

2. படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூன்று தொழில்களில் முதல் தொழிலான படைத்தல் ஆகிய முதல் தொழிலையுடைய பிரமன் நின்னை இகழ்ந்த தொழிலால் முடியை இழந்தான். அங்ஙனமேல் எளியேமாகிய நின்னை அறிந்து கொள்வதற்கும் வல்லமை உடையோமா?

3. எம் தந்தையே! வேதங்கள் இன்னும் முறையிட்டு நின்னை உணரவில்லை. நின் திருக்கோலத்தை யாம் உணர்ந்து துதிக்க முடியுமோ!

4. நான்கு வேதங்களையும் முறைப்படுத்தித் தொகுத்த வியாசமுனிவர் தாம் கூறிய கூற்றின் பயனை இழந்து தம் தோளை இழந்துவிட்டார்.

உடல் பற்றினால் மூடப்பெற்றுள்ள யாம், நின்னை உய்த்துணர்வதில் பெரியோமா! இல்லை!

(வியாச முனிவர் ஒரு காலத்தில் காசியில் திருமாலே முதல்வர் என்று சொல்லித் தம் கையை மேலே தூக்கினார். அந்தக் கையைத் தூக்கிய படியே இருக்கும்படி நந்தி தேவர் செய்தார். இதுவேயன்றி அவர் கை வெட்டப்பட்டதாகக் கூறுவதும் உண்டு.)

5. நும்மைத், தாம் மறந்து செய்த யாகச் செயலால் ஆட்டுத் தலையை உடையவர் ஆனார் நும் மாமனாரான தக்கன். ஆகவே யாம் தங்களை மறவாமல் இருக்க வல்லமை யுடையோமா?

6. பலகலைகளையும் தொகுதியான நூல்களையும் கற்று உணர்ந்தும் அவற்றின் பயனை அடையாது உயர்ந்தவரும் அலைவர். ஆகலின் சிலகலையும் உணராமல் நின்னை உ'ணர முடியுமோ?

அதனால்

சுரிதகம்

எனவே, நின் தன்மை எம்மனோர் உணர்வதற்கு அரிதாகும்; சிறியேமிடத்து நின் அரிய தன்மை எளிதாதலுக்குக் காரணம் நின் பெருங்கருணையே ஆகும்.

**இலக்கணம்**

இது பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா. (67)

549. தரவு

549. 1. சூன்முகத்த சுரிமுகங்கள் நிரைத்தார்ப்பத்
தொடுகடல்வாய்
வான்முகத்த மழைக்குலங்கண் மறிபுலைபாய்
மடுத்தென்னக்
கான்முகத்த மதுகரத்தின் குலமீண்டிக்
கடிமலர்வாய்த்
தேன்முகக்கும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம்
பலத்துறைவோய்.

2. புற்புதமும் தொலைவெய்த நிலையெய்தாப்
புலையுடம்பின்
இற்புதவு திறந்திறவா வின்பவீ டெய்தவொரு
நற்புதவு திறந்தன்ன நறும்பொதுவில் நங்கையுடன்
அற்புதவு ஆனந்த நடம்பயிலு மறவோய்கேள்.

தாழிசை

1. எவ்விடத்தி லெப்பொருளு மொருங்குண்ண இருக்குநீ
வெவ்விடத்தை யெடுத்தமுது செய்ததுமோர்
வியப்பாமே.

2. எண்பயிலா உலகடங்க வொருநொடியில் எரித்திடுநீ
விண்பயிலு மெயின்மூன்று மெரித்ததுமோர் வீறாமே.

3. பெருவெள்ளப் பகிரண்டந் தரித்திடுநீ பெயர்த்துமலை
பொருவெள்ளப் புனற்கங்கை தரித்ததுமோர் புகழாமோ.

4. மாயையினா லனைத்துலகு மயக்குநீ மாமுனிவர்
சேயிழையார் சிலர்தம்மை மயக்கியதோர் சிறப்பாமே.

5. மேதக்க புவனங்கள் தொலைத்திடுநீ
வெகுண்டாய்போல்
மாதக்கன் பெருவேள்வி தொலைத்ததுமோர்
வன்மையே.

6. ஓர்உருவாய் நிறைந்தநீ இருவர்க்கன்றுணர்வாகிய
போரு ருவொன் றுடையாய் நின்றதுமோர் பெருமையே.

அராகம்

1. அறிவினி லறிபவ ரறிவதை யலதொரு
குறியினி லறிவுறு குறியினையலை.

2. உளவயி னுளவலி வுணர்வதை யலதுரை
அளவையி னளவிடு மளவினையலை.

3. அருஎனி னுருவமு முளையுரு வெனினரு
வுருவமு முளையவை உபயமுமலை.

4. இலதெனி னுளதுள தெனினில திலதுள
தலதெனின் நினதுரு வறிபவரெவர்.

தாழிசை

1. எத்தொழிலும் கரணங்கள் இறந்தநினக் கிலையைந்து
மெய்த்தொழில்செய் வடிமடிகேள் விளையாட்டு
நிமித்தமே.

2. சீராட்டு நினக்கிலைச் சீராட்டும் சிறுமருங்குல்
பேராட்டி விளையாட்டுன் பெயர்த்தாகி நடந்ததே.

3. மெய்த்துயரம் உயிர்க்கெய்தும் விளையாட்டும் உலகீன்ற
அத்திருவுக் கிலையதுவு மவர்பொருட்டே யாமன்றே.

4. இன்னருளே மன்னுயிர்கட் கெத்தொழிலு மீன்றெடுத்த
அன்னைமுனி வதுந்தனயர் கருள்புரிதற் கேயன்றே.

5. எவ்வுருவு நின்னுருவு மவளுருவு மென்றன்றே
அவ்வுருவும் பெண்ணுருவு மாணுருவு மாயவே.

6. நின்னலா தவளில்லை யவளலால் நீயில்லை
என்னினீ யேயவனு மவளுமா யிருத்தியால்.

அதனால்

இருசீரோரடி அம்போதரங்கம்

தந்தைநீ. தாயுநீ. தமருநீ. பிறருநீ.
சிந்தைநீ. உணர்வுநீ. சீவனீ . யாவுநீ.

எனவாங்கு

சுரிதகம்

நெஞ்சகம் குழைந்து நெக்குநெக் குருகநின்
குஞ்சித சரண மஞ்சலித் திறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற் பொருட்டே.

**தெளிவுரை**

1. தோண்டப்பட்ட கடலில் கருக்கொண்ட சங்குகள் வரிசையாய்க் கூடி ஆரவாரம் செய்ய, வானத்தில் உலவும் மேகக் கூட்டம் மடிந்து விடும் நீரில் வாய்வைத்துக் குடித்தாற் போன்று காட்டில் உள்ள வண்டுக் கூட்டம் நெருங்கி மணம் பொருந்திய பூக்களிடத்தில் தேனை அருந்தும் சோலை சூழ்ந்த திருச்சிற்றம் பலத்தில் வீற்றிருப்பவனே.

2. நிலையாமையில் நீர்க்குமிழியும் உவமையாகாது தோற்கப் புலால் நாற்றத்தையுடைய வீடாகிய உடம்பின் வாயிலைத் திறந்து கொண்டு இன்ப வீடு என்ற முத்தியை அடைய ஒரு நல்ல வாயில் திறந்தாற் போன்ற நறுமணம் கமழும் பொன்னம் பலத்தில் சிவகாமியம்மையுடன் அன்பினைச் சுரக்கச் செய்யும் ஆனந்த நடனத்தைச் செய்கின்ற அறவோனே, கேட்பாய்.

தாழிசை

1. எவ்விடத்தும் எந்தப் பொருளையும் ஒன்றாக உண்ணும் ஆற்றல் உடைய நீ கொடிய விடத்தை எடுத்து உண்டதும் ஓர் வியப்பாமோ! ஆகாது.

2. எண்ணற்ற உலகங்கள் ஒரு நொடிப்போதில் எரிக்கின்ற நீ வானத்தில் பொருந்திய மூன்று புரங்களை எரித்ததும் ஓர் சிறப்பு ஆகுமோ! ஆகாது.

3. பெரிய வெள்ள நீர் சூழப் பெற்ற அண்டங்களை உடைய நீர் மீண்டும் அலை மோதும் வெள்ளம் ஆகிய கங்கையாற்றை அணிந்து கொள்ளும் புகழைத் தரும் செயலாகுமோ!

4. பெருமானே, மாயையால் எல்லா உலகையும் மயக்கும் நீ, சிறந்த தாருகாவனத்து முனிவர்களின் மனைவியரை மயக்கினை என்பது ஒரு சிறப்பாகுமோ!

5. சிறந்த உலகங்களை அழித்திடும் நீ சினம் கொண்டது போல் சிறந்த தக்கனின் பெரிய வேள்வியை அழித்ததும் ஓர் உண்மை ஆகுமோ! ஆகாது.

6. ஓர் வடிவு உடையவனாய் நின்ற நீ இருவர்க்கு இடை அன்று பெருவடிவம் கொண்டு நின்றதும் ஒரு பெருமையாகுமோ!

அராகம்

1. தம் அறிவினால் அறிபவர் நின்னை அறிவதே அல்லது ஒரு அடையாளத்தால் அறியக் கூடிய அடையாளம் நினக்கு இல்லை.

2. உள்ள இடத்தில் உள்ள அளவு உணர்வதே அல்லாது சொல் அளவால் அளக்கின்ற அளவு நினக்கு ஏதும் இல்லை.

3. நீ அருவம் என்றால் உருவமும் பெற்றுள்ளாய். நீ உருவம் உடையவன் என்றால் அருவுருவமும் உடையாய். உருவமும் அருவமுமாகிய அவை இரண்டும் உடையை அல்லை.

4. இல்லை என்றால் உளது. உளது என்றால் இலது. இலது உளது என்று நின்னைக் கூறுப்வராயின் நின் உருவை அறிபவர் எவர்?

தாழிசை

1. அடிகளே, எல்லாத் தொழிலும் மனம் வாக்கு காயம் அற்ற நினக்கு இல்லை. நீவிர் ஐந்து தொழில்களைச் செய்வதும், விளையாட்டுக் காரணத்தினாலே!

2. சிறப்பையுடைய நடனம் உனக்கு இல்லை. சிறப்புடைய சிறிய இடையையுடைய சிவகாமவல்லியின் விளையாட்டால் நின் பெயரில் அது வழங்குகின்றது.

3. உடம்பால் உண்டாகும் துயரம் (பிறவிநோய்) உயிர்க்கு அடைதற்குக் காரணமான படைப்பு முதலிய விளையாட்டு அந்தச் சிவகாம வல்லியார்க்கு இல்லை. நீ அதையும் இயற்றுதல் அவர் பொருட்டாக நீ செய்தருள்கின்றாய்.

4. நீ உயிர்க்குச் செய்யும் எத்தொழிலும் இன்னருளால்! உலகம் யாவற்றையும் பெற்றெடுத்த தாய் சினம் கொள்வதும் தம் மக்களுக்கு நன்மை செய்வதற்கே அன்றோ!

5. எல்லா வடிவும் நின் உருவும் அவள் உருவும் ஆகும். அவ்வுரு பெண் உருவும் ஆண் உருவுமாக ஆகியது.

6. நீ அல்லாது அவள் இல்லை. அவள் இல்லாது நீ இல்லை. என்னில் நீயும் அவளுமாய் உள்ளீர்.

அதனால்

இருசீரோரடி அம்போதரங்கம்

நீ தந்தை ஆவாய். தாயும் நீயே ஆவாய். உறவினரும் நீ. மற்றவரும் நீ. உள்ளம் நீ. அந்த உள்ளத்தில் உள்ள உணர்வும் நீ. உயிர்களும் நீ. மற்றுமுள்ள யாவையும் நீ.

எனவாங்கு

(என்று)

சுரிதகம்

என்று இங்ஙனம் சொல்லி, மாயை என்ற மூன்று மலங்களை யுடைய உடல் என்ற வீட்டில் தருக்குக் கொண்டு இருப்பது நீங்கி என்றும் அழியாமல் மெய்த் தன்மையுடன் விளங்கும் முத்தி அடையும் பொருட்டாக மனம் குழைந்து நெக்கு நெக்கு உருக, நீ தூக்கிய திருவடி வணங்கித் துதிப்போம்.

**இலக்கணம்**

இது மயங்கிசைக் கொச்சகம். (68)

கலியினம்

550. செல்லார் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்தெங்கள்
பொல்லா மணியைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்
முத்தேவர் தேவை முகிலூர்தி முன்னான
புத்தேளிர் போலப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்
ஆங்கற் பகக்கன் றளித்தருளும் தில்லைவனப்
பூங்கற் பகத்தைப் புகழ் மினோ வம்மின் புலவீர் காள்.

### தெளிவுரை

புலவர்களே! வாருங்கள். மேகம் தங்கும் சோலைகளை உடைய தில்லைப் பொன்னம்பலத்தில் உள்ள எங்கள் துளையிடப் படாத மணி போன்றவனைப் புகழ்ந்து கூறுங்கள். வாருங்கள்.

புலவர்களே! வாருங்கள் மூன்று தேவர்களாகிய அயன் அரி அரன் ஆகிய மூவரின் தலைவனும் மேகத்தை ஊர்தியாய் உடைய இந்திரனைத் தேவர்கள் புகழ்வதைப் போன்று புகழுங்கள். புலவர்களே, வாருங்கள்! கற்பகக் கன்றான கற்பக விநாயகப் பெருமானை பெற்ற தில்லைவனத்தில் வீற்றிருக்கும் பூவையுடைய கற்பகம் போன்ற நடராசப் பெருமானைப் புகழ்ந்து பேசுங்கள்.

### இலக்கணம்

இஃது இரண்டடியாய் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி ஈற்றடி மிக்கு வந்த கலித்தாழிசை. (69)

551. இருகூற்றுருவத் திருந்தண் பொழிற்றில்லை
ஒருகூற்றின் கூத்தை உணராய் மடநெஞ்சே
ஒருகூற்றின் கூத்தை யுணரா யெனின்மற்றப்
பொருகூற்றந் தோற்றப் புலம்பேல் வாழி மடநெஞ்சே.
70

### தெளிவுரை

மடமையுடைய மனமே! ஆணும் பெண்ணும் ஆகிய இரண்டு பகுதிகளாகிய திருவுருவத்தையுடைய கூத்தப் பெருமான் சோலை சூழ்ந்த தில்லை அம்பலத்தில் ஆடும் ஒப்பற்ற நடராசனின் கூத்தை உணர்வாயாக! அங்ஙனம் அக்கூத்தின் இயல்பை உணராய் என்றால் போரிடும் இயமன் நின்முன் வந்து நிற்கும் போது புலம்பவேண்டா! வாழ்க!

### இலக்கணம்

இஃது இடைமடக்காய் ஈற்றடி மிக்குவந்த நான்கடிக் கலித்தாழிசை. (70)

552. காளி யாடக் கனலுமிழ் கண்ணுதல்
மீளி யாடுதல் பாருமே
மீளி யாடல் வியந்தவள் தோற்றெனக்
கூளி பாடிக் குளிப்பதும் பாருமே பாருமே. 71

### தெளிவுரை

காளி ஆடவும் தீயை வெளிப்படுத்தும் நெற்றிக் கண்ணை யுடைய நடராசன் ஆடுதலைப் பாருங்கள். அப்பெருமானின் ஆடலை வியந்து அக்காளியானவள் தோற்றாளாக பேய்கள் எல்லாம் பாடி ஆடுவதைக் காணுங்கள், காணுங்கள்.

### இலக்கணம்

இஃது இரண்டாமடி குறைந்து இடை மடக்காய் ஈற்றடி மிக்கு வந்த நான்கடிக் கலித் தாழிசை. (71)

553. பானற் கருங்கட் பசுந்தோகை யோகப் பயன்துய்ப்பஅத்
தேனக் கலர்கொன்றை சாரூப் பியந்தந்த
செயலோர்கிலார்
ஊனக்க ணிதுபீளை யொழுகும் புறக்கண்ணுளக்
கண்ணதாம்
ஞானக்க ணேயாதல் நல்கும் பிரான்தில்லை நடராசரே.
72

### தெளிவுரை

குவளை மலர் போன்ற கரிய கண்ணை உடைய பசிய மயில் போன்ற யோகப் பயனை அடைய, தேன் சிந்தும் மலர்க் கொன்றை சாருப்பியம் தந்த செயலை அறியவில்லை. ஊனக்கண் ஆன இது அழுக்கு ஒழுகும் புறக்கண் உள்ளக் கண்ணான ஞானக் கண்ணாகவே ஆகக் கருணை அளிப்பர் தில்லை நடராசப் பெருமான்.

ஊனக்கண்ணும் புறக்கண்ணுமாகிய இஃது உள்ளக் கண்ணான ஞானக்கண் ஆதலளிக்கும். ஞானக் கண்ணால் தம்

திருக்கோலத்தைத் தரிசித்து மெய்ஞ்ஞானியர் பெறும் பயனை ஊனக் கண்ணால் தரிசித்தாடும் இச்சிதம்பரத்தில் பெறுவர். ஆதலால் அந்த ஊனக் கண்ணே ஞானக் கண் போல் உதவும் என்க. சாரூபம் பெற்றவர் கொன்றை மலர் மாலை பெறுவது போலத் தலைவி பசலை ஊரப் பெற்றாள்.

**இலக்கணம்**

இது நெடிலடி நான்காய் வந்தமையால் கலித்துறை. (72)

554. செவ்வாய்க் கருங்கண்பைந் தோகைக்கும் வெண்மதிச் சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு ஒன்றேயளதவ் வுருவினைமற்று
எவ்வாச் சியமென் றெடுத்திசைப் பேமின் னருட்புலியூர்ப்
பைவாய்ப் பொறியர வல்குலெந் தாயென்று பாடுதுமே. 73

**தெளிவுரை**

சிவந்த வாயையுடைய கரிய கண்களையுடைய மயில் போன்ற சிவகாமிக்கும் வெண்மையான பிறைத் திங்களைச் சூடிய சடையையுடைய சிவபெருமானுக்கும் பொருத்தமற்ற திருவுரு ஒன்றே உள்ளது. அவ்வடிவத்தை எப்பொருள் கொண்டு பாடுவோம். இனிய அருளையுடைய பெரும்பற்றப்புலியூரில் வீற்றிருக்கும் பையையுடைய புள்ளி பொருந்திய பாம்பு போன்ற அல்குலையுடைய எம் தாய் என்று பாடுவோம். (பாம்பு போன்ற பின் தட்டையுடைய எம் தந்தையே என்று பாடுவோம்)

(அல்குல் - பெண்குறி; ஆணின் பின்தட்டு.)

**இலக்கணம்**

இது நேரசை முதலாகிய கட்டளைக்கலித்துறை. இதன் முதலடி முரணடுக்கி வந்தமையால் வழி முரண். (73)

555. கரும்புஞ் சுரும்பு மரும்பும் பெரும்படைக் காமர் வில்வேள்
இரும்புங் கரைந்துரு கச்செய்யு மாலிறும் பூதிதன்றே
விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருள் மேவிலொரு
துரும்பும் படைத்தமிழ்க் கும்மகி லாண்டத் தொகுதியையே. 74

**தெளிவுரை**

வில் கரும்பும், வண்டும் நாணும், அரும்பு அம்பும் ஆகிய படைக்கலங்களையுடைய மன்மதன் இரும்பும் கரைந்து உருகிடச் செய்வன். இது வியப்பு அன்றே! யாவரும் விரும்பும் பெரும் பற்றப்புலியூரில் வீற்றிருக்கும் எம் கூத்தப் பெருமான் அருள் உண்டாயின் ஒரு சிறிய துரும்பும் பல அண்டங்களையும் படைத்து அழிக்கின்ற செயல்களைச் செய்யும்.

**இலக்கணம்**

இது நிரையசை முதலாகிய கட்டளைக் கலித்துறை. இதன் முதலடி வழியெதுகை. (74)

556. கூகா வென்று குரைப்பதல் லாற்சமன்
வாவா என்னின் வரேமென வல்லிரே
தேவே சன்பயில் தில்லையி னெல்லையிற்
சேர்வீ ரேலது செய்யவும் வல்லிரே. 75

**தெளிவுரை**

இயமன் உயிரைப் பறிக்க வரும் போது அஞ்சி கூகா என்று கதறுவதல்லாமல், இயமன் வாவா என்று கூறின், வரமாட்டோம் எனக் கூறும் வல்லமை உடையீரோ! தேவர் தலைவனான கூத்த பிரான் வீற்றிருக்கின்ற தில்லையின் எல்லைக்குள் போய்ச் சேர்வீர். அங்ஙனம் சேர்வீராயின் இயமனிடம் வரமாட்டோம் எனக் கூறவும் வல்லமை உடையவர் ஆவீர்.

**இலக்கணம்**

இஃது அளவடி நான்காய் வந்தமையால் கலிவிருத்தம்.

இஃது அடிதோறும் இரண்டாமெழுத்து நெட்டெழுத்து வரத் தொடுத்தமையால் நெடிலெதுகை. முதலெழுத்து நெட்டெழுத்தே வரத் தொடுத்தமையால் நெடில் மோனையுமாம். மூன்றாமடியும் நான்காமடியும் முதலெழுத்து அனுவெழுத்தாய் வந்தமையின் அனுமோனை. (75)

வஞ்சிப்பா

557 வையமீன்ற மறைக்கிழவனும்
கொய்துழாய்மவுலிக் குணக்கொண்டலும்
தருவார்நீழல் தார்வேந்தனும்
வரன்முறைதாழ்ந்து வாழ்த்திசைப்ப
மைதீருணர்வின் மழமுனிவனும்
பையரவரசும் பணிந்திறைஞ்ச
இமயம்பயந்த விளங்கொடியொடும்
தமனியப்பொதுவில் தாண்டவம்புரி
தில்லைவாணநின் திருவடிக்கீழ்ச்
சொல்லுவதொன்றிது சொலக்கேண்மதி
கமலலோசனன் கண்படுக்கும்
அமளியைநின்மருங் காதரித்தனை
செங்கேழ்நறுநுதல் திருமகளோடும்
அங்கவனுறைதரு மாழிச் சேக்கையைப்
புலிக்கால்முனிவரன் புதல்வனுக்கு
நலத்தகுகருணையி னயந்தளித்தனை, அவன்

அதனால்

பாயலும் அமளியு மின்றி மன்றநின்
வாயிலி னெடுநாள் வைகினணையொடும்
அத்திரு மனையவற் களித்திநின்
மெய்த்தொழி லன்றே வீடு நல்குவதே.

### தெளிவுரை

உலகங்களைப் படைத்த வேதத்தில் வல்ல பிரமனும், கொய்யப்படும் துழாயைத் தலையில் அணிந்த நற்குணம் உடைய திருமாலும், கற்பக மரநிழலில் வீற்றிருக்கின்ற மாலை சூடிய இந்திரனும், முறைப்படியாய்ப் போந்து வாழ்ந்த, குற்றம் அற்ற உணர்வையுடைய உபமன்னியுமாவாகிய குழந்தையையுடைய வியாக்கிரபாதரும், பையையுடைய பாம்பு அரசனான பதஞ்சலியும் வணங்கித் துதிக்க இமவான் ஈன்ற இளமையுடைய சிவகாமியோடும் பொன்னம்பலத்தில் நடம் இடும் தில்லையில் வாழ்பவனே!

நின் திருவடிக்கீழ்ச் சொல்லுவது இது ஒன்று சொல்லக் கேட்பாயாக!

திருமால் பள்ளி கொள்ளும் படுக்கையான ஆதிசேடனை நின் பக்கத்தில் இருக்கச் செய்தாய் (ஆதிசேடனின் அமிசமான பதஞ்சலி முனியைப் பக்கத்தில் இருக்கச் செய்தாய்.)

சிவந்த நிறத்தையுடைய நறுமண நெற்றியையுடைய திருமகளோடும் அங்கு அவன் பள்ளி கொண்டுள்ள பாற்கடல் உறையுளை வியாக்கிர பாதரின் மகனான உபமன்னியு முனிவர்க்கு நன்மையடைய தக்க அருள் கொண்டு விரும்பி அளித்தனை. அவன்,

அதனால்

படுக்கையும் கட்டிலும் இல்லாமல், நிச்சயமாக, நின் வாயிலில் நீண்ட காலம் தங்கினன். அவனுக்கு அந்த அழகிய இருப்பிடமான பாற்கடலை அளிப்பாயாக! நின் உண்மையான தொழில் வீடு அளிப்பதே ஆகும்.

### இலக்கணம்

இது குறளடி வஞ்சிப்பா. இதன் அடிதோறும் முதற்கண்ணே பொதுச்சீர் பதினாறும் வந்தன. 'தார்வேந்தனும்' எனவும், 'குணக்

கொண்டலும்' எனவும், 'மறைக்கிழவனும்' எனவும், 'தாண்டவம் புரி' எனவும் வஞ்சிச் சீர் நான்கும் வந்தன. (76)

558. கடித்தாமரைக் கண்ணன்விழிக் கமலம்தர
அடித்தாமரைச் சுடர்ப்பரிதி யளித்தருளினை

அதனால்

புதுமலர்ப் பொழில்தில்லை வாண
உதவியின் வரைத்தோ அடிகள்கைம் மாறே. 77

**தெளிவுரை**

நறுமணம் பொருந்திய தாமரைக் கண்ணனான திருமால் விழியாகிய தாமரை மலரை அடியில் தர, அவனுக்குச் சுடரை யுடைய சக்கரப்படையை அளித்தாய்;

அதனால்

புதிய மலர்கள் பொருந்திய சோலையைச் சூழ்ந்த தில்லையில் வாழ்பவனே! நின் கைம்மாறான செயல் ஒரு உதவியின் எல்லையை யுடையதோ.

**இலக்கணம்**

இது சிந்தடி வஞ்சிப்பா (77)

வஞ்சியினம்

559. (1) பிணியென்று பெயராமே
துணிநின்று தவஞ்செய்வீர்
அணிமன்றில் உமைபாகன்
மணிமன்று பணியீரே.

(2) என்னென்று பெயராமே
கன்னின்று தவஞ்செய்வீர்
நன்மன்றல் உமைபாகன்
பொன்மன்று பணியீரே.

(3) அரிதென்று பெயராமே
வரைநின்று தவஞ்செய்வீர்
உருமன்றல் உமைபாகன்
திருமன்று பணியீரே. 78

**தெளிவுரை**

1. நோய்க்கு இடமாகும் என்று அஞ்சி ஓடாமல் பிளந்த பாறையில் நின்று தவத்தைச் செய்வீரே! அதை விடுத்து, அழகிய மணத்தையுடைய மாலையுடைய உமையை ஒரு பாகத்தில் உடைய கூத்தனின் பொன்னம்பலத்தை வணங்குவீராக! வீடு பெறலாம்.

2. இஃது எவ்வளவு துன்பம் தருவது என்று அஞ்சிப் போகாமல் பாறை மீது நின்று தவத்தைச் செய்பவரே! அதை விடுத்து நல்ல மணத்தையுடைய மாலையை அணிந்த உமை யொரு பாகனின் பொன்னம்பலத்தை வணங்குங்கள். விரைவில் வீடு பெறலாம்.

3. தவம் செய்வது அரிது என்று நீங்காது மலையில் இருந்து தவத்தைச் செய்பவரே! அதை விடுத்து அழகு பொருந்திய உமையை ஒரு பாகத்தில் உடைய கூத்தனின் பொன்னம்பலத்தை வணங்குவீராக!

**இலக்கணம்**

இது குறளடி நான்காய் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்தமையால் வஞ்சித்தாழிசை. (78)

560. பொன்செய் மன்றில்வாழ்
கொன்செய் கோலத்தான்
மின்செய் தாடொழார்
என்செய் கிற்பரே. 79

**தெளிவுரை**

பொன்னால் இயன்ற அம்பலத்தில் வாழ்கின்ற அச்சத்தை அளிக்கும் கோலத்தையுடைய சிவபெருமானின் மின்னல் போன்ற ஒளிவிடும் திருவடிகளைத் தொழாதவர்கள் என்ன செய்து உய்வார்?

**இலக்கணம்**

இது குறளடி நான்காய் வந்தமையால் வஞ்சித்துறை. (79)

561. ஒன்றி னம்பர லோகமே
ஒன்றி னம்பர லோகமே
சென்று மேவருந் தில்லையே
சென்று மேவருந் தில்லையே. 80

**தெளிவுரை**

யாவரும் மேவுதற்கு அரிய தில்லைத் தலத்தை அடைந்தோம். ஆதலால் எல்லாவற்றுக்கும் மேலான உலகமான முத்தியிடத்தில் பொருந்தினோம். இன்னும் வேறு உலகத்தில் போய் வருந்துதல் எமக்கு இல்லை. (தில்லையை அடைந்த மாத்திரத்தில் முத்தி பெறுவது துணிவாகும் என்பது கருத்து. இதற்கு வேறு விதமாய் பொருள் கூறுவதும் உண்டு.)

**இலக்கணம்**

இது சிந்தடி நான்காய் வந்தமையால் வஞ்சி விருத்தம். (80)

562. அரசியல் கோடா தரனடியார்ப் பேணும்
முரசியல் தானைவேல் மன்னர் - பரசோன்
கழலிணை பொதுவில்காப் பாக
வழிவழி சிறந்து வாழியர் பெரிதே. 81

**தெளிவுரை**

அரசியல் நெறியினின்று வேறுபடாது சிவனடியாரைப் பேணும் முரசு பொருந்திய படையையுடைய வேலையுடைய

மன்னர் சிவபெருமான் இருதிருவடிகள் சிறப்பான காப்பாக வழிவழி சிறந்து வாழ்க.

**இலக்கணம்**

இது முன்னர் வெண்பாவும் பின்னர் அகவலும் புறநிலை வாழ்த்தாய் வருதலின் புறநிலை வாழ்த்து மருட்பா. வெள்ளடியும் ஆசிரிய அடியும் சமமாகலின் இது சமனிலை! (81)

563. பருந்தளிக்கு முத்தலைவேற் பண்ணவற்கே அன்றி
விருந்தளிக்கும் விண்ணோர் பிறர்க்கும் - திருந்த
வலனுயர் சிறப்பின் மன்ற வாணனக்
குலமுனி புதல்வனுக் கீந்த
அலைகட லாகுமிவ் வாய்மழை நோக்கே. 82

**தெளிவுரை**

பருந்துக்கு ஊனை அளிக்கும் மூன்று உச்சியையுடைய சூலப்படையையுடைய இயமனுக்கே அல்லாது பிற தேவர்க்கும் விருந்தளிப்பான். திருத்தமாக வெற்றியுடைய சிறந்த தில்லை மன்றத்தில் வாழ்பவன் அக் குலமுனிவர்களை உபமன்னியுவுக்கே தந்த அலைகடல் போன்றது இவளுடைய கண்கள்.

இது தலைவர் கூற்று. அவளது குறிப்பையுணர்ந்து கூறியது.

**இலக்கணம்**

இதுவும் அவ்வாறே கைக்கிளைப் பொருள் மேல் வருதலின் கைக்கிளை மருட்பா. வெள்ளடி குறைந்து ஆசிரிய அடி மிகுதலின் இது வியனிலை. (82)

564. வம்மி னமரங்காள் மன்றுடையான் வார்கழல் கண்டு
உய்ம்மின் உறுதி பிறிதில்லை மெய்ம்மொழிமற்று
என்மொழி பிழையா தாகும்
பின்வழி நுமக்குப் பெரும்பயன் தருமே. 83

**தெளிவுரை**

நம்மவர்களே! வாருங்கள்! பொன்னம்பலத்தையுடைய சிவ பெருமானின் நீண்ட கழலைக் கண்டு உய்தி பெறுவீர். இதைவிட உறுதி வேறு இல்லை. இது மெய்ம்மொழி. என்மொழி பொய்க்காது; பின்னால் நுமக்குப் பெரும் பயன் தரும்.

**இலக்கணம்**

இது வாயுறை வாழ்த்துப்பா. (83)

565. வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு வீழ்த்த
புறநெறி ஆற்றா தறநெறி போற்றி
நெறிநின் றொழுகுதிர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கட னிதுவே, 84

**தெளிவுரை**

தில்லையம்பதியை வாழ்த்துங்கள் அங்குள்ள அழகிய மன்றினை நினைப்பீர். தலைவனான நடராசனுக்குத் தலையைத் தாழ்த்தி வணங்குங்கள். அறம் அல்லாத நெறியினின்று செயல் செய்யாமல் அறநெறியைப் போற்றி அந்நெறியில் நின்று நடப்பீர். நிச்சயமாக இது தாம் ஒழுகும் வழி இஃதென அறிந்த மாந்தர்க்குக் கடமை இதுவாகும். (வாழ்த்துமின் என வாக்காலும் நினைமின் என நெஞ்சாலும் சென்னி தாழ்த்துமின் எனக் காயத்தாலும் வழிபடல் வேண்டும் எனக் கூறியவாறு.) (84)

இது செவியறிவுறூஉ மருட்பா

*சிதம்பரச் செய்யுட் கோவை மூலமும் தெளிவுரையும் விளக்கமும் முற்றுப் பெற்றன*

# 9. பண்டார மும்மணிக் கோவை

இது, பண்டாரமாகிய மாசிலாமணி தேசிகர் பற்றிய மும்மணிக் கோவை என்று பொருள்படும். மூன்று மணிகளால் ஆன அணி அழகு தருவது போல் மூன்று வகையான பாக்களால் புனையப்பட்ட மாலை இதுவாகும். மூன்று வகைப் பாக்களாவன நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியப்பா ஆகும்.

'மிகுந்த வெள்ளை கலித்துறை அகவல்
விருத்தம் மும்மணி விளம்பும் அந்தாதி'

*(பன்னிரு பாட்டியல் - 152)*

'மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா
முன்னியமுப் பால்மும் மணிமாலை'

*(வெண்பாப் பாட்டியல் 16)*

வெண்பா, கலித்துறை, கட்டளைக் கலித்துறை, மன்னர்பா - ஆசிரியப்பா. இம்மூன்றும் அந்தாதித் தொடையாய்ப் பாடப்படல் வேண்டும்.

### 566. விநாயகர் காப்பாராக!

நேரிசை வெண்பா

எண்திசைக்கும் சூளா மணிமாசி லாமணிசீர்
கொண்டு இசைக்கும் மும்மணிக் கோவைக்குக் -
கண்டிகை பொன்

பைந்நாகத் தான்அனத்தான் பாற்கடலான்
போற்ற அருள்
கைந்நாகத்து ஆனைத்தான் காப்பு. 1

## தெளிவுரை

உருத்திராக்க மாலையையும் பொலிவு பெற்ற படத்தை யுடைய நாகத்தையும் அணிந்த சிவபெருமான், பிரமன், பாற் கடலில் எழுந்தருளியிருக்கின்ற திருமால் ஆகிய மூவரும் போற்ற அருள் செய்யும் துதிக்கையை உடைய விநாயகப் பெருமான் எட்டுத்திக்குகளிலும் புகழ்ந்து பேசப்படுகின்ற சூளாமணி - முடிமணி - போன்ற மாசிலாமணி தேசிகரின் சிறப்பைக் கூறும் இம் மும்மணிக் கோவை என்ற நூலுக்குக் காவலாய் அமைந்து நூல் இனிது பெற அருளுக.

## விளக்கம்

எண்டிசைக்கும் - எட்டுத்திசைகளிலும் புகழ்ந்து பேசப்படும். சூளாமணி - முடிமணி. அம்முடிமணியைப் போன்ற மாசிலாமணி தேசிகர். சீர் - புகழ். இசைக்கும் - புகழும்; போற்றும். மும்மணிக் கோவைக்கு - மும்மணிக் கோவை என்ற இந்நூல் இனிது முடிவு பெறுதற்கு. கண்டிகை - உருத்திராக்க மாலை; கழுத்தணியுமாம். பொன்பைந் நாகத்தான் - பொலிவு பெற்ற படத்தையுடைய பாம்பை அணிந்த சிவபெருமான். பிரமன். பாற்கடலான் - பாற்கடலில் வீற்றிருக்கின்ற திருமால். சிவபெருமான், பிரமதேவர், திருமால் என்னும் மூவரும் போற்ற என்பது கருத்து. அதைத் தானும் பாற்கடலானும் போற்ற நாகத்தான் - சிவபெருமான் பெற்ற விநாயகப் பெருமான் எனவும் பொருள் கொள்ளலாம். கைந் நாகத்தான் - துதிக்கையையுடைய யானையை முகத்தை யுடைய விநாயகர். காப்பு - காவல் ஆவார்.

மாசிலாமணி தேசிகர் மீது யான் பாடும் மும்மணி மாலை இனிது முடிவு பெற விநாயகப் பெருமான் காத்தருளுவாராக என்று முடிவு பெறும். (1)

## 567. ஞான வாரணத்தை நல்குவாய்

### நேரிசை ஆசிரியப்பா

பூமலி சததளப் பொன்னந் தாது உகு
காமர்பீ டிகையில் கருணையொடு பொலிந்து
வீற்றுவீற்று அமைந்த விரிதலைப் புவனம்
பாற்பட வகுத்த பழமறைக் கிழவனும்
5 மதுக்குடம் உடைந்தாங்கு இதழ்க்கடை திறந்து
பிரசம்ஊற்று இருந்து முருகுகொப் புளிப்ப
வண்டுழுது உழக்கும் தண்துழாய் அலங்கல்
புரவுபூண்டு அகிலம் பொதுக்கடிந்து அளிக்கும்
கருணைபூத் தலர்ந்த கமலக் கண்ணனும்,
10 அஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட்டு அன்னமும்
செம்மயிர்க் கருங்கண் வெள்எயிற்று ஏனமும்
ஆகுபு தனித்தனி அலமர நிவந்த
மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட்டு அம்ம
எம்மனோர் போல இனிதுஎழுந் தருளிக்
15 கைம்மாறு அற்ற கணக்கில்பேர் இன்ப
மோனவாழ்வு அளிக்கும் ஞான தேசிகன்
விரிகதிர் பரப்பு மரகதத் தகட்டில்
சுடர்செய் செம்மணி இடைஇடை பதித்தெனப்
பாசடைப் பரப்பில் பதும ராசிகள்
20 செய்இதழ் விரிக்கும் செழுமலர் ஓடையும்
அண்டகோ ளகையும் எண்திசா முகமும்
கோட்டுடைத் தடக்கை நீட்டிஅளந் தென்னச்
சேட்பட நிவந்த செண்பகா டவியும்
கால்கிளர் விசும்பின் கற்பகா டவிக்கு
25 வேலிஇட் டன்ன வியன்மணிப் புரிசையும்
மருங்குசூழ் கிடந்த வண்தமிழ்க் கமலைப்
பெரும்பதி புரக்கும் பேரருள் குரிசில்
நான்மறை நவின்ற நற்பொருள் இவைஎன

மோனவா சகத்தான் முப்பொருள் நவிற்றுபு
30 நன்னலம் புரியும் ஞானப் பிரகாசன்
இன்னருள் பழுத்த செந்நெறிச் செல்வன்
திருக்கிளர் ஞானத் திருந்திழைக்கு அணியாம்
அருட்பெருஞ் சைவத்து அருங்கலன் நாப்பண்
ஆசுஅற விளங்கும் மாசி லாமணி
35 அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்த தள் அரும் பருவத்து
உள்ளதன் படிவம் உணர்த்துவ கடுப்ப
மாநிலத்து அமர்ந்த ஞான சம்பந்தன்
பொன்அடிக் கமலம் சென்னிவைத்து இறைஞ்சுதும்
40 இருகால் சுமந்த ஒருபெருஞ் சேவகத்து
ஐம்புலக் களிறும் தம்புலத்து இழுப்ப
ஊனிடைப் பிறவிக் கானகத்து உழலாது
ஏனைய முத்திநாடு எய்தஓர்
ஞான வாரணம் நல்குதி எனவே. 2

## தெளிவுரை

(1-16) அழகு பொருந்திய நூறு இதழ்களை உடைய பொன் போன்ற மகரந்தத்தைச் சிந்தும் அழகிய தாமரை இருக்கையில் அருளுடனே விளங்கி வெவ்வேறாக அமைந்த விரிந்த இடத்தை யுடைய உலகங்களை எல்லாம் முறைப்பட படைத்த பழைய வேதங்களை அருளிய பிரமனும்,

கள் குடமானது உடைந்தது போன்று இதழாகிய வாயிலைத் திறந்து தேன் சிந்தும் நறுமணம் வெளிப்பட வண்டானது உழுது வருத்தும் குளிர்ச்சியான துழாய் மாலையை அணிந்த காக்கும் தொழிலையுடைய உலகத்தைத் தனி உரிமை கொண்டு பாது காக்கும் தாமரைக் கண்ணையுடைய திருமாலும்,

அழகிய இறகுகளை உடைய சிவந்த உச்சிக் கொண்டையை உடைய வெண்மையான அன்னப்பறவையும், சிவந்த மயிரையும் கரிய கண்களையும் உடைய வெண்மையான பற்களை உடைய

பன்றியும் ஆகித் தனித்தனிக் கீழேயும் மேலேயும் போய்த் திரிந்து அடிமுடிகாண மாட்டாமையால் வருந்த, உயர்ந்து எழுந்த மேலான ஒளி வெளிப்பட்டு எம்மைப் போல் இனிது எழுந்தருளி யுள்ள கைம்மாறு கருதாத அளவற்ற பேரின்ப மோனவாழ்வை அளிக்கும் ஞான தேசிகன்

(17-44) விரிகின்ற கதிரை எங்கும் பரப்பும் மரகதத் தட்டில், சுடர் விடுகின்ற மாணிக்க மணி இடை இடையே பதித்தாற் போன்ற பசுமை இலைத் தொகுதிப் பரப்பில் தாமரை மலர்த் தொகுதிகள் சிவந்த இதழ்களை விரிக்கும் இயல்புடைய செழுமையான மலர் ஓடைகள்,

அண்டமாகிய உருண்டையையும் எட்டுத் திக்குகளும் கொம்பான தன் பரந்த கைகளை நீட்டி அளந்ததைப் போன்று மிக உயரமாய் விளங்கும் செண்பகக் காடும், காற்று உலவும் தேவர் உலகில் கற்பகச் சோலைக்கு வேலியை அமைத்தாற் போன்று மிக உயரமாய் விளங்கும் செண்பகக் காடும், காற்று உலவும் தேவர் உலகில் கற்பகச் சோலைக்கு வேலியை அமைத்தாற் போன்ற மணிகள் பதிக்கப் பெற்ற மதிலும், பக்கத்தில் பொருந்திய வளவிய தமிழ் வழங்கும் திருவாரூர். அந்தப் பெரும் பதியைக் காக்கும் மிக்க அருளையுடைய பெருந்தகையாளர் நான்கு மறைகளும் கூறும் நல்ல பொருள் இவை என்று மௌன மொழியால் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களையும் கூறி யாவர்க்கும் நன்மையை அளிக்கும் ஞானப் பிரகாசன்,

இனிய அருளானது பழுக்கப் பெற்ற செம்மையான நெறியுடைய செல்வன், அழகு விளங்கும் ஞானப் பெண்ணுக்கு அணியாகிய சைவத்தின் நடுவில் விளங்கும் நாயக மணியாகிய மாசிலாமணி, சமணம் என்ற அழுக்கை அழித்த கவுணியரான ஞானசம்பந்தர் தன் குழந்தைத் தன்மை நீங்கப் பெற்ற நீக்குதற்கு அரிய பருவத்துக்கு உரிய வடிவம் உணர்த்துவதைப் போன்ற இந்தப் பெரிய உலகத்தில் வந்தருளிய ஞானசம்பந்தரின் பொன்னாலான திருவடித் தாமரையைத் தலையை வைத்து வணங்குவோம்!

இரண்டு கால்களால் சுமக்கப் பெற்ற ஒரு பெரிய யானை துயிலும் இடத்தில் உள்ள ஐம்புலம் என்ற யானைகளும் தத்தமத்துக்குரிய இடத்திற்கு இழுக்க, ஊனிடைப் பிறவி என்ற காட்டில் வருந்தாது மற்ற முத்தி என்ற நாட்டை யான் அடைய ஓர் ஞானமாகிய யானையை எனக்கு அருள்வாய்!

**விளக்கம்**

(1-15) பூமலி - அழகுடைய; பொலிவு மிக்க. சததளம் - நூறு இதழ். பொன் அம்தாதுஉகு - பொன் போன்ற அழகிய தாது உகுக்கும்படியான. காமர் பீடிகை - அழகிய இருக்கை. வீற்று வீற்று அமைந்த - வேறு வேறாகப் பொருந்திய. விரிதலைப் புவனம் - பரந்த இடத்தையுடைய உலகம். பாற்பட வகுத்த - முறைப்படி படைத்த. பழமறைக் கிழவன் - பழைய மறையில் வல்லவனான பிரமன்.

மதுக்குடம் - கட்குடம்; தேன்குடம். உடைந்தாங்கு - உடைந்தாற் போல். இதழ்க்கடை - இதழான வாயில். பிரசம் - தேன். முருகு - நறுமணம். கொப்புளிப்ப - வெளிப்பட. வண்டு உழுது உழக்கும் - வண்டானது உழுவது போல வருத்தும். தண்துழாய் - குளிர்ந்த துளசி. அலங்கல் - மாலை. புரவு பூண்டு - காக்கும் தொழிலை மேற்கொண்டு. கருணை பூத்து அலர்ந்த - அருள் மிக்கு வெளிப்பட்ட. கமலக்கண்ணனும் - திருமாலும்.

அஞ்சிறைத் தும்பி - அழகிய இறகையுடைய. சுதைநிறம் - வெண்மை நிறம். செஞ்சூட்டு அன்னம் - சிவந்த சூட்டை - கொண்டையை - உடைய அன்னப்பறவை. செம்மயிர்க் கருங்கண் வெள் எயிற்று ஏனம் - சிவந்த மயிரையும் கரிய கண்ணையும் வெண்மையான பற்களையுமுடைய பன்றி.

ஆகுபு - ஆகி; 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பிரமன் அன்னப்பறவையாகவும் திருமால் பன்றியாகவும் வடிவு கொண்டு. தனித் தனி அலமர - தனித்தனியே (இறைவரின்) முடியும் அடியும் தேடித் திரிய. நிவந்த - உயர்ந்து நின்ற. மீகெழு - மேல் எழும். பரஞ்சுடர் - மேலான ஒளி.

எம்மனோர் போல - மனிதராகிய எம்மைப் போன்று. எழுந்தருளி - இவ்வுலகத்தில் எழுந்தருளி. கைம்மாறு - பதில் உதவி. கணக்கு இல் பேரின்பம் - மதிப்பிட முடியாத பேரின்பம்.

'ஈறிலாத நீ எளியை யாகிவந்து ஒளி செய் மானிடமாக நோக்கியும்' என்பது திருவாசகம்.

சிவபெருமானே ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளினார் என்பது கருத்து.

(17) விரிகதிர் பரப்பும் மரகதத் தகடு

பரவும் ஒளிக்கதிரைப் பரப்பும் மரகதத்தால் ஆகிய தகடு. மரகத மணியால் ஆன தகடு எனப் பசுமையான இலையைப் புனைந்துரைககிறார். பாசடை - பசுமை + அடை; பசிய இலை. பதுமராசிகள் - தாமரை மலர்த் தொகுதிகள். சேயிதழ் விரிக்கும் - சிவந்த இதழ்களை மலர்த்தும். செழுமலர் ஓடை - செழுமையான மலராகிய ஓடை.

தாமரை இலைக்கு மரகதத் தகடும் அதன் மலருக்கு மாணிக்கமும் உவமைகள்.

அண்ட கோளகை - அண்டமாகிய உருண்டை. எண்திசா முகம் - எட்டுத் திசைகள். கோட்டுடைத் தடக்கை - கொம்பு களாகிய பெரிய கைகள். சேட்பட - உயரத்தில் பொருந்த. நிவந்த - உயர்ந்த. சென்பகாடவி - செண்பகக் காடு.

கால்கிளா - காற்று உலவும். விசும்பு - தேவர் உலகு. கற்பகாடவி - கற்பகம் + அடவி; கற்பகச் சோலை. வியன்மணிப் புரிசை - அகன் ) மணிகள் பதிக்கப் பெற்ற மதில்.

கற்பகச் சோலைக்கு வேலியை இட்டாற் போல் திருவாரூர் மதில் உயர்ந்து விளங்கியது. கமலை - திருவாரூர். பெரும்பதி - பெரிய தலத்தை. புரக்கும் - காக்கும். மருங்குசூழ்கிடந்த - பக்கங்களில் சூழ்ந்து கிடந்த. நான்மறை நவின்ற - நான்கு மறைகள் கூறும். நற்பொருள் - உண்மையான நல்ல பொருள். இவை என - இவையே என. மோன வாசகத்தால் - மௌன மொழியால்.

முப்பொருள் நவிற்றுபு - மூன்று பொருள்களான பதி, பசு, பாசம் என்னும் மூன்றையும் தெரிவித்து.

ஞானப்பிரகாசன் - மாசிலாமணி தேசிகரை ஞானப் பிரகாசராகக் கூறுகிறார். தருமபுரம் திருஞான சம்பந்த தேசிகரின் குருமூர்த்தி திருவாரூர் ஞானப்பிரகாச தேசிகர். பின்வந்த தேசிகரையும் முன்பிருந்த ஆசிரியர்களாகவே நினைந்து வழிபடுவது மரபு. ஆதலால் இங்கு மாசிலாமணி தேசிகரை ஞானப்பிரகாச தேசிகராக உரைத்தார்.

இன்னருள் பழுத்த - இனிய அருள் மிக்க. திருக்கிளர் ஞானத் திருந்திழை - அழகு விளங்கும் ஞானமாகிய பெண். திருந்திழை - திருந்திய அணியை அணிந்த பெண்ணைக் குறித்தலால் அன் மொழித் தொகை. ஞானமாகிய பெண்ணுக்கு ஆபரணமாகிய சைவத்தின் நடுவில் விளங்கும் நாயக மணியான மாசிலாமணி.

நாப்பண் - நடுவில். ஆசற விளங்கும் - குற்றம் அற்று விளங்கும்.

அமண் மாசு அறுத்த - சமணராகிய குற்றத்தை அழித்த. கவுணியர் பெருந்தகை - திருஞான சம்பந்தர். பிள்ளைமை விடுத்து - குழந்தைத் தன்மை நீங்க விடுத்து. தள்ளரும்பருவத்து - முதுமைப் பருவத்து. உள்ளதன் படிவம் உணர்த்துவது ஒப்ப - முதுமைப்பருவத்தில் உள்ள தனது வடிவத்தை உணர்த்துவதைப் போன்ற.

தருமபுரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும் கமலை ஞானப்பிரகாச தேசிகருக்கு மாணாக்கருமான ஆசிரியர், திருஞான சம்பந்தர் தேசிகர் என்ற பெயரை யுடையவராதலால் அத்தொடர்பு நோக்கித் திருஞான சம்பந்தரே தன் பிள்ளைமைக் கோலத்தை நீத்து முதிய கோலத்தில் வந்தாற் போன்றவர் என்றார்.

ஞானவாரணம் நல்குதி என்று இறைஞ்சுதும் என இயையும்.

ஞான சம்பந்தன் பொன்னடிக்கமலம் சென்னி வைத்து இறைஞ்சுதும் - ஞானசம்பந்தரின் திருவடிகளில் தலை வைத்து வணங்குகிறோம்.

இருகால் சுமந்த - இரண்டு கால்களால் சுமக்கப் பெற்ற. சேவகம் - யானை உறங்கும் இடம். புலன்களைக் களிறு என்றார். அதற்கு ஏற்பச் சேவகம் என்றார்.

ஐந்து புலன்களாகிய களிறு தம்மிடத்துக்கு இழுப்பப் பிறவியான காட்டில் உழலாது, முத்தி என்னும் வீட்டை யாம் அடைய ஓர் ஞானமாகிய யானையை அளித்தருள வேண்டும் எனக் குறிக்கிறார். ஞான வாரணம் - ஞானமாகிய களிறு. நல்குதி - அளிப்பாயாக.

பிறவிக் காட்டுக்கு அழைத்துச் செல்லும் ஐந்து யானை களினின்று என்னை விடுவித்து முத்தி நாட்டுக்குச் செலுத்தும் யானை ஒன்றை எனக்கு அளிப்பாயாக என இயைகிறது. இது முற்றுருவகம். (2)

## 568. உன் வடிவம் நல்கத் தகும்

### நேரிசை வெண்பா

என்வடிவம் நின்வடிவாக் கொண்டாய் எளியேற்குஉன்
தன்வடிவம் நல்கத் தகும்கண்டாய் - மன்வடிவால்
வெம்பந்தம் நீக்கும் விமலநீ மெய்ஞ்ஞான
சம்பந்தன் என்பதனால் தான். 3

#### தெளிவுரை

பொருந்திய வடிவத்தால் கொடிய பாசத் தளையை அகற்றும் குற்றம் அற்றவன் நீ மெய்ஞ்ஞான சம்பந்தன் என்பதால்! என் மானிட வடிவத்தை உன் வடிவாகக் கொண்டாய். எளியனான எனக்கு உனது வடிவத்தை அளிப்பது தக்கதே ஆகும்.

#### விளக்கம்

என் வடிவம் - என் மனித வடிவம். நின்வடிவா - நினது வடிவாக. என் வடிவத்தை நின் வடிவாகக் கொண்டிருப்பதால் நின்

ஞான வடிவை எனக்குத் தருவது தக்கதே ஆகும். ஏனென்றால் நீ மெய்ஞ்ஞான சம்பந்தன். மெய்ஞ்ஞான சம்பந்தன் என்பதன் பொருள் உண்மையான ஞானசம்பந்தம் செய்பவன் என்பதாகும். சம்பந்தம் கொள்ளுதல் என்பது கொடுத்தலும் கொள்ளலுமாகும். ஆதலால் மேற்கண்ட வண்ணம் கூறினார். (3)

## 569. மாசிலாமணியின் தன்மை கண்டேன்

### கட்டளைக் கலித்துறை

தான்நின்று எனைத்தனக் குள்ளே ஒளிக்கும்என்
தன்மைநிற்க
யான்நின்ற போதுஎனக் குள்ளே ஒளித்திடும் இப்பரிசே
வான்நின்ற சின்மய மாமாசி லாமணி மன்னும்தன்மை
நான்நின்று கண்டனன் காணேன் இதற்குஒத்த
நன்மணியே. 4

### தெளிவுரை

தான் நின்று சிவபோதம் என்னுள் நிலைத்து ஆன்ம போதத்தைத் தனக்குள்ளே அடக்கித் தன் வியாபகமாக நிற்கும் தன்மை நிற்க, ஆணவத்தால் ஆன்ம போதம் தலையெடுத்த போது என்னுள் மறைந்திடும் ஞானவடிவம். இத்தகைய தன்மையே வான் நின்ற ஞான மயமான மாசிலாமணி பொருந்தி இருக்கும் தன்மையை நான் இன்று கண்டேன். இதனை ஒத்த ஒருமணியை நான் கண்டதில்லை.

### விளக்கம்

ஒருமணி தன் ஒளியில் எல்லாவற்றையும் அடக்கி நிற்றல் இயல்பு. ஆனால் இந்த மணியோ ஒருகால் அடக்கியும் ஒருகால் அடங்கியும் இருப்பது வியப்பானது என்றார்.

தான்நின்று - சிவபோதம் நிலை பெற்று. எனைத் தனக்குள்ளே ஒளிக்கும் - ஆன்ம போதத்தைத் தனக்குள் அடக்கித்

தான் வியாபித்து நிற்கும். என் தன்மை நிற்க - சீவ போதம் நிலை பெற. யான் நின்ற போது - ஆணவமான ஆன்மபோதம் தலை யெடுத்த போது. எனக்குள்ளே ஒளித்திடும் - என்னுள் மறைந்து நிற்கும். வான்நின்ற சின்மயம் - வானகத்து நின்ற ஞானவடிவம்.

(4)

## 570. ஞமலியாகி நின் அருளை வேண்டுவன்

### நேரிசை ஆசிரியப்பா

மணிவடம் சுமந்த புணர்முலைக்கு ஒதுங்கி
ஈயா மாக்கள் தீமொழி கவர்ந்த
சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்
கரைகொன்று இரங்கும் திரைசெய்நீர்ப் பட்டத்து
5. மைவிழி சேப்பச் செவ்வாய் விளர்ப்பக்
கருங்குழல் சரிய வெள்வளை கலிப்பச்
சீராட்டு அயரும் நீராட்டு அயர்ந்து
புலவியின் தீர்ந்து கலவியில் திளைக்கும்
நீரர மகளிர் பேர்எழில் காட்ட
10. மருதம்வீற் றிருந்து பெருவளம் சுரக்கும்
தருமையம் பதிவாழ் சற்குரு ராய
ஒள்ஒளி பரப்பும் வெள்ளிவே தண்டத்து
ஒருபால் பொலிந்த மரகதம் கவினச்
சுடர்விடு செங்கதிர்க் கடவுள்மா மணிக்கு
15 விளங்குஎழில் மிடற்றோர் களங்கம் உண்டு என்பஅக்
காசுஉலா மலினம் கரந்த காரணத்தால்
மாசிலா மணிஎன வண்பெயர் நிறீஇ
மேன்மையோடு அமர்ந்த ஞானசம் பந்த,
ஈண்டுஉனைத் தமியனேன் வேண்டுவது யாது எனின்,
20 அந்நியம் என்றும் அநநியம் என்றும்
இந்நிலை இரண்டும் எய்திற்று என்றும்
பல்வேறு உரைக்குநர் சொல்வழிப் படாது

திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தத்து
இறவா நிலைமைபெற்று இன்பம்ஆர்ந்து இருக்கும்
25 பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே
அங்குஅது புரிதற்கு அரிதுஎனின் இங்குஒரு
சனனம்யான் வேண்டுவது இனிதருள் எனக்கே, அதுவே
ஐந்தரு நிழற்கீழ் அரசுவீற் றிருக்கும்
இந்திர னாகி வாழ்ந்து இருப்பதோ அன்றே;
30 மலரோன் ஆகி மன்உயிர்த் தொகுதி
பலர்புகழ்ந்து இசைப்பப் படைப்பதோ அன்றே;
அடல்அரா அணையில் அறிதுயில் அமர்ந்த
கடவுளாய் உலகம் காப்பதோ அன்றே; அவைதாம்,
ஆரா இன்பம்என்று அரும்பெயர் பெறினும்
35 வாரா வல்வினை வருவிக் கும்மே
அன்னவை ஒழியமற்று என்னைகொல் பிறஎனின்
விழுத்தகு கல்வியும் ஒழுக்கமும் இலராய்ப்
பழிப்புளர் ஆயினும் ஆக வழுத்துநின்
பொன்னடித் துணைசேர் நின்அடித் தொண்டர்
40 திருஅமுது ஆர்ந்து தெருக்கடை எறிந்த
பரிகலம் மாந்திப் பவக்கடல் உழக்கும்
வரனுடை ஞமலி யாகிநின்
அருளையும் அயராது அவதரிப் பதுவே. 5

**தெளிவுரை**

(1-11) மணியால் ஆன மாலையணிந்த கொங்கைக்கு இளைத்துக், கொடுக்காத மக்களின் தீய மொழியான இல்லை என்பதைத் தான் கொண்ட சிறிய இடையுடைய பெரிய கண்களை யுடையவர், கரையை மோதி ஒலிக்கும் அலையை உண்டாக்கும் நீர்நிலையில் மை பூசப் பெற்ற கண்கள் சிவப்பச், செவ்வாய் வெளுக்கக், கருங்குழல் சரிய, வெண்மையான வளையல் ஒலிக்க, சிறப்புடன் நீராடுதலைச் செய்து ஊடலை நீங்கிப் புணர்ச்சியில் திளைக்கும் நீரர மகளிரின் எழிலைப் போன்ற எழிலைக் காட்ட

மருதவளம் பொருந்தியிருந்து மிக்க வளத்தை நல்கும் தருமபுரம் என்ற தலத்தில் வாழும் சற்குருராய!

(12-18) மிக்க ஒளியைப் பரப்பும் வெண்மையான கயிலாய மலை ஒரு பக்கத்தில் விளங்கிய மரகதம் (உமாதேவியார்) அழகு பெற விளங்க, ஒளிவிளங்கும் சிவந்த கதிரையுடைய கடவுள் மாமணியான சிவபெருமானுக்கு விளங்கும் அழகுடைய கழுத்தில் களங்கம் உண்டு கூறுவர். அந்தக் குற்றம் உடைய களங்கம் மறைந்துள்ள காரணத்தால் மாசிலாமணி என்று வளப்பமுடைய பெயரை நிறுவி மேன்மையுடன் அமர்ந்த ஞானசம்பந்த!

(19-25) இப்போது உம்மை நான் வேண்டுவது யாது என்றால் பேதம் என்றும் பேதம் அற்றது என்றும் இந்த இரண்டு நிலையும் எய்திற்று பேதா பேதம் அடைந்தது என்றும் பல வகையாக உரைப்பவர் சொல்லின் வழிப்படாது தெய்வத் தன்மை மிக்க சைவ சித்தாந்தத்து நீங்காத நிலைமை பெற்று இன்பத்தை அடைந்திருக்கும் பிறவாத நன்னெறியைப் பெற்றிடல் வேண்டும் என்பதே!

(26-43) அங்கு அதை அளிப்பதற்கு அரிது என்றால் இங்கு மீண்டும் ஒரு பிறவி வேண்டுகின்றேன். இதனை எனக்கு அருளுக! அதுதான், ஐந்து வகையான கற்பக மரங்கள் நிழலின் கீழ் அரசனாய் வீற்றிருக்கும் இந்திரனாகி வாழ்ந்திருப்பது அன்று. நான்முகனாகி உலகத்து உயிர்கள் புகழ்ந்து பேச படைக்கும் தொழிலை மேற்கொள்வதன்று. வன்மையுடைய பாம்பணையில் அறிதுயிலில் அமர்ந்துள்ள தேவர் உலகத்தைத் திருமால் போலக் காப்பதும் அன்று.

அவை எல்லாம் தெவிட்டாத இன்பம் என்று பெயரைப் பெற்றாலும் வரக் கூடாத வலிய வினைகளை எல்லாம் வருவிப்பனவாகும்! அவை போக வேறு எவற்றை வேண்டு கின்றேன் என்றால், மேலான தக்க கல்வியும் ஒழுக்கமும் இல்லாதவராய்ப் பழிப்புக்கு ஆளானவராயினும் ஆக, வணங்கும் நின் இரு திருவடி சேர்ந்த நின் அடியார் திருவமுதை உண்டு தெருவில் எறிந்த எச்சில் உணவை உண்டு இந்தப் பிறவிக் கடலில்

வருந்தும் வரத்தை யுடைய நாயாய் ஆகி நின் அருளையும் மறவாமல் அவதரித்தல் வேண்டும். இதனையே யான் வேண்டுகின்றேன்.

**விளக்கம்**

(1-11) மணிவடம் - மணிமாலை. ஒதுங்கி - இளைத்து. ஈயா மாக்கள் தீமொழி - இரந்தவர்க்குக் கொடுக்காத இயல்புடைய மக்கள் கூறும் 'இல்லை' என்ற தீமொழி. கவர்ந்த - போன்ற. முலையால் இளைத்த சிறிய இடை என இயைக்க படைத்த - உடைய. பேர் அமர்க் கண்ணியர் - பெரிய விருப்பத்தைத் தருகின்ற கண்ணை யுடையவர். கரைகொன்று - கரையை மோதி அழிக்கும். இரங்கும் - ஒலிக்கும். நீர்ப்பட்டம் - நீர்நிலை. மைவிழி - மைதீட்டப்பட்ட கண். சேப்ப - சிவக்க. செவ்வாய் - சிவந்தவாய். விளர்ப்ப - வெளுக்க. நீராட்டு அயர்ந்து - நீராடி. புலவியின் தீர்ந்து - ஊடல் நீங்கப் பெற்று. கலவியில் திளைக்கும் - புணர்ச்சியில் மகிழும். நீர்அரமகளிர் - நீரிடை வாழ்கின்ற தெய்வமகளிர். பேர்எழில் காட்ட - மிக்க அழகைக் காட்ட நீராடியதால் ஏற்பட்ட வேறுபாடுகள் கலவியால் உண்டானவற்றை ஒத்தன. மருதம் - மருதநிலம். பெருவளம் சுரக்கும் - வளம் மிக்கிருக்கும். தருமையம்பதி - தருமபுரம் என்ற ஊர்.

(12-17) ஒள்ஒளி - மிக்க ஒளி. வெள்ளிவேதண்டம் - கயிலாய மலை. வேதண்டம் - மலை. ஒருபால் - ஒரு பக்கத்தில். மரகதம் - மரகத மணி போன்ற நிறம் வாய்ந்த உமையம்மையார். கவின - அழகுடன் விளங்க. சுடர்விடு செங்கதிர்க் கடவுள் மாமணி - ஒளிவீசும் சிவந்த கதிரை யுடைய சிவபெருமான்.

விளங்குஎழில் மிடற்று ஓர் களங்கம் உண்டுஎன்ப - விளங்கும்படியான அழகையுடைய திருக்கழுத்தில் ஒரு களங்கம் உண்டு என வுரைப்பர். மிடறு - கழுத்து. அக்காசு உலாம் - அந்தக் குற்றம் பொருந்திய களங்கம். கரந்த காரணத்தால் - மறைந்துள்ள காரணத்தால். மாசிலா மணி என - குற்றம் அற்ற மணி என்று. வண்

பெயர் - வளப்பம் பொருந்திய பெயர். நிறீஇ - நிலை பெறச் செய்து. மலினம் - களங்கம்.

(18-43) தமியனேன் - தனியன். அந்நியம் - பேதம். அநநியம் - அபேதம்; பேதம் இன்மை. இந்நிலை இரண்டும் எய்திற்று - பேதமும் பேதமின்மையும் அடைந்தது. திவ்வியம் - தெய்வத்தன்மை. இறவா நிலை - நீங்காத நிலைமை. இன்பம் ஆர்ந்திருக்கும் - இன்பம் அனுபவித்திருக்கும். புரிவதுவே தமியனேன் வேண்டுவது என்று இயைகிறது.

அரிது எனின் - முடியாது என்றால். சனனம் - பிறவி. அதுவே - நான் வேண்டும் அந்தப் பிறவி. ஐந்தரு - ஐந்து வகையான கற்பக மரங்கள். அவைதாம் - இந்திரன் பிரமன் திருமால் ஆகியவரின் பதவிகள். வாரா வல்வினை - வரக்கூடாத கொடிய வினை. விழுத்தகு கல்வியும் - சிறந்த தக்க கல்வியும். பழிப்புளராயினும் ஆக - இகழ்ந்து உரைக்கப்படுபவராயினும் ஆகுக. வழுத்தும் - போற்றும்; வணங்கும். திருவமுது - உணவு. ஆர்த்து - உண்டு. தெருக்கடை - தெருவில். பரிகலம் - எச்சில் உணவு. மாந்தி - உண்டு. பவக்கடல் - பிறவிக்கடல். உழக்கும் - வருந்தும். ஞமலி - நாய். அயராது - மறவாமல். அவதரிப்பது - பிறப்பது.

'அவதரிப்பதுவே ஆகிய ஒரு சனனம் வேண்டுவது அருள்' என இயையும். (5)

## 571. கதியருளல் கடன்

### நேரிசை வெண்பா

அவமாசி லாமனத்தார்க்கு ஆருயிராம்ஞானோற்
பவமாசிலா மணிச்சம் பந்தா - தவமார்
ததிஅருளத் தானேநின் சந்நிதிப்பட் டேற்குக்
கதிஅருளத் தானே கடன். 6

### தெளிவுரை

வீணான குற்றம் அற்ற மனத்தை உடையவர்க்கு ஞானத்தை உண்டாக்குவோய்! மாசிலா மணியான சம்பந்தா! தவம் பொருந்திய அடியார் உள்ளத்துடன் நின் சந்நிதியில் வந்தடைந்த எனக்குக் கதியை அருளுதல் நினக்குக் கடனாகும்.

### விளக்கம்

கதியை அருளத்தானே கடன் என முடிகிறது. அவமாசு - வீணான குற்றம். ஞானோற்பவ - ஞானத்தை உண்டாக்குபவனே! ததியர் - அடியார். சந்நிதிப்பட்டேற்கு - சந்நிதியில் வந்த எனக்கு. கதி - முத்தி. அருளத்தானே கடன் - அருளுதல் நினக்குக் கடன் ஆகும். (6)

## 572. சிந்தைக்கு எட்டாத பேரின்பம் நல்கும் மாசிலாமணி

கட்டளைக் கலித்துறை

கடல்பெற்றது ஓர்மணி சிந்தித்த நல்கும் கருத்துக்கு எட்டா
மிடல்பெற்ற பேர் இன்பம் நல்கிய வாஅருள்
வேலை பெற்றேன்
உடல்பெற்ற கண்மணிக்கு உண்மணி யாகிஒண்
கூடல்வைகும்
அடல்பெற்ற ஞானச் சுடர்மாசி லாமணி ஆனது ஒன்றே.
7

### தெளிவுரை

கடலால் பெறப்பட்ட சிந்தாமணி சிந்தித்தவற்றை எல்லாம் அளிக்கும். அருள் கடலைத் தான் பெற்று என் உடல் பெற்ற கண்மணிக்குள்ளே கண்மணியாய் ஆகி, ஒள்ளிய கூடல் நகரில் வாழ்கின்ற வன்மையுடைய ஞானச் சுடரையுடைய மாசிலா மணி

என்ற ஒருமணி கருத்துக்கு எட்டாத வன்மையுடைய பேரின்பத்தை நல்கியது என்ன வியப்பு!

**விளக்கம்**

கடல் பெற்றது ஓர் மணி - சிந்தாமணி; அம்மணி பாற்கடலில் தோன்றியது. அஃது ஒருவர் எண்ணியவற்றை எல்லாம் அளிக்கும். நல்கும் - அளிக்கும். மிடல் - வன்மை. நல்கியவா - அளித்தது என்ன வியப்பு! 'நல்கியவாறு' என்பது 'நல்கியவா' எனத் தொக்கி வந்தது.

அருள் வேலை பெற்று - அருளாகிய கடலை (மாசிலாமணி) பெற்று. கூடல் - மதுரை. அடல் - வெற்றி. சிந்தாமணி கடலால் பெறப்பட்டது. சிந்தித்தவற்றையெல்லாம் தருவது. மாசிலா மணியோ ஒரு கடலையே தான் பெற்றுச் சிந்தைக்கு எட்டாத பேரின்பத்தைத் தரும் என இருமணிகளுக்கும் வேற்றுமையைக் கூறிப் போந்தார். (7)

## 573. ஆரா இன்பத்தை அளித்தருள்வாய்!

### நிலைமண்டில ஆசிரியப்பா

ஒன்றே தன்மை உனக்கும்மற்று எமக்கும்
அன்றுஎன மொழியினும் ஆம்எனப் படுமே
அங்ஙனம் கூறியது எங்ஙனம் பிறஎனின்
எஞ்ஞான்று உளைஉளம் அஞ்ஞான்று யாமே
5 அழியா நிலைமையை அனையம் யாமே
வியாபகம் நினக்குஉளது யாமும் அஃது உளமே
அறிவெனப் பெயரிய பெயரினை அப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே
இச்சா ஞானக் கிரியைஎன்று இசைக்கும்
10 சத்திகள் உளையுளது அத்திறம் எமக்கே
இந்நிலை முழுவதூஉம் எமக்குஉண்டு ஆகலின்
அந்நிய மலம்நினக்கு அநநியம் யாமே

தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநகர் ஆக அரசு வீற்றிருக்கும்
15 மாசி லாமணித் தேசிக ராய
சம்பந் தப்பெயர் தரித்தமை யால்எமைச்
சம்பந் தஞ்செயத் தகும்தகும் நினக்கே
கருவிகட்கு இறைமை காட்டுபு நிற்றலின்
புருட நாமம் புனைந்தனம் ஆயினும்
20 அத்தநின் குறிப்பின் சத்திகள் யாமே
புருடனைச் சத்தியில் புணர்த்தனை அன்னதற்கு
ஒருகாட்டு என்ப புருடோத் தமனே
உன்னுடன் எம்மையும் ஒப்புஎனப் படுத்து
முன்னர்க் கூறிய முறைமையின் சிற்சில
25 முழுவதும் ஒவ்வாது ஒழியினும் ஒழிக
உயர்ந்தோன் தலைவன் ஒத்தோள் புணரினும்
இழிந்தோள் புணரினும் இழிபுஎனப் படாதே
ஆதலின் யாம்உனைக் காதலித் தனமால்
காதலின் எமைஅருட் கைப்பிடித் தருளி
30 ஒருவரும் உணராப் பரம வீட்டில்
இருள் அறை திறந்த பெருவெளி மண்டபத்து
உயர் நா தாந்தத்து இருமலர் அமளியில்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ஒலி நாதப் புள்ஒலி முழங்க
35 ஞானஆ ரமுத பானமது ஆர்ந்து
கருவிகள் கழன்று பரவசம் ஆகிப்
பரமா னந்தப் பரவையுள் படிந்து
பேரா இயற்கை பெற்றினிது இருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே. 8

## தெளிவுரை

மாசிலாமணித் தேசிகராய! உமக்கும் எனக்கும் தன்மை ஒன்றே! இல்லை என்று சொன்னாலும் அஃது ஆம் எனப்படும்.

அங்ஙனம் கூறியது எவ்வாறு என்றால், சொல்வோம். எக்காலத்து நீவிர் உள்ளீர். எங்கும் நிறைந்த இயல்பு உனக்குளது; அப்படியே யாமும் உள்ளோம். அக்காலத்து யாமும் உள்ளோம். அழியா நிலைமையை உடையம் யாம் உம்மைப்போல்! அறிவு என்ற பெயரை நீவிர் உடையீர். அப்பெயரைப் பிரிவதற்கு அரிய பெயராகப் பெற்றோம் யாம்! இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி என்று கூறப்படும் சத்திகளைப் பெற்றுள்ளாய். அத்தகைய ஆற்றல் எமக்கும் முழுவதும் உள்ளது. உமக்கு யாம் அந்நியம் அல்லோம். அநநியம்யாம். தருமபுரமும் திருவாரூரும் வளரும் தமிழ் வழங்கு மதுரையும் திருநகராகக் கொண்டு கோல் ஓச்சும் மாசிலாமணித் தேசிகராய!

நீவிர் 'சம்பந்தம்' என்ற பெயர் பூண்டுள்ளமையால் எம்மைச் சம்பந்தம் செய்ய நினக்குத் தகும். தத்துவங்களுக்குத் தலைமை காட்டி நிற்றலால் புருடன் என்ற பெயர் கொண்டுள்ளோம். ஆயினும் தலைவ, நும் குறிப்பின்படி நாங்கள் சத்திகளே. புருடனைச் சத்தியைப் போல் தொடர்புபடுத்தினை. அதற்கு ஓர் எடுத்துக்காட்டு புருடோத்தமன் (திருமால்). நின்னோடு எம்மையும் ஒப்பு எனப்படுத்தி முன்பு யான் கூறிய முறைமையில் சிற்சில முற்றும் ஒவ்வாது போனாலும் போகட்டும். உயர்ந்த தலைவன் ஒருவன் ஒத்த மங்கையைப் புணர்ந்தாலும் தன்னைவிட இழிந்தவளைப் புணர்ந்தாலும் இழிவு எனக் கூற இயலாது! ஆதலால் யாம் உன்னைக் காதலித்தோம். ஆகவே காதலுடன் எம்மை அருள் கையைப் பிடித்து ஒருவரும் உணர இயலாத மேலான வீட்டில் இருள் அறை திறந்த பெருவெளி கொண்ட மண்டபத்தில், உயர்ந்த நாதாந்த அழகிய மலர் அமளியில் உடல் புளகம் கொள்ள, சொல் தடுமாற, உள்ளே உள்ள நாதப் பறவையின் ஒலி முழங்க, ஞான ஆரமுதம் என்ற பானத்தை அருந்தித் தத்துவங்கள் யாவும் கழன்று பரவசப்பட்டு மேலான இன்பக் கடலுள் மூழ்கி எஞ்ஞான்றும் ஒருநிலையான இயல்பு பெற்று இனிதே இருக்கத் தெவிட்டாத இன்பத்தை எமக்கு அளித்தருளுவீராக!

**விளக்கம்**

சிவத்துக்கும் சீவனுக்கும் உள்ள ஒப்புமை கூறப்படும்.

எஞ்ஞான்று உளை - எக்காலம் உள்ளாய். உளம் அஞ் ஞான்று யாமே - அக்காலம் வரை யாமும் உள்ளோம். வியாபகம் - எங்கும் நிறை இயல்பு. உளமே - உளம்; பெற்றுள்ளோம்.

அறிவு எனப் பெயரினை - அறிவு என்ற பெயரைக் கொண்டுள்ளாய்; அதாவது ஞான சம்பந்தம்.

இச்சா ஞானக் கிரியை - இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி. இம் மூன்றும் இறைவனுக்கும் உள்ளது; தமக்கும் உள்ளது என்கின்றார்.

அந்நியம் அலம் - அயல் அல்லோம். தருமை - தருமபுரம். கமலை - திருவாரூர். கூடல் - மதுரை. தருமபுரம் திருவாரூர் மதுரை என்ற மூன்றிலும் மாசிலாமணித் தேசிகர் ஆளுகைக்குட் பட்டது. ஆதலால் அரசு வீற்றிருக்கும் என்றார்.

சம்பந்தம் செய்யத்தகும் - சம்பந்தம் செய்வது தக்கதே. சம்பந்தம் - கொள்வது கொடுப்பது. கருவிகட்கு இறைமை - தத்துவங்களுக்குத் தலைமை.

புருடன் என்னும் பெயர் ஆன்மாவுக்குரியது. புனைந்தனம் ஆயினும் - கொண்டுள்ளோம் என்றாலும். புருடன் என்னும் பெயரை நாங்கள் உடையோமாயினும் நின்னை நோக்குமிடத்து நாங்கள் சத்திகளே. காட்டு - எடுத்துக்காட்டு. புருடோத்தமன் - திருமால்.

ஒத்தோள் புணரினும் - ஒத்தவளைச் சேர்ந்தாலும். இழிந்தோள் புணரினும் - இழிந்தவளைச் சேர்ந்தாலும். இழிபு எனப்படாதே - இழிவு என்று கூற இயலாது. அருட்கைப்பிடித்து - அருளான கையைப் பற்றி. மலர் அமளியில் - பூம்படுக்கையில். நாதப்புள் - நாதமான பறவை. ஞான ஆரமுது - ஞானமாகிய அரிய அமுது. ஆர்ந்து - உண்டு. கருவிகள் - தத்துவங்கள். பரவசமாகி - தன் வயம் இழந்து; பரவை - கடல். படிந்து - நீராடி. பேரா இயற்கை - எஞ்ஞான்றும் ஒருநிலையாம் இயல்பு; வீடு. ஆரா இன்பம் - தெவிட்டாத இன்பம். (8)

## 574. மாசிலாமணி பெறுதற்கு எளிது

### நேரிசை வெண்பா

எம்ஆ ருயிராம் எழில்மாசி லாமணியை
அம்மா பெறுதற்கு அரிது அன்றே - சும்மா
இருந்தாரே பெற்றார்மற்று எவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்றார் மணி. 9

**தெளிவுரை**

எம் ஆருயிரைப் போன்ற அழகுடைய மாசிலாமணியை பெறுவதற்கு அரிதன்று. சும்மா இருந்தவர் அம்மாசிலாமணியைப் பெற்றார். எந்த வுலகில் முயன்று வருத்தப்படாமல் மணியைப் பெறுவார்?

**விளக்கம்**

சும்மா இருந்தார் - வாளா இருந்தவர்; செயல்மாண்டு இருந்தவர். உலகத்து மணிகள், அரியவற்றை ஆற்றிப் பெறுவன வாகும். இம்மாசிலா மணியோ செயலே இல்லார் பெறுவது. அம்மா - வியப்பிடைச் சொல். (9)

## 575. உலகமணிகளுக்கும் மாசிலாமணிக்கும் உள்ள வேற்றுமை

### கட்டளைக் கலித்துறை

மணிகொண் டவர்தம் பொருள்ஆவ தன்றிஅம்
மாமணியாம்
அணிகொண் டவரைக்கொண்டு ஆள்வது உண் டேஅருள்
கூடல் வைகும்
கணிகொண்ட கொன்றைத் தொடைமாசி லாமணி
கண்டவுடன்

பணிகொண்டு தொண்டும் கொண்டு ஆளும்கொள்
வோம்என்று பார்க்குமுன்னே. 10

**தெளிவுரை**

உலகில் மணி அதைக் கொண்டவரின் உடமையாகும் அதுஅன்றி அம்மாமணியாகிய அணி கொண்டவரைக் கொண்டு ஆட்கொள்வதுண்டோ? அருள் உடைய கூடலில் வாழும் கண்ணியாகக் கொண்ட கொன்றை மாலையை அணிந்த மாசிலாமணியைக் கண்டவுடன் அதைக் கொள்வோம் என்று பார்ப்பதற்கு முன்பு அது நம்மைப் பணி கொண்டு தொண்டாகவும் கொண்டு விடும்.

**விளக்கம்**

இதில் முன் பாடலைப் போன்று உலகில் உள்ள மணிகளுக்கும் மாசிலா மணிக்கும் உள்ள வேறுபாட்டைப் புலப்படுத்துகிறார்.

மணியைப் பெற்றவர் அதன் உடைமையாளராக விளங்குவார். ஆனால் மாசிலா மணியோ அதைப் பெற்றவரைப் பணிகொண்டு ஆட்கொண்டுவிடும். பணி கொண்டு - பணியைச் செய்யுமாறு செய்து. மாமணியாம் அணி என இயைக்க. உண்டே - ஏகாரம் வினா. அருள் கூடல் - அருளையுடைய மதுரை. கணி - கண்ணி என்பதன் தொகுத்தல் விகாரம். கண்ணி - முடிமாலை. கொன்றைத் தொடை - கொன்றையாகிய மாலை. தொடை கொள்வோம் என்று பார்க்கு முன்னே இம்மணி ஆட்கொள்ளும் என இயைக்க. (10)

## 576. விண்ணவர் அமுதை வேம்பெனக் கொண்டேன்!

### நிலைமண்டில ஆசிரியப்பா

முற்படு மாயை முதல்கரை நாட்டில்
பற்பல புவனப் பகுதி பற்றி
ஈர்இரு கண்ணால் எழுதரம் வகுத்த
ஆறுஏழ் இரட்டி நூறுஆ யிரத்த
5 செயற்படு செய்களின் உயிர்ப்பயிர் ஏற்றி
ஊழ்எனப் பட்ட தாழ்புனல் படுகரில்
தெய்விக முதலாச் செப்புமும் மதகும்
ஒவ்வொரு மதகாய் உடனுடன் திறந்து
தாகம் என்னும் தனிப்பெருங் காலில்
10 போகம் என்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயும்ஐம் பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்
இதத்துடன் அகிதம் எனும்இரண்டு ஊற்றின்
புதுப்புனல் பெருகிப் புறம்புஅலைத்து ஓட
15 வார்புனல் அதனை மந்திரம் முதலா
ஓர்அறு வகைப்படும் ஏரிகள் நிரப்பி
விளைவன விளைய விளைந்தன அறுத்து ஆங்கு
ஒருகளம் செய்யும் உழவன் ஆகி
மாநிலம் புரக்கும் மாசிலா மணி
20 ஞானசம் பந்த ஞான தேசிக
நல்அருள் திறத்தான் நம்பி நீயே
பல்உயிர்த் தொகுதியும் பயங்கொண்டு உய்களனக்
குடிலை என்னும் தடவயல் நாப்பண்
அருள் வித்து இட்டுக் கருணைநீர் பாய்ச்சி
25 வேதம் என்னும் பாதவம் வளர்த்தனை
பாதவம் அதனில் படுபயன் பலவே, அவற்றுள்
இலைகொண் டுவந்தனர் பலரே, இலை ஒரீஇத்

தளிர் கொண்டு வந்தனர் பலரே, தளிர் ஒரீஇ
அரும்பொடு மலர்பிஞ்சு அருங்காய் என்றுஇவை
30 விரும்பினர் கொண்டு கொண் டுவந்தனர் பலரே
அவ்வாறு உறுப்பும் இவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தம்என்று உச்சியில் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரம் கொண்ட சைவசித் தாந்தத்
35 தேன்அமுது அருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற்கு அன்னியம் ஆயினும்
அன்னவர் கமலப் பொன்அடி விளக்கிஅத்
தீம்புனல் அமுதம் ஆர்ந்தனன்அதனால்
வேம்புஎனக் கொண்டனன் விண்ணவர் அமுதே. 11

## தெளிவுரை

சுத்த மாயை முதலாகச் சொல்லப்பட்ட நாடுகளில் (சுத்த மாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என்ற நாடுகளில்) பலவகைப்பட்ட பகுதியைப் பற்றி அண்டசம் முதலான நால் வகைத் தோற்றமாகிய கண்ணாறு என்ற பெரிய வாய்க்கால் எழுவகையான பிறப்பாகிய வரிசையாய் வகுக்கப்பட்ட எண்பத்து நான்கு இலட்சம் யோனி பேதங்களாகிய வயல்களில், உயிரான பயிரை ஏற்றி ஊழ் எனப்பட்ட நீர் தாழும் நீர்நிலையில், தெய்வீகம் முதலாகச் சொல்லப்பட்ட மூன்று மதகும், ஒவ்வொன்றாய் உடனுக்குடன் திறந்து, ஆசை என்னும் ஒப்பற்ற வாய்க்காலில் போகம் (இன்ப துன்ப அனுபவம்) என்னும் புதிய நீரைக் கொணர்ந்து ஐம்பொறிகளான வாய்மடையைத் திறந்து தக்க பருவத்தைப் பார்த்துத் தேக்கவும், விருப்புடன் வெறுப்பு என்னும் இரண்டு ஊற்றில் புதிய நீர் பெருகி வெளியே விரைந்து ஓட நீண்ட அந்நீரை மந்திரம் முதலாக ஆறு ஏரிகளாகிய ஆறு அத்துவாக் களினை நிரப்பி, விளையக் கூடியவை விளைய, விளைந்தவற்றை அறுத்து, ஒரு களத்தைச் செய்தும் உழவனாகிப் பெரிய நிலத்தைக் காப்பவர் மாசிலாமணி தேசிக, நீயே நல்ல அருள் திறத்தால் பல உயிர்க் கூட்டங்களையும் பயன் பெற்று உய்க என்று சுத்தமாயை

என்னும் பெரிய வயலின் நடுவில் அருள் விதை வித்தி, அருள் என்னும் நீரைப் பாய்ச்சி வேதம் என்ற மரத்தை வளர்த்தாய். அம்மரத்தினால் விளையும் பயன் பல. அவற்றுள் பலர் அம்மரத்தின் இலையைக் கொண்டு மகிழ்ச்சி அடைந்தனர். பலர் இலையை விட்டுத் தளிரைப் பறித்து மகிழ்ந்தனர். பலர் தளிரை விடுத்து அரும்புடனே மலர் பிஞ்சு அரிய காய் என்னும் இவற்றை விரும்பிப் பறித்து மகிழ்வு அடைந்தனர். அந்த ஆறு உறுப்பும் இவ்வாறு பயன் தர, வேதாந்தம் என்ற மர உச்சியில் பழுத்த தெவிட்டாத இன்ப அரிய கனியைப் பிழிந்து சாரமாகக் கொண்ட சைவ சித்தாந்தத் தேன் அமுதை உண்டனர். சிலரே ஆவார். யான் அவர்தம் நன்னிலை பெறுதற்கு அயலான் ஆவேன். ஆயினும் அத்தகையவர் தாமரை போன்ற அழகிய அடியைத் தூய்மை செய்து தூய்மை செய்த இனிய நீர் அமுதை அருந்தினேன். அதனால் விண்ணவர் அமுதை வேம்பாகக் கொண்டேன். (வெறுத்தேன்)

**விளக்கம்**

முற்படு மாயை - சுத்தமாயை. முதற்கரை நாட்டில் - முதலாகச் சொல்லப்படும் நாடுகளில். சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதி மாயை என்ற மூன்று புவனங்களில்.

ஈர் இரு கண்ணாறு - அண்டசம் முதலிய நான்கு வகைத் தோற்றமாகிய கண்ணாறு. கண்ணாறு என்பது வயல்களுக்குப் பாயும் பெரிய வாய்க்கால்.

எழுதரம் வகுத்த - ஏழுவகைப்பட்ட பிறப்பாகிய வரிசையாக வகுக்கப்பட்ட. தரம் - வயல்களின் தகுதிக்கு ஏற்பப் பிரிக்கும் பிரிவு. ஆறு ஏழ் இரட்டி நூறாயிரத்த செயற்படு செய்களில் - எண்பத்து நான்கு இலட்சம் யோனி பேதங்களான வயல்களில். வயலில் ஊன்றியது 'உயிர்' என்னும் பயிர். ஊழ் எனப்பட்ட தாழ்புனல் படுகர் - ஊழாகிய நீர் நிறைந்த நீர் நிலைகள். படுகர் - நீர்நிலை. தெய்விகம் முதலான மும்மதகு - தெய்விகம் முதலிய மூன்றாவன - ஆதி தெய்விகம், ஆதி பௌதிகம், ஆதியாத்மிகம்.

தாகம் - ஆசை. கால் - வாய்க்கால். போகம் - இன்ப துன்ப அனுபவம். புதுப்புனல் - புதிய நீர். ஐம்பொறியாம் - ஐந்து பொறிகளான. வாய் மடை திறந்து - வாய்க்காலில் அமைந்த மடைகளைத் திறந்து. வரன்முறை தேக்கல் - முறைப்படியாய்த் தேக்குதல். இதம் - விருப்பு. அகிதம் - வெறுப்பு. மந்திரம் முதலிய ஆறு ஏரிகள் ஆறு அத்துவாக்கள். அவையாவன: மந்திராத்துவா, வன்னாத்துவா, பதாத்துவா, தத்துவாத்துவா, புவனாத்துவா, கலாத்துவா, அவை ஏரிகள். அத்துவா - வழி.

புறம்பு அலைத்து ஓட - புறத்தே வழிந்து ஓட. விளைவன - ஆகாமியம். இப்பிறவியில் செய்யும் புண்ணிய பாவங்கள். விளைந்தன - பிராரத்தம்; இம்மையில் பயனளிக்கும் பழவினை. ஒருகளம் செய்யும் - ஒரு களத்தை உருவாக்கும்.

உழவனாகி - ஞானாசிரியரை இங்ஙனம் உழவனாக்கி உரைத்தார். குடிலை - சுத்த மாயை. தடவயல் - பெரிய வயல். நாப்பண் - நடுவில். அருள் வித்திட்டு - அருள் என்னும் விதையை வித்தி. கருணநீர் பாய்ச்சி - அருளாகிய நீரைப் பாய்ச்சி. வேதம் என்னும் பாதவம் - வேதம் என்ற மரம். பாதவம் அதனில் படுபயன் பலவே - அம்மரத்தால் உண்டாகும் பயன்கள் பல. உவந்தனர் - மகிழ்ந்தனர். ஒரீஇ - நீக்கி.

(27-31) வைதிக சைவத்தின் பிரிவுகளைச் சார்ந்தவர் தத்தம் பக்குவத்துக்கு ஏற்பப் பயனைப் பெற்றனர் என்றார்.

வேதாந்தம் - வேதம் + அந்தம்; வேதத்தின் முடிபு; உபநிடதம். ஆரா இன்பம் - தெவிட்டாத இன்பம். அருங்கனி - அரிய பழம். பழத்தைப் பிழிந்து சாற்றைக் கொண்டதான சைவ சித்தாந்தத் தேனை அருந்தியவர் சிலர்.

வேம்பெனக் கொண்டனன் - வெறுத்தேன். தீம்புனல் - இனிய நீர். விண்ணவர் அமுது - தேவர் உண்ணும் அமுது; தேவாமிர்தம். (11)

## 577. என்னவென்று சொல்வேன்?

### நேரிசை வெண்பா

விண்புரக்கும் சிந்தா மணிஎன்கோ மெய்ச்சுடரால்
மண்புரக்கும் சூளா மணிஎன்கோ - பண்பார்
திருமா முனிவர் சிகாமணிஎன் கோசீர்
தருமாசி லாமணியைத் தான். 12

**தெளிவுரை**

சிறப்புப் பொருந்திய மாசிலாமணி தேசிகரை, யான் தேவர் உலகைக் காக்கும் சிந்தாமணி என்பேனோ! தன் ஞான ஒளியால் மண் உலகத்தைக் காக்கும் முடிமணி என்று கூறுவேனோ! நற் பண்புடைய முனிவர்களின் தலைவர் என்று உரைப்பேனோ!

**விளக்கம்**

விண் புரக்கும் - சுவர்க்கத்தைக் காக்கும். என்கோ - என்கு + ஓ; என்பேனோ. மெய்ச்சுடர் - ஞான ஒளி. சூளாமணி - முடிமணி. சிகாமணி - தலையில் அணியும் மணி; தலைவர் என்பது கருத்து. சீர்தரு - சிறப்புடைய. (12)

## 578. சிவமாம் இயல்பைப் பெறுபவன்!

### கட்டளைக் கலித்துறை

தான்அவன் ஆகிய தன்மைபெற் றான்அடி தாழப்பெற்றால்
தான்அவன் ஆகிய தன்மைபெற்று உய்வன்அத்
தன்மைஇன்றித்
தான்அவன் ஆகிய தன்மைபெற் றேற்கு அருள் தாழ்சடிலத்
தான்அவன் நாகம் பெறா மாசி லாமணிச் சம்பந்தனே. 13

## தெளிவுரை

சிவோகம் பெற்ற ஒரு ஞானி நினது திருவடியை வணங்கப் பெற்றால் அவன் சிவமாம் இயல்பைப் பெற்று என்றும் மாறாது அந்நிலையில் நின்று விளங்குவான். சிவபெருமான் சடையில் உள்ள திங்களையும் அணியான பாம்பையும் பெறாது மாசிலா மணி எனக் காட்சி அளிக்கின்றவனே! சிவோகம் என்ற பாவனை இல்லாது வீணனாகிய தன்மையைப் பெற்ற எனக்கும் அருளுவாயாக!

## விளக்கம்

சிவோகம் - தான் சிவன் என்று பாவிக்கும் தன்மை. அடி - நின் திருவடி. தாழப் பெற்றால் - வணங்கினால். தான் என்றது மேற்கூறப்பட்ட சிவஞானி.

அவனாகிய தன்மை பெற்று - சிவமாம் இயல்பு பெற்று. உய்வன் - எக்காலத்தும் 'அந்த நிலையில்' இருப்பான். அத் தன்மை இன்றி - சிவோகம் என்ற பாவனை இல்லாது. தானவனாகிய - தான் + அவனாகிய; தான் - அசைநிலை. அவனாகிய - வீணனாகிய. தன்மையாவது தானே முதல் எனல். அருள் - அருளுவாயாக. தாழ் சடிலம் - தாழ்ந்து தொங்கும் சடை. சடிலத்தானவன் நாகம் பெறா - சடையையுடைய சிவபெருமான் சந்திரனையும் பாம்பையும் அணியாமல் தானவன் என்பது சந்திரனைக் குறிக்கும்.

சிவபெருமானே தன் வடிவை மறைத்துக் கொண்டு மனித வடிவம் கொண்டு ஆசிரியராய் எழுந்தருளியுள்ளான் என்பது கருத்து.

மாசிலாமணிச் சம்பந்தன் - மாசிலாமணி ஆகிய ஞான சம்பந்தனே. (13)

## 579. விருப்பு வெறுப்பு உளவாய கருத்தினர்

### நேரிசை ஆசிரியப்பா

பந்தனை தவிராச் சிந்தனை நிகர்ப்பப்
பாயிருள் பரந்த மாஇரும் பொழிலில்
கொளற்குஉரி மாந்தர்க்கு அளித்தல் செய்ய
தரும் பூண் சுமந்த அறிவி லாளரில்
5 சுரும்புஊண் வெறுத்த துதைமலர் வேங்கை
தன்மருங்கு உறீஇப் பொன்மலர் பிலிற்ற
இலைஅறப் பூத்த சுதைமலர்ப் புன்னையின்
மெய்ப்புலன் நோக்கார் கண்புலன் கடுப்ப
இமையா வறுங்கண் இமைத்தபைங் கூந்தல்
10 பசுந்தார் மஞ்ஞை அசைந்துஅமர் தோற்றம்
பொன்துணர் பொதுளிய கற்பகப் பொதும்பர்
பொறிவண்டு உண்ணா நறுமலர் தூற்றப்
பாடல் சான்ற கோடுபல தாங்கிக்
கவளம் கொள்ளாத் தவளமால் களிற்றின்
15 கண்பல படைத்த கார்முகில் வண்ணத்து
இந்திரன் பொலியும் எழில்நலம் காட்டும்
தண்பணை உடுத்த தமிழ்ப்பெருங் கூடல்
வண்பதி புரக்கும் மாசி லாமணி
தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்
20 தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிட னாய வடிவுகொண்டு அருளாது
மானிட னாய வடிகொண் டருளி
எற்புஅணி பூணாது என்பணி பூண்டு
பாரிடம் சூழாது பாரிடம் சூழ்தர
25 ஆரூர் அமர்ந்த ஞான சம்பந்த
நின்புகழ்ந்து இறைஞ்சும் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்புஅற்று இருப்பர் என்ப
பொருள்துணிபு உணர்ந்த புலமை யோரே

இகபரம் இரண்டினும் எதிர்நிறை கொளினும்
30 தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும்
முன்னவர் மொழிந்ததற்கு அன்னியம் ஆகலின்
விருப்பு வெறுப்பு உள வாய
கருத்தினர் ஆகவும் கண்டனம் யாமே. 14

**தெளிவுரை**

(1-18) பற்று நீங்கப் பெறாத மனத்தைப் போல் இருள் பரவப் பெற்ற மிகக்கரிய சோலை, அதில் பொருள் கொள்வதற் குரிய இரக்கும் மக்களுக்குப் பொருளைத் தராது அரிய அணிகளை அணிந்து கொண்டுள்ள அறிவற்றவர் போல் வண்டு தன் தேனை உண்ணுதலை வெறுத்த நெருங்கிய மலரையுடைய வேங்கைமரம்; அதன் பக்கத்தில் பொருந்தியிருக்கப் பெற்றுப் பொன்மலர் உதிர்ப்ப இலையே இல்லாமல் மலர்கள் மலர்ந்துள்ள வெண்மையான மலர்களையுடைய புன்னை மரம். அதில், உண்மையான பொருள்களைப் பார்க்காத குருடர்களின் கண்ணைப் போல், இமைத்தல் இல்லாத பார்வையற்ற பீலியின் கண் தோகையை உடைய பசிய கழுத்தில் கீற்றினைப் பெற்றுள்ள மயில் அமர்ந்துள்ளது. அதன் தோற்றம், பொன் கொத்துக்களை யுடைய கற்பக மரச் செறிவில் புள்ளியையுடைய வண்டு உண்ணாத நறுமணம் கொண்ட மலரைத் தூற்றக் கொம்புகள் பலவற்றைத் தாங்கி உணவை உண்ணாத வெண்ணிற ஐராவத யானையைப் பெற்றிருக்கும், உடலில் கண்கள் பலவற்றையுடைய இந்திரன் வீற்றிருக்கும் அழகிய தோற்றம் போல் விளங்கும். இத்தகைய இயல்புடையதும் குளிர்ந்த வயல்கள் சூழ்ந்துள்ளது மான தமிழ் வளர்த்த பெருமையுடைய மதுரை என்ற வளம் மிக்க பதியைக் காக்கும் மாசிலாமணியே!

(19-25) தலையிலே பொருந்திய கலைகளையுடைய சந்திரனை அணியாமல், சிறந்த கலைஞானத்தைப் பொருந்தி, நிலையாய் உள்ள மான் இடப்பக்கத்தில் கொண்ட கோலம் கொள்ளாது மனிதனாகிய கோலம் கொண்டு, எலும்பான அணியை அணிந்து கொள்ளாமல் என் தொண்டான அணியை

ஏற்று, பூதகணங்கள் சூழப் பெறாமல் இவ்வையம் சூழ்ந்த திருவாரூரில் அமர்ந்துள்ள ஞானசம்பந்தனே!

(26-33) நினது புகழைப் போற்றி வணங்கும் கற்றறிந்த மக்கள் விருப்பும் வெறுப்பும் இல்லாது இருப்பர் எனப் பொருள் துணிபை உணர்ந்த அறிஞர் உரைப்பர். அந்த விருப்பு வெறுப் புகளை இகம் பரம் என்பனவற்றின் எதிரே நிறுத்தலைக் கொண்டாலும், பலவகைத் தொகைகளுள் வேற்றுமைத் தொகை யாக வைத்துக் கொண்டாலும் (அதாவது விருப்பினிடத்தே வெறுப்பு அற்று இருப்பர் என்று விரித்து விரும்பத்தக்க உலகவாழ்வு முதலானவற்றில் அடியார்க்கு இருக்க வேண்டிய வெறுப்பு நீங்கி இருப்பர் எனப்பொருள் கொண்டாலும்) இவ்விருவகைப் பொருள்களும் முன்னவர் விருப்பும் வெறுப்பும் அற்றிருப்பர் என உரைத்ததற்குப் புறம்பாகும்; ஆதலால், இம்மை வாழ்வில் விருப்பும் மறுமை வாழ்விலே வெறுப்பும் உளவாய கருத்தினராகவும் கண்டோம் யாம்.

**விளக்கம்**

(1-18) பந்தனை - பற்று. தவிரா - நீங்கப் பெறாத. சிந்தனை நிகர்ப்ப - மனத்தைப் போல. பாயிருள் - பரவும் தன்மையுடைய இருள். மாஇரும் பொழில் - மிகக் கரிய சோலை. கொளற்குரி மாந்தர் - இரவலர்; வறியவர் என்பதுமாம். அளித்தல் செய்யாது - கொடாது. அரும்பூண் சுமந்த - அரிய அணிகளை அணிந்துள்ள. அறிவிலாளரின் - அறிவு அற்றவரைப் போல. சுரும்பு ஊண் வெறுத்த - வண்டு தன் தேனை உண்ணுதலை வெறுத்த. துதைமலர் வேங்கை - நெருங்கிய மலரை யுடைய வேங்கை மரம். தன் - புன்னை மரம். உறீஇ - பொருந்தி. பொன்மலர் - பொன் போன்ற நிறம் உடைய மலர். பிலிற்ற - உதிர்க்க. இலை அறப்பூத்த - இலைகள் இல்லாமல்மலர சுதை மலர் - வெண்மையான மலர். மெய்ப் புலன் நோக்கார் கண்புலன் கடுப்ப - உண்மையான பொருள்களைப் பாராத குருடர்களின் கண்ணைப் போல். இமையா வறுங்கண் - இமைத்தல் இல்லாத பார்வை இல்லாத வறிய பீலிக்கண். அதாவது மயில் தோகையில் உள்ள கண்

போன்றவை. கூந்தலாவது - மயிலின் தோகை. இமைத்த - ஒளி வீசும். பசுந்தார் - மயிலின் கழுத்தில் உள்ள கோடு போன்ற தோற்றம் கொண்ட கீற்று. மஞ்ஞை - மயில். அமர் தோற்றம் - புன்னை மரத்தில் அமர்ந்துள்ள தோற்றம்.

பொன்துணர் - பொன் போன்ற நிறம் உடைய பூங்கொத்து. பொதுளிய - செறிந்த. கற்பகப் பொதும்பர் - கற்பகமரச் செறிவு. பொறி வண்டு உண்ணா - புள்ளிகளை யுடைய வண்டு தேனை உண்ணாத. கற்பக மரத்தில் வண்டுகள் தேனை உண்ணாது. நறுமலர் தூற்ற - நறு மண மலர்களைச் சிந்த. பாடல் சான்ற - புகழ் பொருந்திய. கோடு - கொம்பு. கவளம் கொள்ளா - உணவை உண்ணாத. தவள மால் களிறு - வெண்மையான நிறம் உடைய ஐராவதம் என்ற ஆண் யானை. கண்பல படைத்த - உடலில் பல கண்களை உடைய. கார்முகில் - கரிய மேகம்.

வேங்கை மலருக்குக் கற்பக மலர் உவமை. வெண்மையான மலரை யுடைய புன்னைக்கு வெண்மையான ஐராவதம் என்ற யானை உவமை. மயிலுக்கு இந்திரன் உவமை. எழில்நலம் - அழகிய தோற்றம். தண்பணை - குளிர்ந்த வயல். உடுத்த சூழ்ந்த. கூடல் - மதுரை. வண்பதி - வளப்பம் உடைய நகர்.

(19-33) தலைப்படு கலைமதி - சிவபெருமானின் தலையில் பொருந்தும் கலைகளையுடைய பிறைச் சந்திரன். தாங்காது - அணிந்து கொள்ளாமல். தலைப்படு கலைமதி - மேலான சிறந்த கலை ஞானம். தாங்கி - பொருந்தி, நிலைப்படு - நிலையான. மான் இடன் ஆய - மானினை, உமையாளை இடப்பக்கத்தில் உடைய. வடிவு - கோலம், மானிடன் ஆய வடிவு - மனிதன் ஆன வடிவம்; எற்பணி பூணாது - என்பு+அணி+பூணாது; எலும்பாகிய அணியை அணிந்து கொள்ளாது. எற்பணி பூண்டு - என்+ பணி + பூண்டு; என் தொண்டை ஏற்று. பாரிடம் சூழாது - பூத கணங்கள் சூழாமல்; பாரிடம் - பூதம். பாரிடம் சூழ் தர - உலகத்தில் பொருந்திய.

கற்பின் மாக்கள் - கல்வி அறிவை யுடையவர். விருப்பு வெறுப்பு அற்று இருப்பர் என்ப - விருப்பும் வெறுப்பும் இல்லாமல் இருப்பார்கள் என்று புலமையோர் உரைப்பர்.

இகம் பரம் - இம்மை மறுமை. இகம் பரம் எதிர்நிறை கொளினும் - அவ்விருப்பு வெறுப்புக்களை இகம்பரம் என்பன வற்றின் எதிரே நிறுத்தலைக் கொள்ளினும். அதாவது எதிர் நிறையாக அமைத்துப் பொருள் கொண்டாலும் என்றபடி. அங்ஙனம் கொள்ளும் முறை. இகத்தில் வெறுப்பு அற்று இருப்பர்; பரத்தில் விருப்பு அற்று இருப்பர். இதன் கருத்து இம்மை வாழ்வையே இன்ப வாழ்வாகக் கொண்டு முத்தி யுலகத்தில் விருப்பம் இல்லாமல் இருப்பர்.

தொகுதியுள் - பலவகைத் தொகைகளுள். வேற்றுமைத் தொகைப் பொருள் கொளினும் - வேற்றுமைத் தொகையாகக் கொண்டு அதற்கு ஏற்பப் பொருள் கொண்டாலும். இதன் கருத்து விருப்பினிடத்தே வெறுப்பு அற்றிருப்பர் என்று விரித்து விரும்பத் தக்க உலக வாழ்வு முதலியவற்றில் அடியவர்க்கு இருக்க வேண்டிய வெறுப்பு அகலப் பெற்று இருப்பர் என்பதாம். உலக வாழ்க்கையை விரும்புவர் என்பது கருத்து.

இந்த இருவகைப் பொருள்களும் முன்னவர் விருப்பும் வெறுப்பும் அற்றிருப்பர் என்ற பொருள்படக் கூறியமைக்குப் புறம்பானவை யாகும். அன்னியம் - புறம்பு.

விருப்பு வெறுப்பு உளவாய கருத்தினராகவும் கண்டனம் - இப்பிறவி வாழ்வில் விருப்பும் மறுமை வாழ்வில் வெறுப்பும் உள்ளவராய் இருப்பதைக் கண்டோம். (14)

## 580. இந்நூலில் கோக்கப் படும் மணி மாசிலா மணி

### நேரிசை வெண்பா

கண்ணிற்கு அணியாம் கதிர்மாசி லாமணியைப்
பண்ணிற்கு அணியாப் பகர்வரால் - எண்ணுங்கால்
பன்நூலில் கோக்கப் படுமணிஅன்றி இம்மணிமற்று
இந்நூலில் கோக்கும்மணி என்று. 15

**தெளிவுரை**

ஒளியுடைய மாசிலாமணியைக் கண்ணிற்கு அணியான மாசிலாமணியை இசைப்பாட்டுக்கு அணி என உரைப்பார்கள். ஆராயும் போது இது பஞ்சினால் ஆன நூலில் கோக்கப்படும் மணியன்று. இம்மணி இச்செய்யுள் நூலில் கோக்கப்படும் மணியாகும்.

**விளக்கம்**

பண்ணிற்கு - இசைப்பாட்டுக்கு. பகர்வரால் - பகர்வர்+ ஆல்; பகர்வர் - கூறுவர்; ஆல் - அசை. பன் நூல் - பஞ்சினால் ஆனநூல். பன்-பஞ்சு. இந்நூலில் - இந்தச் செய்யுள் நூலில். (15)

## 581. மாசிலாமணி ஒரு காந்தம்

### கட்டளைக் கலித்துறை

என்வச மாகநில் லாதநெஞ் சாம்இரும் பைக்குழைத்துத்
தன்வச மாக்கொண்டு இழுக்கின்றதால் தொண்டர்
தம்மைஅருள்
மன்வச மாகச் செயுமாசி லாமணி மாமணிக்குப்
பொன்வச மாகச்செய் காந்தம்என் றேசொல்லப்
போந்ததுவே. 16

**தெளிவுரை**

என் வசமாக நில்லாத நெஞ்சம் என்ற இரும்பைக் குழைத்துத் தன் வசமாக ஆக்கிக் கொண்டு இழுக்கின்றது. ஆனதால் அடியவரைத்தன் வசமாக்கும் மாசிலாமணிக்கு இரும்பைத் தன் வசமாக்கும் காந்தம் என்று கூறும் சொல்லும் தன்மை உண்டாயிற்று.

**விளக்கம்**

நெஞ்சமாம் இரும்பு - மனம் என்ற இரும்பை. குழைத்து - குழையச் செய்து. பொன் - இரும்பு. இந்த மணியை இரும்பை இழுக்கும் காந்தம் என்றே சொல்ல வேண்டும் என்பது கருத்து. சொல்ல - சொல்லும்படியான தன்மை. போந்தது - உண்டாயிற்று.

(16)

## 582

### நேரிசை ஆசிரியப்பா

போந்தையங் கண்ணி வேந்துவில் பொறித்த
மன்பெருங் கிரியின் மென்கரும்பு எழுதித்
தேசுஉலாம் பசும்பொன் சிகரமந் தரத்தின்
வாசுகி பிணித்தென மணிக்கச்சு இறுக்கிக்
5 கடாம்பொழி கரடக் களிநல் யானை
படாம்புனைந் தென்னப் பைந்துகில் போர்த்துப்
பிதிர்சுணங்கு அலர்ந்த கதிர்முலை மடந்தையர்
விண்புலத் தவர்க்கும் கண்புலன் கதுவாக்
சூளிகை வகுத்த மாளிகை வைப்பில்
10 சுவல்கைத் தாங்குபு மதிஅணந்து பார்க்கச்
சேண்இகந்து ஓங்கும் யாணர்செய் குன்றத்து
ஆடகத்து இயன்ற சூடகக் கரத்தால்
மாடகத் திவவியாழ் மருமம்மீது அணைத்து
மூவகை நிலையத்து ஏழுசுரம் நிறீஇக்
15 கொவ்வைவாய் திறந்து குயில்என மிழற்றுபு
மென்னரம்பு உகிரால் விரல்முறை தடவிக்
கின்னரம் வியக்கும் கீதம் பாட
நகைநிலவு எறிக்கும் முகமதி காணூஉச்
சந்திர காந்தத்தில் சமைத்தசெய் குன்றம்
20 மைந்தர் போன்று உருகி மழைக்கணீர் சொரியப்

பல்வளம் சுரக்கும் பைந்தமிழ்க் கமலை
நல்வளம் பதிவாழ் ஞானசம் பந்த
பாசமாம் இருட்குழ்ஓர் படர்மணி விளக்குஎனும்
மாசிலா மணித் தேசிக ராய
25 சாற்றுவன் கேண்மதி மாற்றம்ஒன்று உளதே
மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வார
மொழிதடு மாற முழுவலன்பு அலைப்பச்
சத்திநி பாதத் தன்மைவந்து அடைந்தோர்க்கு
அப்பொருள் புரிதற்கு அதுபொழுது ஆகலின்
30 மெய்ப்பொருள் உணர்த்துதல் வியப்பெனப் படாதே
சொல்தமிழ் விரகன் துணைக்கண் சாத்த
முற்றுணர் கேள்வியர் பற்பலர் ஆயினும்
கைசொலக் கேட்கும் கட்செவி மூங்கைக்கு
உய்வகை புணர்த்தது ஒருவியப்பு ஆகலின்
35 அன்னது கடுப்பநின் சந்நிதி விசேடத்து
இன்அருள் பெறாதவர் யாவரும் இலர்என
வியப்புஉள தாக நயப்புஒன்று உளதே
அனையதுஈங்கு என்என வினவுதி யால்எனில்
கதலித் தண்டில் பொதிதழல் கொளீஇப்
40 பற்றாது இருப்பினும் பைப்பைய மூட்டுபு
மற்றொரு சூழ்ச்சியின் பற்றுவித்தால் என
ஒருசிறிது எனினும் பருவம்இன்று ஆயினும்
பவ இருள் துரந்தருள் பதியத்
தவம்இல் பேதையேன் தனக்குஅருள் வதுவே. 17

## தெளிவுரை

(1-24) பனங்குருத்தால் ஆன அழகிய மாலையைச் சூடிய சேர மன்னன் தன் வில் சின்னத்தைப் பொறித்த, நிலைபெற்ற மேரு மலையின் மென்மையான கரும்பு வடிவை எழுதி, ஒளியுடைய பசும் பொன் உச்சியையுடைய மந்தர மலையில் வாசுகி என்ற பாம்பைக் கட்டியது போன்று மணிபதித்த கச்சினை இறுக்கி, மதம்

சொரியும் சுவட்டையுடைய களிக்கும் நல்ல யானை யானது படாத்தை. அணிந்தாற் போல் பசுமையான துகிலைப் போர்த்தித் தேமலாகிய சுணங்கை உடைய ஒளியுடைய கொங்கையை யுடைய மங்கையர் வானத்தவர்க்கும் கண்ணால் காண இயலாத படி உயர்ந்த சூளிகையுடைய மாளிகைகளில் பிடரைக் கையால் தாங்கிச் சந்திரனை அண்ணாந்து பார்க்க மிகவும் உயர்ந்து ஓங்கும் புதுமையுடைய செய் குன்றத்தில், ஆடகப் பொன்னால் ஆன பொன்வளையல் அணிந்த கையால் மாடகம் என்ற உறுப்பையும் திவவையும் உடைய யாழை மார்பில் அணைத்து, வலிவு மெலிவு சமம் என்ற மூன்று நிலையில் ஏழு சுரங்களை நிறுத்திக் கொவ்வைப் பழம் போன்ற வாயைத் திறந்து குயில் போல் மிழற்றி மென்மையான நரம்பை விரல் நகத்தால் முறைப்படி தடவிக் கின்னரம் என்ற பறவையும் வியக்கும்படி இசைப் பாடல் பாடிட, நிலவு ஒளி வீசும் முகம் என்ற சந்திரனைக் கண்டு சந்திர காந்தக் கல்லால் அமைக்கப்பட்ட செய்குன்றம் மக்களைப் போல் உருகி மழைக்கண் நீர் சொரியப் பலவளங்களும் சுரக்கும் பசுந்தமிழ் வழங்கும் திருவாரூர் என்ற நல்ல வளமுடைய பதியில் வாழ்கின்ற ஞானசம்பந்த! பாசம் என்ற இருளுக்கு ஓர் மணிவிளக்கு என்னும் மாசிலாமணித் தேசிகராய!

(25-41) நான் கூறுவதைக் கேட்பாய்! நான் சொல்ல வேண்டியது ஒன்று உள்ளது. உடல் மயிர் புளகம் கொள்ளக் கண்ணீர் வடிய, சொல் தடுமாற விடாத தொடர்ந்த அன்பு வருத்த திருவருட்பதிவு வந்து அடையப் பெற்றவர்க்கு அப்பொருள் அருளுதற்கு அதுவே தக்க சமயம். ஆதலால் அத்தகையோர்க்கு மெய்ப்பொருளை உணர்த்துதல் வியப்பானது என்று கூற இயலாது.

பாடல் பாடுவதில் வல்லவனான திருவாதவூரர் இரு கண்களைக் கொண்டு நோக்க முழுவதும் உணர்ந்த கேள்வியை யுடையவர் பற்பலர் என்றாலும் கையால் பேசும் கண்ணையே செவியாக உடைய ஊமைப் பெண்ணுக்கு உய்யும் வகையை ஏற்படுத்தியது - பேசும்படி செய்தது - ஒரு வியப்பானது. ஆதலால் அதைப் போன்ற நின் திருமுன்பு வந்து நின் அருளைப்

பெறாதவர் எவரும் இல்லை என்பது வியப்பாக உள்ளது. யான் விரும்புவது ஒன்றுண்டு. ஆதலால் அது எது என்று வினவினாயானால், வாழைத் தண்டில் தீயை உண்டாக்கி அது பற்றாது போயினும் மெல்ல மெல்ல ஊட்டி வேறொரு சூழ்ச்சியால் - தந்திரத்தால் - பற்றி எரியுமாறு செய்தாற் போல ஒரு சிறியதே என்றாலும் தக்க பருவம் இல்லாதாயினும் பிறவியாகிய அஞ்ஞானத்தை நீக்கி அருள் பதியத் தவம் ஆற்றாதவன் யான். ஆதலின் இத்தகைய எனக்கு அருள் செய்வாய்!

**விளக்கம்**

போந்தையங்கண்ணி - பனங்குருத்தால் ஆன மாலை. வேந்து - சேர மன்னன். வில் பொறித்த - வில்சின்னத்தைப் பொறித்த. மன்பெருங்கிரியின் - நிலைபெற்ற பெரிய இமய மலையைப் போல். மென் கரும்பு எழுதி - மன்மதனின் வில்லான கரும்பு வடிவை மங்கையர் கொங்கையில் எழுதி. தேசுஉலாம் - ஒளி பொருந்திய. பசும் பொன் சிகர மந்தரம் - பசும் பொன்னால் ஆன உச்சியை உடைய மந்தரமலை. வாசுகி பிணித்தென - வாசுகி என்ற பாம்பைப் பிணித்தாற் போன்று. மணிக்கச்சு இறுக்கி - அழகிய கச்சினை இறுக்கமாகக் கட்டி. கடாம் - மதம். கரடம் - சுவடு. களி நல்யானை - மதத்தை உடைய யானை. படாம் புனைந் தென்ன - முகத்தில் துணியை - படாத்தைப் - போர்த்ததைப் போன்று. பைந்துகில் போர்த்து - பசுமையான ஆடையைப் போர்த்தி. பிதிர் சுணங்கு - தேமலாகிய பசலையையுடைய. கதிர் முலை - ஒளி வீசும் முலை.

(1-7) மங்கையர் முலைகளின் மீது வில் எழுதியதற்கு, சேரமன்னன் இமயத்தில் விற்பொறித்ததும், அம்முலைகளைக் கச்சினால் இறுக்கியதற்கு மந்தரமலையை வாசுகி என்ற பாம்பைக் கயிற்றால் பிணித்ததும், அவற்றின் மேல் ஆடை போர்த்ததற்கு யானையின் முகத்தின் மேல் படாம் அணிந்ததும் உவமைகள்.

விண்புலத்தவர்க்கும் - தேவர்க்கும். கண் புலன் - கண்ணாகிய பொறி. கதுவா - பற்ற முடியாத. சூளிகை - மாடங் களிடத்தே அமையும் அறைகள். வகுத்த - அமைக்கப்பட்ட.

சுவல் கை தாங்குபு - பிடரைக் கையால் தாங்கி. அணந்து - அண்ணாந்து. சேண் - விண் உலகம். இகந்து - கடந்து. ஓங்கும் - உயர்ந்துள்ள. யாணர் - அழகு. ஆடகத்து இயன்ற - ஆடகம் என்ற பொன்னால் ஆன. சூடகக் கரத்தால் - வளையணிந்த கையால். மாடகம் - யாழின் உறுப்பான முறுக்கு ஆணி. திவவு - யாழ்த் தண்டில் உள்ள நரம்புக்கட்டு. மருமம் - மார்பு. மூவகை நிலை - இசையில் உள்ள வலிவு, மெலிவு, சமம் என்ற மூன்று வகையான நிலை.

உழை, இளி, விளரி, தாரம். ஏழுசுரம் - இது சட்ஜமம் ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், நிஷாதம் என ஏழு சுரம். இது வடவர் வழக்கு, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். நிறீஇ - நிறுத்தி. கொவ்வை வாய் திறந்து - கொவ்வைப்பழம் போன்ற வாயைத் திறந்து. குயில் என மிழற்றுபு - குயில் குரல் போல் பாடி. மென்னரம்பு - யாழின் மென்மையான நரம்பை. விரல் உகிரால் முறை தடவி - விரல் நகத்தால் முறைப்படி தடவி.

கின்னரம் - இசை பாடும் ஒருபறவை; தேவ சாதியினருள் இசை பாடும் ஒரு சாதியான கின்னரர் எனவும் கொள்ளலாம். வியக்கும் - ஆச்சரியப் படும்படி. கீதம் - இசைப் பாடல்.

முகமதி காணூஉ - முகம் என்ற சந்திரனைப் பார்த்து. காணூஉ - கண்டு; 'செய்யூ' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சந்திர காந்தத்தின் சமைத்த - சந்திர காந்தக் கல்லால் அமைக்கப் பட்ட. செய்குன்றம் - செயற்கையான குன்று. மைந்தர் - மக்கள். மழைக்கணீர் சொரிய - மழைபோலும் கண்ணீரைச் சொரிய. நிலவைக் கண்ட சந்திரகாந்தக் கல் உருகிக் கண்ணீர் பொழியும் என்பர் அறிஞர். அது போல் பாடலைக் கேட்டுக் கண்ணீர் விட என்க.

பைந்தமிழ்க் கமலை - பசுந்தமிழ் வழங்கும் திருவாரூர்.

பாசம்ஆம் இருட்கு ஓர் படர்மணி விளக்கு - பாசம் என்ற இருளை ஒழித்தற்கு ஒளிபரவும் மணி இரத்தின விளக்கு. அது மாசிலாமணி தேசிகரைக் குறித்தது.

(25-44) கேண்மதி - கேட்டருளுக. மாற்றம் - சொல்; என்றது விண்ணப்பத்தை.

மெய்ம்மலிர் சிலிர்ப்ப - உடல் மயிர் புளகம் கொள்ள. கண்ணீர் வார - கண்ணீர் சொரிய. முழுவல் அன்பு - இடையறாது தொடர்ந்து வரும் அன்பு. அலைப்ப - நெகிழச் செய்ய.

சத்தி நிபாதம் - பக்குவம் வரப்பெற்ற ஆன்மாவில் திருவருள் பதிகை.

அப்பொருள் - சத்திநிபாதம். புரிதற்கு - உபதேசித்தற்கு. மெய்ப்பொருள் - மெய்ஞ்ஞானம்; உண்மைப் பொருள். வியப்பு எனப்படாதே - வியப்பு அன்று. சத்திநிபாதத் தன்மை ஒருவர்க்கு வந்து சேரும் போது அதை அவர்க்கு உபதேசித்தல் என்பது வியப்புடைய செயல் அன்று. செய்ய வேண்டிய ஒன்றே என்க.

சொற்றமிழ் விரகன் - பாடும் தமிழில் வல்ல மாணிக்க வாசகர். துணைக்கண் சாத்த - இரு கண்களால் பார்க்க.

(31-35) இவ்வடிகளில் திருவாத வூரரான மாணிக்கவாசகர் ஊமைப் பெண்ணைப் பேசும்படி செய்த வரலாறு குறிக்கப் படுகின்றது.

கை சொல - கைச்சாடை காட்டிச் சொல்ல வேண்டியதைச் சொல்ல. கட்செவி - கண்ணையே செவியாகவுடைய; காதால் கேட்காமல் கண்ணால் பார்த்து உணர்தல். மூங்கை - ஊமையான பெண் ஒருத்தி.

கடுப்ப - ஒக்க.

வினவுதியால் என - வினவுவாய் என்றால். கதலித் தண்டில் - வாழைத் தண்டில். பொதிதழல் - மிக்க தீ; நிறைந்த தீ எனவும் கூறலாம். கொளீஇ - கொளுத்தி. பற்றாதிருப்பினும் - எரி யுண்டாகாமல் இருந்தாலும். பைப் பைய - மெல்ல மெல்ல. மூட்டுபு - மூட்டி. மற்றொரு சூழ்ச்சியின் - வேறு ஒரு உபாயத்தால் பருவம் - தக்க காலம். பவவிருடுரந்து - பவ+இருள்+துரந்து; பிறவியான இருளை ஓட்டி. தவமில் பேதையேன் - தவம் செய்யாத அறிவில்லாதேன்.

(38) அனையது (44) அருள்வதுவே. (17)

## 583. அஞ்ஞானம் ஞானம் ஆயிற்று

### நேரிசை வெண்பா

தன்நேர்இ லாஞான சம்பந்தன் தாள்அடைந் தார்க்கு
என்னே இருள்வெளியாம் என்பரால் - அன்னோன்
அருளாத போதுவெளி யாய்இருந்த எல்லாம்
இருளாய் இருந்த எனக்கு. 18

**தெளிவுரை**

தனக்கு ஒப்பில்லாத ஞானசம்பந்தனான மாசிலாமணியின் திருவடியை அடைந்தவர்க்கு, இருள் எல்லாம் (அஞ்ஞானம் எல்லாம்) ஞானம் ஆகும் என்று அறிஞர் உரைப்பர். அது என் மாட்டு உண்மையாயிற்று. எங்ஙனம் என்றால், அப்பெருமான் அருள் செய்யாத போது எனக்கு இருளாய் இருந்தவை எல்லாம் அவன்அருளிய போது வெளியாயின. (உலகமாய் இருந்தது முத்தியாயிற்று என்பதுமாம்.)

**விளக்கம்**

இருள் - அஞ்ஞானம். வெளி - ஞானம். அவன் திரு வருளால் இருளாயின எல்லாம் வெளியாயின என்று இயைக்க. இருள் - உலகம். வெளி - முத்தி. (18)

## 584. என் செயலாச் செய்யும் நான் என்பது!

### கட்டளைக் கலித்துறை

என்செய லால்ஒன்று யான்செய் தில்லை எனக்குஅவமே
புன்செய லாம்வினைப் போகம்உண் டாவதுஎன்
போதம்இல்லேன்

தன்செய லாயஎல் லாம்மாசி லாமணி சம்பந்தநின்
நன்செயல் ஆயினும் என்செயலாச் செய்யும் நான்என்பதே.
19

**தெளிவுரை**

ஞானசம்பந்தரான மாசிலாமணி தேசிக, என் செயலால் ஒன்றை நான் செய்வதில்லை. ஆனால் வீணாக என் புன் செயலாகிய வினையின் போகம் உண்டாவது ஏன்? ஞானம் இல்லாதேன் செய்யும் செயல் எல்லாம் நின் நல்ல செயலாயினும் நான் என்ற அகங்காரம் அவற்றை என் செயலாகச் செய்யும்.

**விளக்கம்**

நான் செய்யும் செயல் எல்லாம் நின் செயலாக இருக்க வினைப் போகத்தை நான் அனுபவித்தற்குக் காரணம் எனக்கு இருக்கும் செருக்கே ஆகும்.

அவமே - வீணே. நான் என்பது - நான் என்னும் அகங்காரம். (19)

## 585. அருள் செய்யாது போயின் நினக்கே அவமானம்!

### நேரிசையாசிரியப்பா

நான்மறைக் கிழவ, நற்றவ முதல்வ,
நூன்முறை பயின்ற நுண்மைசால் அறிஞ,
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ,
கற்றவர் வியக்கும் காவியப் புலவ!
5 செவிதொறும் செவிதொறும் தெள்ளமுது ஊட்டுபு
கவிஞர்வயின் நிரப்பும் கல்விப் பிரசங்க
வெள்இடைத் தோன்றாது உள்ளத்து உணர்த்தவும்
சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவும்

சாயா மும்மலச் சகலரேம் உய்ய
10 எம்உருக் கொண்டு எம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடும் அகழ்ந்து
சிற்பரம் உணர்த்தும் சற்குரு ராய!
பளிங்கினில் குயின்ற பனி நிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட்டு அயர்தரக்
15 கொங்குவார் குழலும் குவளைவாள் விழியும்
பங்கய முகமும் பத்தி பாய்ந்து ஒளிர்தலின்
சைவலம் படர்ந்து தடங்கயல் உகளும்
செய்யபூங் கமலச் செழுமலர் ஓடைஎன்று
ஆடவர் சிற்சிலர் நாடினர் காணூஉ
20 வம்மின் வம்மின் மடந்தையர் நீவிர்மற்று
அம்மெல் ஓதி அரம்பையர் ஆதலின்
நீர்நிலை நிற்றிரால் நீரவர் தங்களுள்
யார்கொல் யார்கொல் இசைமின் இசைமின்என்று
இறும்பூது எய்தி இரந்தனர் இசைப்ப
25 மறுமொழி கொடாது குறுநகை முகிழ்த்தாங்கு
ஐயுறவு அகற்றும் மணிமதிள் கமலை
நன்னகர் புரக்கும் ஞான தேசிக,
ஆசிலா வண்புகழ் அணிநிலா எறிக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த
30 என்பொருட் டாயினும் என்பொருட் டன்று இது
நின்பொருட்டு ஒருபொருள் நிகழ்த்துவன் கேண்மோ
வறிஞன் ஓம்பிய செறுஒன்று ஏய்ப்ப
பருவ நோக்காப் பவந்தொறும் பவந்தொறும்
இருவினைப் போகமும் மேற்கொண்டு ஆர்த்துபு
35 மற்றுஎன் உருக்கொடு முற்றனை யால்இனித்
தாகம்இன்று ஆகலின் பாகம்இன்று எனக்குஎன
அருளாது ஒழியினும் பரிபவம் நினக்கே!
சேய்முகம் பாராள் சினந்தனள் ஏகினும்
போய்எடுத்து ஆற்றும்அத் தாய்மீட்டு அன்றே.

40 ஆதலின் எனைப்போல் அடிக்கடி தோன்றலை
ஈதியால் இன்அருள் இன்னணம் எனக்கே
சமையந் தீர்ந்த தனிப்பொருள் தெரித்தற்கு
அமையம் தேர்கலை அருளுதி ஆயினும்
எண்ணீர் ஆண்டைக்கு இலக்கம் இட்டிருந்த
45 அண்ணங் குமரற்கு ஆருயிர் தோற்ற
கடாவிடை யூர்திபால் கண்டும்
அடாதுஎன மொழிகுநர் ஆர்கொல்மற்று உனையே. 20

**தெளிவுரை**

(1-12) நான்கு மறைகளிலும் வல்லவனே! நல்ல தவத்தை யுடைய முதல்வனே! நூலில் கூறப்படும் விதிகளை எல்லாம் கற்ற நுட்பத்தன்மையுடைய அறிஞ! சொல்லின் சுவை கனிந்துள்ள தொகையான தமிழ்க் கவிஞ! பல நூல்களைக் கற்றவர் யாவரும் நின் கல்வியைக் கண்டு வியப்பு அடையும் காவியத்தில் வல்ல புலவனே! செவிதோறும் செவிதோறும் தெளிந்த அமுதத்தை உண்பித்துக் கவிஞரிடம் நிரப்பும் கல்வியைச் சொற்பெருக் காற்றுவதில் வல்லவனே! வெளியிலே தோன்றாது நின்று விஞ்ஞானிகளின் உள்ளத்தில் உணர்த்தவும், தொலைவில் நின்று திருப்பார்வையைப் பிரளயாகலரிடம் செலுத்தவும் அவ்வளவில் நீங்காத மும்மலங்களையுடைய ஆன்மாக்கள் எல்லாம் உய்யவும், எம்வடிவு கொண்டிருந்து எம்மோடு பழகியும் மும்மலங்களாகிய ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று கிழங்குகளையும் வேருடன் தோண்டி எடுத்து, மேலாக உள்ள இறைமையை உணர்த்தும் சற்குருராய!

(13-29) பளிங்குக் கல்லால் கட்டப்பட்ட குளிர்ச்சியுடைய நிலா முற்றத்தில், ஒளியுடன் விளங்கும் மடந்தையர் விளை யாடினராக, தேன் பொருந்திய நீண்ட அம்மடந்தையரின் கூந்தலும், குவளைக் கண் போன்ற நீண்ட ஒளியுடைய கண்களும், தாமரை மலரைப் போன்ற முகமும் (ஒளிவீசி விளங்குதலால்) பிரதிபலித்து ஒளிர்வதால், பாசி படரப் பெற்று நீர்நிலையில் துள்ளும் சிவந்த பூங்கமலச் செழிப்பான மலர் ஓடை என்று

ஆடவர் சிலர் தேடி நெருங்கிக் கண்டனர். அவர்கள் அம் மடந்தையரைத் தேவமகளிர் என்று ஐயுற்றுப் பின் துணிந்து. ''மடந்தையரே! வாருங்கள், வாருங்கள்! நீங்கள் அழகிய மென்மையான தேவமங்கையர் ஆதலால் நீர்நிலையில் உள்ளீர். நீங்கள் அத்தெய்வ மகளிருள் யார், சொல்லுங்கள், சொல்லுங்கள்!'' என வியப்பு எய்தி வினவினர். வினவ, அம் மடந்தையர் மறுமொழி தரவில்லை. புன்னகை கொண்டனர். அதனால் ஆடவரின் ஐயத்தைப் போக்கினர். இத்தகைய நிகழ்வுக்கு இடமான மணிகள் பதிக்கப் பெற்ற மதில்கள் சூழ்ந்த திருவாரூர் நல்ல நகரத்தைக் காக்கும் ஞான சம்பந்த தேசிக! குற்றம் அற்ற வளமான புகழ் பொருந்திய அழகிய நிலவு ஒளிவீசும் மாசிலாமணி என்னும் ஞானசம்பந்த!

(30-47) நான் கூறப் போவது என்பொருட்டே என்றாலும் இது, முற்றும் என் பொருட்டன்று. நின் பொருட்டாக ஒன்றைக் கூறுவேன்! கேட்க.

வறியவன் ஓம்பும் வயல் ஒன்றைப் போன்று என் பக்குவத்தை நோக்கி, ஒவ்வொரு பிறவிதோறும் நல்வினை தீவினை என்ற இரு வினையின் பயனையும் என்னைக் கொண்டு பிணித்து என் உருவும்கொண்டு உற்றனை. இனி அடியேனுக்கு விருப்பம் இல்லையாயினும் பக்குவம் இல்லை என்று அருள் செய்யாது போனாலும் அவமானம் உனக்கே ஆகும்.

ஒருதாய் தன் குழந்தை முகத்தைப் பாராது சினம் கொண்டு நீங்கிச் சென்றாலும் மீண்டும் திரும்பி வந்து குழந்தையைத் தேற்றுவார். ஆதலால் என்னைப் போன்று அடிக்கடி தோன்ற வேண்டா. எனவே இப்போதே நின் இனிய அருளை எனக்கு அருள்வாயாக! காலத்தைக் கடந்து நிற்கும் ஒப்பற்ற பொருளைத் தெரிவித்தற்குத் தக்க சமயத்தை ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டாமல் அருள்வாயாக! பதினாறு ஆண்டு என்று வரையறுக்கப்பட்ட பெருமையுடைய அழகிய மார்க்கண்டே யனுக்கு அரிய உயிரை விட்ட இயமனின் எருமைக்கடா வூர்தியிடம் கண்டோம். இது உனக்கு அடாது என்று கூறுபவர் யார்? எவரும் இலர்.

**விளக்கம்**

(1-12) பயின்ற - கற்ற. நுண்மை - அறிவு நுட்பம். சொற்சுவை பழுத்த - சொல்லின் சுவை மிக்க. காவியப் புலவ - காவியம் இயற்றுதலில் வல்லவனே; காவியங்களில் நன்கு பயிற்சி உடையவனே என்பதுமாம். தெள்ளமுது - தெளிவான அமுது. ஊட்டுபு - ஊட்டி. கவிஞர்வயின் - கவிஞரிடம். கல்விப் பிரசங்க - தாம் கற்றதைச் சொற்பொழிவாற்றுதலில் வல்லவனே!

வெள்ளிடைத் தோன்றாது - வெளிப்படையாய்த் தோன்றாமல். உள்ளத்து உணர்த்தவும் - மனத்தில் உணர்த்தவும் (விஞ்ஞானகலர்க்கு உள்ளத்தில் உணர்த்துதல்). விஞ்ஞானகலர் - ஆணவம் மட்டும் உடைய ஆன்மா.

திருக்கண் சாத்தல் - கண்ணால் பார்த்தருளல்; இது பிரளயாகலரிடம் நிகழ்வது. பிரளயாகலர் மூன்று மலங்களுள் ஆணவம் கன்மம் என்ற இரண்டை உடைய ஆன்மா.

சகலர் - ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றையும் உடைய ஆன்மா.

வயின் - வயிறு; இடம்.

மும்மலக் கிழங்கு - மூன்று மலங்களாகிய ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று கிழங்குகள்.

சிற்பரம் - மேலான பொருள்; பரம்பொருள்.

(13-29) பளிங்கினில் குயின்ற - பளிங்குக் கற்களால் கட்டப்பட்ட.

நிலாமுற்றம் நீர் நிறைந்த ஓடைஎனக் கொள்ளப்படுகின்றது. அயர்தர - விளையாட. கொங்குவார் குழல் - தேனையுடைய மலர் சூடப்பெற்ற நீண்ட கூந்தல். குவளை வாள்விழி - குவளை மலரைப் போன்ற ஒளியுடைய கண். பங்கயமுகம் - தாமரை முகம். பத்தி பாய்ந்து ஒளிர்தலின் - ஒளி பாய்ந்து பரவுதலால். சைவலம் - நீர்ப் பாசி. தடங்கயல் - நீர்நிலையில் வாழும் கயல் மீன்; பெரிய கயல் மீன், செய்ய - சிவந்த. பூங்கமலச் செழுமலர்

ஓடை - செந்தாமரை மலர்கள் நிறைந்த மலர் ஓடை. உகளும் - துள்ளும். காணூஉ - கண்டு. வம்மின் - வாருங்கள். அம் மெல் ஓதி - அழகிய மென்மையான கூந்தல். அரம்பையர் - தெய்வ மங்கையர், நீரவர் - நீரர மகளிர்; நீரில் வாழும் தெய்வமங்கையர். நிற்றிரால் - நிற்கின்றீர். இசைமின் - கூறுங்கள். குறுநகை முகிழ்த்து - புன்னகை செய்து.

ஐயுறவு - ஐயம். மணிமதிள் - மணிகள் பதிக்கப்பெற்ற மதில்.

மடந்தையர் விளையாடும் பளிங்குமாடம் நீர்நிலை. அவர்களின் கூந்தல் நீர்ப் பாசி. கண்கள் கயல் மீன்கள் முகம் தாமரை. அவர்களை இளைஞர் தெய்வ மகளிர் என்று ஐயம் கொண்டனர். பின் அவர்கள் நீரர மகளிர் எனத் துணிந்தனர். நீவிர் நீரர மகளிருள் யார் என வினவினர். அம்மகளிர் அவர்களின் ஐயத்தை நீக்கினர் என்பது 15-24 அடிகளின் கருத்து.

புன்னகை செய்ததால் மானிட மகளிர் என்பதை அம் மடந்தையர் புலப்படுத்தினர். (30-47) நிகழ்த்துவன் - உரைப்பேன். கேண்மோ - கேட்பாயாக. கேள்+மோ; மோ-முன்னிலை அசை.

வறிஞன் ஓம்பிய - வறியவன் ஒருவன் பாதுகாக்கும். செறு ஒன்று ஏய்ப்ப - வயலைப் போன்று. செறு - வயல்; ஏய்ப்ப - போல. பருவம் நோக்கா - என்னுடைய பருவத்தை நோக்கி. பவம் தொறும் - பிறவிதோறும். இருவினைப் போகம் - நல்வினை, தீவினைகளின் அனுபவிப்பு. ஆர்த்துபு - கட்டி; ‘செய்பு’ என்னும் வாய்பாட்டு வினையெச்சம். என் உருக்கொடு - என் போன்ற மனித வடிவத்தைக் கொண்டு. தாகம் இன்று - எனக்கு விருப்பம் இல்லை. பாகம் - பக்குவம். பரிபவம் - அவமானம். சேய்முகம் - குழந்தையின் முகம். பாராள் சினந்தனள் ஏகினும் - பாராமல் சினத்துடன் அகன்று போனாலும். போய் எடுத்து ஆற்றும். தாய் மீட்டு - பின்பு சினம் தணிந்து குழந்தையைத் தேற்றுவாள். அன்றே - அசை நிலை. தோன்றலை - தோன்றாதே. ஈதியால் இன்னருள் - இன்னருள் ஈதியால், இனிய அருளை அளிப்பாயாக. ஈதி - அளிப்பாய்; ஆல் - அசை.

சமையந்தீர்ந்த - காலத்தைக் கடந்து விளங்கிய. ‘பின் காலத்தொடு கற்பனை கடந்த’ என்பர். தனிப்பொருள் - தனக்குவமை இல்லாத பரம் பொருள். அமையந் தேர்கலை அருளுதி - சமயத்தை ஆராய்ந்து கொண்டிராமல் அருள்வாய். எண் ஈர் ஆண்டை - பதினாறு வயது. இலக்கம் இட்டிருந்து இலக்கம் - எண். பதினாறு வயது என எண் குறிக்கப்பட்டிருந்த. மார்க்கண்டேயனுக்குப் பதினாறு வயது என்று எண் குறிக்கப் பட்டிருந்தது.

அண்ணல் அம் குமரற்கு - பெருமையுடைய அழகிய மார்க் கண்டேயனுக்கு. ஆருயிர் தோற்ற - தன் அரிய உயிரை இழந்து விட்ட. கடாவிடை யூர்திபால் கண்டும் - எருமைக்கடா ஊர்தியினிடம் பார்த்தோம். கடாவிடை - எருமைக் கடா; இயமனின் வாகனம். கண்டும் - பார்த்தோம்; தன்மைப் பன்மை - வினைமுற்று. அடாது - பொருத்தம் இன்று. மொழிகுநர் - உரைப்பவர். ஆர்கொல் - யார்; கொல் - அசைநிலை. (20)

## 586. பொய் என்றான் மெய் என்றான்

### நேரிசை வெண்பா

**ஆரூரே ஊர்பேர் அருண் மாசி லாமணிஎன்று**
**ஓர் ஊர்பேர் இல்லாற்கு உரைத்தேற்குப்-பார்ஏறப்**
**பொய்என்றான் மெய்என்றான் பொய்யான பொய்யுடலை**
**மெய் என்றான் பொய்என்றான் மீண்டு.** 21

### தெளிவுரை

ஊர் பேர் இல்லாதவனுக்கு ஊர் ஆரூரே. பேர் மாசிலாமணி என்று யான் உரைத்தேன். இங்ஙனம் கூறிய எனக்கு அவன் உலகத்தைப் பொய் என்றான். பொய்யான உடலை மெய் என்றான். மீண்டும் பொய் என்றான்; மெய் என்றான்.

**விளக்கம்**

உரைத்தேற்கு - கூறிய எனக்கு. பார் - உலகம். ஏற - மிகுதியாக. பொய்யான பொய் உடலை - நிலையற்ற உடலை. மெய் என்றான் - தான் அவ்வாறு கூறியது மெய் என்றான். (21)

## 587. பிறவிப்பிணி போக்கும் மணி

### கட்டளைக் கலித்துறை

**மீளா மணிமந் திரமருந் தால்சென்ம வெவ்விடநோய்**
**வாளா மணிஒன்றி னான்மீண்ட வாஅம் மணிபிறர்கொண்டு**
**ஆளா மணியெமை ஆட்கொள்சிந் தாமணி ஐந்துஅவித்தோர்**
**சூளா மணிமெய்ச் சுடர்மாசி லாமணி சூழ்ந்திடினே. 22**

**தெளிவுரை**

மணி மந்திர ஔடதங்களால் தீராத கொடிய பிறவி நோய் ஒரு மணியால் தீர்ந்தது! என்னே வியப்பு! ஆராயின் அம்மணி பிறரால் ஆளப்படாத - அணியப்படாத மணி; எங்களை ஆட்கொள்ளும் சிந்தாமணி. ஐம்பொறிகளையும் ஐம்புலன் மீது செலுத்தாத நீத்தாரின் சூளாமணி (முடிமணி) உண்மையான ஞான ஒளியுடைய மாசிலாமணி ஆகும்.

**விளக்கம்**

நோய் தீர்தற்கு உலகத்தார் மணி மந்திர ஔடதத்தைக் கைக்கொள்வர். இவற்றால் தீராதது பிறவிப்பிணி. இதனை 'ஒரு மணி நீக்கியது! என்னே வியப்பு!' என்க.

பிறர் கொண்டு ஆளா - பிறரால் கைக் கொண்டு அணியாத. சிந்தாமணி - தேவர் உலகில் உள்ளது; அது வேண்டியார் வேண்டிய யாவற்றையும் தருவது. சூழ்ந்திடின் - ஆராய்ந்து பார்க்கின். (22)

## 588. ஒரு பொருட்கிளவி இன்று இரு பொருள் கிளவியாயிற்று

நேரிசையாசிரியப்பா

சூழ்போய் நிவந்த ஆழ்கடல் உலகத்து
இன்னருள் திறத்தால் இடைமருது அமர்ந்த
பொன் அவிர் கடுக்கைப் புரிசடைப் புங்கவன்
அமையாக் காதல் இமையவல் லிக்கு
5 வழிபடல் முறைமை விழுமிதின் உணர்த்தத்
தானே தன்னைப் பூசனை புரிந்தென
அருத்தியோடு எம்மைநம் உருத்திர கணங்கள்
தெரித்துமற்று இவ்வாறு அருச்சனை புரிதிர்என்று
அங்கயற் கண்ணி பங்கில்வீற் றிருந்த
10 செக்கர் வார்சடைச் சொக்கநா யகனை
ஈர்எண் திறத்து உபசாரமும் வாய்ப்பப்
பூசனை புரியும் தேசிக ராய!
மழைக்குலம் தழைப்பத் தழைத்ததீம் பலவின்
வேரிடைப் பழுத்துப் பாரினுள் கிடந்த
15 முட்புறக் கனிகள் விட்புறக் காண்டலும்
சிறுகண் மந்தி குறிவழிச் சென்று
கீண்டுபொன் சுளை பல தோன்றுவது அம்ம!
முற்பகல் ஒருவர் பொற்குடம் நிரம்பப்
புதைத்தனர் வைத்த நிதிக்குழாம் அனைத்தும்
20 வஞ்சகம் பழகும் அஞ்சனக் கள்வர்
கண்டுகண்டு எடுக்கும் காட்சித்து என்ன
தண்டலை வளைஇத் தடமதில் உடுத்த
தேசுஉலாம் கமலைத் திருநகர் புரக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த
25 வாக்கும் மனனும் யாக்கையும் ஒன்றாச்
சொல்தரு கரணம் மற்றிவை மூன்றும்

நின்புகழ் நவிற்றியும் நினைத்துநின் துணைத்தாள்
அன்புடன் இறைஞ்சியும் இன்பம்உற் றனவால்
அவகர ணங்களே அல்லமற் றம்ம
30 சிவகர ணங்களாய்த் திரிந்தன அன்றே, அதனால்
திரிகர ணங்கள்என்று உரைசெயும் அப்பெயர்
ஒருபொருள் கிளவிஎல் லோர்க்கும்
இருபொருள் கிளவியாய் இருந்ததுஇன்று எனக்கே. 23

## தெளிவுரை

(1-12) சூழ்ந்து வளைந்து அகன்று உயர்ந்துள்ள ஆழமான கடல் உலகத்தில் தன் இனிய அருள் காரணமாகத் திருவிடை மருதூரில் வீற்றிருந்த பொன் போல் விளங்கும் கொன்றை மலர் அணிந்த சடையையுடைய சிவபெருமான் குறைவுபடாத காதலை யுடைய உமையம்மைக்கு வழிபாடு செய்யும் முறையை இனிதாக உணர்த்துதற்காகத் தானே தன்னைப்பூசை செய்து கொண்டான். அது போல் அன்புடன் அடியவர் கூட்டத்துக்குத் தெரிவித்து இவ்வாறு அருச்சனை செய்வீர் என்று அங்கயற்கண்ணி பங்கில் வீற்றிருக்கின்ற சிவந்த நீண்ட சடையை உடைய சொக்க நாயகனை ஆவாகனம் முதலிய பதினாறு வகை உபசாரங்கள் பொருந்தப் பூசை செய்யும் தேசிகராய!

(13-24) மழை மிகவும் பெய்தமையால் தழைத்த இனிய பலாமரத்தின் வேரில் பழுத்து நிலத்தில் கீழே கிடந்த, முள்ளை வெளிப்பக்கத்தே கொண்ட கனிகள் வெடிப்பதைப் பார்க்கவும் சிறிய கண்ணை உடைய பெண் குரங்கு குறிவழியே போய், வெளிப்பட்ட பொன் போன்ற பல சுளைகளைத் தோண்டுவது முன்நாளில் ஒருவர் பொன்குடம் நிரம்பப் புதைத்து வைத்த செல்வக் கூட்டம் அனைத்தையும் வஞ்சத்துடன் ஒழுகும் மையை யுடைய கள்வர் பார்த்துப் பார்த்து எடுக்கும் காட்சி போல விளங்கும். இத்தகைய இயல்பு வாய்ந்த சோலை சூழப் பெற்றுப் பெரிய மதிலால் சூழப்பெற்ற ஒளியுடைய திருவாரூர் என்ற அழகிய நகரைக் காக்கும் மாசிலாமணி ஞானசம்பந்த!

(25-33) சொல்லும் மனமும் உடலும் ஆகியவை ஒன்றாய்க் கூறப்படும் இக்கரணம் ஆகிய மூன்றும் நினது புகழைக் கூறியும், நினைத்தும் நின் இரண்டு அடிகளை அன்போடு வணங்கியும், இன்பம் அடைந்தன. அவை வீண் செயலைச் செய்யும் கரணங்கள் அல்ல. சிவகரணங்களாய்த் திரிந்தன. அதனால் திரிகரணங்கள் என்று சொல்லப்படும் அப்பெயர் எல்லார்க்கும் ஒரு பொருள் கிளவியாகும். எனக்கோ இன்று இரு பொருட் கிளவியாய் (திரிந்த கரணம் ஆக) இருந்தது.

**விளக்கம்**

(1-12) சூழ்போய் - வளைந்து. ஆழ்கடல் - ஆழமான கடல். உலகத்தாரிடம் கொண்ட இனிய அருள் காரணமாக. இடைமருது - திருவிடைமருதூர். பொன் அவிர். பொன் போன்ற நிறத்துடன் விளங்கும். கடுக்கை - கொன்றை மலர். புங்கவன் - மேலானவன். இமையவல்லி - உமையம்மையார்; இமவானின் மகள் ஆதலால் ‘இமைய வல்லி’ என்று கூறப்பட்டாள். வழிபடல் முறைமை - வழிபாடு செய்யும் முறையை. விழுமிதின் - சிறந்த முறையில். தானே தன்னைப் பூசனை புரிந்தென - உமையம்மையாருக்குப் பூசனை செய்யும் முறையை நன்றாக உணர்த்துதற் பொருட்டுத் திருவிடை மருதூரில் உள்ள இறைவன் தானே தனக்குப் பூசனை செய்து காட்டினான் என்பது வரலாறு. புரிந்தென - செய்தாற் போல.

அருத்தி - அன்பு; விருப்புமாம். உருத்திரகணங்கள் - அடியார்கள். தெரித்து - தெரிவித்து. புரிதிர் - செய்வீர். அருச்சனை - பூசை. அங்கயற் கண்ணி - அழகிய கயல் மீன் போன்ற கண்ணையுடையவள்; அவள் உமையம்மை. செக்கர் - சிவப்பு. வார்சடை - நீண்ட சடை. சொக்க நாயகன் - தருமபுர மடத்தில் வழிபடப்படும் சிவலிங்கப் பெருமான்.

ஈர் எண் திறம் - பதினாறு திறம். அவை ஆவாகனம் முதலிய பதினாறு வகையின. வாய்ப்ப - பொருந்த. புரியும் - செய்யும்.

(13-24) மழைக்குலம் தழைப்ப - மழை மிகப் பெய்ய; மேகக் கூட்டம் மிகுதியாக என்பதுமாம். தழைத்த - செழித்து

வளர்ந்த. தீம்பலவு - இனிய பலாமரம். பாரினுள் கிடந்த - நிலத்தில் கிடந்த. முட்புறக் கனிகள் - முள்ளை வெளியே உடைய பலாப்பழங்கள். விட்புற - வெடிக்க. காண்டலும் - பார்த்து. பார்த்தது மந்தி. சிறு கண் மந்தி - சிறிய கண்ணையுடைய பெண்குரங்கு. கீண்டு - பிளந்து; வெடித்தது. பொன் சுளை பல - பல பொன் நிறம் போன்ற சுளைகளை. தோண்டுவது - தோண்டி எடுப்பது.

முற்பகல் ஒருவர் - முந்நாளில் ஒருவன். பொற்குடம் நிரம்பு - அழகிய குடம் நிறைய; பொன்குடம் நிறைய எனவுமாம். புதைத்தனர் வைத்த - புதைத்து வைத்த. நிதிக்குழாம் - பொருட் குவியல். வஞ்சகம் பழகும் - வஞ்சத்தை மேற்கொண்டு ஒழுகும். அஞ்சனக் கள்வர் - பொருள் இருக்கும் இடத்தை மையிட்டுப் பார்த்து அறியும் கள்வர். புதையலைத் தோற்றச் செய்யும் மை அஞ்சனம் ஆகும்.

பலாப்பழத்துக்குப் பொற்குடமும் சுளையை எடுத்தலுக்குக் கள்வர் செல்வத்தை எடுத்தலும், குரங்குக்குக் கள்வரும் உவமைகள்.

(25-33) வாக்கும் மனனும் யாக்கையும் என ஒன்றாகக் கூட்டிச் சொல்லப்படும் கரணங்கள். நவிற்றியும் - சொல்லியும். இறைஞ்சியும் - வணங்கியும். துணைத்தாள் - இருதிருவடிகள். உற்றனவால் - உற்றன; அடைந்தன. ஆல் - அசை. அவ கரணங்கள் - வீணான கரணங்கள். சிவகரணங்கள் - இறைவனை வணங்குதற்குரிய கரணங்கள். திரிந்தன - மாறின. திரிகரணம் என்று கூறப்படும் அவை மற்றவர்க்குத் திரிகரணம் என இரு சொற்களாய் வரும் (ஒரு பொருட் கிளவியாகும். எனக்கோ திரிந்த கரணங்கள் என்ற இரண்டு சொற்களாய் வரும் இருபொருட் கிளவியாகும். ஒருபொருட் கிளவி - ஒரு பொருளில் வரும் பல சொற்கள்.

இருபொருட் கிளவி - இரண்டு பொருள்களில் வரும் சொற்கள்.

கிளவி - சொல்.

(31-33) திரிகரணங்கள் என்பது மூன்று கரணங்கள் என்ற ஒரே பொருளைத் தருவதாய்ப் பிறரிடம் வழங்குகின்றன. ஆனால் என்னிடமோ திரிந்த கரணங்கள் என்ற மற்றொரு பொருளும் தந்து இருபொருட் கிளவியாகி நின்றது. (23)

## 589. என் பெயர் குறுகியது

### நேரிசை வெண்பா

எற்குஅமலம் செய்யும் எழில்மாசி லாமணிதன்
பொன்கமலம் சென்னி பொலிவித்தேன் - நல்கமலை
ஊரில் குறுகினேன் ஓர் மாத்திரை அளவுஎன்
பேரில் குறுகினேன் பின். 24

**தெளிவுரை**

எனக்கு மலமற்ற தன்மையை உண்டாக்கும் மாசிலா மணியினது அழகிய தாமரை போன்ற திருவடிகளை என் தலையில் விளங்கும்படி சூட்டிக் கொண்டேன். நல்ல திருவாரூர் என்ற பதியை அடைந்தேன். பின்பு ஒரு மாத்திரை அளவில் என் பெயர் குறுகப் பெற்றோரின் (சீவன் - சிவன்; நான் சிவமானேன்.)

**விளக்கம்**

எற்கமலம் செய்யும் - எற்கு+அமலம்+செய்யும்; எனக்கு மலத்தன்மை அறச் செய்யும். சென்னி - தலை. பொலிவித்தேன் - பொலியுமாறு செய்தேன்; சூடிக் கொண்டேன். கமலை - திருவாரூர். ஓர்மாத்திரை அளவு - இரண்டு மாத்திரையாய் உள்ளது ஒருமாத்திரையாய். 'சீ' என்பது 'சி' என்றாதல் அதாவது என் பெயர் சீவனாக இருந்தது 'சிவன்' ஆயிற்று. பேர் - பெயர். (24)

## 590. எமக்கு அன்னம் படைத்தவர் இயல்பு

### கட்டளைக் கலித்துறை

### *(சித்து)*

பின்னம் படைத்த சமய விரோதப் பிணக்குஅறுத்து ஓர்
சின்னம் படைத்த மனிமாசி லாமணிச் சித்தர்யாம்
இன்னம் படைத்தவர் ஏது பெறார்அமுது இங்குஎமக்கு என்று
அன்னம் படைத்தவர் பெற்றார் புவனம் அடங்கலுமே. 25

**தெளிவுரை**

*சித்து*

(ஒரு பித்தர் இரண்டு பொருள் படக் கூறுவது சித்து ஆகும். இது கலம்பக உறுப்புகளுள் ஒன்று) யாம் வேறுபாடுகளையுடைய சமயங்களில் உள்ள பகையான தன்மையைப் போக்கிய வெற்றிச் சின்னம் பலவற்றையுடைய முனிவரான மாசிலாமணிச் சித்தர்! இங்கு எமக்கு அமுதமாம் என்று சொல்லிச் சோற்றை இட்டார் அதன் பயனாக உலகம் முழுவதையும் படைத்தவர் ஆவார். (அன்னப்பறவையை ஊர்தியாகப் படைத்த நான்முகன் உலகம் முழுவதைப் படைத்தவர் ஆவார்) இன்னும் உணவு அளித்தவர் என்ன பயனைப் பெற மாட்டார்?

**விளக்கம்**

பின்னம் - வேறுபாடு. அறுத்தோர் - போக்கியவர். சின்னம் - வெற்றிச் சின்னம்; அது காகளமும் ஆகும். எக்காளம் என்ற ஊது கருவி. ஏது பெறார் - என்ன பயனைப் பெறமாட்டார்?

இங்கு எமக்கு என்று அன்னம் படைத்தவர் - இங்கு எமக்காக அமுதமாகும் என்று சோற்றை இட்டவர்; இங்கு எமக்காக அன்னப்பறவையை ஊர்தியாக உடைய பிரமதேவர். உலகம் முழுவதையும் படைத்தவர். புவனம் அடங்கலும் - உலகம் முழுவதையும். (25)

## 591. அன்பர்க்கு எளிது!

### நேரிசை ஆசிரியப்பா

அடங்கா ஐம்புலன் அடங்கினர்க்கு அம்ம
ஒடுங்கா ஐம்புலன் உளத்தினும் உளவே, அவைதாம்
செவிப்புலன் அறியா அகத்துஒலி ஒன்றே,
மெய்ப்புலன் அறியாத் தட்பம்மற்று ஒன்றே
5 கட்புலன் அறியாக் கதிர்ஒளி ஒன்றே
நாச்சுவை அறியா நறுஞ்சுவை ஒன்றே
மூக்குஉயிர்த்து அறியா முருகுமற்று ஒன்றே
பேரா இன்பம்இப் பெற்றியின் திளைக்கும்
ஆரா இன்பம் ஒன்று ஆர்ந்தனம் யாமே, அதுவே
10 கரைஎறிந்து ஆர்க்கும் பொருபுனல் படுகரில்
பணிலம்ஈன்று அளித்த மணிநிலாப் போர்ப்பத்
தருணவெள் எகினம் தன்அகத்து அடங்க
அருண முண்டகம் அகஇதழ் முகிழ்விப்பது
தெண்டிரை உடுத்த தீம்புனல் மடந்தை
15 வெண்துகில் படாஅம் விரித்தனள் போர்த்து
வள்ளவாய்க் கமல மலர்க்கையால் வளைத்துப்
பிள்ளைவெள் எகினம் பிடிப்பது கடுக்கும்
காசுஉலாம் பசும்பொன் கடிமதில் கமலை
மாசி லாமணி ஞானசம் பந்தன்என்று
20 அருந்தவர் துதிப்பஓர் பெரும்பெயர் நிறீஇப்
பரமா னந்தப் பரவையுள் தோன்றிய
இன்பஆ ரமுதஅவ் வமுதம்
அன்பருக்கு எளிது எளிது அரிதுவிண் ணவர்க்கே. 26

### தெளிவுரை

(1-9) அடக்கம் இல்லாத ஐந்து புலனும் அடங்கியவர்க்கு ஒடுங்கா ஐம்புலன்களும் உள்ளத்தில் உள்ளன. அவைதாம். செவியாகிய புலன் அறிந்திராத உள்ளத்தே எழும் ஒலி ஒன்று.

மெய்யாகிய இடம் அறியாத குளிர்ச்சி ஒன்று. கண்ணாகிய புலன் அறியாத கதிர் ஒளி ஒன்று. நாச்சுவை அறியாத நல்ல சுவை ஒன்று. மூக்கு உயிர்த்து அறியாத நறுமணம் ஒன்று. இத்தகைய நீங்காத இன்பம் இத்தன்மையிலே அனுபவிக்கும் தெவிட்டாத இன்பம் ஒன்றை யாம் அனுபவித்தோம். அதுதான்.

(10-23) கரையை மோதி ஒலிக்கும் நீரையுடைய நீர் நிலையில் சங்கு ஈன்ற நித்தில ஒளி மூட இளமையுடைய வெண்மையான அன்னம் தன்னில் அடங்கச் செந்தாமரை உள்ளிதழ் மலர்வது, தெளிவான அலையையுடைய இனிய நீரை யுடைய நீராகிய மடந்தை வெண்மையான போர்வையை விரித்துப் போர்த்துக் கிண்ணம் போன்ற வாயையுடைய தாமரையாகிய மலர்க்கையால் வளைத்து, அன்னப்பறவையின் குஞ்சினைப் பிடிப்பதைப் போல் விளங்கும். இத்தகைய இயல் புடைய பசும் பொன்னால் ஆன காவல் மிக்க மதிலை உடைய திருவாரூர் மாசிலா மணி ஞானசம்பந்தன் என்று அரிய தவத்தவர் எல்லாம் துதிக்க ஒரு பெரும் பெயர் நிலைநிறுத்தி பரமானந்தக் கடலுள் தோன்றிய இன்பமாகிய அரிய அமுதம் ஆகும். அந்த அமுதம் அடியார்க்கு எளிது; தேவர்க்கு அரியதாகும்.

**விளக்கம்**

(1-9) சிவயோக அனுபவத்தின்கண் உண்முக நுகர்ச்சியை இவ்வடிகளில் கூறுகின்றார்.

ஐம்புலன் அடங்கினர்க்கு - ஐம்புலன்களையும் அடக்கிய வர்க்கு.

அவைதாம் - உள்ளத்தில் உள்ள ஐம்புலன். அடங்கா ஐம்புலன் - வெளியில் அனுபவிக்கும் ஐம்புலன் நுகர்ச்சி. ஐம்புலன் - ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருள்கள். அகத்தொலி - உள்ளே எழும் ஒலி. தட்பம் - குளிர்ச்சி. கட்புலன் - கண்ணாகிய புலன். கதிர்ஒளி - கதிரவனது ஒளி. நறுஞ்சுவை - நல்ல சுவை. முருகு - நல்ல மணம். ஆரா இன்பம் - தெவிட்டாத இன்பம். ஆர்ந்தனம் - சுவைத்தோம்.

திருவாரூர் நீர்நிலைச் சிறப்பு

10- ஆர்க்கும் - ஒலிக்கும். பொருபுனல் - மோதும் நீர். படுகர் - நீர்நிலை. பணிலம் - சங்கு. மணி - முத்து. போர்ப்ப - மூட. நீர்நிலையில் சங்கு ஈன்ற முத்தின் ஒளி பரவுகிறது என்க. தருணம் - இளமை. எகினம் - அன்னப்பறவை. முண்டகம் - தாமரை. முகிழ்ப்பது - மலர்வது.

தெண்டிரை உடுத்த தீம்புனல் - தெளிவான அலையை யுடைய நீர். புனல் மடந்தை - நீராகிய மங்கை. வெண்துகில் படாஅம் - வெண்மையான துகிலாகிய ஆடை. விரித்தனள் - விரித்து; முற்றெச்சம்.

வள்ளவாய்க் கமலம் - கிண்ணத்தைப் போன்ற வாயை யுடைய தாமரை மலர். மலர்க்கை மலராகிய கையினால். பிள்ளை வெள் எகினம் - வெண்மையான அன்னப்பறவைக் குஞ்சு. கடுக்கும் - ஒக்கும். காசுஉலாம் - ஒளி பொருந்திய. கடிமதில் - காவலையுடைய திருவாரூர். நிறீஇ - நிலை நிறுத்தி; 'நிறுவி' என்பது 'நிறீஇ' என அளபெடுத்தது. பரவை - பாற்கடல். விண்ணவர் - தேவர். (26)

## 592. மாசிலாமணியே சிவபெருமான்

### நேரிசை வெண்பா

**விண்மணியாய்க் காண்போர் விழிக்குள் பொலிந்ததுணைக்**
**கண்மணியாய் நின்றுஎவையும் காட்டுமால் -**
**ஒண்மணிச்சூட்டு**
**அம்மாசு ணந்தன் அணிமுடிமேல் கொண்டிருந்த**
**இம்மாசி லாமணி மற்று இன்று.** 27

**தெளிவுரை**

வானத்து மணியான கதிரவனாய் மாசிலா மணியைக் காண்பவரின் விழிக்குள் விளங்கிய இரு கண்மணியாய் நின்று

எவற்றையும் காணும்படியாய்ச் செய்யும். ஒளியுடையமணியான உச்சியையுடைய பாம்பினைத் தன் அழகிய முடிமீது கொண்டிருந்தது இம்மாசிலாமணி, ஆதலால் ஆசாரிய மூர்த்தியாய் ஆயிற்று.

**விளக்கம்**

விண்மணி - கதிரவன். துணைக் கண்மணி - இரு கண்களிலும் உள்ள மணிகள். ஒண்மணிச் சூட்டு அம்மாசுணம் - மணியாகிய சூட்டையுடைய அம்மாசுணம். சூட்டு - உச்சி. மாசுணம் - பாம்பு. மாசிலாமணியைக் கதிரவனாய்க் காண்பவர்க்கு விழிக்குள் இருந்து எவற்றையும் புலப்படுத்தும். இம்மாசிலாமணி முன்னம் தலையில் பாம்பைக் கொண்டிருந்தது. அதாவது சிவபெருமானே மாசிலாமணி என்க. மற்று - அசை. ஒண்மணி - ஒளியுடைய மணி. பாம்பு தன் முடிமீது மணியைக் கொள்வது இயல்பு. இம்மணி ஆசாரிய மூர்த்தியாய் எழுந்தருள் வதற்கு முன்னர் பாம்பைத் தன் முடிமீது கொண்டிருந்தது. (27)

## 593. இம்மணி செம்மணி

### கட்டளைக் கலித்துறை

இன்றுஓர் வியப்புள தால்மாசி லாமணி என்று இருப்பது
ஒன்றுஓர் மணிகண் டவர்பலரால் அதற்கு ஓர் மருங்காய்
நின்றோர் பலபல பேதங்க ளாச்சொல்வர் நீக்கம்அறச்
சென்றோர்மற்று இம்மணி செம்மணி யேஎன்று செப்புவரே.
28

**தெளிவுரை**

இன்று ஒரு வியப்பு உள்ளது! அது என்ன என்றால், மாசிலா மணி என்று இருப்பதான ஒரு மணியைக் கண்டவர் பலர்; அதற்கு ஒருபக்கமாய் நின்று பார்த்தவர் பலவேறு பேதங்களாய்க் கூறுவர்.

நீக்கம் இல்லாது பக்கத்தில் நின்றவர் இம்மணி மாணிக்க மணியே எனக் கூறுவர்.

**விளக்கம்**

மாசிலாமணி தேசிகர் சிவபெருமானே என்று இப்பாடல் உணர்த்துகிறது.

மாசிலாமணி என்ற ஒரு மணியைக் கண்டவர் பலர். அதன் ஒவ்வொரு பக்கத்திலிருந்து பார்த்தவர் வெவ்வேறாக உரைப்பர். பக்கத்தில் நெருங்கிச் சென்று பார்த்தவர் அது செந்நிறமுடைய மாணிக்கமே என்பர்.

மாசிலாமணி தேசிகரைக் கண்டவர் தம் அறிவின் நிலைமைக்கு ஏற்ப வெவ்வேறாகச் சொன்னாலும், இவரை நெருங்கியவர் இவர் சிவபெருமானே வேறல்லர் என்று உணர்வர் என்பது கருத்து.

மருங்கு - பக்கம். செம்மணி - மாணிக்கம்; அதாவது சிவபெருமான். (28)

## 594. இப்போது எனக்கு அருளுக

### நேரிசை ஆசிரியப்பா

ஏழ்உயர் மும்மதச் சூழிமால் யானை
தடம்புனல் குடைந்து படிந்துஎழுந்து உழக்கத்
தெண்டிரை சுருட்டும் குண்டுஅகழ் வாவியில்
பங்கயத் தவிசின் பசும்பொன் தாது அளைந்து
5 அங்கம் வேறுபட்டு அரசனம் பொலிதலும்
ஆவலின் படர்ந்த சேவல்கண்டு அயிர்த்துநம்
பேடைஅன்று இதுமலர் ஓடையும் அன்றே
படரும்வெண் தாமரை படர்ந்ததை அன்று இது
கடவுளர் அமுதம் கடைந்தபாற் கடலே
10 காந்துவெங் கனல்கண் களிறும் அன்று இதுகடல்
சாய்ந்தெழும் அந்தரத் தடங்கிரி அதுவே

போகுவால் உறுப்பும் புழைக்கையும் தைவரு
பாகரோ வாசுகி பற்றும் வானவரே
பொங்கிவெண் ணிலவு பொழிந்தவெண் தரளம்அன்று
15 இங்குஇது அங்குஅதில் எழுந்தஆ ரமுதே
கொடிவிடு பாசடைக் குழாம் அன்று இங்கிதுஅக்
கடலிடைத் தோன்றிய கற்பகா டவியே
சேயிதழ் விரிக்கும் செந்தா மரை இதுஅன்று
ஆயதன் வடிவமாய் அமர்ந்தமா நிதியே
20 சங்கம்அன்று இதுஅதன் தனிப்பெயர் நிதியே
செங்கிடை அன்றுஇது சிந்தா மணியே
ஆதலின் நமதுபேட் டன்னமும் அன்றுஇதுஅப்
போதில்அங்கு உதித்த பொலங்கொம்பு அன்றே
என்றுஉளம் மருளஓர் எழில்நலம் பயக்கும்
25 மன்றல்அம் பணைசூழ் மருத வேலிப்
பொன்மதில் கமலை நன்னகர் புரக்கும்
தேசிக ராய சிற்பர முதல்வ
மாசி லாமணி ஞானசம் பந்த
எனைஆட் கொள்ளவந்து எய்தினை ஆகலின்
30 முனியாது ஒன்றுஇது மொழிகுவன் கேண்மதி
கற்றனர் ஆயினும் கல்லார் ஆயினும்
அற்றனம் யாம்என அடைந்தனர் தமைஎனில்
காலம் பாரார் கருத்தினை அளவார்
சீலம் நோக்கார் தீக்குணம் கொள்ளார்
35 பரிசிலர் வேண்டிய பரிசுமற்று எல்லாம்
வரிசையோடு அளிப்பது வள்ளியோர் கடனே
நன்னெறிப் படரா நலமிலி யாயினும்
செந்நெறிப் படர்ந்தநின் சீர்புனைந்து ஏத்தலின்
சத்திநி பாதநின் சந்நிதிப் பட்ட
40 இத்திறத்து எளிதினில் எய்தியது, எனக்கே, அதனால்
சரியையில் தாழ்க்கலை கிரியையில் பணிக்கலை
யோகத்து உய்க்கலை பாகமும் நோக்கலை

நாளைஇன்று எனஒரு வேளையும் நவிற்றலை
ஈண்டுஎனக்கு அருளுதி இறைவ
45 பூண்டுகொண்டு இருப்பன்நின் பொன்அடித்துணையே. 29

## தெளிவுரை

(1-28) மும்மதம் உடைய முகபாடத்தை அணிந்த பெரிய ஏழுமுழம் அளவு உயர்ந்து வளர்ந்த யானையானது நீர்நிலையில் புகுந்து குடைந்து நீராடி எழுந்து கலக்க, அதனால் தெளிவான அலைகள் சுருண்டு எழுகின்ற ஆழமான நீர்நிலை. அதில் தாமரை என்ற இருக்கையில் பசும்பொன் மகரந்தத்தைப் பூசிக்கொண்ட உடல் வேறுபட்டுப்பெண் அன்னம் விளங்கியது. ஆவலோடு அந்தப் பேடை அன்னத்தை நினைந்து அதன் அருகில் சென்ற ஆண் அன்னம், அப்பேடையன்னத்தின் பொன் நிறத் தோற்றத்தைக் கண்டு ஐயம் கொண்டு இது நம் பெண் அன்னம் அன்று; ‘இது மலரையுடைய ஓடையும் அன்று. இது படர்ந்த வெண்தாமரை படர்ந்துள்ளது அன்று; தேவர்கள் அமுதத்தைக் கடைந்த பாற்கடலே ஆகும். இது சினமுடைய தீயையுடைய கண் பொருந்திய ஆண்யானை அன்று; கடலில் சாய்ந்து எழும் மந்தரம் என்ற பெரியமலையே ஆகும். நீண்ட வால் என்னும் உறுப்பும் துளையையுடைய துதிக்கையும் தடவிக்கொண்டு வரும் பாகரோ வாசுகி என்ற பாம்பைப் பற்றும் வானவர் ஆவார். பெருகி வெண்மையான நிலவைப் பொழியும் வெண்மையான முத்து அன்று; இது அப்பாற்கடலில் எழுந்த அரிய அமுதமே ஆகும். இது கொடியாகக் கிளைக்கும் பசிய இலைத் தொகுதி அன்று. அக்கடலில் தோன்றிய கற்பகச் சோலையே ஆகும். இது சிவந்த இதழை விரிக்கின்ற செந்தாமரை மலரன்று. அதன் வடிவமாய் அமர்ந்த பெருஞ்செல்வமே (பதும நிதியே) ஆகும். இது சங்கு அன்று; அதன் பெயர் கொண்ட சங்கநிதியேயாகும். இது செந்நிறமான நெட்டி அன்று; சிந்தாமணியே யாகும். எனவே, இது நம் பேடை அன்னப்பறவையும் அன்று. அச்செந்தாமரையில் வீற்றிருக்கும் பொன்மகளான திருமகளே ஆகும், என்று இப்படி மனம் வியக்கும்படியான அழகு நலம் கொண்ட நறுமணம் உடைய

வயல் சூழ்ந்த மருத வேலியுடைய பொன் மதில் பொருந்திய திருவாரூர் நன்னகரைக் காக்கும் தேசிகராய! சிற்பர முதல்வ! மாசிலாமணி ஞான சம்பந்த!

(29-45) நீ என்னை ஆட்கொள்ள வந்து சேர்ந்தாய்! ஆதலால், ஒன்று உரைப்பேன்! சினம் கொள்ளாமல் கேட்பாயாக!

கற்றவர் என்றாலும் கல்லாதவர் என்றாலும், 'யாம் பொருள் இல்லாத வறியவர்' என்று கூறி ஒருவர் வந்து அடைந்தார் என்றால், காலத்தைப் பாராமலும், வந்தவர் கருத்தினை எண்ணிப் பாராமலும், வந்தவர் ஒழுக்கத்தை நோக்காமலும், தீய குணத்தை எண்ணிப் பாராமலும், பரிசிலர் வேண்டிய பரிசுகளை எல்லாம் தகுதியுடன் கொடுப்பது வள்ளன்மை உடையவர் கடமையாகும். நல்ல நெறியில் செல்லாத நலம் அற்றவனாயினும் செந்நெறியில் பொருந்திய நின் சிறப்பை எல்லாம் புனைந்து நான் ஏத்திக் கூறுதலால் எனக்குத் திருவருட்பதிவு நினது திருமுன்பு சேர்ந்த அளவில் எளிதில் அடைந்தது. அதனால் சரியை என்ற மார்க்கத்தில் என்னைச் செலுத்தாமலும் கிரியை மார்க்கத்தினை மேற் கொள்ளும்படி ஆணையிடாமலும். யோக மார்க்கத்தில் என்னைப் புகுத்தாமலும் என்பரிபக்குவத்தை நீ நோக்காமலும். நாளை இன்று என்று எனக்கு வேளையையும் நீ கூறாமலும் இப்போது எனக்கு அருள்வாயாக! இறைவ! நின் பொன் திருவடிகளைப் பற்றிக் கொண்டு இருப்பேன் யான்.

**விளக்கம்**

1-26 வரை திருவாரூரில் உள்ள நீர்நிலைக்குப் பாற்கடல் உவமையாகக் கூறப்படும்' ஏழ்உயர் - ஏழுமுழம் உயர்வு யானைக்குச் சிறந்த இலக்கணம். மும்மதம்; கன்னமதம், கபோல மதம், பீச மதம். சூழி - முகபடாம். மால் யானை - பெரிய யானை. தடம்புனல் - பொய்கையின் நீர். உழக்க - கலக்க. தெண்திரை - தெளிவான அலை. குண்டு அகழ் வாவி - ஆழமான தோண்டப் பட்ட நீர்நிலை.

பங்கயத் தவிசு - தாமரை இருக்கை. பசும் பொன் தாது அளைந்து - பசும் பொன் போன்ற மகரந்தத்தை உடையதாய். அங்கம் வேறுபட்டு - உடல் வேறுபட்டு. அரசனம் - பெண் அன்னப் பறவை. பொலிதலும் - விளங்கலும். சேவல் - ஆண் அன்னப்பறவை. அயிர்த்து - ஐயம் கொண்டு பேடை அன்று - பெண் அன்னம் அன்று. மலர் ஓடை - மலர்களை உடைய ஓடை. படர்ந்ததை - ஐ-சாரியை. கடவுளர் அமுதம் - தேவரின் அமுதம். காந்து - சினம். கனல்கண் - தீயையுடைய கண். களிறும் அன்றிது - யானையும் அன்று. மந்தரத் தடங்கிரி - மந்தரமலை என்ற பெரிய மலை. போகு வால் - நீண்ட வால். புழைக்கை - துளையையுடைய துதிக்கை. தைவரும் - தடவும். வாசுகி பற்றும் வானவர் - மந்தர மலையில் சுற்றப்பட்ட வாசுகி என்ற பாம்பைப் பற்றிய தேவரே ஆவார். வெண் தரளம் - வெண் முத்து. ஆர்அமுதே - அரிய அமுதம் ஆகும். கொடி - தாமரைக் கொடி முதலியன. பாசடைக் குழாம் - பசிய இலைத் தொகுதி. இதற்குக் கற்பகாடவி உவமை. கற்பகாடவி - காட்டைப் போன்ற சோலை. கற்பகம் + அடவி கற்பகச் சோலை. சேயிதழ் - சிவந்த இதழ். அதன் வடிவமாய் அமர்ந்த மாநிதி - அதன் உருவமாய் உள்ளது பதுமநிதி. சங்கமன்று அது அதன் தனிப்பெயர் - சங்குஅன்று; அது ஒப்பற்ற பெயரான சங்கநிதி என்பதாகும். செங்கிடை - செந்நிற நெட்டி. பேட்டன்று - பெண் அன்னம் அன்று. பொலங்கொம்பு - பொன் கொம்பு போன்ற திருமகள். பொலம் - பொன். பணை - வயல். பொன்மதில் - பொன்னால் இயன்ற மதில்.

(29-45) முனியாது - வெறுக்காது. மொழிகுவன் - சொல்வேன். கேண்மதி - கேட்பாய்.

அற்றனம் - பொருள் இல்லாதவர்; வறியவர். தமை - தம்மை. காலம் பாரார் - காலத்தை ஆராயாதவராய். கருத்தினை அளவாய் - இரந்தவரின் கருத்தை ஆராயாதவராய். சீலம் - ஒழுக்கம். தீக்குணம் - தீய குணம். பரிசிலர் - பரிசில் வேண்டி வந்தவர். வரிசை - தகுதி. வள்ளியோர் - வள்ளன்மை யுடையவர். படரா - செல்லாத. சீர் புனைந்து ஏத்தலின் - சிறப்பை அலங்கரித்துக் கூறி வணங்குதலால். சத்திநிபாதம் - திருவருள்

பதிகை. சந்நிதிப்பட்ட - நின் திருமுன்பை அடைந்த. சரியையில் தாழ்க்கலை - சரியை மார்க்கத்தில் தங்கச் செய்யாயாய்; தாமதிக்கச் செய்யாயாய். கிரியையில் பணிக்கலை - கிரியை மார்க்கத்தில் செல்லும்படி செய்யாயாய். யோகத்து உய்க்கலை - யோக மார்க்கத்தில் செல்லச் செய்யாயாய். பாகமும் நோக்கலை - என்பரிபவத்தை நோக்காயாய். நவிற்றலை - கூறாமல். ஈண்டு - இப்போது அருளுதி - அருள்வாய். பொன்னடித்துணை - பொன் போன்ற இருதிருவடிகள்.

சரியை முதலிய மார்க்கங்களில் செல்லும்படி செய்து காலம் தாழ்த்தாமல் இப்போதே எனக்கு அருளுதல் வேண்டும் என்று வேண்டுகிறார் ஆசிரியர். (29)

## 595. மூன்றைத் தந்து ஒரு மணியைப் பெறுகின்றார்! என்னே!

### நேரிசை வெண்பா

**பொன்னே அல் லாமல் பொருளோடு உடல்உயிர் விற்று**
**என்னே மணி ஒன்று எவர்கொள்வார்-கொன்னே**
**குருமாசி லாமணியைக் கொள்வோர்கொள் ளாமுன்**
**தருவார்மற்று இம்மூன்றுந் தான்.** 30

### தெளிவுரை

இவ்வுலகில் பொன்னையே அல்லாமல் பொருளையும் உடல் உயிரையும் விற்று ஒரு மணியை எவர் கொள்வார்! ஆனால் வீணே, குருவாகிய மாசிலாமணியைக் கொள்பவர், கொள்வதற்கு முன்பு உடல் பொருள் ஆவி மூன்றையும் தருவார்! இவர் செய்கை என்னே!

### விளக்கம்

ஞானாசிரியர்க்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் தருவது மரபு. இம்மரபு கருதி மேற்கண்டவாறு கூறினார்.

உலகத்தில் மணியை வாங்குபவர் அதற்கு விலையாய்ப் பொன்னை மட்டும் தருவர். ஆனால் இந்த மாசிலாமணியைப் பெறுபவரோ உடல் பொருள் ஆவி மூன்றையும் தரவேண்டியுள்ளதே! இஃதென்ன! இவர்தம் செய்கை என்னே! என வியக்கின்றார்.

கொன்னே - வீணே. கொள்வார் - வாங்குபவர்? (30)

## 596. கற்பவர் பெறும்பயன்

### கட்டளைக் கலித்துறை

தருமணிக் கோ வைத் தருள்ஞான சம்பந்தன் தண்கமலைக்
குருமணிக் கோவை நிகர்மாசி லாமணி கோத்திடலால்
ஒருமணிக் கோவைஇம் மும்மணிக்கோவைஒண்
சங்குகஞ்சம்
பொருமணிக் கோவைப் பொருளாக் கொள்ளார்இது
பூண்டவரே. 31

**தெளிவுரை**

தன்னிடம் புகுந்தவரிடம் பேரின்பத்தைத் தரும் அழகிய திருக்கண்ணை வைத்து - பார்வையால் தீட்சை செய்தருள்கின்ற ஞானசம்பந்தன் குளிர்ந்த திருவாரூரில் உள்ள குருவான மணிக்கோவை ஒக்கும் மாசிலாமணியை வைத்துக் கோத்தலால், இம்மும்மணிக் கோவையான சிறுகாப்பியம் அந்நாயக மணியான ஒன்றைக் கோக்கப் பெறுவதால் ஒரு மணிக்கோவை ஆயிற்று. இதனைக் கற்பவர் வானவர்க்குரிய சங்கநிதி பதுமநிதி சிந்தாமணி, காமதேனு முதலியவற்றைப் பொருளாகக் கொள்ளார். (இவர்தம் செய்கை என்னே!)

**விளக்கம்**

தருமணிக் கோவைத்தருள் - தரு+மணி+கோ+வைத்தருள்; தன்னிடம் புக்கவரிடம் பேரின்பத்தைத் தரும் அழகிய திருக்கண்ணை வைத்துப் பார்வை தீட்சை செய்தருளுகின்ற.

தண்கமலை - குளிர்ந்த திருவாரூரில் உள்ள. குருமணிக் கோவை நிகர் மாசிலாமணி - தன் குருவான மணிக் கோவை ஒத்த மாசிலாமணி. கோத்திடலால் - இந்நூலில் நாயக மணியாய் வைத்துக் கோத்தலால்.

இம்மும்மணிக்கோவை ஒருமணிக் கோவையாய் ஆயிற்று என்கின்றார். நாயகமணி ஒன்றை வைத்துக் கோத்தலால் ஒரு மணிக் கோவை; ஒப்பற்ற மணிக்கோவை எனவும் கூறலாம். கூறின் அது சிறப்புடைத்தன்று.

சங்கு - சங்கநிதி; கஞ்சம் - பதுமநிதி. பொருமணி - தன்னைத் தானே ஒத்த சிந்தாமணி. கோவை - கோ+ஐ; காம தேனுவை. பொருளா - பொருளாக என்பதன் தொகுத்தல் விகாரம். இது பூண்டவர் - இந்த மும்மணிக் கோவையாம் ஒருமணிக் கோவை அணிந்தவர் (கற்றவர்) (31)

## 597. பேரின்பத்தை அடைவார்

தடுத்த பிறவித் தளையாம் விலங்கு தனைமுறித்து
விடுத்த கருணைக் கடல் மாசி லாமணி மெய்ப்புகழால்
தொடுத்த தமிழ்மும் மணிக்கோவை நித்தம் துதிக்க வல்லார்
எடுத்த சனனத்தில் எய்தாத பேரின்பம் எய்துவரே. 32

### தெளிவுரை

ஞான நூல்களால் கூடாது எனத் தடுக்கப்பட்ட பிறவி என்ற தளையான விலங்குதனை முறித்து விடுத்த கருணைக் கடலான மாசிலாமணியின் உண்மையான புகழினைச் சேர்த்துப் பாடப்பட்ட இத் தமிழ் மும்மணிக் கோவையை நாள்தோறும் போற்றிப்பாட வல்லவர், தாம் எடுத்த இப்பிறவியில் அடையக் கூடாத பேரின்பத்தை அடைவார்.

### விளக்கம்

தடுத்த - ஞான நூல்களால் தடுக்கப்பட்ட; முத்தியைப் பெற முடியாமல் தடுத்த. பிறவித்தளை - பிறவியான கட்டு. விலங்கு -

கைகால்களுக்கு இடும் தளை. விடுத்த - நீக்கிய. மெய்ப்புகழால் தொடுத்த - உண்மையான புகழ் கூட்டிப் பாடப்பட்ட. எடுத்த சனனம் - தற்போது எடுத்துள்ள இப்பிறவி. எய்தாத - அடையக் கூடாத. பேரின்பம் - முத்தி. (32)

## 598. இதனை நாமகள் இயற்றினாள்!

உள்ளத்து அருள்நின்று உணர்த்தஎன் நாவில் உறைந்த
வெள்ளை
வள்ளக் கமலத் தவள்மாசி லாமணி வண்புகழில்
எள்ளத் தனைஅளவு ஓர்தொடை யாக்கி இசைத் தனளால்
கள்ளப் புலன்கொண்டு உரைத் தேன் அலன்இக்
கவிமுற்றுமே. 33

### தெளிவுரை

என் உள்ளத்தில் அருள்நின்று உணர்த்த என் நாவில் வீற்றிருக்கின்ற வெள்ளைத் தாமரையில் வீற்றிருக்கின்ற திருமகள் மாசிலாமணி தேசிகரின் உண்மையான புகழில் எள்ளின் அளவு எடுத்து ஒரு மாலையாக்கிப் பாடிடச் செய்தாள். ஆதலால் நான் வஞ்சப் புலன்களைக் கொண்டு கவி முழுவதையும் கூறவில்லை.

### விளக்கம்

என் நாவில் உறைந்த - என் நாவில் வீற்றிருக்கும். வெள்ளை வள்ளக் கமலத்தவள் - வெண்மையான தாமரை மலரில் வீற்றிருப் பவளான கலைமகள். வள்ளக்கமலம் - கிண்ணத்தின் வடிவான தாமரைமலர்; வடிவு ஒப்புமை. எள் அத்தனை - எள்ளின் அளவு. ஓர் தொடை - ஒரு நூல். இசைத்தனள் - பாடினாள். கள்ளப்புலன் - வஞ்சப்புலன்கள். உரைத்தேனலன் - நான் உரைக்கவில்லை.

இந்நூலை நான் உரைக்கவில்லை. என் நாவிடத்து உள்ள கலைமகள் பாடும்படி செய்தனள். (33)

## 599. ஞானத்தை வழங்கினார்

விரிக்கும் சரியைஇப் பாமாலை சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிக்குஇன்று சாற்றிய தேமற்றுஎன் தண்தமிழைத்
தெரிக்கின்ற போதருள் செய்தது வேசிவ யோக முண்மை
பரிக்கின்ற ஞானம்ஒன் றேமாசி லாமணி பாலித்ததே 34

### தெளிவுரை

இப்பாமாலையானது பாடப்பட்டது சரியைமார்க்கம் ஆகும். இதை ஏற்றருளும்படி சாற்றியது கிரியை மார்க்கம் ஆகும். இத்தண்ணிய தமிழைப் பாடும்போது மாசிலாமணி அருள் செய்தது சிவயோகம் ஆகும். அம்மாசிலாமணிதேசிகர் இந்நூலை யாத்ததற்காக எனக்கு உண்மை பொதிந்த ஞானம் ஒன்றையே அருள் செய்தார்.

### விளக்கம்

இந்நூலைப் பாடியது சரியை மார்க்கம். இதனை ஏற்கும்படி செய்தது கிரியை மார்க்கம். இதைக் கூறும்போது அருள் செய்தது சிவயோகம். மாசிலாமணி எனக்கு அருளியது ஞானம். இப் பாடலில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் குறிக்கப்பட்டுள்ளன. விரிக்கும் - விரிவாய்க் கூறும். சரியை பூசை முதலியன செய்தல் சரியை. கோயில் விளக்கம், மலர் தொடுத்தல் முதலியன கிரியை. இறைவனைச் சிந்தித்தல் யோகம். யோகம் - கூடல். பாலித்தது - அருளியது. (34)

குறிப்பு : (பின்வரும் இரண்டு செய்யுட்கள் பழைய பதிப்புக்களில் காணப்படுகின்றன.)

### நேரிசை ஆசிரியப்பா

தமிழ்மணம் கமழும் கமலையம் பதிவாழ்
ஞானசம் பந்தனை வணங்கின்
ஈனசம் பந்தம் இல்லைவீடு எளிதே. 35

### வஞ்சித்துறை

மாசி லாமணித்
தேசி காஎனப்
பேசு வோர்கண்முப்
பாசம் ஓடுமே. 36

(1) தமிழின் நறுமணம் வீசும் திருவாரூர்ப்பதியில் வாழ்கின்ற ஞானசம்பந்தனை வழிபட்டால் பிறவியான இழிந்த தொடர்பு ஏற்படாது. முத்தி அடைதல் எளிதே. (35)

(2) மாசிலாமணித் தேசிகா! என்று கூறுபவர்களிடத்தினின்று மூன்று பாசங்களும் விட்டு விலகும். ஆணவம், கன்மம், மாயை ஆகியவை முப்பாசம். (36)

*பண்டாரமும்மணிக் கோவையுரை முற்றுப் பெற்றது*




# 10. காசிக்கலம்பகம்

## காப்பு

### விநாயகர் வணக்கம்

காசிக்கலம்பகம் என்பது காசியைப்பற்றிய கலம்பகம் எனப் பொருள்படும். இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. காசி என்பது இடவாகு பெயராய் அத்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானைக் குறிக்கும். எனவே காசி விசுவேசர் மீது பாடப்பட்ட கலம்பகம் என்க.

கலம்பகம் என்பது பதினெட்டு உறுப்புகளை உடையது. கலம் + பகம்; கலம் - பன்னிரண்டு. பகம் - ஆறு; பதினெட்டு.

பதினெட்டு உறுப்பு என்பவை வருமாறு: (1) புய வகுப்பு, (2) தவம், (3) தூது, (4) அம்மானை, (5) பாண், (6) மதங்கியார், (7) கைக்கிளை, (8) சித்து, (9) ஊசல், (10) களி, (11) மடக்கு, (12) ஊர், (13) மறம், (14) காலம், (15) தழை, (16) தலைவி இரங்கல், (17) சம்பிரதம், (18) கார்.

இவற்றை வேறு விதமாகவும் கூறுவர். முதலில் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவும் வெண்பாவும் கலித்துறையும் வந்து, பின் அகவல், விருத்தம், வஞ்சித் துறை, வஞ்சி விருத்தம், அகவற்றுறை, வெண்பா, மருட்பா, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் முதலிய பாவினங்களும் கலந்து நூறு செய்யுள் அமையப் பாடப்படும். இக்கலம்பகத்தில் காப்புச் செய்யுள் ஒன்று சேர நூற்றொரு செய்யுள் உள்ளது.

## காப்பு

### 600. விநாயகர் காக்க!

#### நேரிசை வெண்பா

பாசத் தளைஅறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே - மாசுஅற்ற
காரார் வரைஈன்ற கன்னிப் பிடிஅளித்த
ஓரானை வந்துஎன் உளத்து. 1

**தெளிவுரை**

குற்றம் இல்லாத கரிய இமயமலை ஈன்ற உமையம்மையார் என்ற பெண்யானை பெற்ற ஓர் யானையான விநாயகப் பெருமான் வந்து என் உள்ளத்தில் வீற்றிருந்து பாசமான விலங்கினை விலக்கிப் பாவம் என்ற கடலைக் கலக்கி அன்பு என்னும் தளையில் அகப்பட்டு நிற்கும். (ஆதலால் அக்கடவுளை வணங்குவோம்.)

**விளக்கம்**

பாசத்தளை - பாசம் என்ற விலங்கு. பாவக் கடல் - பாவமாகிய கடல். நேசத்தளை - அன்புத் தளை. நிற்கும் - விநாயகர் நிற்பார். மாசற்ற - குற்றம் அற்ற. காரார் - கருமை பொருந்திய. வரை - இமயமலை. இமயமலை ஈன்ற பெண்யானை உமையாள். அவள் ஈன்ற ஓர் யானை விநாயகர். யானை முகத்தை உடைமையால் விநாயகர் 'ஓரானை' எனப்பட்டார். பெண்களின் நடை பெண்யானையின் நடை போன்றது என்பர். ஆதலால் பெண்ணான உமையம்மை யானை என்றே உரைக்கப் பெற்றார்.

'பிடிஅதன் உரு உமை கொள' என்ற தேவாரம் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

யானையாக விநாயகர் உரைக்கப் பெற்றார். அதனால் யானையின் செயல்களாகிய விலங்கை அறுத்தலும் கடலைக் கலக்குதலும் மீண்டும் தளைப் படுதலும் உரைக்கப்பட்டன. (1)

## நூல்

## 601. நின் கொடைத்தன்மையை வாழ்த்துகிறோம்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

தரவு

(1) நீர்கொண்ட கடல்ஆடை நிலமகளுக்கு அணியான
கார்கொண்ட பொழிற்காசிக் கடிநகரம் குளிர்தூங்க
இடமருங்கில் சிறுமருங்குல் பெருந்தடங்கண் இன்அமிர்தும்
சடைமருங்கின் நெடுந்திரைக்கைப் பெண்அமிர்தும் தலை சிறப்பக்
கண்கதுவு கடவுள்மணி தெரிந்தமரர் கம்மியன் செய்
விண்கதுவு பொலங்குடுமி விமானத்தின் மிசைப் பொலிந்தோய்!

(2) நிற்பனவும் தவழ்வனவும் நடப்பனவு மாய்நிலத்துக்
கற்பம்அளவு இலகண்டும் உறுகளைகண் காணாமே
பழங்கண் உறும் உயிர்கள்துயர்க் கடல்நீத்துப் பரங்கருணை
வழங்குபர மானந்த மாக்கடலில் திளைத்தாட
உரையாத பழமறையின் முதல்எழுத்தின் ஒண்பொருளை
வரையாது கொடுத்திடுநின் வள்ளன்மை வாழ்த்துதுமே.

தெளிவுரை

தரவு

நீரையுடைய கடலை ஆடையாக உடுத்த நிலமகளுக்கு அணியாக விளங்குகின்ற, மேகம் பொருந்திய சோலையை யுடைய காசி

என்னும் காவல் மிக்க நகரத்தில் குளிர்ச்சி பொருந்த இடப் பக்கத்தில் சிறிய இடையையுடைய பெரிய கண்கள் பொருந்திய இனிய அமிர்தம் போன்ற விசாலாட்சியம்மையும்,

சடையில் நீண்ட அலையாகிய கையை யுடைய கங்கை என்ற பெண்ணும் விளங்க, கண்பார்வையால் பற்றப்படாத தெய்வத் தன்மை பொருந்திய மணியைத் தேர்ந்தெடுத்துத் தெய்வத் தச்சன் செய்த ஆகாயத்தை அளவிய பொன்னால் ஆன குடுமியை யுடைய விமானத்தில் விளங்குபவனே!

நிற்பவையும் தவழ்பவையும் நடப்பவையுமாக நிலத்தில் பல கற்பகாலம் அளவும் பார்த்தும் பொருந்திய துன்பம் நீக்கும் துணையைக் காணாது துன்பம் அடையும் உயிர்களின் துன்பக் கடலைப் போக்கி மேலான அருளை வழங்கும் பரமானந்தக் கடலில் மூழ்கி இன்பம் பெற யாவர்க்கும் உரைக்கக் கூடாத இயல்பையுடைய பழைய வேதத்தின் முதல் எழுத்தின் -ஓம் என்பதன்-ஒளியுடைய பொருளை வரையறை செய்யாமல் கொடுக்கின்ற நின் கொடைத்தன்மையை யாம் வாழ்த்துகின்றோம்.

**விளக்கம்**

தரவு என்பது கலிப்பாவின் முதலில் வரும் ஓர் உறுப்பு.

(1) கார்கொண்ட - மேகம் பொருந்தும். பொழில் - சோலை. கடிநகரம் - காவல் மிக்க நகரம். குளிர் தூங்க - குளிர்ச்சி பொருந்த. இடமருங்கில் - இடப்பக்கத்தில். இன் அமிர்து - இனிய அமிர்து போன்ற விசாலாட்சியம்மை. சடைமருங்கில் - சடையில். நெடுந் திரைக்கை - நீண்ட அலையாகிய கை. பெண் அமிர்து - பெண்ணான அமிர்தம் போன்ற கங்கை. தலை சிறப்ப - சிறந்து விளங்க.

(2) நிற்பன - அசரம்; அசைவின்றி இருப்பவை. மரம் முதலியன. தவழ்வன - பாம்பு முதலியன தவழ்பவை; நடப்பன - விலங்கு முதலியன. தவழ்வனவும் நடப்பனவும் சரம். கற்பம் அளவு இல கண்டு - பல கற்பங்களைக் கண்டு. உறுகளை கண் - துன்பத்தை நீக்கும் தக்க துணை. பழங்கண் - துன்பம். உயிர்கள்

துயர்க்கடல் நீத்து - உயிர்களின் துன்பமாகிய கடலைப் போக்கி. திளைத்தாட - முழுகிஆட; இன்பம் அடைய. பழமறை - பழமை யுடைய வேதம். பழமறையின் முதல் எழுத்து - 'ஓம்' என்ற பிரணவமந்திரம். வரையாது - வரையறை இல்லாது. வள்ளன்மை - கொடைத் தன்மை. வாழ்த்துதும் - வணங்குவோம்.

### தாழிசை

(1) நீர் எழுத்துக்கு ஒத்தஉடல் நீத்தார்க்கு நீநவில்வது
ஓர்எழுத்தே முழுவதும்அவர் எவ்வண்ணம்
உணர்வதுவே.

(2) என்புஅணிவ துஉடுப்பது தோல் எம்பிரான் தமர்கள்அவர்
முன்பணியும் பேறுடையார் திசைமுகனும் முகுந்தனுமே.

(3) செடிகொள்முடைப் புழுக்கூடே சிற்றடியோம்
இடுதிறைமற்று
அடிகள்அடி யார்க்குஅளிப்பது ஆனந்தப் பெருவாழ்வே!

(4) பற்பகல்நோற்று அருந்தவரும் பெறற்குஅரிய பரந்தாமம்
எற்புஉடல்விற்று அளியேமும் கொளப்பெறுவது
இறும்பூதே.

(5) நிணம்புணர்வெண் தலைக்கலன்கொல் நேரிழைமுத்
தித்திருவை
மணம்புணர்வர்க்கு ஐயன்அருள் மணவாளக் கோலமே.

(6) முடைத்தலையில் பலிகொள்வான் மூவுலகும்
அவர்அவர்தம்
கடைத்தலையில் திரிவதுகொல் யாம்பெறு
நின்காணியே.

### தெளிவுரை

(தாழிசை - கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்று)

(1) நீரில் எழுதப்படும் எழுத்துக்கு ஒப்பான நிலையற்ற உடல் பற்றை விட்டவர்க்கு நீ உரைப்பது ஓர் எழுத்தாகும். அங்ஙனமேல் வேதம் முழுவதும் அவர் அறிந்து கொள்வது எவ்வாறு?

(2) எம்பிரானின் அடியவர் அணிவது எலும்பு. உடுப்பது தோல். அந்த அடியார்கள் முன்பு வணங்கத்தக்க பேற்றை உடையவர் நான்முகனும் திருமாலும் ஆவார்கள்.

இப்பதியில் உயிர் விடுபவர் பிரணவவுபதேசம் பெற்றுக் சிவசாரூபத்தை அடைவர் என்பது புராணம். இது இந்நூலில் பல இடங்களிலும் கூறப்படும்.

(3) சிறிய அடியாராகிய நாங்கள் காணிக்கையாக இடுவது மிக்க புலால் நாற்றத்தை யுடைய புழுவை உடைய உடலாகும். அதற்குத் தாங்கள் அந்த அடியார்க்கு அளிப்பது ஆனந்தப் பெருவாழ்வாகும்.

(4) பலகாலம் தவத்தை மேற்கொண்டு இருந்தவரும் பெறுவதற்கு இயலாத முத்தியை, என்புடைய உடலை உமக்கு விற்றுப் பெறுகின்றேம். இவ்வாறு கொள்ளப் பெறுவது வியப்பே ஆகும்.

(5) சிறந்த அணிகளை அணிந்த முத்தி என்னும் பெண்ணை மணந்தவர்க்கு நீவிர் அருளும் மணவாளக் கோலம் நிணம் பொருந்திய வெண் தலைமாலையோ!

(6) முடைநாற்றம் உடைய தலையிலே பிச்சை ஏற்கும் பொருட்டு மூன்று உலகும் பலருடைய வாயிலில் திரிவதுவோ யாங்கள் உம்மிடம் பெறும் உரிமை!

**விளக்கம்**

(1) நீர் எழுத்துக்கு ஒத்த உடல் - நீரில் எழுதப்படும் எழுத்தைப் போன்ற நிலையற்றவுடல். நீரில் எழுத்தாகும் யாக்கை. நீத்தார்க்கு - (உடல் பற்றை) விட்டவர்க்கு. ஓர்எழுத்து - ஓர் எழுத்தான 'ஓம்' என்ற பிரணவ மந்திரம். ஓர் எழுத்தைக் கொண்டு

மறைநூல் முழுவதையும் எப்படி உணர்வது?

(2) எம்பிரான் தமர் - எம் இறைவனின் அடியார். அவர்கள் சாரூபம் பெற்றவர். சாரூபமாவது இறைவன் அருளால் அவரது உருவத்தைப் பெறுதல். முன் பணியும் பேறு - அவர்களின் அருகில் இருந்து வணங்கும் பேற்றை உடையவர். திசைமுகன் - நான்முகன். முகுந்தன் - திருமால்.

(3) செடிகொள் - நெருக்கம் மிக்க. முடை - புலால் நாற்றம். புழுக்கூடு - புழுக்களை யுடைய உடல். திறை - காணிக்கை. அடிகள் - இறைவராகிய தாங்கள்.

(4) பற்பால் - பலகாலம். நோற்று அருந்தவரும் - தவத்தைச் செய்யும் அரிய தவத்தவரும். பரந்தாமம் - முத்தி. எற்பு உடல் - என்பு + உடல்; எலும்பு உடல். அளியேம் - எளிய யாங்கள். இறும்பூதே - வியப்பே யாகும்.

நாங்கள் தருவது எலும்பால் ஆன உடல். இறைவன் தருவதோ முத்தி. இது வியப்பானது என்பதாம்.

(5) நிணம் புணர் வெண்தலைக்கலன் கொல் - நிணத்துடன் கூடிய வெண் தலை மாலை என்ற அணியோ. கலன் - மாலையான அணி, கொல் - ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். நேரிழை முத்தித் திருவை - முத்தியான பெண்ணை. நேரிழை - நல்ல அணிகளை அணிந்த பெண்; மணம் புணர்வார்க்கு - திருமணம் செய்து கொள்பவர்க்கு. மணவாளக் கோலம் - மணமகனுக்குரிய கோலம். சாருபம் பெற்றவர் தலை மாலை பெறுதலால் இவ்வாறு கூறினார். இறைவன் தரும் தலைமாலை தலைகளால் ஆகிய மாலை. மணம் செய்து கொள்பவர் மணமுடைய மாலை பெறுதல் வழக்கமாக விளங்க, முத்தித் திருவை மணந்த இவர் - சாருபம் பெற்றவர் - தலைமாலை பெறுவது தக்கதோ என்றார்.

(6) முடைத்தலை - புலால் நாற்றம் உடைய தலை. பலிகொள்வான் - பிச்சை ஏற்க. கடைத்தலை - வாயிலில். காணி - உரிமை.

அராகம்

(அராகம் என்பது கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்று.)

(1) உளதென இலதென ஒருவர்ஓர் அளவையின்
அளவினில் அளவிடல் அரியதுஓர் அருவினை.

(2) இதுஎனல் அருமையின் எழுதரு மொழிகளும்
அதுஅல எனும்எனின் எவர்உனை அறிபவர்.

(3) அவன்அவள் அதுவெனும் அவைகளின் உளன்அலன்
எவன்அவன் இவன்என எதிர்தரு தகைமையை.

(4) அறிபவர் அறிவினுள் அறிவுகொடு அறிவுறு
நெறியலது ஒருவரும் அறிவரு நிலைமையை.

**தெளிவுரை**

(1) உள்ளது என்றும் இல்லாதது என்றும் ஒருவர் ஓர் பிராமாணத்தினால் அளவிட முடியாத அரிய வடிவை உடையாய்.

(2) நின் வடிவு இஃது என்று கூறுதல் அருமை. ஆதலின் எழுதுதற்கு அரிய மொழிகளும் அதுவன்று என்று உரைக்கும். ஆதலால் எவர் நின்னை அறிவார்?

(3) அவன், அவள், அது என்ற அவற்றில் உள்ளவன் நீ அல்லை; எவன் இவன் என்க் கூறும் தன்மையை உடையாய்.

(4) அறிபவரின் அறிவுக்குள் அறிவைக் கொண்டு அறியும் நெறியே அல்லாது பிறவற்றால் ஒருவரும் அறிதற்கு அரிய தன்மையை உடையாய்.

**விளக்கம்**

ஓர் அளவை - ஒரு பிரமாணம். உருவினை - உருவத்தை உடையாய். தகைமையை - தன்மையை உடையாய். அறிவு கொடு - அறிவைக் கொண்டு. நெறியலது - நெறியே அல்லாது.

### நாற்சீர் ஓர்அடி அம்போதரங்கம்

ஆணொடு பெண்உருவு அமைந்து நின்றனை.

பூண்முலை கலந்தும்ஐம் புலனும் வென்றனை.

எண்வகை உறுப்பின் ஓர்உருவு எடுத்தனை.

தொன்மறைப் பனுவலின் தொடைதொ டுத்தனை.

**தெளிவுரை**

ஆண் உருவத்துடன் பெண் வடிவு கொண்டு நிற்கின்றாய்.

பூண் அணிந்த உமையம்மையைக் கலந்தும் ஐம்புலன்களையும் வென்றுள்ளாய்.

எட்டுவகைப்பட்ட உருவத்துடன் ஓர் வடிவைக் கொண்டிருக்கின்றாய்.

பழைமையான வேதத்தை அருளினாய்.

**விளக்கம்**

பூண்முலை - அணியை அணிந்த கொங்கையை உடைய உமையம்மையார். வென்றனை - வென்றாய். எண்வகையுறுப்பு - மண், விண், நீர், நெருப்பு, காற்று, கதிரவன், சந்திரன், ஆன்மா.

### முச்சீர் ஓர்அடி அம்போதரங்கம்

வடவரை குழைய வளைத்தனை.

மலைமகள் முலைகள் திளைத்தனை.

விடம்அமிர்து அமர விளைத்தனை.

விசயனொடு அமர்செய்து இளைத்தனை.

வரிசிலை மதனை எரித்தனை.

மதகரி உரிவை தரித்தனை.

அருமறை தெரிய விரித்தனை.

அலகுஇல்பல் கலைகள் தெரித்தனை.

**தெளிவுரை**

மேருமலையை வளையும்படி வளைத்தாய். இமயமலையின் மகளான உமையம்மையின் முலையில் இன்பம் கொண்டாய். விடம் அமிர்தம் போலப் பொருந்தப் பாற்கடலில் தோன்றச் செய்தாய். அருச்சுனனுடன் போர் ஆற்றி இளைத்தாய். கட்டப் பட்ட கரும்பு வில்லையுடைய மன்மதனை நெற்றிக் கண்தீயால் எரித்தாய். மதமுடைய யானைத் தோலைப் போர்த்திக் கொண்டாய். அருமறைகளை யாவரும் அறிய விரித்துக் கூறினாய்.

அளவற்ற பல கலைகளை உண்டாக்கினாய்.

**விளக்கம்**

வடவரை - மேருமலை. குழைய - வளைய. முலைகள் திளைத்தனை - கொங்கைகளின் இன்பம் துய்த்தாய் - அமிர்து அமர - அமிர்தத்தைப் போல். விளைத்தனை - தோன்றச் செய்தாய். விசயன் - அருச்சுனன். அமர் - போர். வரிசிலை மதன் - கரும்பு வில்லையுடைய மன்மதனை. மதகரி - மதத்தையுடைய யானையின். உரிவை - தோல். தரித்தனை - அணிந்தாய். தெறித்தனை - படைத்தாய்.

இருசீர் ஓர் அடி அம்போதரங்கம்

| | |
|---|---|
| அழல்வி ழித்தனை. | பவம்ஒ ழித்தனை. |
| ஆறுஅ ணிந்தனை. | மால்த ணிந்தனை. |

| | |
|---|---|
| மழுவ லத்தினை. | முழுந லத்தினை. |
| மாந டத்தினை. | மானி டத்தினை. |
| அலகுஇ றந்தனை. | தலைசி றந்தனை. |
| அருள்சு ரந்தனை. | இருள்து ரந்தனை. |
| உலகுஅ ளித்தனை. | தமிழ்தெ ளித்தனை. |
| ஒன்றும் ஆயினை. | பலவும் ஆயினை. |

தெளிவுரை

தீயையுடைய விழியை விழித்தாய்.

பிறப்பை ஒழித்தாய்.

கங்கை ஆற்றை அணிந்தாய்.

மயக்கம் தணியப் பெற்றாய்.

மழு என்னும் படைக்கலத்தை வலக்கையில் கொண்டாய்.

முழுமையான நன்மையை உடையாய்.

சிறந்த நடனத்தை ஆடினாய்.

மான் போன்ற உமையை இடப்பக்கத்தில் உடையாய். இடக்கையில் மானை உடையாய்.

அளவினைக் கடந்துள்ளாய்.

தலை சிறந்து விளங்குகிறாய்.

அருளைத் துரந்தாய்.

அஞ்ஞானத்தை ஒட்டினாய்.

உலகத்தைக் காக்கின்றாய்.

தமிழினை அகத்தியருக்குக் கற்பித்தாய்.

ஒன்றாய் விளங்குகிறாய். ஒன்றும் தாயின் தன்மையை உடையாய்.

பலவாகவும் உள்ளாய்.

**விளக்கம்**

அழல் விழித்தனை - தீ உண்டாக விழித்தாய். தீக்கண்ணைத் திறந்தாய்.

பவம் - பிறப்பு. ஆறு - கங்கையாறு. மாறணிந்தனை - மால்+தணிந்தனை; மயக்கம் நீங்கினாய். மழு - மழு என்ற படைக் கலம். வலத்தினை - வலக்கையில் ஏந்தியுள்ளாய். மாநடத்தினை - சிறந்த நடனத்தை ஆடினாய். மான் இடத்தினை - மான் போன்ற உமையை இடப்பக்கத்தில் உடையாய். (மானை இடக்கையில் உடையாய்). அலகு - அளவு. இருள்துரந்தனை - அஞ்ஞானத்தை ஒழித்தாய். தமிழ் தெளித்தனை - தமிழை அகத்தியருக்கு அறிவித்தாய். ஒன்றும் ஆயினை - ஒரு பொருளாய் விளங்குகிறாய். பொருந்தும் தாயின் தன்மையை உடையாய்.

தாழிசை

1. அலகில்பல புவனங்கள் அடங்கலும்உண்டு
ஒழிப்பாய்க்குக்
கொலைவிடம்உண் டனைஎன்று கூறுவதுஓர் வீறுஆமோ!

2. பயில்மூன்று புவனமுங்கட் பொறிக்கு இரையாப்
பாலிப்பாய்க்கு
எயில்மூன்றும் எரிமடுத்தாய் என்பதும்ஓர் இசையாமே.

3. அடியவரே முக்குறும்பும் அறஎறிந்தார் எனின்அடிகள்
விடுகணை விற்காமனைநீ வென்றதும்ஓர் வியப்பாமே!

4. இக்கூற்றின் திருநாமத்து ஒரு கூற்றுக்கு இலக்குஎன்றால்
அக்கூற்றம் குமைத்தனைஎன்று இசைப்பதும்ஓர்
அற்புதமே.

**தெளிவுரை**

(1) அளவு இல்லாத பல உலகங்கள் அனைத்தையும் உண்டு ஒழிப்பவன் நீ. இத்தகைய உனக்குக் கொல்லக் கூடிய நஞ்சை யுண்டாய் என்று கூறுவது சிறந்த செயலாகுமோ!

(2) பொருந்திய மூன்றும் கண் பொறியாகப் பாலிக்கும் உனக்கு மூன்று மதில்களில் தீயூட்டி எரித்தாய் என்பதும் ஓர் புகழ் ஆகுமோ!

(3) அடியார்களின் காமம் வெகுளி மயக்கம் என்ற மூன்று குறும்புகளை ஒழித்தாய் எனின், எய்யும் அம்பு பொருந்திய கரும்பு வில்லையுடைய காமனைத் தாங்கள் வென்றதும் ஓர் வியப்பாகுமோ!

(4) கருப்பஞ் சாற்றினது ஊற்றைப் போல் இனிமையைத் தரும் நின் திருநாமத்தின் ஒருபகுதியால் அழிக்கப்படும் என்றால் அந்த இயமனை அழித்தாய் என்பதும் ஓர் அற்புதமோ!

**விளக்கம்**

இவை 'இறைவன் பேராற்றலுக்கு எவையும் இணையில்லை' என்று கூறுகின்றன.

(1) அலகில் - அலகு+இல்; அளவு இல்லாத. புவனங்கள் - உலகங்கள். அடங்கலும் - முழுவதும். ஒழிப்பாய்க்கு - ஒழிக்கும் உனக்கு. கொலைவிடம் - கொல்லும் தன்மையுடைய விடம். வீறு - மற்றவர்க்கு இல்லாத சிறப்பு.

(2) கண் பொறிக்கு - கண்என்ற பொறிக்கு. இரையா - உணவாக. எயில் மூன்று - திரிபுரங்கள்.

(3) முக்குறும்பு - காமம், வெகுளி, மயக்கம், அற எறிந்தார் - முற்றும் ஒழித்தவர். விடுகணை வில் காமன் - எய்யும் அம்பை உடைய கரும்பு வில்லையும் கொண்ட மன்மதன்.

(4) இக்கூற்றின் திருநாமத்து ஒருகூற்றுக்கிலக் கென்றால் - இக்கு+ஊற்றின்+திருநாமத்து ஒருகூற்றுக்கு இலக்கு; கருப்பஞ் சாற்றினது ஊற்றைப்போல் இனிமையைத் தரும் நின் பெயரின் ஒரு பகுதிக்கு இலக்கு ஆகும். அக்கூற்றம் - அந்த இயமன்; அ - பண்டறிசுட்டு. குமைத்தனை - அழித்தாய். இசைப்பதும் - கூறுவதும்.

### எனவாங்கு
### (தனிச்சொல்)

(என) (ஆங்கு - அசை)

### சுரிதகம்
### (கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்று)

உலகுசூல் கொண்ட தலைவியும் நீயும்
மலைபக எறிந்த மழஇளங் குழவியை
அமுதம்ஊற் றிருக்கும் குமுதவாய்த் தேறல்
வண்துகில் நனைப்ப மடித்தலத்து இருத்திக்
கண்களில் பருகிஅக் காமரு குழவி
எழுதாக் கிளவி இன்சுவை பழுத்த
மழலைநாறு அமிர்தம் வாய்மடுத்து உண்ணச்
செஞ்செவி நிறைத்தநும் அஞ்செவிக்கு அடிகள் என்
புன்மொழிக் கடுக்கொளப் புகட்டினன்
இன்னருள் விழைகுவாய் இறும்பூது உடைத்தே. 2

### தெளிவுரை

உலகங்களைப் பெறுவதற்கான கருவைக் கொண்ட உமையும் நீயும் கிரௌஞ்சமலையைப் பிளக்குமாறு எறிந்த வேலையுடைய மிக இளங் குழந்தையை, அமுதம் ஊறும் குமுதமலர் போன்ற சொள்ளு நீரானது நனைக்க மடியில் இருத்தி, அதன் அழகைக் கண்களால் பருகி அந்த அழகிய குழந்தையின் வேதத்தின் இனிய சுவை மிக்க மழலை. தோன்றும் அமிர்தத்தை

வாய் மடுத்து உண்ணச் செம்மையான செவியில் நிறைக்கும் உம் அழகிய செவிகளுக்கு என் புன்மையான மொழியை நஞ்சைப் போல் புகட்டினேன். இத்தகைய எனக்கும் இனிய அருள் செய்ய விழைவாய். அங்ஙனம் விழைதல் வியப்புடையதே!

**விளக்கம்**

சூல் - கருப்பம். தலைவி - உமையம்மை. மலை - கிரௌஞ்ச மலை. பக - பிளக்க. மழ இளங்குழவி - மிகவும் இளைய குழந்தை; முருகன். குமுதவாய் - குமுதமலர் போன்ற வாய். குமுதம் - ஆம்பல். தேறல் - தேன்; இங்குக் குழந்தையின் சொள்ளு நீர். வண்டுகில் - வண்மை+துகில்; சிறந்த ஆடை. காமரு குழவி - கண்டார்க்கு விருப்பத்தைத் தரும் குழந்தை. எழுதாக்கிளவி - வேதம். பழுத்த - மிக்க. மழலை நாறு அமிர்தம் - மழலைச் சொல்லான அமிர்தம். அஞ்செவி - அந்தச் செவி. செஞ்செவி - பொன் அணிந்த செவி. கடு - நஞ்சு, கடுக்காய் எனவும் கூறலாம்.

நினது இன்னருளால் இதை விழைகுவாய்; அது இறும்பூது உடைத்து.

விழைகுவாய் - விரும்புவாய். இறும்பூது - வியப்பு.

இதில் கலியுறுப்புகள் மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் வந்தன. ஆதலின் இது மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா ஆகும். (2)

## 602. இறைவரை அடையாளம் காண இறைவி செய்த உபாயம்

### நேரிசை வெண்பா

உடையாள் அகிலேசர்க்கு ஒங்குமுலைக் கோட்டின்
அடையாளம் இட்டுவையாள் ஆனால் - கடையில்அவர்
செவ்வண்ணம் பெற்றார் திரளொடுநிற் கின்றாரை
எவ்வண்ணம் கண்டுஇறைஞ்சு வேம்? 3

### தெளிவுரை

உமையம்மையார் விசுவநாதர்க்கு ஓங்கிய தன் கொங்கை யால் அடையாளம் இட்டு வைத்திராது போயிருந்தால், உடல் நீங்கிய காலத்தில் அப்பெருமானின் சாரூபம் பெற்றவர் கூட்டத் துடன் நிற்பவரை எவ்வாறு இவர் விசுவநாதர் என்று அறிந்து வணங்குவோம்?

### விளக்கம்

அகிலேசர் - விசுவநாதர். உடையாள் - விசாலாட்சி யம்மையார். கடையில் - உடல் நீங்கிய காலத்தில். அவர் செவ் வண்ணம் பெற்றார் திரளோடு - அவர் திருவுருவம் பெற்ற சாரூபக் கூட்டத்துடன். நிற்கின்றாரை - நிற்கும் சிவ பெருமானை.

அடியார் சாரூபம் பெற்றபோது, இறைவர்க்கும் சாரூபம் பெற்றவர்க்கும் வேறுபாடு தெரியாது போகும். எனவே அப்போது விசுவநாதர் இன்னார் என அறிந்து கொள்வதற்காக உமை யம்மையார், அவர் உடலில் தன் கொங்கைத் தழும்பை அடை யாளத்துக்காகப் பொறித்து வைத்துள்ளார்.

சாரூபம் - இறைவனைப் போன்ற வடிவம். (3)

## 603. தூது

தூது என்பது தலைவியேனும் தோழியேனும் தலைவனிடம் தூது விடுப்பது. இப்பாடல் தோழி நாரையை விடுக்கும் தூது.

கட்டளைக் கலித்துறை

இறைவளைக்கு ஆகம் பகிர்ந்துஅளித் தார் அகி லேசர்
கொன்றை
நறைவளைக் கும்முடி யார்அடிக் கேகங்கை நன்னதியின்
துறைவளைக் கும்குரு கீர்உரு கீர்என்று தூமொழிகைக்
குறைவளைக் கும்உங்கள் பேரிட்ட தால்சென்று கூறிடுமே.
4

**தெளிவுரை**

உமையம்மையாருக்கு உடலைப் பகுத்துக் கொடுத்தார் அகிலேசர். கொன்றையின் தேன் சிந்தும் முடியுடைய திருவடிகளுக்கே, கங்கை ஆற்றின் துறையில் சூழ்கின்ற குருகுப் பறவைகளே. அரத்தால் அராவிச் செய்யப்படும் வளையல் களுக்கும் உங்கள் பெயரைக் குருகு என்று இட்டதால், தூய சொற்களை யுடைய எம் தலைவியின் மாட்டு இரக்கம் காட்டுவீர் எனப் போய்க் கூறுங்கள்.

**விளக்கம்**

இறைவளைக்கு - கைவளையல் அணிந்த உமையம்மைக்கு. ஆகம் - உடல். பகிர்ந்து அளித்தார் - ஒரு பாதியைப் பிரித்துக் கொடுத்தார். அகிலேசர் - விசுவநாதர். நறை - தேன்; நறுமணம். கொன்றை மாலையை அணிந்த விசுவநாதர். நன்னிதியின் துறை வளைக்கும் - நல்ல நிதியின் கரையைச் சூழும். குருகீர்உருகீர் - குருகுகளே, மனம் இரங்குவீர். குருகு - நாரை; அன்னப்பறவை யுமாம். குருகீர் இறைவனிடம் போய் உம்மை நினைந்து வருந்தும் தலைவிக்கு இரங்குங்கள் என்று கூறுவீர். குருகு என்ற பெயர் வளையலுக்கும் உண்டு. அதனை இவள் உங்கள் மீதுள்ள அன்பால், உங்கள் பெயரை இட்டாள் என்று கூறினார். தற்குறிப்பேற்றம். தூமொழி - தலைவி. (4)

## 604. புயவகுப்பு

பாட்டுடைத் தலைவரின் தோளின் சிறப்பை வகுத்துக் கூறுவது.

### சந்த விருத்தம்

இடம்அற மிடைதரு கடவுளர் மடவியர்
எறிதரு கவரிநி ழற்கண் துயின்றன.
இனவளை கொடுமதன் இடுசய விருதென
இறையவள் எழுதுசு வட்டுக்கு இசைந்தன

இருவரும் நிகர்என வரிசிலை விசயனொடு
எதிர்பொரு சமரில் இளைப்புற் றிருந்தன
இணைஅடி பரவிய மலடிமுன் உதவிய
இடியலின் உணவு ஒரு கொட்டைப் பரிந்தன
படஅரவு உமிழ்தரு மணிவெயில் விடவளர்
பருதியொடு எழும்உத யத்தில் பொலிந்தன
பருகுமின் அமிர்தென உருகுஇரு கவிஞர்கள்
பனுவலின் மதுரஇ சைக்குக் குழைந்தன
படரொளி விடுசுடர் வலயமது என ஒரு
பருவரை நெடுவில்எ டுத்துச் சுமந்தன
பரர்புரம் எரியொடு புகைஎழ மலர்மகள்
பணைமுலை தழுவுச ரத்தைத் துரந்தன
மடல்அவிழ் தடமலர் இதழியின் இழிதரு
மதுமழை அருவிகு ளித்துக் கிளர்ந்தன
வழிதர உதிரமும் நிணமொடு குடர்களும்
வருநர கரியின்ம தத்தைத் தடிந்தன
மதகரி உரிஅதள் குலகிரி முதுகினின்
மழைமுகில் தவழ்வதெ னப்பொற்பு அமைந்தன
மலிபுகழ் நிலவொடும் அடுதிறல் வெயில்எழ
மதிகதிர் வலம்வரு வெற்புஒத்து நின்றன
குடவளை துறைதொறும் உடுநிரை எனவிரி
குளிர்நிலவு எழஉமிழ் முத்தைத் தடங்கரை
குலவிய படர்சிறை மடஅன மொடுசில
குருகுகள் சினையொடுஅ ணைத்துத் துயின்றிடு
குரைபுனல் வரநதி சுரர்தரு முருகுஅவிழ்
கொழுமலர் சிதறுஅவி முத்தத்துவிண் தொடு
குலகிரி உதவிய வளர்இள வனமுலை
கொழுநர்தம் அழகிய கொற்றப் புயங்களே. 5

## தெளிவுரை

சந்தவிருத்தம்

(அடி1) இடம் சிறிதும் இன்றித் தேவ மகளிர் வீசும் கவரியின் நிழலில் துயின்றன (இனிது தங்கின).

கூட்டமான வளையைக் கொண்டு காமனின் வெற்றிச் சின்னம் என்று இறையவளான உமையம்மை எழுதிய அடையாளத்துக்கு ஏற்பப் பொருந்தின.

இருவரும் ஒப்பாகும் என்று கட்டப்பட்ட வில்லையுடைய அருச்சுனனோடு எதிர்த்து நின்று போரிட்ட போது அப்போரில் களைத்தன.

தன் திருவடிகளைத் துதித்த வந்தி என்ற மலடி முன் உதவிய பிட்டு உணவினால் ஒரு மண்வெட்டியைச் சுமந்தன.

(அடி2) படத்தை யுடைய பாம்பு உமிழும் மணி ஒளிவீச வளரும் கதிரவன் எழுகின்ற உதயகிரி போல் விளங்கின.

அமிர்தத்தைப் பருகுவீர் என்று உருகும் இருகவிஞர்கள் ஆன கம்பளரும் அசுவதரரும். இசைப்பாட்டின் இனிய இசைக்கு நெகிழ்ந்தன. பரவும் ஒளியுடைய தோள்வலையம் என்று ஒரு பருத்த மேரு மலையை - நீண்ட வில்லை - எடுத்துச் சுமந்தன.

பகைவரான அசுரரின் திரிபுரம் தீயுடன் புகை உண்டாக, மலர் மகளான திருமகள் தழுவிக் கொள்ளும் தோள்களையுடைய திருமால் என்னும் அம்பை எய்தன.

(அடி 3) இதழ் அவிழும் பெரிய கொன்றையினின்று சொரியும் தேன் மழை அருவியில் குளித்துக் கிளர்ச்சி அடைந்தன.

குருதி வழிய நிணத்துடன் குடர்களும் வரும்படியான நரசிம்மத்தின் மதத்தை அழித்தன. மதகரியை உரித்த தோல் குலகிரியின் முதுகினில் கருமேகம் தவழ்ந்தாற் போல் விளங்கின. மிக்க புகழ் நிலவு ஒளியுடன் வெல்லும்படி வருத்தும் படியான வெயிலும் தோன்றச் சந்திரனும் கதிரவனும் வலமாகச் சுற்றிவரும் மேருமலை போல் விளங்கின.

(அடி 4) குடம் போன்ற சங்கு நீர்த்துறை தோறும் நட்சத்திரக் கூட்டத்தைப் போல விரியும் குளிர்ந்த நிலவு எழ, உமிழும் முத்தினைப் பெரிய கரையில் பொருந்திய படர்ந்த இறகையுடைய இளமையுடைய அன்னப் பறவையொடு சில குருகுகளும் முட்டைகளுடன் அணைத்து உறங்கும். இத்தகைய இயல்புடைய ஒலிக்கும்

நீரையுடைய கங்கை தேவதாருவின் மணம் வெளிப்படும் கொடுமையான மலர் சிதறக் காசியில் வானைத் தொடும் குலமலை உதவிய வளரும் இளைய அழகிய கொங்கையையுடைய விசாலாட்சி யம்மையின் கணவரின் அழகிய கொற்றப் புயங்கள் ஆகும்.

**விளக்கம்**

முடிபு: காசி விசுவநாதரின் தோள்கள் துயின்றன; இசைந்தன; களைப்புற்றிருந்தன; பரிந்தன; பொலிந்தன; குழைந்தன; சுமந்தன; துரந்தன; கிளர்ந்தன; தடிந்தன; அமைந்தன; நின்றன என இயையும்.

(அடி1) இடம் அற - இடையே இடம் இல்லாது. மிடை தரு - நெருங்கிய. கடவுளர் மடவியர் - தேவமகளிர். எறிதரு - வீசும். கவரிநிழலில் விசுவநாதரின் புயங்கள் துயின்றன.

இனவளை - கூட்டமான சங்கு. மதன் - மன்மதன். செயவிருது என - வெற்றி விருது என்று. இறையவள் - விசாலாட்சியம்மை. சுவட்டுக்கு - அடையாளத்துக்கு. விசாலாட்சி அம்மையார் தம் கொங்கையால் ஏற்படுத்திய அடையாளத்துக்குப் பொருந்தி நின்றன இறைவர் தோள்கள்.

விசயன் - அருச்சுனன். வரிசிலை - கட்டப்பட்ட வில். இருவரும் சமமாகப் போரிட்ட போது அப்போரில் இறைவர் தோள்கள் இளைத்தன. சமர் - போர். மலடி - வந்தி என்னும் கிழவி. இடியல் - உணவு; மாவால் சமைத்த பிட்டான உணவின் பொருட்டு. கொட்டு - மண் வெட்டி. பரிந்தன - சுமந்தன.

வந்தி தந்த உணவின் பொருட்டு மண் வெட்டியை இறைவர் தோள்கள் சுமந்தன.

(அடி2) படஅரவு - படத்தையுடைய பாம்பு. உமிழ்தரு - வெளிப்படும். மணிவெயில் விட - மணியின் ஒளி ஒளிர. பருதியொடு - கதிரவனுடன். உதயத்தின் - உதயகிரி போல். பொலிந்தன - விளங்கின. இறைவர் தோள்கள் பாம்பு உமிழும் மணியின் ஒளியால் உதயகிரிபோல் விளங்கின.

பருகுமின் அமிர்து என - அமிர்தத்தை அருந்துங்கள் என்று. இருகவிஞர்கள் - கம்பளரும் அசுவதரரும்; தும்புரு நாரதர் எனினுமாம். பனுவலின் இசைப்பாடலின். மதுரம் - இனிமை. குழைந்தன - நெகிழ்ந்தன. இறைவர் தோள்கள் இருகவிஞர் பாடும் இசைக்கு உருகின. சுடர் வலையம் - இறைவரின் ஒளியுடைய தோள் அணி. பருவரை நெடுவில் - பருத்த மேருமலையான நீண்டவில். பரர்புரம் - பகைவரின் திரிபுரம். மலர் மகள் பணை முலை தழுவுசரம் - திருமகளின் பருத்த கொங்கை தழுவும் திருமாலான அம்பு. இறைவரின் தோள்கள் திருமாலான அம்பை எய்தன.

(அடி 3) மடல் அவிழ் - இதழ் மலரும். தடமலர் - பெரிய மலர். இதழி - கொன்றை. மது மழை அருவி - தேன் மழையான அருவி. கிளர்ந்தன - கிளர்ச்சி பெற்றன.

வழிதர - வழிய. நரஹ(க)ரி - நரசிம்ம மூர்த்தி. நரகரியின் மதத்தை இறைவர் தோள்கள் தடிந்தன. சரபப்பறவை வடிவம் கொண்டு நரசிம்மரின் ஆவேசத்தை இறைவர் தணித்தார். மதகிரி உரி அதள் - மதமுடைய யானையினின்று உரித்த தோல். அதள் - தோல். யானைத் தோலுக்கு மேகமும் தோளுக்கு மலையும் உவமைகள். மேகம் மலைமீது படிந்தாற் போன்று இறைவரின் தோள் மேல் யானைத் தோல் பொருந்தின என்க. மழைமுகில் - மழையைத் தரும் மேகம். பொற்பு - அழகு.

ஈதலும் வெல்லுதலும் திருக்கரங்கள் செய்தலால் அவ்விரண்டினாலும் முறையே புகழும் பிரதாபமும் உண்டாகும். அவற்றைத் தோள்கள் சுமந்தன. மதிகதிர் - சந்திரனும் கதிரவனும். வலம்வருவெற்பு - சுற்றிவரும் மேருமலை.

மலிபுகழ் - மலிந்தபுகழ்.

(அடி4) குடவளை - குடம் போன்ற சங்கு; வளைந்த சங்கு எனவுமாம். துறை - நீர்த்துறை. உடுநிரை - விண்மீன் கூட்டம். சங்கு முத்தை ஈனுகின்றது. தடங்கரை - பெரிய கரை. குலவிய - பொருந்திய. சிறை - இறகு. மடஅனம் - இளமையுடைய அன்னப்

பறவை. குருகு - நாரை. சினையொடு - முட்டையுடன. துயின்றி(டு)
- உறங்கும். குரைபுனல் - ஒலிக்கும் நீர். வரநதி - கங்கையாறு
சுரர்தரு - தேவர் மரமான கற்பக மரம். முருகு - தேன். அவி
முத்தம் - காசி. விண்டொடு - வானைத்தொடும். குலகிரி - அட்ட
பருவதம். கொழுநர் - கணவர். கொற்றப் புயங்கள் - வெற்றி
பொருந்திய தோள்கள். (5)

## 605. ஆவி உய்யச் செய்ய வேண்டியது!

### நேரிசை வெண்பா

புயலார் பொழில்காசிப் பூங்கோயில் மேய
கயலார் தடங்கணாள் காந்தன்-செயல்ஆவி
உய்யத் துதியார் உதிப்பார் துதிப்பாரேல்
வையத்து உதியார் மறுத்து. 6

### தெளிவுரை

மேகம் பொருந்தும் சோலை சூழ்ந்த காசியில் உள்ள பூங்கோயிலில் வீற்றிருக்கின்ற கயல்மீன் போன்ற பெரிய கண்ணை யுடைய விசாலாட்சி யம்மையரின் கணவனான விசுவநாதரின் செயலைத் தம் உயிர் உய்தற் பொருட்டுத் துதிப்பார். அங்ஙனம் துதிப்பாரானால் இவ்வுலகத்தில் மீண்டும் பிறவியில் உதிக்க மாட்டார்.

### விளக்கம்

புயல்ஆர் - மேகம் பொருந்தும். பொழில் - சோலை. மேய - பொருந்திய, வீற்றிருக்கின்ற. கயல்ஆர் தடங்கணாள் - கயல் மீன் போன்ற பெரிய கண்ணையுடைய விசாலாட்சி அம்மையார் தடங்கணாள் என்பது விசாலாட்சி என்பதன் மொழிபெயர்ப்பு. காந்தன் - கணவன். செயல் - செயலை. ஆவி உய்யக் காந்தன் செயலைத் துதித்தவர் இவ்வுலகில் பிறவார். துதியாதவர் இவ்வுலகில் பிறப்பர். (6)

## 606. நஞ்சு பிறைவடிவுடன் புறப்பட்டது

### கட்டளைக் கலித்துறை

*தலைவி கூற்று*

மறைக் கோலம் கொண்ட அகிலேச ரேஇன்று மாதர்முன்னே
பிறைக் கோலம் கொண்டு புறப்பட்ட வாமுன் பிறைமுடித்த
இறைக்கோலம் ஓலம் எனத்தேவர் ஓல மிடஇருண்ட
கறைக் கோலம் கொண்டுநும் கண்டத்து ஒளித்த
கனல்விடமே. 7

**தெளிவுரை**

வேத வடிவான இறைவரே! பிறைச்சந்திரனை அணிந்த இறைவராகிய உம்மிடம் தேவர்கள் 'ஓலம் ஓலம்' என்று அலறிக் கதற, முன்பு நஞ்சை உண்டதால் இருண்ட கோலத்துடன் விளங்கிய உம் கழுத்திடத்து ஒளித்த கனல் விடம் மாறி, மங்கையர் முன்பு பிறை போன்ற வெண்மையான வடிவு கொண்டு புறப் பட்டது! என்னே வியப்பு! எனத் தலைவி ஒருத்தி உரைத்தாள்.

**விளக்கம்**

அகிலேசரே, நீவிர் முன்னம் உண்ட நஞ்சு இப்போது பிறைவடிவம் கொண்டு தோன்றியது என்ன வியப்பு!

மறைக் கோலம் கொண்ட - வேதத்தையே வடிவாகக் கொண்ட. பிறைக் கோலம் - பிறையின் வடிவத்தை. புறப்பட்டவா - தோற்றியது என்ன வியப்பு! இறைக்கு - இறையாகிய உனக்கு. கறை - கருமை. முன் கண்டத்தில் ஒளித்த. கறைக் கோலம் கொண்டு என்றதனால் இப்போது வெண்ணிறம் கொண்டு புறப் பட்டது என்பது புலப்படும்.

இதனால் உண்டாகும் துன்பத்தைப் போக்கி அருள வேண்டும் என்பதை இசை எச்சமாகக் கொள்ள வேண்டும்.

இது தலைவியின் துன்பத்தைக் கண்டு தோழி கூறியதாகக் கொள்வாரும் உண்டு. (7)

## 607. மன்மதன் அம்பால் விளையும் துன்பம்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

### தோழி கூற்று

விடுத்த வாளிக்கும் விரகுஇலாக் கருப்புவில்
வீணன்மீ ளவும் வாளாத்
தொடுத்த வாளிக்கு மேபகை மூண்டதுஇத்
தூயநன் மொழிக்குஎன்னாம்
அடுத்த நான்மறை முனிவரர் நால்வர்க்கும்
அம்மறைப் பொருள்கூற
எடுத்த கோலமாய் ஆனந்த வனத்தும்எம்
இதயத்தும் இருந்தோனே. 8

**தெளிவுரை**

தம்மை அடுத்த முனிவர் நால்வர்க்கும் வேதத்தின் பொருளைக் கூற எடுத்த கோலமாக ஆனந்த வனமான காசியிலும் எம் மனத்தும் இருந்தவனே! முதன் முதலில் மன்மதன் எய்த அம்புக்கும், தந்திரம் இல்லாது கரும்பு வில்லையுடைய அம் மன்மதன் திரும்பவும் வீணாக எய்த அம்புக்கும் பகை உண்டாயது. இத்தூய நன்மொழியுடைய தலைவிக்கு என்ன வாகும்?

**விளக்கம்**

மன்மதன் முதலில் ஓர் அம்பு எய்தான், அந்த அம்பு ஒன்றே தலைவியின் உயிரைப் போக்கக் கூடியது. அவ்வாறாக மீண்டும் அம்பைத் தொடுத்தான். ஆதலால் தோழி மன்மதனை வீணன் என்றாள். தொடுத்தல் பயன் அற்றது. எனவே 'வாளா' என்றாள். மன்மதன் எய்த அம்புகள் இரண்டுக்கும் பகைமை உண்டாகிடத் தலைவிக்கு என்ன துன்பம் செய்யும் என்றாள்.

சிவபெருமான் சனகர் முதலிய முனிவர் நால்வர்க்கும் வேதப்பொருளை விளக்கினார். எனவே, 'நான் மறை முனிவரர்

நால்வர்க்கும் அம்மறைப் பொருள் கூற' என்றார் ஆனந்த வனம் - காசி. வாளி - அம்பு. விரகு - நுண்ணறிவு; தந்திரம். கருப்பு வில் - கரும்புவில்; மன்மதனுக்கு உரியது. வாளா - வீணே. இத்தூய நன்மொழிக்கு - இந்தத் தூய்மையான சொல்லை யுடைய தலைவிக்கு; நன்மொழிக்கு - அன்மொழித்தொகை. (8)

## 608. ஓடித்திரிவதன் காரணம்

### கட்டளைக் கலித்துறை

இருப்பார் அவிமுத்தத்து எங்கேகண் மூடுவர்
என்று வெள்ளிப்
பொருப்பாளர் ஓடித் திரிவதுஎல் லாம்இப் புவனங்களை
உருப்பாதி யில்படைத் தோர்பாதி யில்துடைத்து
ஊழிதொறும்
விருப்பாய் உயிர்களின் மேல்வைத்துத் தாம் செயும்
வேலை கண்டே. 9

**தெளிவுரை**

வெள்ளி மலையான கயிலாய மலையில் வீற்றிருக்கின்ற இறைவர், காசியம்பதியில் வந்து தங்கியிருப்பவர் எவ்விடத்தில் கண்மூடுவர் என்று ஓடித்திரிவர். தன் பாதி வடிவில் உள்ள உமையம்மை படைத்தும் தன் பாதியினால் உயிர்களை அழித்தும் யுகங்கள் தோறும் அரிய உயிர்களின் மீது ஆசை வைத்துத் தாம் செய்கின்ற வேலை செய்தே ஓடித் திரிவதாகும். அவருக்கு ஒய்வில்லை!

**விளக்கம்**

அவிமுத்தம் - காசி. கண்மூடுவர் - இறப்பார். காசிக்கு வந்தவர் எங்குக் கண்மூடுவர் என்று எண்ணி அவர்க்குப் பிரணவ உபதேசம் செய்ய இறைவர் ஓடுவர். அதனால் ஓடித்திரிகின்றார் காசிநாதர். வெள்ளிப் பொருப்பாளர் - வெள்ளி மலையாளர்; கயிலாய மலையில் வீற்றிருப்பவர். இப்புவனங்களை உருப்

பாதியில் படைத்து - இந்த வுலகங்களை இறைவரின் ஒருபாதியில் உள்ள உமையம்மையார் படைத்து என்க. ஓர் பாதியில் துடைத்து - ஒரு பாதியான இறைவரின் பாகம் அழித்து.

இறைவர் தாம் செய்ய வேண்டிய வேலையைச் செய்து திரிகின்றார். ஆதலால் அவர் கண்மூடுவது எங்கே? அதற்கு அவருக்கு ஓய்வில்லை என்றபடி. (9)

## 609. எழுத்து ஓத வருவர் என்றோ தலைவி விழுந்தாள்!

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

தோழிகூற்று

கண்ஒன்று திருநுதலில் கனல்உருவ மாப்படைத்த
காசி நாதா!
தண்ஒன்று நறைஇதழித் தார்என்றாள்! நெட்டுயிர்த்தாள்!
தரைமேல் வீழ்ந்தாள்!
எண்ஒன்று முரணாமே கிடக்கின்றாள்! இது கண்டாள்,
எழுத்துஒன்று ஓதத்
துண்என்று வருவர்எனத் துணிந்தனளோ, அறியேன்இத்
தோகை தானே. 10

### தெளிவுரை

ஒரு கண்ணை நெற்றியில் தீவடிவமாகக் கொண்ட காசிநாதா! இம்மயில் போன்ற தலைவி குளிர்ச்சி பொருந்திய தேனையுடைய 'கொன்றை மாலை' என்று சொன்னாள்; பெருமூச்சு விட்டாள்; தரைமீது விழுந்தாள்; எண் ஒன்றையும் அறியாமல் நினைவில்லாமல் கிடக்கின்றாள். இப்படிக் கிடந்தால் ஓர் எழுத்தான 'ஓம்' என்பதை ஓதுதற்குக் காசிநாதர் விரைந்து வருவார் என்று துணிவு கொண்டாளோ' அறியேன்! என்று தோழி உரைத்தாள்.

**விளக்கம்**

திருநுதல் - அழகிய நெற்றி. கனல் உருவமா - தீயின் வடிவாக. 'உருவாக' என்பது ஈறு தொக்கு 'உருவமா' என வந்தது. இதழி - கொன்றை. நறை - தேன்.

கொன்றை மலர் மாலையை வாங்கித் தரவேண்டும் என்று கூற நினைந்தவள் 'இதழித்தார்' என்ற அளவில் மேல் கூற இயலாமல் சோர்ந்து பெருமூச்சு விட்டாள். இதுகண்டால் - இங்ஙனம் இவள்விழுந்து கிடப்பதைப் பார்த்தால். எழுத்து ஒன்று ஓத - ஓர் எழுத்து மந்திரமான ஓம் என்ற பிரணவத்தை உபதேசிக்க. காசியில் இறப்பவர் காதில் இறைவர் பிரணவ உபதேசம் செய்வர் என்பது மரபு. காசிநாதரை விரும்பிய அவள் தன்னிடம் வருதற்கு இத்தகைய சூழ்ச்சியைச் செய்தாளோ, வேறு எதுவோ அறியேன் எனத் தோழி சொன்னாள். (10)

## 610. கண்ணுதலார்க்கு உரைப்பீர்

### நேரிசை வெண்பா

*தலைவி கூற்று*

தோகை உயிர்முடிப்பான் தும்பைமுடித் தான்மதவேள்
வாகை முடித்திடவும் வல்லவனே - ஆகெடுவீர்!
காமாந் தகர்காசிக் கண்நுதலார்க்கு ஓதீர்மற்று
ஏமாந்து இராமல் எடுத்து. 11

**தெளிவுரை**

என் உயிரைப் பறிப்பதற்குக் காமன் தும்பை மலர் மாலையைச் சூடி நிற்கின்றான். அவன் என் உயிரைப் பறிக்கும் போரில் வெற்றியும் கொள்வான். ஆ! காமனை அழித்த காசி விசுவநாதருக்கு ஏமாந்து விடாமல் இச் செய்தியை எடுத்துக் கூறுவீர் எனத் தலைவி உரைத்தாள்.

**விளக்கம்**

'பான்' ஈற்று வினையெச்சம். உயிர் முடிப்பான் - உயிரைப் பறித்தற்கு. காமன் தும்பை மாலையைச் சூடினான். இம் மாலையைச் சூடுபவர் போர் செய்ய இருப்பவர் அணிவது. அதிரப் பொருவது தும்பை. வாகை முடித்திடல் என்பது வெற்றியுறல் இங்கு வெற்றி என்பது தலைவியின் உயிரைப் பறித்தல். காமாந்தகர் - காமனுக்கு அந்தகர்; காமனுக்கு இயமனானவர்; காமனை எரித்தவர். எனவே அவர் காமனை வெல்ல வல்லவர் என்னும் குறிப்பைக் கொண்டது. ஏமாந்து இராமல் - ஏமாந்து விடாமல் தக்க சமயத்தில் கூற வேண்டும் என்க. (11)

## 611. பிறைச்சந்திரன் என் உயிரைத் தேடுகின்றது!

கட்டளைக் கலித்துறை

*தலைவி கூற்று*

எடுக்கச் சிவந்த சிலம்படி யார்அகி லேசர்நறைக்
கடுக்கைச் சடைமுடி யார்அடி யார்க்குக் கலைகள்கொய்து
கொடுக்கக் கொடுக்க வளர்கின்ற வாவெறுங் கூட்டில்எரி
மடுக்கக் குறையுயிர் மாதரைத் தேடு மதிக்கொழுந்தே. 12

**தெளிவுரை**

சந்திரோபாலம்பனம்

, (அதாவது காதலருள் பிரிந்தவர் விரக வேதனையால் சந்திரனைப் பழித்துக் கூறுதல்.)

எடுக்கச் சிவப்புடைய சிலம்பு அணிந்த அடியை உடைய வரும், நறுமணம் உடைய கொன்றை மாலை அணிந்த சடை யுடையவருமான விசுவநாதர் தம் சாரூபம் பெற்ற அடியாருக்குச் சந்திரனின் கலைகளைக் கொய்து கொய்து தரத்தர அது வளர்ந்து வருகின்றதே, என்ன வியப்பு' நல்ல உயிர் போன உடலில்

குறைந்த உயிரை உடைய (என் போன்ற) மாதரைத் தேடுகின்றது பிறை மதி (நான் என் செய்வேன்!)'

**விளக்கம்**

சிலம்படியார் அகிலேசர் - சிலம்பை அணிந்த அடியை உடைய விசுவநாதர். நறைக் கடுக்கை - நறுமணம் உடைய கொன்றை மலர்மாலை; தேன் நிறைந்த கொன்றை மலர் மாலை எனவுமாம். சடைமுடியார் - எழுவாய். அடியார் - சாரூபம் பெற்ற அடியார்க்கு. கலைகள் கொய்து கொடுக்கக் கொடுக்க - ஒவ்வொரு கலையாகக் கொய்து கொய்து சாரூபம் பெற்ற அடியவர்க்குக் கொடுக்க. வெறுங் கூட்டில் - உயிர் போன உடலில். குறைந்த உயிரை உடைய மாதரைப் பிறைச் சந்திரன் தேடுகின்றது. மதிக் கொழுந்து - பிறைச் சந்திரன்.

ஒற்றைக் கலையையுடைய இப்பிறை, இந்தப் பதியில் சாரூபம் பெற்றவர் ஒவ்வொருவருக்கும் இறைவர் பறித்துப் பறித்துக் கொடுக்கக் குறையாமல் வளர்கின்றது! என்னே வியப்பு.

(12)

## 612. விசுவநாதருக்கு இவள் அழும் நிலையைக் கூறுவீர்!

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

*தோழி கூற்று*

கொழுதி வரிவண்டு உழுது உழக்கும்
குழலீர்! நறுங்கண் கோதைஇவள்
அமுத விழிநீர் முந்நீரை
உவர்நீர் ஆக்கு மதுகூறீர்
எழுதல் அரிய திருமார்பில்
இளஞ்சேய் சிறுசே வடிச்சுவடும்
முழுதும் உடையாள் முலைச்சுவடும்
உடையார் காசி முதல்வர்க்கே. 13

### தெளிவுரை

எழுதுவதற்கு அரிய இறைவரின் திருமார்பில் இளங்குழந்தையான முருகப் பெருமானின் சிறிய சிவந்த அடியால் ஏற்பட்ட அடையாளமும் உலகம் முழுவதையும் உடையவளான உமையம்மையாரின் கொங்கை தழுவியதால் ஏற்பட்ட அடை யாளமும் உடையவர் காசியில் உள்ள முதல்வர். அன்னாருக்கு, வரியுடைய வண்டு கோதி உழுது கலக்கும் கூந்தலையுடைய பெண்டிரே! நல்ல கண்ணையுடைய இவள் அழுத கண்ணீர் கடலைப் போய் அடைந்து உவர் நீராக ஆக்கும். அதைக் கூறுவீராக!

### விளக்கம்

கொழுதி - கோதி; கிண்டி. வரிவண்டு - வரிகளையுடைய வண்டு; இசைப்பாடல் பாடும் வண்டு எனவும் கொள்ளலாம். உழக்கும் - கலக்கும். குழலீர் - கூந்தலையுடைய பெண்டிரே. கோதை - பெண். தலைவி விடும் கண்ணீர் ஓடிக் கடலில் கடந்து அதன்நீரை உப்புநீராக ஆக்குகிறது. அதனை இறைவர்க்குக் கூறுங்கள் என்றாள். திருமார்பு - இறைவரின் அழகிய மார்பு. இளஞ்சேய் - முருகப் பெருமான். சிறுசேவடிச் சுவடு - சிறிய சிவந்த அடியால் உதைக்க உண்டான அடையாளம். முழுதும் உடையாள் - உலகம் முழுவதையும் உடையாள் விசாலாட்சி. முலைச்சுவடு - கொங்கை தழுவுவதால் உண்டான அடையாளம். காசி முதல்வர் - காசியம் பதியில் வீற்றிருக்கும் விசுவநாதர். (13)

## 613. இறைவரை வணங்காதவர் வீடு பெறார்

### நேரிசை வெண்பா

வரைவளைக்கும் பொன்தடந்தோள் மைந்தர்க்கு இவர் ஆர்
நிரைவளைக்கை யார்நகைக்கும் நேராக் - கரையில்
குவிமுத்தம் வெண்ணிலவு கொப்புளிக்கும் கங்கை
அவிமுத்தம் சென்று இறைஞ்சா தார். 14

**தெளிவுரை**

வரிசையான வளையலை அணிந்த கையையுடைய மடந்தை யரின் பற்களுக்கு ஒப்பாகக் கரையில் குவிக்கப்படுகின்ற முத்துக்கள் வெண்மை நிறமான நிலவு ஒளியைப் பரப்பும் கங்கை யாற்றையுடைய காசிக்குச் சென்று இறைவரை வணங்காதவர், மேரு மலையை வளைக்கும் அழகிய பெரிய தோள்களையுடைய வலிய விசுவநாதர்க்கு இவர் யார்?

**விளக்கம்**

வரை வளைக்கும் - சிவபெருமான் மேருமலையை வில்லாகக் கொண்டு வளைக்கும். அவர் அங்ஙனம் செய்தது திரிபுரங்களை எரித்த போது. வரை - மேருமலை. மைந்தர் - வலிமை யுடையவர். பொற்றடந் தோள் - பொன் + தட + தோள்; அழகிய பெரிய தோள். நிரை வளை - வரிசையான வளையல். நகை - பற்கள். நேரா - ஒப்பாக. குவிமுத்தம் - சங்குகளால் ஈனப் பட்டுக் குவிக்கப்படும் முத்துக்கள். வெண்ணிலவு கொப்புளிக்கும் - வெண்மையான நிலவு ஒளி பரவும். முத்துக்களின் வெண்மையான ஒளி வெண்ணிலவு போல விளங்கும். அவி முத்தம் - காசி. இறைஞ்சாதார் - வழிபடாதவர். விசுவநாதரை வணங்காதவர் அவருடைய அடியார் ஆகார் என்பது கருத்து.(14)

## 614. இவளது மோகத்தைத் தணிப்பீர்!

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

*தோழி கூற்று*

ஆர்க்கும் படைவேள் அரசுஇருப்புஎன்று
அஞ்சாது அடிகள் அருள்காசி
ஊர்க்கும் புதுத்தோ ரணம் வைத்தால்
உமக்குஇங்கு இவள்பேச்சு உரைப்பார்ஆர்
வார்க்கும் குமப்பூண் முலைச் சுவட்டை
வளைஎன்று ஒடி வளைந்து சுற்றிப்

பார்க்கும் துளைமுள் எயிற்றுஉரகப்
பணியீர் மோகம் தணியீரே. 15

## தெளிவுரை

ஆரவாரம் செய்யும் மலர் அம்புகளான படைக் கருவிகளை உடைய காமன் தன் தலைநகர் என்று அஞ்சாது, அடிகளே! உம் அருள் மிக்க காசியில் தனக்குரியது என்ற உரிமையை நிலை நாட்டப் புதிய தோரணம் வைத்தான். வைத்தால், உமக்கு இங்கு இத்தலைவியின் பேச்சை உரைப்பவர் யார்? உருக்கி வார்க்கப் பட்ட குடம் போன்ற பூண் அணிந்த கொங்கையால் ஏற்பட்ட அடையாளத்தைத் தன் வளையாகும் என்று எண்ணி ஓடி வனைந்து சுற்றிப் பார்க்கும் இயல்புடைய துளையையுடைய முள் போன்ற பற்களைஉடைய பாம்பு அணியை உடையவரே! இவளது மோகத்தைத் தணிப்பீராக!

## விளக்கம்

ஆர்க்கும் - ஆரவாரிக்கும் வேள் - மன்மதன்; விரும்பப் படுபவன் என்பது காரணம். அரசு இருப்பு - தலைநகர். ஊர்க்கும் - ஊரில். புதுத் தோரணம் ஒருவரை ஒருவர் தம் வயப்படுத்திக் கொண்டு அங்குக் கொண்டாடும் ஒரு கொண்டாட்டம். இங்கு இது தம் வயப்படுத்துதல் என்ற பொருளில் வந்தது. காமன், இறைவராகிய தங்களுடைய தலைநகர் என்று அஞ்சாது இங்குப் புதுத் தோரணம் வைத்துத் தன் அதிகாரம் செலுத்துவானானால் இவளது துயரத்தைத் துணிந்து வந்து உம்மிடம் உரைப்பவர் யார்? என்றாள் தோழி. வளை என்றது புற்றை. எம்பெருமான் மார்பில் அம்மையின் கொங்கைகளால் உண்டான அடையாளம் உள்ளது. அதனைச் சிவன் அணியாய் அணிந்த பாம்பு, புற்றாகும் என்று எண்ணிச் சுற்றி வளைத்துப் பார்க்கும் என்பதாம். பார்ப்பது, துளை முள் எயிற்று உரகம்; அதாவது துளையையுடைய முள்ளைப் போன்ற பற்களை உடைய பாம்பு. பணியீர் - பாம்பு அணியை அணிந்தவரே. மோகம் - காதலை. தணியீர் - போக்குவீர். (15)

## 615. உம்மைக் கடவுள் என்று வணங்குவோம்!

பிச்சியார்

*கட்டளைக் கலிப்பா*

தண்உ லாம் பொழில் காசித் தெருவில் நீர்
　　தரித்தி டுந்தவக் கோலமும் சூலமும்
பெண்ணொ டாடும்அப் பிச்சனுக்கு ஒத்தலால்
　　பிச்சியாரெனும் பேர்தரித்து ஆடுவீர்
வெண்நி லாமுகிழ்க் கும்குறு மூரலால்
　　வீணி லேஎம் புரத்துஎரி இட்டநீர்
கண்ணி னாலும்இக் காமனைக் காய்ந்திடில்
　　கடவுள் நீர்என்று இறைஞ்சுதும் காணுதுமே. 16

**தெளிவுரை**

பிச்சி - பித்தி, பித்தம் கொண்டவன்; பித்தன் என்பதன் பெண்பால். சைவக் கோலம் உடைய பெண். இவளைப் பார்த்து உள்ளம் பறிகொடுத்த ஒருவன் கூறும் கூற்றாகக் கலம்பகத்தில் வரும் ஓர் உறுப்பு இது.

குளிர்ச்சி பொருந்திய சோலையையுடைய காசியம்பதித் தெருவில் பூண்ட தவக் கோலமும் ஏந்திய சூலமும் உமை என்ற பெண்ணுடன் ஆடும் இறைவனுக்கு ஒத்தலால் பிச்சியார் என்னும் பெயரைப் பூண்டு ஆடுவீர்! வெண்மையான நிலவு ஒளி வீசும் சிறு புன்னகையால் வீணே எம் புரங்களில் - ஊர்களில் - தீயிட்ட நீவிர், கண்ணால் இக்காமனைச் சினந்து எரித்தால் நீவிர் கடவுள் என்று வணங்குவோம்.

**விளக்கம்**

கண்உலாம் பொழில் - குளிர்ச்சி பொருந்திய சோலை. தரித்திடும் - பூண்டிடும். பிச்சனுக்கு - பித்தனான சிவனுக்கு; 'பித்தன்' என்பது 'பிச்சன்' என வந்தது; போலி. வெண் நிலா முகிழ்க்கும் - வெண்மையான நிலவுஒளி வெளிப்படுத்தும். குறு

மூரல் - புன்னகை. எம் புரம் - எம் ஊரில். காய்ந்திடின் - எரித்தால். இறைஞ்சுதும் - வணங்குவோம். சிவபெருமான் புன்னகையால் முப்புரத்தில் தீயிட்டது பயனுடையது. நீர் நும்மூரலால் எம்புரத்து எரியிட்டது வீண் ஆகும். என்றாலும் அப் பெருமானைப் போல் நீரும் கண்ணால் காமனைக் காய்ந்தால் உம்மை வணங்குவேன்'' என்றான். கண்ணால் எம்மை நோக்கினாலும் போதும் என்பதாம். (16)

## 616. மணிகர்ணிகையில் உயிர் விடல் வேண்டும்

காணும் காணும் நதிகள்எல் லாம்புனல்
கங்கை யேஅங்கு உளதெய்வம் யாவையும்
தாணு எங்கள் அகிலேச ரேமற்றைத்
தலங்கள் யாவும் தடமதில் காசியே
பூணும் ஆசைமற்று ஒன்றே உடல்விடும்
போது நன்மணி கர்ணிகை பூந்துறை
பேணுமாறு பெறவேண்டும் அப்புறம்
பேயொடு ஆடினும் ஆடப் பெறுதுமே. 17

**தெளிவுரை**

பார்க்கும் ஆறுகள் யாவும் கங்கை நீரே ஆகும். அங்குள்ள தெய்வங்கள் எல்லாம் தாணுவான எங்கள் விசுவநாதரே ஆவார். மற்றும் எங்குள்ள தலங்கள் எல்லாம் பெரிய மதில் சூழ்ந்த காசியம்பதியே ஆகும். ஆனால் எனக்குள்ள ஆசை ஒன்றே. அது உடல்விடும் போது 'நல்ல மணி கர்ணிகை' என்ற கங்கைத் துறைகளுள் ஒன்றான பூந்துறையில் யாவரும் போற்றும்படி உயிர்விடுதல் வேண்டும். அதன் மேல் நான் சிவனைப் போல் பேயுடன் ஆடுதலும் நன்றே!

**விளக்கம்**

கங்கையே - கங்கை நீரே. தாணு எங்கள் அகிலேசர் - தாணுவாகிய எங்கள் விசுவநாதர். தாணு - பற்றுக்கோடு; தூண்; இறைவ. மற்றத் தலங்கள் யாவும் காசியே - பிற தலங்கள் யாவும்

காசிப் பதியைப் போன்றவையேயாம். பூணும் - கொள்ளும். மணி கர்ணிகை - கங்கைத் துறைமுகங்களுள் ஒன்று. இறந்தவர்க்குக் காதில் பிரணவ உபதேசம் செய்யப்படும் துறை. ஆதலால் மணிகர்ணிகை என இப்பெயர். மணி - பிரணவ மந்திரம். இங்கு உயிர் விடுபவர் சாருபம் அடைவது உறுதி என்பர். ஆதலால் அங்கு உயிர் விடுதலை விரும்பினார். பூந்துறை - அழகிய துறை. சிவசாருபம் பெற்றவர் பேயுடன் ஆடுதல் இயல்பு. அது இறைவனுடன் நிகழ்வதைப் போன்றதாகும். மணிகர்ணிகையில் உடல்விடல் யாவரும் போற்றக் கூடிய ஒன்று. ஆதலால் 'பேணுமாறு பெற வேண்டும்' என்றார். ஆடப் பெறுதும் - ஆடப் பெறுவோம். பெறுதும் - தன்மைப் பன்மை வினைமுற்று. (17)

## 617. படைத்தற்கு என்ன செய்வோம்!

பெற்றம் ஊர்வதும் வெண்தலை ஓட்டினில்
　　பிச்சை ஏற்றுத் திரிவதும் பேய்களே!
சுற்ற மாகச் சுடலையில் வாழ்வதும்
　　தோல் உடுப்பதும் தொண்டர்க்கு அரிது அன்றால்
கற்றை வார்சடைக் காசிப் பதியுளீர்
　　கற்பந் தோறும் கடைநாள் உலகெலாம்
செற்று மீளப் படைக்கவும் வேண்டுமே
　　தேவரீபதம் சிந்திப்ப தில்லையே. 18

### தெளிவுரை

காளையில் ஏறி யூர்வதும் வெண்மையான தலையோட்டில் பிச்சை ஏற்றுத் திரிவதும், பேய்களைச் சுற்றமாகக் கொண்டு சுடு காட்டிலே வாழ்க்கை நடத்துவதும், சிவசாருபம் பெற்றவர்க்கு அரிய செயல் அன்று. கற்றையான சடையையுடைய இறைவரின் காசிப்பதியில் உள்ளவரே! கற்பகாலந் தோறும் ஊழியின் இறுதி நாள் உலகு எலாம் அழித்துத் திரும்பவும் படைக்க வேண்டுமே! இறைவரே தாங்கள் இதையேன் எண்ணிப்பார்ப்பதில்லை .

**விளக்கம்**

காளையூர்தியில் ஊர்தல், தலையோட்டில் பிச்சை எடுத்தல், சுடலையில் வாழ்தல் எங்கட்கு அரிதன்று; அவற்றை யாம் விரும்புகிறோம். ஆயினும் யுகமுடிவு தோறும் புவனங்களை அழித்துப் படைக்க வேண்டுமே! அது எங்களுக்குத் துன்பத்தைத் தருமே என்றார்.

பெற்றம் - காளை. பெற்றம் ஊர்தல் முதலியன சிவ பெருமானுக்குரிய செயல்கள். அவற்றைச் சாரூப நிலையை அடைந்தவரும் செய்ய வேண்டும் என்பதாம்.

சாரூபம் பெற்றவர் புவனபதிகளாகத் தத்தம் எல்லைகளுக்கு உட்பட்ட உலகங்களை அழித்து ஆக்குவர். அதனை விரும்புபவர் சிலர். எனினும் யாம் பத முத்தியான அதை விரும்பாமல் அதன் மூலமாகப் பரமுத்தியையே விரும்புகின்றோம். சிந்திப்ப தில்லை என்பது பழித்தாற் போல் புகழ்ந்தது.

பதம் - நிலை; சாரூபப்பதம். (18)

## 618. இரக்கின்றதை என் சொல்வேன்!

### நேரிசை வெண்பா

இல்லாளே முப்பத்து இரண்டறமும் செய்திருப்பச்
செல்லார் பொழில்காசிச் செல்வனார் - மெல்லப்
பரக்கின்ற புண்ணீர் படுதலை கொண்டு ஐயம்
இரக்கின்ற வாறுஎன்சொல் கேன். 19

**தெளிவுரை**

மனைவியானவள் முப்பத்திரண்டு அறங்களையும் செய்து கொண்டிருக்கிறாள். அங்ஙனம் இருப்ப, மேகம் தங்கும் சோலை சூழ்ந்த காசியம்பதிச் செல்வரான இறைவர் மெல்லப் பரவும் குருதி வழியும் தலையைக் கையில் கொண்டு பிச்சை ஏற்பதைப் பற்றி என்ன சொல்வேன்?

**விளக்கம்**

இல்லாள் - மனைவி; உமையம்மையார்; இல்லாதவள்; வறியவள். செல் ஆர் - மேகம் தங்கும். பொழில் காசி - சோலையையுடைய காசி. செல்வனார் - செல்வர். புண்ணீர் படு - குருதி ஒழுகும். ஐயம் - பிச்சை. இருக்கின்றவாறு - யாசிப்பது. சொல்கேன் - சொல்வேன். பொருள் அற்ற மனைவி முப்பத் திரண்டு அறங்களையும் செய்யச் செல்வரான கணவர் தலை யோட்டில் பிச்சை ஏற்றுத் திரிவது என்ன வியப்பு! (19)

## 619. காசி இறைவரின் மனம் கல்!

### கொச்சகக் கலிப்பா

*பாங்கி கூற்று*

சொல்ஆ வதுமறையே சொல்லுவது நல்லறமே
இல்லா வதுமுத்திக்கு ஏதுவாம் இத்தலமே
அல்லார் குழலளவும் ஆகொல் மனம்வயிரக்
கல்லாய் இருந்தவா காசிப் பிரானார்க்கே. 20

**தெளிவுரை**

(தோழியின் கூற்று)

காசி விசுவநாதர்க்கு கூறும் சொல் வேதமே ஆகும். கூறுவது நல்ல அறமே ஆகும். வீடு என்பது முத்திக்கு இருப்பிடமான இந்தத் தலமே ஆகும். இருள் பொருந்திய கூந்தலையுடைய இவள் மட்டில் இவர் மனம் வயிரக் கல்லாய் இருந்தது! என்னே வியப்பு!

**விளக்கம்**

இறைவர் சொல் வேதம். உரைப்பது அறம். வீடு காசி. இங்ஙனமாக இவள் திறத்தில் மட்டும் மனம் வயிரக் கல்லாக உள்ளது! என்னே வியப்பு! முத்திக்கு ஏதுவாம் - முத்திக்குக் காரணமான. இருந்தவா - இருந்தவாறு என்பதன் தொகுத்தல் விகாரம். காசிப்பிரான் - காசி விசுவநாதர். (20)

## 620. இறைவர் என் உள்ளத்தே வந்து தங்கிச் செய்வது

### கட்டளைக் கலித்துறை

619. பிரான்என்று அவர்க்குஒரு பெண்ணோடும் ஓடிப்
பெருங்கருணை
தராநின்ற காசித் தடம்பதி யார்வந்தென் தன்னகத்தே
இராநின் றனர்ஐம் புலக்கள்வர் கொள்ளையிட்டு
ஏகுதற்கே
வராநின்ற போதுள்ள மாதனம் காத்து வழங்குதற்கே. 21

**தெளிவுரை**

வண்மையிற் சிறந்தவர் ஒரு பெண்ணுடனே கூடி வந்து மிக்க கருணை தருகின்ற இயல்புடைய காசி என்ற தலத்தில் வீற்றிருப் பவர் வந்து என் உள்ளத்தில், ஐம்புலன் என்ற கள்வர் மனத்தைக் கொள்ளையிட்டுச் செல்லாமல், வரும்போது உள்ளம் என்ற அந்தப் பெருஞ்செல்வத்தைக் காத்து எனக்கே வழங்குதற்கு இருக்கலானார்.

**விளக்கம்**

பிரான் என்றவர்க்கு - தம்மையே முதல் என்று எண்ணி வழிபடுபவர்க்கு. உள்ள மாதனம் - மனம் என்ற பெரிய செல்வம். வழங்குதற்கு - அதை எமக்கே உரியதாக்கிக் கொடுப்பதற்கு. அதாவது மனோலயம் ஏற்படுதற்கு.

வழங்குதற்கு இராநின்றார் எனக் கூட்டுக. பெண்ணொடு ஓடிப் பெருங்கருணை தருதலாவது. இத்தலத்தில் இறந்த ஆன்மாக்களை அம்பிகை தன் மடியில் வைத்து இளைப்பாற்ற அகிலேசர் பிரணவ மந்திரத்தை உபதேசிப்பார் எனல்.

பிரான் - வண்மையிற் சிறந்தவர். ஒரு பெண் - உமை யம்மை. அகத்தே - மனத்தில். கொள்ளையிட்டு - மனத்தைக்

கொள்ளையிட்டு. உள்ளம் என்ற செல்வத்தைக் காத்து எனக்கு அதை வழங்குதற்கு இராநின்றனர். (21)

## 621. கூடி முயங்குவீர்

### கொற்றியார்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

வழுத்தும்அவர்க்கு ஆனந்த வாழ்வை அருள்வார் காசி
    வளமை எல்லாம்
கொழுத்த தமி ழால்பாடித் துளசிமணி தரித்தாடும்
    கொற்றி யாரே
பழுத்த தவக் கோலமும்கைச் சங்கமும்ஆ ழியும்கண்டு
    பணிந்தே மாகின்
முழுத்ததவத் தால்யாமும் மால்ஆயி னோம்கூடி
    முயங்கு வீரே. 22

**தெளிவுரை**

(கொற்றியார் என்பது வைணவத் துறவுக் கோலம் பூண்ட பெண். அவளிடம் மனத்தைச் செல்ல விட்டவன் கூற்றாய் நிகழும் கலம்பக உறுப்புகள் ஒன்று இது.)

தம்மை வணங்கித் துதிப்பவர்க்கு ஆனந்த வாழ்வை அருள்பவரின் காசியம் பதியின் வளத்தையெல்லாம் பாடித் துளசி மணி பூண்டு ஆடுகின்ற கொற்றியாரே! சிறந்த தவக்கோலமும் கைச்சங்கும் ஆழியும் கண்டு பணிந்தேம். ஆதலால் முழுமையான தவத்தால் யாங்களும் மயக்கம் கொண்டோம். ஆதலால் கூடி முயங்குவீர்.

**விளக்கம்**

வழுத்துமவர்க்கு - துதிப்பவர்க்கு. ஆனந்த வாழ்வை - சாருபம் பெற்று இன்பம் கொள்ளும் வாழ்வை. கொழுத்த -

செழுமையுடைய துள்சிமணி - துளசியால் ஆன மணிமாலை தரித்து - பூண்டு. கொற்றியாரே - வைணவத் துறவியாரே. பழுத்த - முதிர்ந்த; சிறந்த. கைச்சங்கமும் - கைவளையலும்; சங்கும் ஆழியும் - மோதிரமும் சக்கரமும். மாலாயினோம் - மயக்கம் அடைந்தோம். திருமாலாக ஆனோம். முயங்குவீர் என்னைக் கூடுவீர். (22)

## 622. புவனம் படைப்பவர் ஏவல் செய்வார்!

### கட்டளைக் கலித்துறை

முயலாம லேதவ முத்தித் திருவை முயங்க நல்கும்
கயலார் பெருந்தடங் கண்ணிபங் கார்அருள் காசியிலே
செயலாவது ஒன்றிலை வாளா நெடுந்துயில்
செய்யும்உங்கள்
பயலாக வேபணி செய்வார் புவனம் படைப்பவரே. 23

### தெளிவுரை

ஒருவர் முயற்சி செய்யாமலேயே முத்தி என்ற செல்வத்தை அளிக்கும் கயல் போன்ற பெரிய கண்ணையுடைய - விசாலாட்சியை - ஒரு பங்கில் கொண்டவரின் அருள் காசிப்பதியில், செய்ய வேண்டுவது ஏதுமில்லை. வீணாக நீண்ட உறக்கம் கொள்ளும் உங்களுக்குச் சிறுவனாக இருந்து உலகங்களை எல்லாம் படைப்பவர் ஏவல் செய்வார்.

### விளக்கம்

முயலாமல் - முயற்சி செய்யாமல். முயற்சி செய்யாமல் முத்தி கொடுத்தல் என்பது இறந்தவர்க்கு முத்தி தருதல். முயங்க - புணர. திரு என்றதற்கு ஏற்ப 'முயங்க' என்றார். திரு - பெண். கயல் ஆர் பெருந்தடங்கண்ணி - கயல்மீனைப் போன்ற பெரிய விசாலமான கண்ணையுடையவள்; விசாலாட்சி. செயலாவது - செய்யக் கூடியது. நெடுந்துயில் - நீண்ட தூக்கம்; இறத்தல்.

காசியில் இறந்தால் முத்தி கிட்டும் என்பதை இத்தொடர் உணர்த்துகிறது. பயலாக - சிறுவனாக. புவனம் படைப்பவர் - உலகத்தைப் படைக்கும் விசுவநாதர். (23)

## 623. பெருவாழ்வு நல்கும் காசி

### கட்டளைக் கலிப்பா

படுத்த பாயுட னேபிணி மூழ்கினும்
பல்வி ழுந்து நரைத்துஅற மூப்பினும்
அடுத்த தீங்குஇவர்க் கேபெரு வாழ்வுஎனும்
அப்பெ ரும்பதி எப்பதி என்பிரேல்
விடுத்து விட்டுஇந் திரதிரு வும்புவி
வெண்கு டைக்குள் இடும்அர சாட்சியும்
கடுத்த தும்பு களத்தரைத் தேடுவார்
காத லித்து வருந்திருக் காசியே. 24

**தெளிவுரை**

படுத்த பாயுடன் நோயில் முழுகினாலும், பற்கள் எல்லாம் விழுந்து நரை கொண்டு மூட மிகவும் மூப்பை அடைந்தாலும், இவர்க்கு இங்குப் பெருவாழ்வு கிட்டிற்று என்னும் அந்தப் பெரும்பதி எந்தப்பதி என்று வினவுவீரானால், இந்திரச் செல்வத்தை விட்டு, இம்மண் உலகில் வெண்மையான குடைக்குள் இருந்து ஆளும் அரசாட்சியையும் விட்டு, நஞ்சு ததும்பும் கழுத்து உடையவரைத் தேடுபவர் விரும்பி வரும் இயல்புடைய திருக்காசி நகரமே ஆகும்.

**விளக்கம்**

பிணி - நோய். பல் விழுந்து - பற்கள் எல்லாம் விழுந்து. அற மூப்பினும் - மிகவும் மூத்தாலும். அடுத்தது - உண்டாயிற்று. என்பிரேல் - என்று வினவுவீரானால். இந்திர திரு - இந்திரனாக இருந்து ஆளும் செல்வப்பதவி. வெண்குடைக்குள் இடும்

அரசாட்சி - வெண் குடைக்குக்கீழ் இருந்து ஆள்கின்ற அரசாட்சி. கடுத்ததும்பு - நஞ்சு விளங்கும். களத்தரை - கண்டம் உடையவரை. காதலித்து - விரும்பி. (24)

## 624. எங்குமாகி நிற்பதை அறியவில்லை

### கட்டளைக் கலித்துறை

*தோழிகூற்று*

திருக்கோலம் கொண்டநல் தேன்மொழி யாள் எண்
திசையினும் நின்
உருக்கோல மேகண்டும் கண்டிலன் போலும் ஒழுகுநறை
மருக்கோல நீலக் குழல்சேர் அவிமுத்த வாண தொல்லை
இருக்குஓலம் இட்டுணை ராய்எங்கும் ஆகி யிருப்பதுவே. 25

**தெளிவுரை**

திருமகளின் அழகைக் கொண்ட நல் தேன் போன்ற இனிய சொல்லைப் பேசும் இவள், எட்டுத் திக்குகளிலும் உருவெளித் தோற்றத்தையே கண்டும் நின்னைக் காணவில்லை! தேன் ஒழுகும் மணமுடைய கோலம் கொண்ட கரிய கூந்தலையுடைய உமையம்மையார் வீற்றிருக்கும் காசிவாணரே! பழமையுடைய வேதம் ஓலம் இட்டும் உணராமையால் எங்குமாகி நிறைந்து நிற்பதை அறிந்திலள். (அறியின் தன்னுள் நின்னைக் கண்டு மகிழ்வள்!) என்று தோழி கூறினாள்.

**விளக்கம்**

திருக்கோலம் - திருமகளின் அழகு. உருக்கோலம் - உருவெளித் தோற்றம். போலும் - அசைநிலை. நீலக்குழல் - கரிய கூந்தலையுடைய விசாலாட்சியம்மையார். ஒழுகு நறை - தேன் ஒழுகும். மரு - நறுமணம் மரு, கோலம், நீலம் என்னும் மூன்றும் குழலுக்கு அடைமொழிகள். இருக்கு - வேதம்

இறைவ! நீ எங்கும் நிறைந்துள்ளாய். இதை இவள் அறிய வில்லை! இது என்ன பேதைமை! இது தோழி கூற்று. (25)

## 625. மாற்று உண்டேல் கூறுக!

*தோழி கூற்று*

இருகுங் குமக்குன்றும் பீர்பூப்பக் காம எரியினின்று
உருகும் பசும்பொன்னுக்கு ஓர்மாற்றுஉண் டேல்உரை யாய்
தொடுத்துச்
செருகு நறுங்கொன்றை தேன்பிழிந்து ஊற்றச்
சிறைச்சுரும்பர்
பருகும் பொலஞ்சடை யாய்காசி வாழ்முக்கண்
பண்ணவனே. 26

**தெளிவுரை**

எடுத்து அணியும் நறுமணம் உடைய கொன்றை மலர் தேன் சொரிய இறகையுடைய வண்டு அத்தேனைக் குடிக்கும் இயல் புடைய பொன் போன்ற சடையை யுடையவனே! காசியம் பதியில் வாழும் மூன்று கண்களையுடைய இறைவனே!

குங்குமம் பூசப் பெற்ற இரண்டு கொங்கையாம் குன்றுகளும் பீர்க்கம்பூவைப் போன்று பசலை ஏற்படக் காமத்தீயினின்று உருகும் இந்தப் பசும் பொன்னுக்கு - தலைவிக்கு - மாற்றான மருந்து இருக்குமானால் கூறுவாயாக!

**விளக்கம்**

இருகுங்குமக் குன்று - இரண்டு கொங்கைகள். அவற்றில் குங்குமக்குழம்பு பூசப்பட்டுள்ளது. பீர் - பசலை நிறம். தலைவன் தலைவியைப் பிரிந்தால் இத்தகைய பசலை உண்டாகும். பசலை என்பது நிறவேறுபாடு. பசும் பொன் - பசும்பொன் போன்ற தலைவி. மாற்று - பரிகாரம்; மருந்து; பொன்னுக்குரிய மாற்று. உரையாய் - கூறுவாய். மாற்றுப் பார்ப்பதற்கு உரைத்துப்

பார்ப்பாய் என்பது வேறு ஒரு பொருள். காம எரி - காமத்தீ தேன் பிழிந்து ஊற்ற - தேனைச் சொரிய. சிறைச் சுரும்பர் - இறகை யுடைய வண்டு. பொலம் சடையாய் - பொன் போன்ற நிறம் வாய்ந்த சடையை உடையவனே. பண்ணவன் - இறைவன். பண்ணவ, பொன்னின் நோய் தீருதற்கு மருந்தொன்று இருந்தால் அதைக் கட்டளையிட்டருள வேண்டும் என்றாள். நீயே அல்லாமல் மருந்தொன்று இல்லை என்பது குறிப்பு. (26)

## 626. இவள் பிழைத்தவிதம்!

கலிநிலைத்துறை

*தோழி கூற்று*

**பண்ணோர் வேதம் பாடிய காசிப் பதியாய் இப்**
**பெண்ணோர் ஒருவர் எய்கணை ஐந்தும் பெய்தானால்**
**உண்ணோர் நின்றாய் இன்னரு ளால்என் உயிர் அன்னாள்**
**கண்ணோர் நிற்றற்கு ஒல்கி ஒழிந்த கழுநீரே. 27**

### தெளிவுரை

பண்ணைக் கொடுக்கும் வேதம் புகழ்ந்து போற்றிப் பாடிய காசிப் பதியில் வீற்றிருப்பவரே! இப்பெண்ணின் எதிரே நின்று காமன் எய்யக் கூடிய தன் ஐந்து அம்புகளையும் எய்து விட்டான். உள்ளத்துள் நின்ற நின் இனிய அருளால் என் உயிரைப் போன்றவளின் கண்ணுக்கு ஒப்பாக மாட்டாமல் கழுநீர் மலர் தோற்று இவள் மீது தைக்காமல் ஒழிந்தது.

### விளக்கம்

அகிலேசரே! மன்மதன் தன் மலர் அம்புகள் ஐந்தையும் இவள் மீது எறிந்தான். அவற்றுள் நான்கு அம்புகள் மட்டும் தாம் செய்ய வேண்டிய துன்பங்களைச் செய்தன. கொல்லும் தன்மை யுடைய அம்பான கழுநீர் இவளது கண்ணுக்கு முன்பு வருவதற்கு அஞ்சிவராமல் நின்று விட்டது. அதற்குக் காரணம் இறைவரே,

தங்களின் இனிதான அருளே ஆகும். காமனின் அம்புகள் ஐந்து. அவையாவன, தாமரை, மா, அசோகு, முல்லை, குவளை. இவற்றுள் குவளை என்ற அம்பை எய்தால் உயிரைப் போக்கி விடும்.

பண் நேர் - பண்ணை அளிக்கும். வேதத்தினின்று இசை பிறந்தது என்பர். நேர்தல் - தருதல். ஒருவன் - காமன். வேதம் பாடிய - வேதத்தால் புகழ்ந்து பாடப்பட்ட. இதனைக் காசி இறைவர்க்கு அடை மொழியாக்கி வேதத்தை அருளியவர் எனவும் பொருள் கொள்ளலாம். உள்நேர் நின்றாய் - உள்ளே உயிர்க்கு உயிராய் நின்றவனே! உள்ளத்துள் நின்றவனே என்பதுமாம். உயிர் அன்னாள் - உயிர் போன்றவளின். கண்நேர் கழுநீர் - கண்ணுக்கு ஒப்பானகழுநீர் மலர். ஒல்கி - தோற்று. ஒழிந்த - முற்று. கழுநீர் என்பது குவளைமலர். கழுநீர் தோற்று ஒழிந்ததால் இவள் இறப்பு ஒழிந்தாள். மற்றத் துன்பங்களை அடைகின்றாள். (27)

## 627. காத்தருளுக!

### கட்டளைக் கலித்துறை

*காமம் மிக்க கழிபடர் கிளவி*

கழியும் தலைக்கலன் பூண்டுஆடும் காசிக் கடவுள்நுதல்
விழியும் இடக்கண்ணும் வெண்ணெருப் பேஅவ்
விழிஇரண்டில்
பொழியும் கனல்விழி காமனைக் காய்ந்ததுஅப்
போரில்உடைந்து
ஒழியும் படைகள்என் றோஎமைக் காயும்மற் றோர்விழியே.
28

**தெளிவுரை**

நீங்கும் தலைமாலையை அணிந்து ஆடும் காசியம்பதியில் வீற்றிருக்கும் கடவுளின் நெற்றி விழியும் இடக்கண்ணும்

வெண்ணிறம் உடைய நெருப்பே ஆகும். அந்த இரு விழிகளில் வெளிப்படும் தீக்கண் காமனை எரித்தது. அந்தப் போரில் தப்பி ஓடிய படை என்று ஓர்விழி எம்மை எரிக்கின்றது.

**விளக்கம்**

விசுவநாதரே! உம் கண்களுள் நெற்றிக்கண்ணும் இடக் கண்ணும் ஆகிய இரண்டு நெருப்பே. நெற்றிக்கண் மன்மதனை எரித்தது. அதன் இனமான இடக்கண் தப்பி ஓடிப் போன அவனது படை என்று எம்மை எரிக்கின்றது! எம்மைக் காத்தருள வேண்டும்.

கழியும் தலைக்கலன் - நீங்கிய தலைமாலை. நுதல் விழி - நெற்றிக் கண். இடக்கண் - சந்திரன் உள்ள இடக் கண். அதுவும் நெருப்பாய் விளங்குவதாகக் கூறுகிறாள். வெண் நெருப்பே - நெருப்பு வெண் நிறம் உடையது என்பது நூல் துணிபு. காமனை - மன்மதனை. காய்ந்தது - எரித்தது. உடைந்து - தோற்று. ஒழியும் - தப்பிய, தப்பி ஓடிய ஓர்விழி என்னைக் காயும். அருளுக என்றாள். (28)

## 628. இறைவர் விரும்புவது முதலியவை

மடக்கு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

விழைகுவது அன்பர் அகம்சுகமே வெங்கரி யின்உரி
கஞ்சுகமே
தொழிலடி கட்குள மாலயமே தூமுனி வோருள மாலயமே
அழகம ரும்பணி என்பணியே ஆட்கொள மேற்கொள்வது
என்பணியே
மழகளிறு ஈன்ற வளம்பதியே வாழ்வது காசி வளம்பதியே.
29

மடக்கு - முன்வந்த எழுத்துக்கள் மீள வருதல். இது வடமொழியில் யமகம் எனக் கூறப்படும்.

**தெளிவுரை**

இறைவர்; சுகமாக விழைவது அன்பரின் அகமே ஆகும். கொடிய யானையின் தோல் சட்டையாகும். இறைவர்க்கு உள்ள தொழில் பேரழிப்பு ஆகும். தூய்மையான முனிவரின் உள்ளம் ஆலயம் ஆகும். அழகு பொருந்திய ஆபரணம் எலும்பு ஆபரணம் ஆகும். என்னை ஆட்கொள்வதற்காக என் பணி விடையே அவரால் மேற்கொள்ளப்படுவது. இளமையுடைய விநாயகரை ஈன்றவளுக்கு இறைவர் கணவர் ஆவார். அவர் வாழ்வது காசியம்பதி யாகும்.

**விளக்கம்**

விழைகுவது - காசிநாதர் விரும்புவது. அன்பரகஞ் சுகமே - அன்பர்+அகம்+சுகமே - சுகமாவது அடியவரது உள்ளமே. அன்பர் அகம் விழைவது சுகமே எனவும் கொள்ளலாம். சுகம் - சிவானந்தம். வெங்கரியின்னுரி கஞ்சுகமே - வெங்கரியின்+உரி+ கஞ்சுகமே; கொடிய யானையினது தோல் சட்டையாகும். கஞ்சுகம் - சட்டை. தொழிலடி கட்குள மாலயமே - தொழில்+அடிகட்கு+ மா+லயமே; இறைவர்க்குத் தொழில் பெரிய சங்காரமாகும்; மாலயம் - பெருஞ்சங்காரம்.

தூமுனி வோருள மாலயமே - தூ+முனிவோர்+உளம்+ ஆலயமே; தூய முனிவரின் உள்ளமே ஆலயம் ஆகும். அழகமரும்பணி யென்பணியே - அழகு+அமரும்+பணி+ என்பு+அணியே; அழகு பொருந்திய ஆபரணம் எலும்பு ஆபரண மாகும். ஆட்கொள மேற்கொள்வதென்பணியே - ஆட்கொள மேற் கொள்வது என்பணியே; என்னை ஆட்கொள்வதற்கு என்னுடைய பணிவிடையே அவரால் மேற்கொள்ளப் படுவதாகும்.

மழகளிறீன்ற வளம்பதியே - மழகளிறு+ஈன்றவள்+அம் + பதியே; இறைவர் இளைய யானையான விநாயகரை ஈன்றவளுடைய கணவர் ஆவார். வாழ்வது காசி வளம்பதியே - வாழ்வதற்குரிய இடம் காசியாகிய வளம் உடைய பதி. பதி - நகரம்; ஊர். (29)

## மடக்கு

### 629. கட்டளைக் கலிப்பா

வண்ண மேனியரும்பு வனங்களே
வாசம் வாச மரும்பு வனங்களே
நண்ணு மாலய மாதவ ரங்கமே
ஞாலம் ஏழ்தரு மாதவ ரங்கமே
தண்ணென் மாலை தருமருக் கொன்றையே
தருவது ஐயர் தருமருக் கொன்றையே
கண்ணின் நிற்பர் மனத்திருக் கோயிலே
காசியே அவர்க்கு ஓர்திருக் கோயிலே. 30

**தெளிவுரை**

அகிலேசர்க்கு அரிய உலகங்களே திருமேனியாகும். அவர் வாழும் இருப்பிடம் வாசனை தோன்றும் காடுகள் ஆகும் (மயானமுமாம்). பொருந்தும் ஆலயம் மாதவரின் அழகிய தலை (துவாத சாந்தத் தானம்) ஏழு உலகங்களையும் ஈனும் மங்கை இறைவரின் அங்கமாகும். குளிர்ந்த மாலை மணத்தைத் தரும் கொன்றை மலர் மாலையாகும். அவர் தருமருக்குத் தருவது ஒன்றையே (முத்தியையே) மனத்தில் உள் குறும்பு ஒய்ந்தால் கண்ணில் நிற்பார். அவருக்கு ஒப்பற்ற ஒரு கோயில் காசிப்பதியே ஆகும்.

**விளக்கம்**

வண்ணமேனி யரும்பு வனங்களே - வண்ண+மேனி+அரும்+புவனங்களே; இறைவர்க்குத் திருமேனி அரிய உலகங்களே. புவனங்கள் - உலகங்கள். வாசம் வாசம் அரும்பு வனங்களே - வாசம்+வாசம்+அரும்பு+வனங்களே; இருப்பிடம் நறுமணம் தோன்றும் காடுகள்; சுடுகாடுமாகும். நண்ணு மாலய மாதவரங்கமே - நண்ணும்+ஆலயம்+மாதவர்+அங்கமே; பொருந்தும் கோயில் துறவியரின் உள்ளமாகும். ஞால மேழ்தரு

மாதவ ரங்கமே - ஞாலம்+ஏழ்தரு+மாது+அவர்+அங்கமே; உலகம் ஏழையும் ஈன்ற உமைமங்கை அவரது ஓர் அங்கமாவாள்.

தண்ணென் மாலை தருமருக் கொன்றையே - தண்+என்+மாலை+தரு+மரு+கொன்றையே; குளிர்ந்த மாலை மணம் அளிக்கும் கொன்றை மாலையாகும்.

தருவதையர் தருமருக் கொன்றையே - தருவது+ஐயர்+தருமருக்கு+ஒன்றையே. இறைவர் தருமருக்குத் தருவது ஒன்றான முத்தியையே. கண்ணினிற்பர் மனத்திருக் கோயிலே - கண்ணில்+நிற்பர்+மனத்திருக்கு+ஓயிலே; மனக் குறும்பு ஒய்ந்து விடுமாயின் இறைவர் கண் முன் நிற்பர்; காணப்படுவார்.

காசியே அவர்க் கோர் திருக் கோயிலே - காசியம்பதி அவர்க்கு ஒப்பற்ற திருக்கோயிலாகும். (30)

## 630. உனக்கு என்ன பாவம்!

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருகுசினக் கூற்றின்எயிற் றிடைக்கிடந்தும் கடைநாளில்
திரைஏழ் ஒன்றாய்
பெருகுமுழு நீத்தத்தில் திளைத்தாடப் புணைதேடும்
பேதை நெஞ்சே!
உருகிலைநெக்கு உடைந்திலைமொண்டு
ஆனந்தவனத்தேனை
ஓடி ஓடிப்
பருகிலைகண் அரும்பிலைமெய் பொடித்திலைமற்று
உனக்கென்ன
பாவந் தானே. 31

**தெளிவுரை**

மிக்க சினத்தை உடைய இயமனுடைய பற்களிடையே கிடந்தும், யுக முடிவு நாளில் ஏழ் கடல்களும் ஒன்றாய்ப்

பெருகிடும் முழு (பிரளய) வெள்ளத்தில் முழுகி ஆடத் தெப்பம் ஒன்றைத் தேடுகின்ற அறிவில்லா நெஞ்சமே! இறைவனை நினைந்து உருகவில்லை. நெகிழ்ந்து உடையவில்லை. ஆனந்த வனத் தேனான (இறைவனை) ஓடி ஓடிக்குடிக்க வில்லை. கண்ணீர் விடவில்லை மெய்ம்மயிர் பொடிக்க வில்லை. உனக்குள்ளது என்ன தீவினை?

**விளக்கம்**

திருகு சினம் - மிக்க சினம். கூற்று - இயமன். கடைநாளில் - யுகத்தின் முடிவில். திரை - கடல். முழு நீத்தம் - பிரளய வெள்ளம். ஆனந்தவனம் - காசி. (31)

## 631. எம்பெருமானின் ஊர்

**ஊர்**

### நேரிசை வெண்பா

பாவலரும் நாவலரும் பண்மலரக் கண்மலரும்
காவலரும் ஏடுஅவிழ்க்கும் காசியே-தீவளரும்
கஞ்சக் கரத்தான் கலைமறைக்கு நாயகமாம்
அஞ்சக் கரத்தான் அகம். 32

ஊர் என்பது தலைவனின் ஊரைப் புகழ்ந்து கூறுதல்.

**தெளிவுரை**

பாக்கள் தோன்றும் நாவின் வன்மையை யுடைய புலவரும் வண்டுகளின் இசை எழத்தேனுடன் மலர்கின்ற சோலையில் உள்ள மலர்கள் இதழை மலரச் செய்யும் காசிநகரே தாமரை மலர் போன்ற கைகளையுடையவனும் ஐந்தெழுத்தைப் பெயராக உடையவனு மான வேதநூலுக்குத் தன்மை பெற்றவன் இடமாகும்.

**விளக்கம்**

பாவலரும் - பாக்கள் தோன்றும்; புலவர் என்பது வேறு பொருள். காவலரும் - சோலையில் மலர் மலரும்; அரசர் மன்பது

மற்றொரு பொருள். பண்மலர - வண்டுகளின் இசைஎழ; பள்ளி எழுச்சிப் பாடல் பாட என்பது மற்றொரு பொருள்.

கண்மலரும் - கண் விழிக்கும்; கள்ளுடன் மலர்கின்ற என்பது மற்றொரு பொருள்.

தீ வளரும் - தீயையுடைய. கஞ்சக்கரத்தான் - தாமரை போன்ற கையை யுடையவன். கஞ்சம் - தாமரை; நீரில் தோன்றுவது (கம் - நீர்; ஜம் - பிறப்பு).

கலைமறைக்கு நாயகம் - வேதங்களின் தலைவன். அஞ்சக் கரத்தான் - அஞ்சு+அக்கரத்தான்; ஐந்தெழுத்துப் பெயரை யுடையவன் என்றது பஞ்சாட்சரம்; 'நமசிவாய' (32)

## 632. எம்பெருமானின் இருப்பிடம் முதலியன

**அகமே அவிமுத்தம் ஐயர்இவர்க்கு ஆகம்**
**சகமேழும் ஈன்றுஎடுத்த தாயே - மிக மேவும்**
**எண்ணம் பரமே எமக்கு அளித்தல் முச்சுடரும்**
**கண்அம் பரமே கலை. 33**

### தெளிவுரை

தலைவரான இவர்க்கு இருப்பிடம் காசி. உடம்பில் ஏழு உலகங்களையும் ஈன்ற உமையம்மைத்தாயே உள்ளாள். எமக்கு இவர் அளித்தல் யாவராலும் விரும்பப்படும் அழகிய பர முத்தியாம். மூன்று சுடர்களான சூரியன் சந்திரன் அக்கினி என்னும் மூன்றும் இவருடைய கண்களாகும். இவர்க்குத் திசையே ஆடையாகும்.

### விளக்கம்

அகம் - இருப்பிடம். அவிமுத்தம் - காசி. ஆகம் - உடல். சகம் ஏழும் - உலகங்கள் ஏழும். தாயே - அன்னையே. மிகமேவும் எண்ணம் பரமே. - மிக மேவும் பரம்; எண்ணப்படும் பரம் என்று பிரித்துக் கூட்ட வேண்டும். முச்சுடர் - சூரியன், சந்திரன், அக்கினி. அம்பரம் கலை - திசையே ஆடை. அம்பரம் - திசை. கலை - ஆடை. திகம்பரர் பெயரை நினைந்து அம்பரமே கலை என்றார்.

(33)

## 633. அம்மானை

### தாழிசை

கலைமதியின் கீற்று அணிந்த காசிஅகி லேசர்
சிலைம தனைக் கண்அழலால் செற்றனர்காண் அம்மானை
சிலைமதனைக் கண்அழலால் செற்றனரே ஆமாகின்
மலைமகட்குப் பாகம் வழங்குவதேன் அம்மானை
வழங்காரோ அப்பாலும் மாலானால் அம்மானை. 34

(அம்மானை என்பது மகளிரின் விளையாட்டு. அம்மானை யாட்டம் ஆடும் போது மகளிர் பாடல் பாடுவது வழக்கம்.) இப்பாட்டின் முதலில் - இரண்டடிகளில் ஒருபக்கத்தவர் கூற்று அமையும். இடைஇரண்டு அடிகள் மற்றொரு பக்கத்தவர் மறுத்துச் சொல்லும் கூற்று. இறுதியடி முதலில் கூறியவர் தம் கூற்றை நிலை நாட்டிக் கூறுவது.

**தெளிவுரை**

பிறைமதியை ஒரு பகுதியில் அணிந்த காசியில் வீற்றிருக்கும் அகிலேசர் கரும்பு வில்லையுடைய மன்மதனை நெற்றிக்கண் தீயால் எரித்தார் என்றாள் ஒருத்தி.

மன்மதனை நெற்றிக்கண் தீயால் எரித்தார் என்றால் பெண்ணான மலைமகளுக்குத் தன் உடலில் ஒரு பாகத்தை வழங்கியது ஏன்? என்றாள் மற்றொருத்தி.

மூன்றாமவள் இறைவர் காதல் மயக்கம் கொண்டாராதலால் தன் உடம்பில் மலை மகளுக்கு இடத்தைத் தரமாட்டாரோ! என்றாள்.

**விளக்கம்**

மன்மதனை எரித்தவர் ஆனால் அவர் பெண் ஆசை இல்லாது இருக்கவேண்டும். உமையான மலைமகளுக்குத் தம் திருமேனியில் பாதிபாகத்தைத் தந்தது காமனை எரித்ததற்கு

மாறாக அன்றோ உள்ளது என்பது மற்றொருத்தியின் வினா. மாலாய் இருப்பாராயின் வழங்கமாட்டாரோ என்பது மூன்றா மவளின் விடை. மன்மதனை எரித்தபின் காம மயக்கம் உடைய வரானால் என்ற பொருள்பட்டு விரைவுக் கேற்ற விடையாய் அமைந்தது. அந்தப் பக்கமும் திருமால் ஆனால் என்பது நேர் பொருள். சிவபெருமான் தம் ஒருபாதியில் திருமாலைக் கொண்டிருப்பதை நினைந்து கூறப்பட்டது.

கலைமதி - கலைகளை உடைய சந்திரன். ஆகம் - உடம்பு. கீற்று - ஒருகூறு. சிலைமதன் - கரும்பு வில்லையுடைய மன்மதன். செற்றனர் - எரித்தார்; அழித்தார். காண் - அசை. மலைமகள் - இமயவானின் மகள் உமை. அப்பால் - அப்பகுதி. அம்மானை - பாட்டிடை வரும் சொல். (34)

## 634. அகிலேசர் அடியை வணங்குவீர்!

### கட்டளைக் கலித்துறை

**அம்மனை தம்மனை யாத்திருக் கோயில் அவிமுத்தமா**
**எம்மனை யாய்த்தந்தை யாய்இருந் தார்அடிக் கீழ் இறைஞ்சீர்**
**நம்மனை மக்கள்என்று ஏக்கறுப் பீர்உங்கள் நாள் உலந்தால்**
**சொம்மனை வைத்துஎப் படிநடப் பீர்யமன் தூதரொடே. 35**

### தெளிவுரை

உலகத்தில் தாயான உமையம்மையார் தம் மனைவியாகத் தன் திருக்கோயில் காசியாக எம் தாயாகவும் தந்தையாகவும் இருந்தார் காசி அகிலேசர். அவரது அடியின் கீழ் வணங்குவீர். நம் மனைவியர் என்றும் பிள்ளைகள் என்றும் அவர்கள் மீதுள்ள ஆசையால் ஈடுபட்டு நிற்பீர். உங்கள் வாழ்நாள் முடிவு பெற்றுவிட்டால் உங்கள் சொத்துக்களை வைத்து யமன் தூதரோடு எவ்வாறு நடப்பீர்?

**விளக்கம்**

அம்மனை - தாய். தம் மனையா - தம் மனைவியாக. அவிமுத்தமாக - காசியாக. எம்மனையாய் - எம்+அனையா; எம் தாயாகவும். இறைஞ்சீர் - வணங்குவீராக. நம்மனை - நம்+மனை; நம் தாய். ஏக்கறுப்பீர் - அவர்கள் மீது ஆசை கொண்டு ஈடுபட்டு நிற்பீர்! உங்கள். நாள் உலந்தக் கால் - வாழ்நாள் முடியுமானால். சொம்மனை - சொம்+மனை - சொத்துக்களையும் வீட்டையும். சொம் - ஸ்வம் - தன் உரிமை சொத்து; செல்வம். (35)

## 635. பிரமரும் திருமாலும் மனம் வருந்துவர்

கட்டளைக் கலிப்பா

தூது கொண்டும் தமைத்தோ ழமைகொண்ட
தொண்டர் தண்டமிழ்ச் சொல்கொண்ட குண்டலக்
காது கொண்டுஎம் கவிதைகொண்டு ஆட்கொண்ட
காசி நாதர் கருத்துஏது அறிகிலேம்
போது கொண்டு ஒரு பச்சிலை கொண்டுதாம்
பூசை செய்திலர் புண்டரி கப்பதம்
ஏது கொண்டு கொடுப்பர் கொடுப்பரேல்
இருவ ருக்கும் மற்று என்படும் நெஞ்சமே. 36

**தெளிவுரை**

(சுந்தரமூர்த்தி நாயனார்க்காகப் பரவை நாச்சியாரிடம்) தூதாகப் போயும். தம்மைத் தோழமை கொண்ட அந் நாயனாரின் குளிர்ந்த தமிழ்ப்பாடல் கேட்ட குண்டலங்களையுடைய காதைக் கொண்டு எம் கவிதையையும் கொண்டு ஆட்கொண்ட அகிலேசரின் கருத்து யாது என்பதை அறியோம்! மலரைக் கொண்டும் பச்சிலை கொண்டும் தாங்கள் பூசை செய்ய வில்லை. அத்தகையவருக்கு எக் காரணத்தால் தம் தாமரைத் திருவடிகளை அளிப்பார் (சாரூபப்பதவியைத் தருவர்). அங்ஙனமேல் நெடுங் காலம் அன்னப் பறவைவடிவு கொண்டும் பன்றி வடிவு கொண்டும்

தேடியும் அடிமுடி காண இயலாத பிரமன் திருமால் ஆகிய இருவருக்கும் என்ன துன்பம் உண்டாகும்!

**விளக்கம்**

காசிநாதர் தூதாகப் போனார்; தொண்டரின் கவிதையை ஏற்று ஆட்கொண்டார். அத்தகையவரின் கருத்து ஏது என நாம் அறிய இயலவில்லை. அவர் பூசை செய்யாது தம் பதியில் வந்து அடைந்தவர்க்குச் சாரூபத்தை அளிக்கிறார். அப்படி அளிப்ப தானால் அவர்தம் அடிமுடிகளைத் தேடி வருந்திய பிரமனும் திருமாலும் என்ன துன்பம் அடைவர்!

தொண்டர் - சுந்தர மூர்த்தி நாயனார். அவருக்கும் அவர்தம் மனைவியார் பரவையர்ருக்கும் ஏற்பட்ட ஊடலைத் தவிர்க்கத் தூது போனார். அவர்தம் பாடலை ஏற்று அவரை ஆட்கொண்டார். அவரைத் தம் தோழராகவும் கொண்டார். கொண்டதால் அவர்க்குத் 'தம்பிரான் தோழர்' என்பது பெயராயிற்று. அத்தகையவர் பாடலைக் கேட்ட குண்டலம் அணிந்த என்பது பொருள். குண்டலங்களாக உள்ள கம்பளஅசுவதரர்களின் பாடலைக்கேட்கும் காது என்ற குறிப்புக் கொண்டது. அத்தகைய காது இழிந்த எம் கவிதையையும் கேட்கும் என்பது குறிக்கப் பட்டதாய்க் கொள்க.

சுந்தரரின் பாடலைக் கேட்ட செவிகள் என் இழிந்த கவிதையையும் ஏற்றுக் கொண்டருளியது என்பது இறைவனின் எளிமையைப் புலப்படுத்தியது.

காசியில் வந்தவர் பூசை முதலியன செய்வதில்லை; இறந்தால் போதும்; அவர் சாருபம் பெறுவர். எந்தக்காரணமும் இன்றி அவர்க்கு அருளுவது பிரமன் திருமால் இருவருக்கும் வருத்தம் உண்டாக்கும் என்பதாம்.

குண்டலம் - காதணி. கம்பளர் அசுவதரர் என்பவர் குண்டலங்களாய் இருந்து இசை பாடிக் கொண்டிருக்கின்றனர். அவற்றை இறைவர் கேட்டுக் கொண்டிருக்கின்றார் என்பது வரலாறு.

போது - மலர். பச்சிலை - வில்வம் முதலியவை. புண்டரிகப் பதம் - தாமரை போன்ற திருவடி. ஏது கொண்டு - எக் காரணத்தால். இருவர் - பிரமன், திருமால். என் படும் - எத்தகைய துன்பத்தை அனுபவிப்பர்? மற்று - அசைநிலை. (36)

## 636. எம் ஆற்றல்!

### சித்து

### நேரிசை வெண்பா

ஏடுஅவிழ்பொன் கொன்றைஅகி லேசர்அன்பர்க்கே
இரும்பை
ஆடகமாக் கிக் கொடுத்தோம், அவ்வளவோ - நீடுதிறல்
காட்டும்இமை யோர்க்குஇருப்புக் கற்கனகம் ஆக்கிஅண்ட
ஓட்டினையும் பொன்ஆக்கி னோம். 37

(சித்தாவது இரச வாதம் செய்யும் சித்தர் ஒருவர் கூற்றாக அமைத்துப் பாடப்படுவது. கலம்பகத்துள் இஃது ஓர் உறுப்பு.)

**தெளிவுரை**

இதழ் மலரும் பொன் போன்ற கொன்றை மாலையைச் சூடிய அகிலேசரின் திருமாலான அடியார்க்கு யாம் இரும்பைப் பொன்னாகச் செய்து கொடுத்தோம். காளிங்கன் என்னும் பாம்பின் பெரியபடத்தை ஆடுதற்குரிய இடமாகச் செய்து தந்தோம். அவ்வளவு மட்டுமோ எம் ஆற்றல்? மிக்க ஆற்றலை வெளிப் படுத்தும் தேவர்களுக்கு இருப்பு மலையைப் பொன்மலையாகச் செய்து தந்தோம். (இருப்பிடத்தை மேருமலை யாக்கிக் கொடுத்தோம்.) அண்ட முகட்டையும் பொன்னாகச் செய்தோம்.

**விளக்கம்**

ஏடு - இதழ். அகிலேசர் அன்பர்க்கு - அகிலேசரின் அடியவரான திருமாலுக்கு. ஆடகம் - பொன். இரும்பை ஆடகமாக்கிக் கொடுத்தோம் - இரும்பைப் பொன்னாக்கித்

தந்தோம் என்பது நேர் பொருள், இருப்பிடத்தை ஆடும் இடமாகச் செய்து தந்தோம் என்பது மற்றொரு பொருள். ஆடகம் - பொன்; ஆடும் இடம். இமையோர் - தேவர். இருப்புக்கல் - இரும்பு மலை. கனகம் ஆக்கி - பொன் மலையாக ஆக்கி மேருமலை பொன் மயமானது என்பர். அண்டத்தின் ஓடு பொன் நிறமாக உள்ளது என்பர். ஓடு - அண்டத்தின் ஓடு. இயல்பாய் உள்ள அண்டத்தின் பொன் ஒட்டைத் தாம் செய்ததாகச் சித்தர் கூறியதாகக் கூறப்படுகின்றது. (37)

## 637. நின் திருவடிக் கீழ்ச் சேர்க்க!

### நேரிசை ஆசிரியப்பா

பொன்உருக்கு அன்ன பூந்துணர்க் கொன்றையும்
வெள்ளிமுனை அன்ன விரிநிலாக் கொழுந்தும்
காந்தள் மலர்ந்தன்ன பாந்தளின் நிரையும்
திரைசுழித்து எறியும் பொருபுனல் கங்கையில்
5. வெள்ளிதழ்க் கமலம் வள்ளவாய் விரித்தென
முழுநகை முகிழ்க்கும் கழிமுடை வெண்தலை
தோல்அடிச் செங்கால் பால்புரை வரிச்சிறைக்
கிஞ்சுகம் மலர்ந்த செஞ்சூட்டு எகினத்து
உருஎடுத்து அகல்வான் துருவியும் காணாத்
10 தொன்மறைக் கிழவநின் சென்னிமற் றியானே
கண்டுகொண் டனன்இக் கடவுள்மா முடிஎனப்
பெருமகிழ் சிறப்பக் குரவைஇட்டு ஆர்த்து
வெள்எயிறு இலங்க விரைவில் சிரித்தெனப்
பெருவியப்பு இழைக்கும் எரிபுரை சடையோய்
15 ஆள்வழக்கு அறுக்கும் வாள்அமர்த் தடங்கண்
மின்னுழை மருங்குல் சின்மொழி மகளிர்
ஒழுகுஒளி மிடற்றின் அழகுகவர்ந்து உண்டெனக்
கயிறுகொண்டு ஆர்க்கும் காட்சித்து என்ன
மரகதம் காய்த்துப் பவளம் பழுக்கும்

20 கமஞ்சூல் கமுகின் கழுத்துஇற யாத்து
வீசுஒளிப் பசும்பொன் ஊசலாட்டு அயர்தரப்
பருமணிக் கமுகின் பசுங்கழுத்து உடைந்து
திரைபடு குருதித் திரள்தெறித் தென்ன
முழுக்குலை முரிந்து பழுக்காய் சிதறும்
25 மருங்குல்கண் படுக்கும் மதுமலர்ப் பொதும்பர்
கங்கைசூழ் கிடந்த காசி வாணா
ஐவளி பித்துஎனும் அவைதலை எடுப்ப
மெய்விட்டு ஐவரும் கைவிடும் ஏல்வையில்
மாமுதல் தடிந்த காமரு குழவியும்
30 பொழிமதம் கரையு மழஇளங் களிறும்
மூண்டுஎழு மானம்,பூண்டு அழுக்கு அறுப்ப
இடக்கையின் அணைத்து நின் மடித்தலத்து இருத்தி
உலகம் ஓர் ஏழும் பலமுறை பயந்தும்
முதிரா இளமுலை முற்றுஇழை மடந்தை
35 ஒண்டொடித் தடக்கையின் வீசு நுண்துகில்
தோகையின் பிறந்த நாகுஇளந் தென்றல்
மோகமும் தளர்ச்சியும் தாகமும் தணிப்ப
மறைமுதல் பொருளின் இறைசுவை அமுதினை
அஞ்செவி மடுத்துஉணவு ஊட்டிநின்
40 குஞ்சித அடிக்கீழ்க் குடிஇருத்து கவே. 38

## தெளிவுரை

பொன்னின் உருக்கைப் போன்ற அழகிய கொத்தான கொன்றைமலரையும் வெண்மையான முனை போன்ற விரியும் நிலவுடைய பிறையையும் காந்தள் மலர் பூத்ததைப் போன்ற பாம்புகளின் கூட்டத்தையும் அலையானது சுழித்து எறியும் மோதும் நீரையுடைய கங்கையாற்றில், வெண்மையான இதழை யுடைய தாமரை கிண்ணம் போன்ற வாய் விரிந்தாற் போல் முழுநகை முகிழ்க்கும் மிக்க புலால் நாற்றத்தை யுடைய வெண்மையான தலையோடு, தோல் அடியையுடைய சிவந்த கால் பொருந்திய பால் போன்ற வரிகள் பொருந்திய இறகையுடைய

முள்முருங்கை போன்று மலர்ந்த சிவந்த உச்சியையுடைய அன்னப்பறவையின் வடிவைக் கொண்டு அகன்ற வானில் ஆராய்ந்தும் காணமாட்டாத பழமையுடைய வேத முதல்வ! நின் தலையோடான யான் இறைவன் முடியைக் கொண்டேன் என்று குரவை பாடி மிக மகிழ்ச்சியடையும் வெண்மையான பற்கள் வெளிப்பட்டுத் தோன்ற விரைவாகச் சிரித்தாற் போல் மிக்க வியப்பை ஏற்படுத்தும் தீயைப் போன்ற சடையை யுடையவனே!

### மகளிர் ஊசல் ஆடல்

வீரர் இயக்கத்தை அழிக்கின்ற வாள் போன்ற கண்ணையும், மின்னல் போல் சிறிய இடையையும், சில சொற்களையும் உடைய மடந்தையர் தம் கழுத்தின் அழகைப் பாக்கு மரங்கள் கவர்ந்து கொண்டன என்று கயிற்றைக் கொண்டு அம்மரங்களைக் கட்டிய தோற்றம் போல், மரகதம் போல் காய்த்து, பவளம் போன்று பழுக்கும் நிறைந்த கருப்பத்தையுடைய கழுத்தை அறும்படி கட்டி, ஒளி வீசும் பசும்பொன் ஊசலில் ஆடினர். ஆட, பருத்த மணியைப் போன்ற பாக்கு மரத்தின் பசுமையான கழுத்து உடையப் பெற்று அலைகள் பொருந்திய குருதிக் கூட்டம் பாய்ந்திழிவதைப் போல், முழுக்குலை சிதைந்து பாக்குக்காய்கள் சிந்தும் மேகம் பொருந்தும் கள்ளை உடைய சோலையைக் கங்கையாறு சூழ விளங்கும் காசியில் வீற்றிடுபவரே!

### இங்கு இறந்தவர்க்குப் பிரணவ உபதேசம் அளிக்கப்படுதல்

வாதம் பித்தம் சிலேட்டுமம் என்ற அம்மூன்றும் மேம்பட உடம்பைவிட்டு ஐம்பொறிகளும் நீங்கிச் செல்லும் போது, சூரனான மாமரத்தை அழித்த, கண்டார்க்கு விருப்பத்தைத் தரும் குழந்தையான முருகப் பெருமானும், பொழிகின்ற மதநீரையுடைய மிக இளைய ஆண்யானையான விநாயகரும் கிளர்ச்சி எழும் மானம் கொண்டு பொறாமை கொள்ள, இடக்கையில் அணைத்து, நின் மடியில் இருத்தி, உலகங்கள் ஏழினையும் பலமுறை ஈன்றும் முதுமை அடையாத இளைய முலையையுடைய முழுமையான அணிகளை அணிந்த விசாலாட்சியம்மை, ஒளியுடைய பெரிய தம் கையால் வீசும் நுண்ணிய ஆடையின் முன்தானையால் தோன்றிய

மிக இளைய தென்றல் காற்று, மோகம், தளர்ச்சி, தாகம் என்பனவற்றைத் தணிக்க, வேதத்தின் முதல் பொருளின் நிறைந்த சுவையான அமுதத்தைச் செவியில் கொடுத்து உண்ணச் செய்து நின் வளைந்த திருவடிக்கீழ்த் தங்கியிருக்கும் படி செய்க.

**விளக்கம்**

பூந்துணர் - மலர்க் கொத்து. பொன் உருக்குஅன்ன - பொன்னை உருக்கி வார்த்தாற் போன்ற. கொன்றை மலருக்குப் பொன்னுருக்கு உவமை. நிலாக் கொழுந்து - பிறைச் சந்திரன். காந்தள் மலர்ந்தன்ன பாந்தளின் நிரை - காந்தள் மலர் மலர்ந்தது போன்று விளங்கும் பாம்புக் கூட்டம். பாந்தள் - பாம்பு. கொன்றை மலரையும் பிறையையும் பாம்பையும் அடித்து வரும் கங்கை என இயையும். எறியும் - வீசும். பொருபுனல் - மோதும் நீர் வெள்ளிதழ்க்கமலம் - வெண்மையான இதழையுடைய தாமரை. வள்ளவாய் - வள்ளம்+வாய். கிண்ணம் போன்ற வாய். விரித்தன - விரித்தது போல். கழிமுடை - மிக்க புலால் நாற்றம். வெண்டலை - வெண்ணிறத் தலையோடு. தோல் அடி செங்கால் - காலில் தோல் அமைந்திருக்கும். சிவந்த நிறம் உடைய கால். காலையுடைய அன்னம். பால் போன்ற வரிகளையுடைய சிறகுடைய அன்னம். கிஞ்சுகம் போல் சிவந்த சூட்டு அன்னம் எனத் தனித்தனிக் கூட்டுக.

வரிசிறை - வரிகளையுடைய இறகு. கிஞ்சுகம் - முள் முருங்கை. செஞ்சூட்டு - சிவந்த உச்சிக் கொண்டை. ஏகினம் - அன்னப்பறவை. அன்னப்பறவையின் உருக்கொண்டு பிரமன் சிவபெருமானின் உச்சியைத் தேடிச் சென்றும் அவர் முடியைக் காண இயலவில்லை. அத்தகையவனைப் பார்த்து, அவனது தலை - முன்பு சிவபெருமானால் கிள்ளப்பட்டுத் தற்போது அப்பெரு மானின் தலையில் உள்ளது - மறைக் கிழவ! நின் தலையான யான் நீ காண இயலாத சிவனின் முடியைக் கண்டு விட்டேன் என்று கூறிக் குரவையாடி மகிழ்ந்து சிரிப்பது போல் விளங்கியது.

மறைக் கிழவ - வேதங்களுக்கு உரியவனே! நின் சென்னி - நின் தலையான யான். கடவுள் மாமுடி - சிவ பெருமானின் முடி. குரவை யிட்டு ஆர்த்து - குரவைப் பாட்டுப் பாடி. குரவை -

குரவைப்பாட்டு. குரவை ஆட்டத்தின் போது பாடப்படும். பாட்டு. வெள் எயிறு - வெண்மையான பற்கள். இலங்க - வெளிப்பட்டுத் தோன்ற. சிரித்தென - சிரித்ததைப் போன்று. பெருவியப்பு இழைக்கும் - மிக்க வியப்பை ஏற்படுத்தும். எரிபுரை சடையோய் - தீயைப் போன்ற சடையை உடையவனே!

ஆள்வழக்கு - வீரரின் இயக்கம். அறுக்கும் - போக்கும். ஆள்வழக்கு அறுக்கும் என்பது வாளுக்கும் கண்ணுக்கும் பொருந்துக. தடங்கண் - பெரிய கண்; நீண்ட கண். மின்னுழை மருங்குல் - மின்னலைப் போன்ற சிறிய இடை. சின் மொழி - சில சொற்கள். ஒழுகுஒளி - மிக்க ஒளி. மிடறு - கழுத்து. அழகு கவர்ந்து உண்டெடன - அழகைக் கவர்ந்து கொண்டது என்று. மரகதம் காய்த்து - மரகத மணிகளைக் காய்த்து. பசுமை நிறத்தால் கமுகின் காய்க்கு மரகத மணிஉவமை. பவளம் பழுக்கும் - பவளத்தைப் போல் காய்கள் சிவந்து பழுக்கும். கமம்சூல் - நிறைந்த கருப்பம். கமுகின் கழுத்து இற - பாக்கு மரத்தின் கழுத்து அறுமாறு. யாத்து - கட்டி. ஊசலாட்டு - ஊஞ்சலில் ஆடுதல். அயர்தர - ஆட. பருமணிக்கமுகு - பருமையான அழகிய பாக்கு மரம். திரைபடு - அலை தோன்றும். குருதித்திரள் - இரத்த வெள்ளம். எறிந்தென்ன - வீசியதைப் போல். பழுக்காய் சிதறும் - பாக்குக்காய் சிந்தும். மங்குல் - மேகம். கண்படுக்கும் - உறங்கும்; தங்கும். பொதும்பர் - மரச்செறிவு; சோலை. வாணா - வாழ்பவனே; 'வாழ்நன்' என்பது 'வாணன்' என மருவி வரும்.

ஐ, வளி, பித்து - ஐ - சிலேட்டுமம், வளி - வாயு. பித்து - பித்தம். இம்மூன்றும் அளவைவிட அதிகப்படுமானால் நோய் உண்டாகும். இவை அளவொடு நிற்றல் வேண்டப்படுவது. இவற்றுள் ஒன்று ஒன்றை விஞ்சினால் நோய் மிகும். ஐவர் - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்து. ஏல்வையில் - பொழுது.

மாமுதல் - சூரனான மாமரத்தின் முதல். சூரபன்பன் மாமரத்தின் வடிவில் நின்றான். அவனை முருகப் பெருமான் அழித்தார். காமரு குழவி - விருப்பத்தைத் தரும் குழந்தையான முருகப் பெருமான். மழவிளங்களிறு - மிக இளைய ஆண்யானை

போன்ற விநாயகர். அழுக்கு அறுப்ப - பொறாமை கொள்ள. மடித்தலத்து இருத்தி - மடியில் இருக்கச் செய்து. பயந்தும் - ஈன்றும். முதிரா இளமுலை - முதுமை அடையாத கொங்கை. மடந்தை - விசாலாட்சி. ஒண்தொடித் தடக்கையின் - ஒளியுடைய வளையலை அணிந்த பெரிய கையால். நுண்துகில் தோகை - மெல்லிய ஆடையின் முன் தானை. நாகு இளந் தென்றல் - மிக இளைய தென்றல் காற்று. நாகு இள என்பன ஒருபொருட் கிளவி.

'முருகப் பெருமானும் விநாயகரும் பார்த்தும் பொறாமை அடையும்படி என்னை நின் மடித்தலத்தில் இருத்தி என்பதாம். தோகை - முன்தானை இறைவன் மடியில் கிடத்திப் பிரணவ உபதேசம் செய்ய, அப்போது அம்மை விசாலாட்சி தன் புடவை முன் தானையால் விசிற, என்க. பிரணவ உபதேசம் செய்யுமாறு உரைக்கப்பட்ட விதம் இது.

மறைமுதற் பொருள் - வேதத்தில் முதல் சொல்லின் பொருள். அச்சொல் 'ஓம்' என்பது. நிறை சுவை அமுது - நிறைந்த சுவையான அமுது. அஞ்செவி - அகம் செவி; உட் செவி. மடுத்து - தந்து. உண ஊட்டி - உண்ணும்படி உண்பித்து. குஞ்சித அடி - வளைந்த திருவடி; தூக்கிய திருவடி. குடியிருத்துக - தங்கியிருக்கும்படி செய்க. (38)

## 638. முத்தித் திருவைத் தழுவுவேனோ!

### அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

குடியிருக்கும் புன்குரம்பை குலைந்திடுநாள்
கொலைக் கூற்றம்
குமைத்த செம்பொன்
அடியிருக்கும் பரந்தாமப் புக்கில்புகுந்து ஆனந்த
அமுதம் மாந்திக்
கடியிருக்கும் நறைக்குழல் முத்தித்திருவை முயங்கிடவும்
கடவேன் கொல்லோ
துடியிருக்கும் இடையவளோடு அவிமுத்தத் திருந்த பரஞ்
சோதி யானே. 39

**தெளிவுரை**

உடுக்கையைப் போன்ற இடையை உடைய விசாலாட்சி யம்மையுடனே காசிப்பதியில் வீற்றிருக்கும் பரஞ்சோதியாம் இறைவனே!

உயிரானது குடியிருக்கின்ற புல்லிய உடம்பு அழியும் காலத்தில் கொல்லும் தன்மையுடைய இயமனை அழித்த சிவந்த பொன்னடியில் வீற்றிருக்கும் முத்தி என்னும் வீட்டில் புகுந்து ஆனந்தம் என்ற அமுதத்தை அருந்தி மணம் பொருந்திய தேன் சிந்தும் கூந்தலையுடைய முத்திப் பெண்ணைத் தழுவிடவும் செய்வேனோ!

**விளக்கம்**

புன்குரம்பை - அற்ப உடல். குலைந்திடும்நாள் - அழியும் காலத்தில். கூற்றம் குமைத்த - இயமனை அழித்த. பரந்தாமப் புக்கில் - முத்தி என்ற வீடு. புக்கில் - சொந்தவீடு. அடி இருக்கும் - பாதத்தில் இருக்கின்ற. கடி - நறுமணம். நறை - தேன். முத்தித்தீ - வட மொழி மரபு பற்றி முத்தியைப் பெண்ணாக உருவகித்தார். முயங்கிடவும் கடவேன் கொல் - தழுவவும் செய்வேனோ! துடி இருக்கும் இடை - உடுக்கை போன்ற இடை. பரஞ்சோதி - மேலான ஒளி யுடையவனே! (39)

## 639. களி

பதினான்குசீர்க் கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

சோதி ஒன்றில்ஒரு பாதி சத்திஒரு
பாதியும் பரம சிவம்எனத்
தொகுத்து வைத்தஅவி முத்த நாயகர்
துணைப்ப தம்பரவு களியரேம்
ஓதி ஓதிஇ ளைப்பர் வேதம்
உணர்ந்து தத்துவம் உணர்கிலார்
உணரும் வண்ணமனு பவத்தில் வந்திடுமொர்
உண்மை வாசகம் உணர்த்துகேம்

ஏதி னால்அறம் அனைத்தி னும்பசு
விளைப்ப டுத்துஅனல் வளர்த்திடும்
யாக மேஅதிகம் என்பது அன்பர்தம்
இறைச்சி மிகச்சிலதில் இச்சையார்
ஆதி யாரறிவர் அதுகிடக்கமது
அருந்தில் அப்பொழுதி லேபெறற்கு
அரியது ஓர்பரம சுகம் வி ளைதந்திடுவது
அதும றுத்தவிர வில்லையே. 40

(களியாவது, கள் உண்பவன் கூற்றாய்க் கலம்பகத்தில் வரும் ஓர் உறுப்பு. கள் உண்பவன் தன் ஒழுக்கமே மேலானது என்று கூறுவது போல் பாடப்படுவது.)

## தெளிவுரை

ஒரு சோதியில் பாதி சத்தி ஒருபாதி பரமசிவம் என்று சிவம் என்று தொகுத்து வைத்த காசியம்பதி நாதரின் இருதிருவடியை வணங்குகின்ற களியர் (கட்குடியர்) யாம். வேதத்தை ஓயாமல் ஓதுகிறார்கள். அதன் உண்மையை உணர்வதில்லை! அத்தகையவர் உணரும்படி நம் அனுபவங்களைச் சொல்கின்றோம். பசுவைக் கொன்று தீயை வளர்த்தும் வேள்வியே அறம் அனைத்தினும் அதிகம் என்பது எதனால்? அதை அன்பர்தம் எச்சிலாகிய இறைச்சியில் இச்சையுடையவரான ஆதியாரே அறிவர். அதுகிடக்க, மதுவை அருந்தினால் பெறுவதற்கு அரிய சுகம் விளைந்திடும் அதையுண்டு களிக்காத இரவு ஒன்றேனும் இல்லை.

## விளக்கம்

ஒரு சோதியில் பாதிசத்தி; மற்றப் பாதிதான் சிவம் என்று களிமகன் கூறியது. கள் சத்தியின் வரப்பிரசாதம் என்பது கள்ளை யுண்பவர் உரைக்கும் கூற்று.

அவிமுத்த நாயகர் - காசியில் வீற்றிருக்கின்ற இறைவர். அவிமுத்தம் - காசியம்பதி. துணைப்பதம் - இருதிருவடிகள். களியர் - களிப்பவர்; கள் குடியர். பலகாலும் வேதத்தை ஓதியும்அதன் உட்பொருள் உணர்வதில்லை. தத்துவம் - உண்மை. உணர்த்துகேம் - கூறுவோம். எதனால் அறம் அனைத்திலும் சிறந்தது பசுவைக் கொன்று செய்யும் யாகம் எனக் கூறுகின்றனர். இறைவர் இறைச்சியில் விருப்பம் உடையவர். இதனை ஆதியாராகிய அவரே உணர்வர். மிச்சில் - எச்சில். கண்ணப்ப நாயனார் இறைவர்க்குத் தான் உண்டு சுவைத்த இறைச்சியைப் படைத்ததை இங்கு ஆசிரியர் குறிப்பாக வைத்துள்ளார். அது மறுத்த இரவு இல்லை - அக்கள்ளை உண்டு களிக்காத இரவு ஒன்றும் இல்லை. அந்தமறு தவிரவில்லை - அந்தக் களங்கம் நீங்கவில்லை. மறு - களங்கம். (40)

## 640. தந்தையின் காலை வெட்டுபவர்க்கு அல்லால் கொன்றை மாலை கொள்வதற்கரிது!

### கட்டளைக் கலித்துறை

*தோழி கூற்று*

இல்வாழ்வை விட்டுக் கதிவேட்டு அடைபவர்க்கு ஏழைபங்கன்
நல்வாழ்வை யேதரும் காசிப் பிரான்நறும் பூங்கடுக்கை
வல்வார் முலைக்கொம்ப னாய்தந்தை தாள்மழுவால் எறிந்து
கொல்வார் ஒருவருக்கு அல்லாது எவர்க்கும் கொளற்கு அரிதே. 41

**தெளிவுரை**

(அகிலேசரின் கொன்றை மாலையை விரும்பிய ஒரு தலைவியை நோக்கித் தோழி கூறியது.)

இல்லற வாழ்வை விட்டு நற்கதியை விரும்பி அடைபவர்க்கு உமையை ஒருபக்கத்தில் உடைய இறைவர் நல்வாழ்வையே அளிப்பார். இத்தகைய காசிநாதரின் நறுமணம் உடைய கொன்றை மாலை, சூதாடு கருவியைப் போன்ற கொங்கையுடைய கொம்பைப் போன்றவளே, தந்தையின் திருவடியை வாளால் வெட்டிக் கொல்பவர் ஒருவருக்கு அல்லாது மற்றவர்க்குப் பெறுதற்கு அரியதாகும்.

**விளக்கம்**

கதி - நற்கதி. வேட்டு - விரும்பி. ஏழை பங்கன் - உமையம்மையை ஒரு பக்கத்தில் உடைய இறைவர். நறும் பூங்கடுக்கை - நறுமணம் உடைய் கொன்றை மாலை. வல்வார் முலை - சூதாடு கருவியைப் போன்ற கச்சணிந்த கொங்கை. வல் - சூதாடு கருவி. கொம்பனாய் - கொம்பு + அ(ன்)னாய்; பூங் கொம்பைப் போன்றவளே. தந்தை தாள் - தந்தையின் கால். மழுவால் எறிந்து - மழு என்ற படையால் வெட்டி. கொல்வார் - கொல்பவர்; அவர் சண்டேச நாயனார்; மழு - கோடரி. கொளற்கரிதே - கொள்வதற்கு அரிது.

தந்தை தாள் மழுவால் எறிந்த வரலாறு :

விசார சருமன் என்பார் அந்தணச் சிறுவர். அவர் மண்ணியாற்றங் கரையில் சிவலிங்கத்தை அமைத்து அதற்குத் தாம் மேய்க்கும் பசுக்களின் பாலை வார்த்துத் திருமுழுக் காட்டினார். அவர் செய்வது தவறு என்று எண்ணிய அவருடைய தந்தை எச்சதத்தன் தம் காலால் விசார சருமர் வைத்திருந்த பாற்குடத்தை உதைத்தார். சினம் கொண்ட விசார சருமர் தன் கையகத்திருந்த தடி மழுவாக மாற அதனால் தந்தை எச்சதத்தனின் காலை வெட்டினார். அவரது அருஞ்செயல் கண்ட சிவபெருமான் சண்டேசர் பதம் தந்து தம் திருமுடியில் சூடிய கொன்றை மாலையைச் சூட்டினார். விசார சருமர் **சண்டேச நாயனார்** என அழைக்கப்பெற்றார்.

## 641. காசிநாதர் வள்ளன்மை அழகிது!

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கொள்ளையிடச் சிலர்க்கு முத்திச் சரக்கறையைத்
திறந்து கொடுத்து
அனந்த கோடிப்
பிள்ளைகள்பெற் றுடையபெரு மனைக்கிழத்திக்
கேகுடும்பம்
பேணு கென்னா
உள்ளபடி இருநாழி கொடுத்து அதில்எண் நான்குஅறமும்
ஓம்புக என்றார்
அள்ளல்வள வயல்காசி ஆண்டகையார் பெருந்தகைமை
அழகி தாமே. 42

**தெளிவுரை**

சிலர் மிகுதியாய்ப் பெற்றுக் கொள்ள முத்தி என்ற சரக் கறையைத் திறந்து கொடுத்து, அளவற்ற பிள்ளைகளைப் பெற்ற பெருமனைக் கிழத்திக்குக் குடும்பத்தை நடத்துமாறு உண்மையில் இரு நாழிகை நெல்லை அளித்து அதில் முப்பத்திரண்டு அறங்களைச் செய்வாயாக என்றார் காசிநாதர். சேற்றையுடைய வளம் உடைய வயல் பொருந்திய அக்காசி நாதராகிய ஆண் தகையார் பெருந் தகைமை மிகவும் அழகிது!

**விளக்கம்**

கொள்ளையிட - விரும்பியவர் விரும்பிய அளவு எடுத்துக் கொண்டு போக. முத்திச் சரக்கறை - முத்தி என்றநிதி வைக்கப் பட்டுள்ள அறை; பொக்கிஷம் என்பது வடமொழிச் சொல். அனந்தகோடிப் பிள்ளைகள் - அளவற்ற பிள்ளைகள். பெற்றுடைய - பெற்ற. பெருமனைக் கிழத்தி - பெரிய இல்லாளுக்கு. பேணுக என்னா - பாதுகாப்பாயாக என்று. இருநாழி - இரண்டு நாழிகை. எண்நான்கு அறம் - முப்பத் திரண்டு அறங்கள். ஓம்புக - செய்வாய். அள்ளல் வயல் - சேற்றை உடைய

வயல். ஆண் தகையர் - ஆண்மை உடையார். பெருந் தகைமை - வள்ளன்மை. 'வயற்காசி' என்றதால் நெல்வயல் மிக்க காசி என்பது பெறப்பட்டது.

அயலவர்க்குச் சரக்கறையையே திறந்து விட்டவர் இறைவர். பல பிள்ளைகளைப் பெற்ற தம் மனைவிக்கு இருநாழி மட்டுமே தந்து அதில் முப்பத்திரண்டு அறங்களை வளர்க்குமாறு கூறினார். இது தகாது எனக் குறித்தவாறாம்.

இது பழிப்பது போல் புகழ்தல். (42)

## 642. குறம்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அழகுதுயில்குங் குமக் கொங்கை அணங்கே
எங்கள்அருட் காசிக்
குழகர் மகற்கு மகள்கொடுத்த குடியில் பிறந்த
குறமகள் யான்
ஒழுகு தொடிக்கைக் குறியும்முகக் குறியும் தரும்
ஒள்வளைக் குறியும்
புழுகு முழுகு முலைக்குறியும் உடையார் அவர்பொன்
புயந்தானே. 43

(குறத்தி தலைவிக்குக் குறி பார்த்துச் சொல்வதாகக் கூறுவது 'குறம்' ஆகும்).

**தெளிவுரை**

''அழகு பொருந்திய குங்குமக்குழம்பு பூசப்பெற்ற கொங்கையை யுடைய பெண்ணே! யான் எங்கள் அருள் காசி இறைவரின் மகனான முருகப் பெருமானுக்கு மகளை மணம் செய்து தந்த குறக்குடியில் பிறந்த குறத்தியாகும். தொடி அணிந்த நின் கைக்குறியும் முகக்குறியும், ஒளியுடைய வளையல் குறியையும் புழுகு பூசப்பெற்ற முலைக் குறியையும் உடைய

இறைவர் தம் அழகிய தோள்களை நினக்குத் தரும். நீ கவல வேண்டா!'' எனக் குறத்தி யுரைத்தாள்.

**விளக்கம்**

அழகு துயில் குங்குமக் கொங்கை - அழகு பொருந்திய குங்குமம் பூசப் பெற்ற கொங்கை. துயில் - தங்கியுள்ள. குழகர் - இளமை யுடையவர். மகன் - முருகப் பெருமான். மகள் கொடுத்த - மகளான வள்ளியை மணம் செய்து தந்த. குடி - குறவர் குடி. ஒழுகு தொடி - ஒழுங்காக அமைந்த வளையல். உன் கைக் குறியும் முகக் குறியும் இறைவரின் தோள்களைத் தரும் என இயைகிறது. புழுகு - நறுமணச் சாந்து. இறைவர் தோளில் உமையம்மையின் வளைக்குறியும் கொங்கைக் குறியும் உள்ளன என்க. (43)

## 643. புறத்து எங்கும் தேடுகிறாள் அவிமுத்தத்தானை!

### கட்டளைக் கலித்துறை

*செவிலி கூற்று*

புயல்வண்ணக் கண்ணற்கு ஒளித்தஅக்
கள்வன் புணர்ப்பை எண்ணாள்
கயல்வண்ணக் கண்ணிதன் கண்ணினுள்
புக்கது கண்டிருந்தும்
செயல்வண்ணம் கண்டிலள் வாளாப்
புறத்துளெங்கும் தேடுகின்றாள்
வயல்வண்ணப் பண்ணை அவிமுத்தத்
தானை மனத்துள் வைத்தே. 44

(செவிலியானவள் தலைவியின் செயலைக் கூறி வருந்துதல்.)

### தெளிவுரை

மேகம் போன்ற கருநிறம் உடைய கண்ணனுக்குப் புலப் படாமல் ஒளிந்து கொண்ட அந்தக் கள்வன் தனக்குள் புகுந்திருப்பதை நினையாமல் கயல் போன்ற வடிவுடைய கண்ணையுடைய இவளது கண்ணினுள் புகுந்ததைப் பார்த்திருந்தும் அப்பெருமானின் செயலின் தன்மையை அவள் உணரவில்லை. வயல்கள் பொருந்திய மருதநிலம் சூழ்ந்த காசியில் வீற்றிருக்கும் காசிநாதரை மனத்துள் வைத்துக் கொண்டே வீணே அவரை வெளியே எங்கும் தேடுகின்றாள் இவள்! என்று செவிலித் தாய் தன் மகளைப் பற்றிக் கூறினாள்.

### விளக்கம்

புயல் வண்ணக் கண்ணன் - மேகம் போன்ற கரிய நிறம் உடைய திருமால். திருமால் காண இயலாதவாறு சிவபெருமான் ஒளித்தான். புணர்ப்பு - சேர்க்கை. கயல் வண்ணக் கண்ணி - கயல் மீன் போன்ற வடிவுடைய கண்ணையுடைய தலைவி. புக்கது - புகுந்தது. செயல் வண்ணம் - செயலின் தன்மை. வாளா - வீணாக. வயல் வண்ணப்பண்ணை - வயல்கள் பொருந்திய மருதநிலம். அவிமுத்தத் தானை - காசிநாதரை. (44)

## 644. கொடிறு உடைத்து வாய் கிழித்து நாசியையும் மூக்கையும் அரிவோம்!

#### மறம்

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வையம்முழுது ஒருங்குஈன்ற இடப்பாகர் ஆனந்த
வனத்தில் வாழும்
வெய்யதறு கண்மறவர் குலக்கொடியை வேட்டுஅரசன்
விடுத்த தூதா!

கையில்அவன் திருமுகமோ காட்டிருகண் தொட்டுமுட்டைக்
கதையின் தாக்கிச்
செய்யகொடிறு உடைத்தகல் வாய் கிழித்தரிவோம்நாசியொடு
செவியும் தானே. 45

## மறம்

கலம்பக உறுப்புகளுள் ஒன்று. மணம் செய்து கொள்ள விரும்பி விடுத்த ஒருதூதனை நோக்கிச் சினந்து மறவர் தலைவன் கூறுவது இது.

### தெளிவுரை

உலகம் முழுவதையும் ஈன்ற உமையை இடப்பக்கத்தில் கொண்ட அகிலேசரின் ஆனந்த வனத்தில் வாழும் கொடிய அஞ்சாமையுடைய மறவரின் குலத்தில் தோன்றிய பெண்ணை மணந்து கொள்ள விரும்பி அரசன் அனுப்பிய தூதனே! நின் கையில் அவன் அளித்த திருமுகமோ! காட்டுவாய்! நின் இரண்டு கண்களையும் தோண்டி முட்டியைத் தண்டினால் தாக்கிச்சிவந்த கன்னத்தை உடைத்து, அகன்ற வாயைக் கிழித்து மூக்குடனே செவியையும் அரிவோம்! (அது செய்தற்கு முன் ஓடிவிடு!)

### விளக்கம்

வையம் - உலகம். ஒருங்கு ஈன்ற - ஒருங்கே பெற்றெடுத்த. இடப்பாகர் - உமையம்மையை இடப்பக்கத்தில் உடையவர். ஆனந்தவனம் - காசி. வெய்ய தறுகண் மறவர் - கொடிய அஞ்சாமையுடைய வீரர், கொடி - கொடி போன்ற பெண். வேட்டு - விரும்பி. திருமுகம் - ஓலை முடங்கல். இதற்கு அழகிய முகம் எனப்பொருள் கொண்டு கூறுகின்றான். தொட்டு - தோண்டி. முட்டு - 'முட்டு' என்பது குறுகி நின்றது. கொடிறு - கன்னம். நாசி - மூக்கு. (45)

## 645. ஆனந்த வனத்து இருந்தார் திருந்தார்கொல்!

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

*தோழி கூற்று*

தாக்கு படைவேள் கணை மழைக்குத் தரியாது
இருகண் மழைஅருவி
தேக்கும் இவட்குஆ னந்தவனத் திருந்தார் உள்ளம்
திருந்தார்கொல்
காக்க அரிய இளவாடைக் காற்றுக்கு உடைந்து
கரந்து வச்சை
மாக்கள் எனவே முடஅலவன் வளைவாய் அடைக்கு
மழைநாளே 46

### தெளிவுரை

எய்யும் அம்புகளையுடைய மன்மதன் செலுத்தும் அம்பு மழைக்குத் தரியாமல் கண்ணீர் மழை அருவியைத் தோற்றுவிக்கும் இத்தலைவிக்கு, காப்பதற்கு அரிய இளைய வாடைக்காற்றுக்கு வருந்தித் தம் பொருளைக் கொடுக்காத உலோபியர் போலவே வளைந்த கால்களையுடைய நண்டு தன் வளையை அடைக்கும் இம்மழை நாளிலும் காசியில் வீற்றிருக்கின்ற இறைவர் அருள் செய்யமாட்டாரரோ!

### விளக்கம்

(கார்காலம் பிரிந்தார்க்குத் துன்பம் செய்வது. எனவே அக்காலத்து வருந்தும் தலைவியைப் பார்த்துத் தோழி கூறுவது இது)

தாக்கு படை - எய்யும் படை. கணைமழை - அம்புமழை. தரியாது - பொறுக்காமல். தேக்கும் - காக்கவரிய - காக்க+அரிய; காத்துக் கொள்வதற்கு இயலாத. வாடைக்காற்று - குளிர்காற்று உடைந்து - வருந்தி. வச்சை மாக்கள் - உலோபியர். முடஅலவன் - வளைந்த கால்களை உடைய நண்டு. வளைவாய் அடைக்கும் -

வளையின் வாயை மண்கொண்டு மூடிக் கொள்ளும். கரந்து - மறைந்து. வளைவாயை மண்கொண்டு மூடுவது நீர் உள்ளே புகாமல் இருத்தற்கு. தலைவியின் ஆற்றாமையைக் கண்டு தோழி கூறியது இது. (46)

## 646. தலைவி உடன்பட்டாள்

### கட்டளைக் கலித்துறை

மழைவளைக் கும்பொழில் காசிப்
 பிரான்வெற்பில் வண்டறைபூந்
தழைவளைக் கைக்கொடுத் தேன்கண்ணில்
 ஒற்றித் தளர்இடைதன்
இழைவளைக் கும்கொங்கை யூடுஅணைத்
 தாள்இத் தழையினுள்ளே
கழைவளைக் கும்சிலை வேள்அனை
 யாய்இதைக் கண்டுகொள்ளே. 47

### தழை

(தலைவன் தந்த தழையைத் தலைவி ஏற்று மகிழ்ந்ததைத் தோழி தலைவனுக்குக் கூறுதல். தழை பூக்களாலும் தழையாலும் ஆன மாலை போன்றது. இதனை ஆடை மீது அணிந்து கொள்வது வழக்கம்.)

#### தெளிவுரை

கரும்பை வளைக்கும் வில்லையுடைய மன்மதனைப் போன்ற தலைவ! மேகம் வந்து சூழ்ந்து கொள்ளும் சோலை சூழ்ந்த காசியில் வீற்றிருக்கும் இறைவரின் மலையில் வண்டுகள் ஒலிக்கும் பூந்தழையைத் தலைவியிடம் தந்தேன். தளர்ந்த இடையை உடைய அவள் அதனை ஏற்றுக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள். அணிந்த அணிகள் வருத்தும் கொங்கைகளின் இடையே அணைத்துக் கொண்டாள். இத்தழையினிடத்து அவள் கொண்ட அன்பை அறிந்து கொள்வாய்!

**விளக்கம்**

மழை வளைக்கும் - மேகங்கள் வந்து தங்கும். பொழில் - சோலை. வண்டு அறை பூந்தழை - வண்டுகள் ஒலிக்கும் அழகிய தழை. வளைக் கைக் கொடுத்தேன் - வளையல் அணிந்த கையில் தந்தேன். தளர் இடை - தளரும் இடையை உடைய தலைவி கண்ணில் ஒற்றினாள்; கொங்கையில் அணைத்துக் கொண்டாள். தழையினுள்ளே - தழையின் திறத்தில் காட்டிய அன்பின் வழியாக.

கண்ணில் ஒற்றிக் கொண்டது மதிப்பை அறிவிக்கும். கொங்கையில் அணைத்தது காதலைப் புலப்படுத்தும். தழையினிடம் காட்டிய மதிப்பையும் அன்பையும் அறிந்து அவள் உடன்பாட்டை அறிந்து கொள்வாய்! (47)

## 647. ஆனந்த வனம் இருப்பாரைக் காணல் அரிது!

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கண்இருக்கும் திருநுதலும் கனல்இருக்கும் திருக்கரமும்
 கலந்தோர் பேதைப்
பெண்இருக்கும் இடப்பாலும் பிறைஇருக்கும் மவுலியுமாய்ப்
 பிரிக்கல் ஆகா
எண்இருக்கும் கணத்தொடும்ஆ னந்தவனத்து இருப்பாரை
 எங்கே காண்பார்
பண் இருக்கும் மறைகளும்எண் கண்ணனும்
 கண்ணனும் அமரர்
 பலருந் தானே. 48

**தெளிவுரை**

கண் விளங்குகின்ற அழகுடைய நெற்றியும் தீ பொருந்தி யுள்ள திருக்கையும் பொருந்தப்பெற்று. ஓர் பேதைப் பெண் இருக்கும் இடப்பக்கமும், பிறை விளங்கும் முடியுமாய்ப், பிரிக்க இயலாத பூதகணங்களும் சூழ ஆனந்தவனத்தில் இருப்பவரை, பண் விளங்கும் வேதங்களும் எட்டுக் கண்களை யுடைய பிரமனும், திருமாலும், அமரர்களும் எப்படிக் காண முடியும்?

**விளக்கம்**

இடப்பால் - இடப்பகுதி; ஓர் பேதைப் பெண் - உமையம்மை. மவுலி - சடை; முடி. பிரிக்கலாகா எண் - இத்தனை என்று பிரித்துக் கூற இயலாத எண்ணிக்கை. கணம் - உருத்திரகணம்; பூதகணம். பண்ணிருக்கும் மறை - இசை பொருந்திய வேதம். வேதத்தினின்று இசை உண்டாயிற்று என்பர். எண்கண்ணன் - எட்டுக் கண்களையுடைய பிரமன். கண்ணன் - திருமால்.

இறைவனுடன் சாரூபம் பெற்றவரும் இருப்பதால் காசி இறைவன் இன்னான் என்று அறிய இயலவில்லை. பிரமனும் திருமாலும் பூதகணங்களும் இறைவனைக் காண இயலாதவர்.

(48)

## 648. சில செந்துக்கள் தோள் கொட்டிச் செல்லும்!

**கட்டளைக் கலித்துறை**

பல்ஆண்டு தம்மைப் படைத்தஅத் தேவரைப்
பார்த்துப் பைம்பொன்
வில்ஆண்ட தோள் கொட்டி எந்தையர் கோல
விடம்ப முத்த
அல்ஆண்ட கண்டத்துஎம் ஆதிப் பிரான்அவி
முத்தத்திலே
சில்ஆண்டு இருந்து சிவமாய்ச் செலும் சிறு
செந்துக்களே. 49

**தெளிவுரை**

பல ஆண்டுகளை வாழ் நாட்களாகப் பெற்ற தேவர்களைப் பார்த்து, சிறிய உயிர்கள், பசும் பொன் மயமான மேருமலையான தோள்களைக் கொட்டி, 'எம் இறைவர் அழகிய நஞ்சு பொருந்திய கருமையுடைய கருத்தினையுடைய எம் ஆதிப் பெருமானின் காசியிலே சில ஆண்டுகள் இருந்து சிவமாய்ச் செல்லும்.

**விளக்கம்**

பல்லாண்டு தம்மைப் படைத்த - பல ஆண்டுகளைத் தம் வாழ்நாளாகப் படைத்த. தம் - அசை; பல துண்டுகளாகத் தம்மைப் படைத்த (நான்முகனை நோக்கி) எனவும் பொருள் கொள்ளலாம்.

பைம்பொன் வில் - மேருமலையான வில். செந்துக்கள் சாரூபம் பெற்றமையால் பைம்பொன் வில் உடையன ஆயின. எந்தையர் - எம் இறைவர். விடம் பழுத்த - நஞ்சு மிக்க. அல்லாண்ட - கருமை பொருந்திய. சில் ஆண்டிருந்து - சில ஆண்டுகள் இருந்து.

சிறு செந்துக்கள் தேவரைப் பார்த்து ''நீவிர் முன்னம் இருந்த நிலையிலேயே இருக்கின்றீர் யாம் நும்மினும் மேற்பட்ட நிலையை அடைந்தோம்'' என்று தோள்களைக் கொட்டிக் கூறிக் கொண்டு சிவலோகத்துக்குச் செல்லும். (49)

## 649. பாவியே! காமனே! அகன்று போ!

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

செந்தேன் ஒழுகும் பொழிற் காசி
சிறுநுண் நுகப்பின் பெருந்தடங்கண்
பைந்தேன் ஒழுகும் இடப்பாகர்
படைவீடு என்பது உணராய் கொல்
வந்தேன் வளைந்தாய் எமைப் பாவி
மதனா! வினையே விளைந்தபோர்
உய்ந்துஏகுஉது இங்கு அரிதுஅனற்கண்
உடையார் மழுவாள் படையாரே. 50

தலைவி காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறும் கூற்று.

(தலைவி மிக்க காமம் கொண்டு கூறுவது)

**தெளிவுரை**

நல்ல தேன் ஒழுகும் சோலையையுடைய காசியம்பதியில் சிறிய நுட்பமான இடையையுடைய பெரிய கண்களையுடைய

பசிய தேன் போன்ற உமையம்மை பொருந்தியுள்ள இடப்பாகரின் கோயில் என்பதை உணராயோ! என்னிடம் வந்து ஏன் சூழ்ந்தாய்? பாவியே! காமனே! நீ வளைந்து கொண்டதற்குக் காரணம் உன் தீவினையே ஆகும். உண்டான போரினின்று பிழைத்துப் போவாயாக! இறைவர் முன் எரித்த கனல் கண்ணும் மழுவாள் படையும் உடையவராக இருக்கின்றார். (எனவே நீ பிழைத்தல் அரிது)

**விளக்கம்**

செந்தேன் - சிவந்த தேன்; நல்ல தேன். பொழில் - சோலை. பைந்தேன் - உமையம்மை; பைந்தேனாக உருவகிக்கப் படுகின்றார். படைவீடு - கோயில்; இருப்பிடம். வந்து ஏன் வளைந்தாய் - ஏன் முற்றுகையிட்டு நிற்கின்றாய். பாவி மதனா எமை வந்தேன் வளைந்தாய் என மாற்றி இயைக்க. மதனா! - மன்மதனே! உய்ந்து ஏகுதி - உயிர் பிழைத்துப் போவாயாக! அரிது - உயிர்பிழைத்தல் அரிதாகும்.

விளைந்த போர் வினையே - உண்டாகிய போர்க்குக் காரணம் நின் தீவினையே ஆகும்.

மழுவாட் படையார் அனற்கண் உடையார் - உன்னை முன்பு எரித்த நெற்றிக்கண் இல்லாமல் போய்விடவில்லை என்றவாறு.

(50)

## 650. வாள் எடுப்பானேன்?

### மதங்கியார்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

படலைநறும் கடுக்கைமுடிப் பரஞ்சுடரார் இசைபாடிப்
பசுந்தேன் பில்கி
மடல்அவிழ்பூம் பொழில் காசி மணிமறுகில் வளையாடு
மதங்கி யாரே
உடலும்எமக்கு உயிரும் ஒன்றே ஒடுஅரிக்கண் வாள்
இரண்டும்
ஒழிய என்னே

தொடலை வளைத் தடக்கையின்வாள் இரண்டு
எடுத்து வீசிடநீர்
தொடங்கு மாறே. 51

## மதங்கியார்

(தண்ணுமையை அடித்துக் கொண்டு இடையே இரண்டு கைகளிலும் இரண்டு வாட்களை எடுத்து வீசிக்கொண்டு தெருக்களில் பாடியும் ஆடியும் பிழைப்பவள் மதங்கி அவளைப் பார்த்துக் காமுற்ற ஒருவனது கூற்றாக வரும் கலம்பக உறுப்பு இது.)

### தெளிவுரை

படலையும் நறுமணம் உடைய கொன்றை மாலையையும் உடைய சிவபெருமானின் புகழைப் பாடிப் பசுமையான தேன் கசிந்து ஒழுகும் இதழ் அவிழும் பூஞ்சோலை சூழ்ந்த அழகிய தெருவில் வாளை வீசி விளையாடும் மதங்கியாரே! எமக்கு உடலும் ஒன்று; உயிரும் ஒன்று. அரிகள் படர்ந்த கண்வாள்கள் இரண்டும் இருக்க, நீவிர் மாலையாகத் தொடுத்த வளையலை யுடைய பெரிய கையில் இருவாள்கள் எடுத்து வீச நீவிர் தொடங்குவது என்ன பயனை எண்ணி?

### விளக்கம்

படலை - பச்சிலையும் மலரும் கலந்து தொடுத்த மாலை. கடுக்கை - கொன்றை. பரஞ்சுடரரார் - அகிலேசர். பசுந்தேன் - பசிய தேன். பில்கி - வழிந்து. மடல்அவிழ் - இதழ்அவிழும். மணிமறுகு - தெரு. உடலுமெமக்குயிருமொன்றே - உடலும் எமக்கு உயிரும் ஒன்றே; எமக்கு உடலும் ஒன்றே உயிரும் ஒன்றே எனக் கூட்டுக.

தொடலைவளை - மாலையாகத் தொடுத்த வளை. தொடங்குமாறு என என்றியையும் எம் உடலையும் உயிரையும்

அழிப்பதற்கு உம் இருகண்களே போதுமே! மேலும் இரண்டு கண்களை ஏன் வீசுகின்றீர்? என்றான். (51)

## 651. பொன் ஊசல் ஆடுக!

### கலித்தாழிசை

தொடங்காமே பணிமலரும் தூவாமே நல்கும்
கடங்கால் களிற்றுஉரியார் காசிவளம் பாடி
விடங்கான்று அகன்றுகுழை மேல்போய்க் குடங்கைக்கு
அடங்காத உண்கணீர் ஆடுகபொன் ஊசல்
அம்பொன்மலர்க் கொம்புஅன்னீர் ஆடுக பொன்ஊசல். 52

### ஊசல்

பெண்கள் ஊசலாடும் போது பாடும் பாடல் இது. கலம்பக உறுப்புகளுள் ஒன்று.

#### தெளிவுரை

பணியைத் தொடங்காமல் மலரும் தூவாமல் இருக்க, அருளை வழங்கும் மதத்தைச் சொரியும் யானையின் தோலைப் போர்த்தியவரின் காசி நகரத்து வளத்தைப் பாடி, நஞ்சை வெளிப்படுத்தி அகன்று காதணியின் மேல் சென்று உள்ளங்கைக்கு அடங்காத கண்களை யுடையவரே, அழகிய ஊசல் ஆடுவீர்! கற்பக மரத்தின் மலர்க் கொம்பைப் போன்ற பெண்டிரே, ஊசல் ஆடுக.

#### விளக்கம்

பணி - தொண்டு. நல்கும் - அருள் புரியும். யாதொரு தொண்டைச் செய்யாமலும் மலர் கொண்டு பூசனை செய்யாமல் இருந்தாலும் தமது தலத்தில் இறப்பவர்க்கு அந்த இறப்பு ஒன்றாலேயே அருள் செய்வர் காசிநாதர். (52)

## 652. இவளுக்குத் தலைவர் கொன்றை மாலையைத் தரவில்லை!

### நேரிசை வெண்பா

*தோழிகூற்று*

பொன்னந்தாது என்னமலர்ப் பூந்துறையில் புண்டரிகத்து
அன்னம்தாது ஆடும் அவிமுத்தர் - இன்அமிர்தாம்
முன்னம் கடுக்கை முகந்துஉண்டார் நல்காரே
இன்னங் கடுக்கை இவட்கு. 53

(தலைவியின் துன்பத்தைக் கண்டு தோழிகூறுதல்)

**தெளிவுரை**

பொன் பொடியைப் போல் மகரந்தத்தை உடைய மலர் மலர்ந்த அழகிய நீர்த்துறையில் தாமரையின் தாதில் அன்னப் பறவை ஆடுகின்ற இயல்புடைய காசித்தலத்தில் வீற்றிருக்கின்ற இறைவரும் இனிய அமிர்தமாக முன்பு நஞ்சை எடுத்து உண்டவரும் ஆன பெருமான் இவளுக்கு இன்னமும் கொன்றை மாலையைத் தரவில்லை!

**விளக்கம்**

பொன்னம் தாது - பொன் நிறம் உடைய மகரந்தத் தூள். பூந்துறை - அழகிய நீர்த்துறை. புண்டரிகத்து - தாமரையின் தாது. அவிமுத்தர் - காசிநாதன். இன்னமிர்தா முன்னம் கடுக்கை முகந்து உண்டார் - முன்னம் கடுக்கை இன் அமிர்தா முகந்து உண்டார் என்று பிரித்து இயைக்க. முன் காலத்தில் நஞ்சினை இனிய அமிர்தம் போன்று உண்டவர். கடு - நஞ்சு கடுக்கை - கொன்றைமாலை. (53)

## 653. வண்டு செய்த தவம் யாது?

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

குன்றுஇரண்டு சுமந்தொசியும் கொடிஅன்னீர் அவிமுத்தம்
குடிகொண்டு ஆகம்
ஒன்றுஇரண்டு வடிவு ஆனார் திரள் புயத்து மார்பகத்தும்
உமிழ்தேன் பில்கி
மின்திரண்டது எனப்புரளும் பொலங்கடுக்கைத் தாமத்தின்
விரைத்தாது ஆடிப்
பொன்திரண்டது என இருக்கும் பொறிவண்டு செய்தவம் என்
புகலு வீரே. 54

**தெளிவுரை**

(இறைவனின் மாலையைப் பெறாமல் வாடும் தலைவி தோழியரைப் பார்த்துக் கூறியது.)

இரண்டு குன்றுகளைப் போன்ற கொங்கைகளைச் சுமந்து அசையும் கொடி போன்ற பெண்டிரே! காசித் தலத்தில் குடி கொண்டு உடம்பு இரண்டு ஒன்றாக வடிவம் உடையவர் ஆனார். திரண்ட தோளிலும் மார்பிலும் சிந்தும் தேன் மின்னல் திரண்டு எழுந்தாற் போல் புரளும் பொன் கொன்றை மாலை நறுமணத்தில் மூழ்கிப் பொன் திரண்டதைப் போல் விளங்கும் புள்ளியுடைய வண்டு செய்த தவம் யாது என இயம்புவீர்!

**விளக்கம்**

ஒசியும் - அசையும். கொடி அன்னீர் - கொடியைப் போன்ற மங்கையரே! ஆகம் - உடம்பு. ஒன்று இரண்டு வடிவானார் - ஓர் உடலே ஆண் பெண் என்ற இரண்டு உடலாய் ஆனார். திரள் புயுத்தும் - திரண்ட தோளிலும். மார்பகத்தும் - மார்பிலும். பில்கி - வழிந்து. மின் திரண்டது என - மின்னல் திரண்டு வந்ததைப் போல். பொலம் கடுக்கை - பொன் போன்ற கொன்றைமாலை. தாமம் - மாலை. விரைத்தாது ஆடி - மணமுடைய மகரந்தத்தில்

முழுகி. பொன் திரண்டது என - பொன் திரண்டு வந்ததைப் போல். செய்தவம் - செய்த தவம்.

வண்டு கொன்றை மலர்த்தாதில் ஆடியதால் கரிய வண்டு பொன் திரண்டு போல இருந்தது என்க.

வண்டுக்குக் கிடைத்த பேறு - இறைவரின் கொன்றை மாலையில் படியும் பேறு தனக்குக் கிட்டவில்லையே என்று வருந்துகிறாள் தலைவி.

'வண்டு செய்தவம் என்?' என்பதால் அத்தவத்தை நாமும் செய்து அவர் மாலையைப் பெறலாம் என்று தலைவி நினைந்தாள் என்க.

எனக்கு அரிதாய் உள்ள கொன்றைமாலை வண்டுக்கு எளிதாயிற்றே எனத் தலைவி இரங்குகிறாள். (54)

## 654. உயிர் போனால் இறைவரைக் காணலாம்

### கொச்சகக் கலிப்பா

*தலைவி கூற்று*

புகுமே மதிக் கொழுந்தும் புன்மாலைப் போதும்
நகுமே கிளையு நகைத்தால் நமக்குஎன்ன
உகுமே உயிர்காசி உத்தமரைக் காணத்
தகுமேஅப் போதுஇதழித் தாரும் பெறலாமே. 55

**தெளிவுரை**

பிறைச் சந்திரனும் புல்லிய மாலைப் பொழுதும் வரும். உறவினர் எள்ளி நகைப்பர். அங்ஙனம் அவர்கள் நகைத்தால் நமக்கு என்ன? உயிரானது போகும். போயின், அப்போது உத்தமரான இறைவரைக் காணக் கூடும். கொன்றை மலர் மாலையையும் பெறலாம்.

**விளக்கம்**

மதியும் மாலைப் பொழுதும் அலரும் தன்னைத் துன்புறுத்தலை நினைந்து வருந்தும் தலைவி அவற்றால் தன் உயிர் போகும் என்றும், போனால் பிரணவ உபதேசம் செய்ய இறைவர் வருவார் என்றும் அப்போது அவரது அருளைப் பெறலாம் என எண்ணிக் கூறியது இது.

மதிக்கொழுந்து - பிறைச் சந்திரன். கிளை - உறவினர். உறவினர் நகைத்தால் வருவது என்ன? உயிர்தானே நீங்கும் என அவள் எண்ணினாள். காணத்தகும் - காண முடியும். அகிலேசர் அப்பதியின் வழக்கப்படி பிரணவ உபதேசம் செய்ய வருவார். ஆதலால் காணக் கூடும் என்று எண்ணினாள். இதழி - கொன்றை. தார் - மாலை; அது மார்பில் அணிவது. (55)

## 655. மாலையைத் தராத நீரோ முத்தியைத் தருவீர்?

*தலைவி கூற்று*

ஆமோ அவிமுத்தத்து ஐயரே பெண்பழிவீண்
போமோ வயிரவர்தம் சாதனமும் பொய்ஆமோ!
தேமோது கொன்றைச் செழுந்தாமம் நல்காநீர்
தாமோ தருவீர் உமதுபரந் தாமமே. 56

**தெளிவுரை**

காசிப்பதியில் வீற்றிருக்கின்ற தலைவரே! பெண் பழியானது வீணாகுமோ! வயிரவர் தண்டனையும் பொய்யாகி விடுமோ! வண்டுகள் நெருங்கி மொய்க்கின்ற கொன்றை மலர் மாலையையே கொடுக்காத நீவிரோ முத்தியைத் தருவீர்?

**விளக்கம்**

'பெண்பழி' என்பதே 'ஆமோ, வீண் போமோ' என முன்னும் பின்னும் இயைக்க. சாதனம் - தண்டனை; உபாயம்.

காசியம்பதியில் இயமன் வரக்கூடாது. வயிரவரே பாவத்துக்குத் தண்டனை அளிப்பார் என்பது காசிநாதரின் கட்டளை. அக்கட்டளை உம் அளவில் மட்டும் இல்லையோ என்றாள். தேமோது - தேன்+மோது; தேன் - வண்டு; மோது - நெருங்கி மொய்க்கும். செழுந்தாமம் - செழுமையான மாலை. பரந்தாமம் - முத்தி. கொன்றைமாலையைத் தராத நீரோ முத்தியைத் தருவீர் என்பதாம். தாமம் - மாலை; முத்தி உலகம்.

(56)

## 656. ஊமத்தை மலரை இரந்தோம் எனக் கூறுங்கள்!

### கலிநிலைத் துறை

*தலைவி கூற்று பாங்கி விடுதூது*

பரந்தா மத்தைப் பல்உயிர் கட்கும் பாவிப்பார்
வரந்தா மத்தைப் பின்தரு வதைமுன் வழங்காரேல்
புரந்தா மத்தைப் பொருவுறு காசிப் புரமானார்க்கு
இரந்தா மத்தை எனப்புக லீர்ஏந்து இழையீரே. 57

### தெளிவுரை

முத்தியைப் பலவுயிர்களுக்கும் அளிப்பவர் மேன்மை யுடைய கொன்றை மாலையை இறந்த பின் அளிப்பதை முன் அளிக்காது போனாலும், வீடுகள் மலைகளை ஒத்தற்கு இடமான காசியில் வீற்றிருப்பவர்க்கு ஊமத்தை மலரை யாசித்தோம் என்று, பெண்களே, அவர்க்குக் கூறுங்கள்!

### விளக்கம்

காசிநாதர் கொன்றை மலர் மாலையை அளிக்காது போனாலும் ஊமத்தை மலர் மாலையை யாசித்தோம் எனக் கூறுங்கள் எனத் தலைவி கூறுகின்றாள்.

பரந்தாமம் - முத்தி. பாலிப்பார் - அருளியவர். வரந் தாமத்தை - வரம்+தாமத்தை; மேலான கொன்றைமலர்

மாலையை. பின் தருவதை - இறந்த பின்பு தருவதை. முன் வழங்காரேல் - முன்னும் வழங்காது போனால். புரம் தாமத்தைப் பொருதரு - வீடுகள் மலையை ஒத்திருக்கின்ற. மத்தை இரந்தாம் - ஊமத்தை மலரை யாசித்தோம். இறைவர் ஊமத்தை மலரையும் அணிபவர். ஏந்திழையீர் - தோழியீரே. (57)

## 657. திருவொடும் பொலிக பெருமகிழ் சிறந்தே!

### பாணாற்றுப்படை

### நேரிசையாசிரியப்பா

இழும்என் மழலை இன்அமுது உறைப்பப்
பிழிதேன் ஒழுக்கின் ஒழுகும்இன் நரம்பின்
வள்உகிர் வடிம்பின் வரன்முறை வருடத்
தெள்விளி எடுக்கும் சீறியாழ்ப் பாண!
5 வாழிய கேண்மதி மாற்றம் ஒன்று யானும்
ஏழிசைப் பாணன்மற்று இறைமகன் அலனே
பலவுடன் பழிச்சுவது ஒழிகமற்று அம்ம
சிலபகல் யானும்நின் நிலைமையன் ஆகி
நலம்பாடு அறியா இலம்பாடு அலைப்ப
10 நீர்வாய்ச் சிதலையும் நூல்வாய்ச் சிலம்பியும்
சிலவிடம் ஏய்ந்த சிறுபுன் குரம்பையில்
மசகமும் உலங்கும் வாய்ப்படைக் குடவனும்
பசையில் யாக்கைத் தசைகறித்து உண்ண
அரும்பசிக்கு உணங்கியும் பெரும்பிணிக்கு உடைந்தும்
15 சாம்பல்கண்டு அறியாது ஆம்பி பூத்த
எலிதுயில் அடுப்பில் தலைமடுத்து ஒதுங்கிச்
சிறுசிறார் அலறப் பெருமனைக் கிழத்தி
குடங்கையில் தாங்கிய கொடிற்றினர் குடங்கைக்கு
அடங்கா உண்கண் ஆறு அலைத்து ஒழுக
20 அழுகுரல் செவிசுட விழுமநோய் மிக்குக்
களைகண் காணாது அலமரும் ஏல்வையில்
கடவுள் நல்ஊழ் பிடர்பிடித்து உந்தக்
குரைபுனல் கங்கைக் கனரவழிச் சென்றாங்குத்

தேம்பழுத்து அழிந்த பூம்பொழில் படப்பையில்
25 கடவுள் கற்பகக் கொடிபடர்ந்து ஏறி
வான்தொடு கமுகின் மடல்தலை விரிந்து
நான்றன திசைதொறும் நறுநிழல் கதலித்
தேங்கனி பழுத்த பூங்குலை வளைப்ப
அம்மலர்க் கொடியின் செம்முக மந்தி
30 முடவுப் பலவின் முள்புறக் கனியைப்
புன்தலைச் சுமந்து சென்றிடும் காட்சி
குடமிசைக் கொண்டு ஒரு கூன்மிடை கிழவன்
நெடுநிலைக் கம்பத்தின் வடமிசை நடந்தென
இறும்பூது பயக்கும் நறும்பணை மருதக்
35 கன்னி மதில் உடுத்த காசிமா நகரம்
பெருவளம் சுரக்க அரசுவீற் றிருக்கும்
மழுவலன் உயர்த்த அழல்நிறக் கடவுள்
பொன்அடி வணங்கி இன்னிசை பாடலும்
அந்நிலைக் கண்ணே அகல் விசும்பு ஒரீஇச்
40 சுரபியும் தருவும் பெருவளம் சுரப்ப
இருமையும் பெற்றனன் யானே நீயும்அத்
திருநகர் வளமை பாடி இருநிலத்து
இருநிதிக் கிழவன்ஏக் கறுப்பத்
திருவொடும் பொலிக பெருமகிழ் சிறந்தே. 58

## பாணாற்றுப்படை

பரிசு பெற்று வரும் ஒருபாணன் பரிசிலைத் தேடிச் செல்லும் பாணனைத் தனக்குப் பரிசில் தந்த தலைவனிடம் அவனிருப் பிடத்துக்குச் செல்வதற்குரிய வழியைக் கூறிச் செல்லுமாறு செய்தல். பாண்+ஆற்றுப்படை - பாணனைத் தலைவனின் ஊர்க்குச் செல்லும் வழியில் செல்லும்படி செய்தல்.

இங்கு அகிலேசரிடம் திருவருள் பெற்று வரும் பாணன் ஒருவன் அவர் அருளைப் பெற அவரிடம் செல்லுமாறு மற்றொரு பாணனுக்குக் கூறுதல்.

நீயும் செல்வம் பெற்றுச் சிறக்க!

**தெளிவுரை**

(1-4) இமும் என்ற ஓசையை யுடைய இனிய இசை வெளிப்படத் தேன் ஒழுக்கைப் போல் ஒழுங்குபடத் தோன்றும் இனிய நரம்பின் கூரிய நகத்தின் விளிம்பு முறைப்பட வருடத் தெளிவான பாட்டு ஒலியை எழுப்பும் சிறுபாணனே!

(5-20) நான் கூறும் ஒரு சொல்லைக் கேட்பாயாக! யானும் உன்னைப் போன்ற பாணன் ஆவேன். அரசன் அல்லேன்! என்னைப் பலவாறு கூறித் துதிப்பதைக் கை விடுவாயாக! சில நாட்கள் நின்னைப் போன்ற தன்மையுடையவன் ஆகி, இன்பம் என்பதை அறியாத வறுமை துன்புறுத்த, நீரை வாயில் கொண்ட கறையானும், வாயால் நூலை வெளிப்படுத்தும் சிலந்தியும், சிலவிடம் மேய்ந்த, சிறிய வறிய குடிலில் கொசுகும், உலங்கும், வாயான படையை யுடைய குடவுண்ணியும், பசையற்ற என் உடலின் தசையைக் கடித்து உண்ண அரிய பசியால் வாட்டம் அடைந்தும் உண்டான மிக்க நோய்க்கு உடல்கெட்டும் சாம்பலைப் பார்த்தறியாத (சமைக்கப்படாத) காளான் பூத்த எலிகள் உறங்குதற்கு இடமான அடுப்பில் சேர்ந்து தங்கிச், சிறுவர்கள் பசியால் உணவு கேட்டு அழ, இல்லாள் உள்ளங்கையில் தாங்கிய கன்னத்தை உடையவளாய், உள்ளங்கைக்கு அடங்காத கண் ஆறுபோல நீரைச் சிந்த அழும் குரல் செவியைச் சுடவும் துன்ப நோய் மிக்குத் தன் வறுமையைப் போக்குதற்கு ஆதாரமானவர் களைக் காணாமல் மனம் கலங்கினேன்.

(20-44) அப்போது, கடவுள் அருள் என்னைப் பிடர் பிடித்துச் செலுத்த, ஒலிக்கும் நீரையுடைய கங்கைக் கரை வழியே போய், தேன் அடை முதிர்ந்து சொரிந்த அழகிய மரங்கள் சூழ்ந்த தோட்டத்தில், காமவல்லிக் கொடி படர்ந்து, மேலே ஏறி வானைத் தீண்டும் பாக்கு மரத்தின் மடல் தலை விரிந்து தொங்கினவாய்த் திசைதோறும் விளங்க அவற்றை வளைத்து, நறிய நிழலையுடைய வாழையின் இனிய கனி கனிந்த நல்ல குலையை வளைக்கும், அம்மலர்க் கொடியில் சிவந்த முகத்தையுடைய பெண்குரங்கு வளைந்த பலாமரத்தின் முள்ளை வெளியில் உடைய பழத்தைப்

புல்லிய சிறிய தன் தலையில் சுமந்தபடி போகும். அத்தோற்றம் தலையில் குடத்தை உடைய ஒரு கூன்கிழவன் உயர்ந்த கம்பத்தில் கட்டப்பட்ட கயிற்றில் செல்வதைப் போல் தோன்றிப் பார்ப்பவர்க்கு வியப்பை ஊட்டும். இத்தகைய நல்ல வயல்களை யுடைய மருதத்தில் அமைந்தது அழியாத மதிலை உடையது காசி மாநகரம்.

(36-44) அந்நகரத்தில் பெருவளம் சுரக்க அரசு வீற்றிருக்கும், மழுப்படையை வலக்கையில் உடைய தீ வண்ணனான காசிநாதக் கடவுளின் அழகிய திருவடிகளை வணங்கி இனிய இசைப்பாடல் யான் பாடவும், அப்போது, அகன்ற வானை விட்டுநீங்கிக்காமதேனுவும் கற்பக மரமும் மிக்க வளம் சுரப்ப, இம்மைப்பயனும் மறுமைப்பயனும் நான் பெற்றேன். நீயும் அந்த அழகிய நகரத்தின் வளத்தைப் பாடி இப்பெரிய வுலகத்தில் நிதிச் செல்வனான குபேரனும் பொறாமை கொள்ளுமாறு செல்வத்துடனே மிக்க மகிழ்வுடன் சிறந்து விளங்குவாயாக!

**விளக்கம்**

(1-4) இழும் - ஒலிக் குறிப்பு. மழலை - இங்கு இனிய ஓசை. உறைப்ப - துளிக்க. இன்னமுது - இனிய அமுதம் போன்ற இசை. தேன் ஒழுக்கு - இது யாழ் நரம்புக்கு உவமை. வள்உகிர் - கூர்மையான நகம். வடிம்பின் - விளிம்பினால். வருட - தடவ; மீட்டிட. தெள்வளி - தெளிவான இசைப்பாடல். எடுக்கும் - எழுப்பும். சீறியாழ்ப்பாண - சிறியயாழை வாசிப்பவனே. பாணர் இருவகையினர். பெரிய யாழ் வாசிப்பவர் பெரும்பாணர். சிறிய யாழை வாசிப்பவர் சிறுபாணர். இங்குக் கூறப்படுபவன் சிறுபாணன்.

(5-21) கேண்மதி - கேள்+மதி; கேட்பாய். மதி-முன்னிலை அசை. மாற்றம் ஒன்று கேள் என மாற்றிக் கூட்டுக. ஏழிசைப் பாணன் - ஏழு சுரங்களைக் கொண்ட இசைபாடும் பாணன். இறை மகன் - அரசன். பழிச்சுவது - போற்றுவதை. ஒழிக - விடுவாயாக. மற்று;அம்ம - அசைகள்.

நலம்பாடு - இன்பம். இலம்பாடு - வறுமை. அலைப்ப - வருத்த. சிதலை - கறையான். நூல் வாய்ச்சிலம்பி - வாயினால் நூலை வெளிப்படுத்தும் சிலந்தி. சிறு புன் குரம்பை - சிறிய வறிய குடில். மசகம் - கொசுகு. உலங்கு - கொசுகு போன்ற ஓர் உயிர். வாய்ப்படை - வாயாகிய படையையுடைய. குடவன் - குடவுண்ணி என்ற பூச்சி. இது இரத்தத்தை உறிஞ்சும். அரும் பசிக்கு வணங்கியும் - போக்குதற்கு அரிய பசிக்கு வாடியும். பெரும்பிணி - மிக்க நோய். உடைந்தும் - வருந்தியும். கறித்து - கடித்து. சாம்பல் கண்டறியா - தீயிட்டுச் சமைத்தால் சாம்பல் அடுப்பில் இருக்கும்; ஆனால் இங்குச் சமைக்கவில்லை; ஆதலால் சாம்பல் கண்டறியாது என்றார். ஆம்பல் - காளான். பூத்த - தோன்றிய. எலிதுயில் அடுப்பு - எலியானது உறங்கும் அடுப்பில் சமைக்காததால் எலி தனது இருப்பிடமாக அடுப்பைக் கொண்டது. அடுப்பின் தலைமடுத்து ஒதுங்கி - அடுப்பில் சேர்ந்து தங்கி. 'ஆடு நனி மறந்த கோடுயர் அடுப்பின் ஆம்பி பூப்ப' என்ற புறப்பாட்டு அடிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவை.

கொடிறு - கன்னம். இல்லாள் கன்னத்தைக் குடங்கையால் தாங்கினாள் என்பதாம்.

சிறுசிறார் - மிகச்சிறுவர்; குழந்தைகள். அலற - பசியால் உணவைக் கேட்டு அழ. ஆறு அலைத்து ஒழுக - ஆற்றைப் போல் கண்ணீர் சிந்த. செவி சுட - காதுகளை வருத்த. விழும நோய் - விழுமம்+நோய்; துன்பம் என்ற நோய்

(21-44) களைகண் - ஆதரவு ஆனவர்களை; காணாது அலமரும் - காணாமல் மனம் சுழலும். எல்லை - போது; சமயம். பிடர் பிடித்து உந்த - கழுத்தைப் பிடித்துத் தள்ள. குரைபுனல் - ஒலிக்கும் நீர். தேம்பழுத்து - தேன் அடைமுதிர்ந்து. அழிந்த - தேன் ஒழுகிய. படப்பை - தோட்டம். கடவுள் கற்பகக் கொடி - தெய்வத்தன்மை யுடைய காமவல்லி என்ற கொடி.

அக்கொடி படர்ந்து கமுக மரத்தை வளைந்தது. அதனைச் சார்ந்த வாழை மரத்தில் பொருந்தியது. அக்கொடியில் குரங்கு ஒரு

பலாப் பழத்தைத் தலையில் தூக்கியபடி சென்றது. அது கிழவனான கழைக் கூத்தாடி கம்பத்தின் இடையே கட்டப்பட்ட கயிற்றில் நடப்பதுபோல் விளங்கியது

இது (22-35) அடிகளில் உணர்த்தப்படுகின்றது. நான்றன திசைதொறும் - நான்கு திசைகளிலும் தொங்கின. கதலி - வாழை. பாக்குமரத்தைச் சூழ்ந்த கொடி பின்பு வாழைக் குலையை வளைத்தது. தேங்கனி - இனிய கனி. செம்முக மந்தி - சிவந்த நிறத்தையுடைய பெண்குரங்கு. பூங்குலை - அழகிய குலை. முடவுப்பலவு - வளைந்த பலாமரம். முட்புறக்கனி - வெளிப் பக்கத்தில் முள்ளை யுடைய பலாப்பழம். புன்றலை - சிறிய தலை. கூன்மிடைக் கிழவன் - கூனை உடைய கிழவன். வடமிசை - கயிற்றில். கிழவன் குடத்தை எடுத்துக் கொண்டு கம்பங்களுக்கு இடையில் கட்டப்பட்ட கயிற்றில் நடந்தான் என்க. இது பலாப் பழத்தை எடுத்துக் கொண்டு கொடியில் சென்ற குரங்குக்கு உவமை.

இறும்பூது - வியப்பு. பயக்கும் - ஏற்படுத்தும். நறும்பணை மருதம் - நல்ல வயல்களையுடைய மருதநிலம். கன்னிமதில் - அழியாத மதில். பெருவளம் சுரக்க அரசு வீற்றிருக்கும் - மிக்க வளம் பெருக ஆட்சி செய்யும். இறைவர் அரசு வீற்றிருப்பதால் பெருவளம் சுரக்கும் எனப் பிணைக்க. மழுவலன் உயர்த்த - மழு என்ற படையை வலப்பக்கத்தில் ஏந்திய. அழனிறக் கடவுள் - தீயைப் போன்ற நிறம் உடைய சிவபெருமான். ஓரீஇ - நீங்கி. சுரபி - காமதேனு என்னும் தேவர் உலகப் பசு. தரு - கற்பக மரம். இவை இரண்டும், கேட்டார்க்குக் கேட்டவற்றையெல்லாம் தரும். இருமை - இம்மைப் பயன், மறுமைப் பயன், இருநிலம் - மண் உலகம். இருநிதிக் கிழவன் - பெரிய செல்வத்துக்கு உரியவன். செல்வத்துக்கு அதிபதி குபேரன். அவன் இருப்பது தேவ உலகில். இவ்வுலகில் அக்குபேரனைப் போல நீ வாழ்க எனக் கூறுகின்றான் பாணன். ஏக்கறுப்ப - பொறாமை கொள்ள. (58)

## 658. என் குறையை இறைவர்க்கு உரையுங்கள்!

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வண்டுவிடு தூது

சிறைவிரிக்கும் மதுகரங்காள், தேம்பிழிபூம் பொழில்காசித்
திருநாடு ஆளும்
மறைவிரிக்கும் சிலம்புஅடியார் திரள்புயத்துப் புரளும்நறு
மலர்ப்பூங் கொன்றை
நறைவிரிக்கும் இதழ்க்கரத்தால் ஊட்டுமது விருந்துண்டு
நயந்து மற்று என்
குறைவிரித்தோர் இருவரிசை கூட்டுண்ணும் திருச்செவிக்கே
கூறு வீரே. 59

**தெளிவுரை**

வண்டுவிடுதூது

(தலைவி வண்டைத் தூதாக விடுவது)

இறகுகளை விரிக்கின்ற வண்டுகளே! தேனைச் சிந்துகின்ற அழகிய சோலை சூழ்ந்த காசி என்ற பதியை ஆளுகின்ற வேதங்கள் ஒலிக்கும் சிலம்பை உடைய அடியாரின் திரண்ட தோள்களில் புரளும் நறுமணம் உடைய கொன்றைமலரின் தேனை உண்பிக்கும் மதுவிருந்தை உண்டு விரும்பி என் குறையை விரிவாகக் கம்பளர் அசுவதரர் ஆகியவரின் இசையைக் கேட்கும் இறைவரின் திருச்செவிக்கு உரைப்பீராக!

**விளக்கம்**

சிறை - இறகு. மதுகரங்காள் - வண்டுகளே. தேம்பிழி - தேனைப் பிழியும் (சொரியும்). மறை விரிக்கும் சிலம்படியார் - வேதங்கள் ஒலிக்கின்ற சிலம்பை அணிந்த காசிநாதர். புரள்உறு - புரள்கின்ற. நறைவிரிக்கும் - தேனைச் சிந்தும். மது விருந்து உண்டு - தேன் விருந்தை உண்டு. நயந்து - விரும்பி. இருவர் இசை

கூட்டுண்ணும் - கம்பளர், அசுவதரர் என்ற கந்தருவர் இருவர் காதில் குண்டலமாய் இருந்து இசை பாடுவர். அவர் இசையை ஒருசேர உண்ணும் (கேட்கும்) செவி. (59)

## 659. சிவக்கொழுந்தை வணங்குவாய்!

### கட்டளைக் கலித்துறை

கூற்றுஅடிக்கு அஞ்சிக் குலையும்நெஞ் சேஅஞ்சல்
கோச்செழியன்
மாற்றுஅடிக்கு அஞ்சும் இடப்பா கனைமள்ளர்
கொன்றகருஞ்
சேற்றடிக்கு அஞ்ச மலர்வயல் காசிச் சிவக்கொழுந்தைப்
போற்றடிக்கு அஞ்சலி செய்பற்று வேறு புகல்இல்லையே.
60

### தெளிவுரை

இயமன் அடிக்கும் அடிக்கு அஞ்சிடும் நெஞ்சே அஞ்ச வேண்டா! முன்பு அரிமர்த்தன பாண்டியன் அடித்த பிரம்படிக்கு அஞ்சி உமையம்மையுள்ள இடப்பாகத்தைக் காட்டாமல் வலப் பாகத்தைக் காட்டியவனை, உழவர் குழைவாகச் செய்த கடுஞ் சேற்றில் தாமரை மலர்கள் மலர்ந்துள்ள வயலை உடைய காசி நாதரான சிவபெருமானைப் போற்று! அவரது அடிக்கு வணக்கம் செய்! பற்றுவாய்! இயமனிடமிருந்து தப்ப வேறு வழி இல்லை!

### விளக்கம்

கூற்றுஅடிக்கு - இயமன் அடிக்கும் அடிக்கு. இயமன் உயிரைக் கொண்டு போகும் போது பிரம்பால் அடித்து இழுத்துச் செல்வான் என்பர். குலையும் - அஞ்சும். அஞ்சல் - அஞ்சாதே. கோச்செழியன் - மன்னனான அரிமர்த்தனன். மாற்றடி - பிரம்பு அடி. மாறு - பிரம்பு. மாற்று அடிக்கு அஞ்சும் இடப்பாகனை - அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடித்தபோது இறைவர் தம்

இடப்பாகத்தில் உமையாள் இருப்பதால் அதைக் காட்டாமல் தம் வலப்பாகத்தைக் காட்டினார். ஆதலால் 'மாற்றடிக்கு அஞ்சும் இடப்பாகனை' என்றார். மள்ளர் கொன்ற - உழவர் குழையச் செய்த. கருஞ்சேற்றடி - கரிய சேற்றில். கஞ்சமலர் - தாமரை மலர். கஞ்சம் - நீரில் தோன்றுவது என்பது பொருள். போற்றடிக் கஞ்சலி செய் - போற்று+அடிக்கு+அஞ்சலி செய்; போற்றுவாய்; திருவடியை வணங்குவாய். பற்று - பற்றுவாயாக. புகல் - அடைக்கலம். (60)

## 660. சந்திரனிடம் உள்ள களங்கத்தை இறைவர் அறியவில்லையே

### அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

இலைமுகம் குழைத்த பைம்பூண்
        ஏந்திள முலையோடு ஆடும்
மலைமுகம் குழைத்த காசி
        வரதர்கண் டிலர்கொல் மாரன்
சிலைமுகக் கணைக்குஎம் ஆவி
        செகுத்து உணவு அருத்தத் திங்கள்
கலைமுகம் போழ்ந்த காயம்
        களங்க மாய் விளங்கு மாறே. 61

**தெளிவுரை**

இலையினது முகம் போல் குழைத்துச் செய்த அணிகளை அணிந்த கொங்கையை யுடையவளுடன் ஆடும் மேருமலையை வில்லாக வளைத்துக் குழையச் செய்த காசிவரதர், மன்மதன் வில்லில் வைத்து விடும் மலர் அம்புக்கு எம் உயிரை உணவாக ஊட்ட எண்ணி, அதற்கு முன்பு சந்திரனது கலைகள் பொருந்திய மானைக் குறியாகக் கொண்டு அதன்மீது எய்ததால் உண்டான புண்ணே களங்கமாக விளங்குகிறது என்பதை அறிந்து கொள்ள வில்லையோ!

**விளக்கம்**

இலை முகம் குழைத்த - இலைவடிவில் செய்யப் பட்ட அணியைப் பார்த்து இலை குழைந்தது (தோற்றது). மலைமுகம் குழைத்த - மேருமலையை வில்லாக வளைத்த. கண்டிலர் கொல் - காணவில்லையோ! மாரன் - மன்மதன். சிலைமுகக்கணைக்கு - வில்லில் வைத்து எய்யும் அம்புக்கு. ஆவி செகுத்து உணவு அருத்த - எம் ஆவியை அழித்து உணவாக உண்ணச் செய்ய. காயம் - புண். அம்பு எய்பவர் முதலில் மற்ற இடங்களில் அம்பு எய்து பயின்று பின் தாம் எண்ணிய குறியில் எய்வர். அது போல் மன்மதன் என் உயிரை அழிக்க எண்ணினான். அதற்கு முன் பயிற்சிக்காகச் சந்திரனில் அம்பு எய்தான். அதனால் உண்டான புண்ணே களங்கமாய் உள்ளது என்பதாம். சந்திரனிடம் உள்ள கலைமானை இலக்கமாக வைத்து அதன் முகத்தில் அம்பு எய்தான் என்பதுமாம்.

இது தற்குறிப்பேற்ற அணி.

போழ்ந்த - பிளந்த. விளங்குமாறு - விளங்கும் விதம். சிலைமுகம் - சிலையில். (61)

## 661. காமத்தீ வருத்துகின்றதே!

### கட்டளைக் கலித்துறை

*தோழிகூற்று*

விளங்கனி ஒன்றுஎறி வெள்விடை யோடும்
விழிக்கண் நுழைந்து
உளம்கனி யப்புகுந் தாய், விர கானலத் துற்றது என்னாம்!
வளம்கனி பண்ணை வயல்சூழ் அவிமுத்த வாணநறுங்
களங்கனி என்றுமை கைக்கிளி பார்க்கும் கறைக்கண்டனே.

62

### தெளிவுரை

வளம் மிக்க பண்ணைகளையுடைய வயல் சூழப்பெற்ற காசி விசுவநாதரே! நும் இடப்பாகத்தவளான உமையின் கையில் உள்ள கிளி உம் கருமையான கழுத்தைக் களம்பழம் என்று பார்க்கும் திருக்கழுத்தை யுடையவரே! விளாம்பழத்தையுடைய மரத் தோடும் முறித்த வெண்மையான காளையோடும் (திருமாலோடும்) என் கண்ணில் நுழைந்து உள்ளம் உருகிடச் செய்தாய். அந்த உள்ளம் காமத்தீயினால் உருகுகின்றது! இனி என்ன ஆகும்?

### விளக்கம்

'இறைவ! நீ உள்ளத்தில் இருக்க, அது காமத்தீயில் விழுந்தது எப்படி?' என்பதாம்.

விளங்கனி - விளாம்பழம். அதை வீழ்த்தியவர் கண்ணனான திருமால். அவர் சிவபெருமானுக்கு ஊர்தியாய் இருப்பவர். அந்தத் திருமாலுடன் என் உள்ளம் புகுந்து உருகச் செய்தாய் என்றாள் தலைவி. உளம் கனிய - உள்ளம் உருக. விரகானலம் - விரகம்+அனலம்; காமத்தீ. விரகம் - காமநோய்.

உளங்கனிய....என்னாம் - (1) உள்ளத்தில் நீ இருப்ப அது காமத்தீயில் விழுந்தது எப்படி? (2) உள்ளத்தில் நீ இருக்கின்றாய். நான் காமத்தீயில் வீழ்ந்தேனே! இனி என்னவாகும்?

வளம்கனி - வளம் மிக்க. அவிமுத்தவாண - காசியில் வீற்றிருக்கின்ற இறைவ. நறுங்களங்கனி என்று - நல்ல களாப்பழம் என்று. உமைக் கைக்கிளி - உமையம்மையின் கையில் உள்ள கிளி. கறைக்கண்டம் - களங்கம் உடைய திருக்கழுத்தை உடையவன்.

தேவரின் உயிரைக் காக்க நஞ்சினைக் கழுத்தில் கொண்ட நீர் இவளது உள்ளத்திலிருந்தும் இவளது உயிரை வருத்தும் காமத் தீயை வளர விடுவது அறமாகாது என்று கொள்க. (62)

## 662. பிரமனின் கவலை

### ஆசிரிய விருத்தம்

கண்டம் மட்டும் இருண்டு பாதி பசந்து பாதி சிவந்துனார்
காசி நாதர் கரத்து வைத்த கபாலம் ஒன்றுஅலது
இல்லையால்
உண்டு கோடியின் மேலும்ஐயர் பதம்பெ றக்கட வார்அவர்க்கு
ஒவ்வொருத்தர் கரத்தில் ஒவ்வோர் கபாலம் வேண்டும்
அதற்கெலாம்
பண்டிருந்த விரிஞ்சன் மார்தலை மாலை யும்செல வாய்விடின்
பாரம் என்தலை மேல்வரும் கொல் எனும்க வற்சியி
னால்பசுங்
கொண்டல் வண்ணர்துயில் கொள்ள வும்துயி லார்பி தாமக
னார்எனும்
கொள்கை கண்டும் விழைந்த வாஅவர் பதம்ச மீரகு மாரனே
63

**தெளிவுரை**

கழுத்து மட்டும் கருத்து, உடலில் பாதி பசந்தும், பாதி சிவந்தும் உள்ளார் காசிநாதர். அவரது கையில் வைத்த கபாலம் ஒன்றே அன்றி வேறு இல்லை. சிவனிடம் சாருபப் பதவி பெற இருப்பவர் கோடியைவிடப் பலர் உள்ளனர். அவர்கள் ஒவ்வொரு வர்க்கும் கொடுக்க ஒவ்வோர் கபாலம் வேண்டும். அதற்கெல்லாம் முன் இருந்த பிரமர்களின் தலைமாலைகள் பயன்பட்டன. அவை கொடுக்கப்பட்டு முடிந்ததாயின் கொடுக்கும் பொறுப்பு என் தலைமீது வந்து முடியுமோ என்ற கவலையினால், பசுமையான மேகம் போன்ற நிறம் கொண்ட திருமால் உறங்கவும், தற்காலத்து வாழும் பிரமன் உறங்காமல் உள்ளான். அதைக் கண்ட பின்பும் அந்தப் பிரமபதம் பெறுதற்கு அனுமான் தவம் செய்ய விரும்பியது ஏன்?

**விளக்கம்**

கண்டம் மட்டும் - கழுத்து மட்டும். பசந்து - பச்சை நிறம் கொண்டு. பாதி பசந்து என்பது இறைவரின் பாதி உடலில் உமை யிருப்பதை எண்ணி. அவளது பசிய நிறத்தால் பசந்து என்க. பாதி சிவந்து - சிவபெருமானின் பாகம் வலப்பாகம். அது சிவப்பு நிறமாக உள்ளது! அதனால் பாதி சிவந்துளார் என்றார். கபாலம் - பிரமதேவனின் மண்டை ஓடு. கோடியின் மேலும் - பல கோடி. பதம் பெறக் கடவார் - சாரூபப் பதவி பெற இருப்பவர். அவர்க்கு - அங்ஙனம் சாரூபப் பதவி பெற இருப்பவர்க்கு.

இறைவர் கையில் ஒரு கபாலமே உள்ளது. சாரூபப் பதவி பெறுபவர் பலர் உள்ளனர். அவர்க்கெல்லாம் ஒவ்வொரு கபாலம் தரவேண்டும். அவர்க்கெல்லாம் உள்ள பிரமர் பலரின் கபாலங் களைத் தந்து முடிந்து விட்டால், இன்னும் தர வேண்டிய நிலை ஏற்படும். ஏற்படின் தான் தலையைக் கொடுக்க நேருமோ என்று தற்போதுள்ள பிரமன் வருந்தி இறங்காமல் உள்ளார்.

பண்டிருந்த விரிஞ்சன்மார் - முற்காலத்தில் இருந்த பிரமர்கள். தலைமாலையும் - தலைமாலைகளும். பாரம் - பொறுப்பு. என் தலைமேல் வருங்கொல் - என் தலையைக் கொடுக்க நேர்ந்து விடுமோ. கவற்சி - கவலையால். பசுங் கொண்டல் வண்ணன் - பசிய மேகம் போன்ற நிறம் உடைய திருமால். பிதாமகனார் - தற்போதைய பிரமன். விழைந்தவா - விரும்பியவாறு. அவர்பதம் - பிரமபதம். சமீரகுமாரன் வாயுவின் மகன் அனுமான். சமீரம் - வாயு. சமீரணன் என்பதன் விகாரம்.

அனுமான் ஒருகாலத்தில் பிரம பதத்தைப் பெறக் காசியில் தவம் செய்தான் என்பது புராணம். (63)

## 663. பசுங்கிளிக்குப் பீர் பூத்தது!

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### தோழிகூற்று

கும்பம் இரண்டு சுமந்து ஒசியும் கொடிநுண் மருங்குல்
இறும்இறும் என்று
அம்பொன் பசுங்கொம்பு அன்னாளை ஆகத்து அணைத்த
அகிலேசர்
செம்பொன் இதழித் தெரியலையே சிந்தித் திருப்பத்
திரள்முலையும்
பைம்பொன் உருவும் பீர்பூத்த பவளச் செவ்வாய்ப்
பசுங்கிளிக்கே. 64

**தெளிவுரை**

குடம் போன்ற இரண்டு கொங்கைகளைச் சுமந்து அசையும் கொடியைப் போன்ற சிறிய இடையானது ஒடியும் ஒடியும் என்று எண்ணி அழகிய பொன் போன்ற கொம்பு போன்ற உமையயைத் தன் உடலில் அணைத்துக் கொண்டார் அகிலேசர். அப்பெரு மானின் செம்பொன் போன்ற கொன்றை மாலையையே எண்ணி யிருக்கும் பவளம் போன்ற சிவந்த வாயை உடைய பசுங்கிளி போன்ற தலைவிக்கு முலைகள் இரண்டிலும் உடலிலும் பீர்க்கம் பூவைப் போல் பசலை உண்டாயின.

**விளக்கம்**

கும்பம் - குடம். குடம் இரண்டு சுமந்து - குடம் போன்ற கொங்கைகள் இரண்டைச் சுமத்தலால். கொடிநுண் மருங்குல் - கொடியைப் போன்ற சிறிய இடை. இறும் இறும் - ஒடியும் ஒடியும். அம்பொன் பசுங்கொம்பு அன்னாளை - அழகிய பொன் போன்ற பசிய கொம்பைப் போன்ற உமையம்மையை. ஆகம் - உடல். தெரியல் - மாலை. தலைவி இறைவரின் கொன்றை மாலையையே எண்ணியபடி இருந்ததால் மார்பும் உடலும் பசலை கொண்டன. பீர்பூத்த - பீர்க்கம்பூவைப் போல் பசலை உண்டாயின. பவளச்

செவ்வாய்ப் பசுங்கிளி - பவளத்தைப் போன்ற சிவந்த வாயை உடைய பச்சைக் கிளியைப் போன்ற தலைவி. (64)

## 664. கொன்றையைச் சடையில் வைத்த காரணம்

### கட்டளைக் கலித்துறை

*தலைவி கூற்று*

**கிள்ளைக்கு அமிர்த மொழிசாற் றிடும்கிஞ் சுக இதழ்ப்பெண்**
**பிள்ளைக்கு இடம்தந்த காசிப் பிரான்பிறை யோடுமுடிக்**
**கொள்ளைச் சிறைவண்டு கூட்டுஉணும் கொன்றையும்**
**கூடவைத்தார்**
**வள்ளக் கலச முலைக்கங்கை யாள்உயிர் வாழ்வதற்கே. 65**

**தெளிவுரை**

கிளிக்கு அமிர்தம் போன்ற இனிய சொல்லைக் கற்பிக்கும் முள் முருங்கைப் போன்ற வாயை உடைய பெண் பிள்ளையான உமையம்மைக்கு உடலில் ஒரு பகுதியைத் தந்த காசி விசுவநாதர் பிறைச்சந்திரனோடு முடியில் இறகையுடைய வண்டு ஒன்று கூடித் தேனை உண்ணும் கொன்றையும் உடன் வைத்தார். காரணம், கிண்ணத்தைப்போன்றும் குடம் போன்றும் விளங்கும் கொங்கையையுடைய கங்கை என்ற மங்கை உயிர் வாழ்வதற்காக!

**விளக்கம்**

கொன்றை மாலை இன்றித் திங்களை மட்டும் வைத்திருந்தால் அது கங்கையைக் கொன்றிருக்கும் எனத் திங்களின் கொடுமையைத் தலைவியுரைத்தாள். கிள்ளை - கிளி. பெண் பிள்ளை - உமையம்மை. கிளிக்குச் சொல்லைக் கற்பிக்கும் முள் முருங்கைப் போன்ற வாயுடைய பெண்பிள்ளை உமையம்மை. கிஞ்சுகம் - முள் முருங்கை. பிறை - சந்திரன். கொள்ளை சிறைவண்டு - மிக்க இறகையுடைய வண்டு. கூட்டுணும் - கூடி உண்ணும். வள்ளம் - கிண்ணம். கலசம் - குடம்.

கங்கை சந்திரனின் நிலவு ஒளியால் வருந்தாவகை கொன்றையையும் அதனுடன் சடைமுடியில் வைத்தார். அதனால் அவள் உயிர் தரித்தாள். எனவே எனக்கும் கொன்றை மாலையை வழங்கினால் சந்திரனால் துன்பம் அடைய மாட்டேன் என்பது தலைவியின் உட்கோள். (65)

## 645. கண்ணீரில் நின்று தவம்செய்வாளை இறைவர் அறியவில்லை!

### கலிவிருத்தம்

*தலைவி கூற்று*

வாள்த டங்கண் மழைப்புனல் மூழ்கியே
சேட்டிளங் கொங்கை செய்தவம் ஓர்கிலார்
தோட்டி னங்கொன்றை சூடிப்பொன் அம்பலத்து
ஆட்டு வந்த அவிமுத்த வாணரே. 66

**தெளிவுரை**

இதழ்களை உடைய கொன்றை மலர் மாலையைச் சூடிப் பொன்னம்பலத்தில் காசிநாதர் ஆடுகின்றார். அவர் வாள் போன்ற கண்களினின்று வடியும் மழைப் புனலில் முழுகிப் பெரிய இளைய கொங்கையை யுடையவள் செய்யும் தவத்தை உணராதவராக உள்ளார்.

**விளக்கம்**

வாள் தடங்கண் - வாள் போன்ற கூர்மையான பெரிய கண். மழைப்புனல் - மழைநீர்; கண்ணீர். சேட்டிளங்கொங்கை - பெருமையுடைய இளைய கொங்கை. ஓர்கிலார் - உணரவில்லை. தோட்டினங் கொன்றை - தோட்டின்+அம்+கொன்றை, இதழ்களை யுடைய அழகிய கொன்றைமாலை.

ஆட்டு உவந்த - ஆடுதலை விரும்பிய.

மழைநீரில் முழுகி அதில் நின்று தவம் செய்வர் துறவியர். அது போன்று என் கொங்கைகள் கண்ணீரில் முழுகித் தவம் செய்வதைக் காசிநாதர் உணரவில்லை. அதாவது உணர்ந்து அருள்செய்யவில்லை. (66)

## 666. காசி நகரை அடைவாய்!

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

நரைமு திர்ந்தன கண்கள்பஞ்சு ஆர்ந்தன
நமன்தமர் வழிக்கொண்டார்
திரைமு திர்ந்துடல் திரங்கினது இரங்கலை
செயலிது மடநெஞ்சே!
உரைமு திர்ந்தவர் குழாத்தொடும் அடைதியால்
ஒழுகுஒளி முடிக்கங்கைக்
கரைமு திர்ந்திடாக் கலைமதி முடித்தவர்
காசிநன் னகர்தானே. 67

**தெளிவுரை**

அறியாமை வாய்ந்த மனமே! முடி நரைத்தது. கண்கள் பஞ்சின் தன்மையைப் பெற்றன. இயமனின் தூதர் உயிரைக் கொண்டு செல்லப் புறப்பட்டு விட்டார். தோலில் சுருக்கம் ஏற்பட்டு உடல் தளர்ந்தது. நீ வருந்தாதே! முதிர்ந்தவர் கூட்டத் துடன் ஒளிமிக்க முடியில் கங்கைக் கரையில் முதுமை பெறாத பிறைச்சந்திரனைச் சூடியவர் காசிநகரை அடைவாயாக! நீ செய்யக் கூடிய செயல் இதுவாகும்!

**விளக்கம்**

கண் பஞ்சார்ந்தன - கண்கள் பஞ்சின் நிறமான வெண்மை யை அடைந்தன. நமன் தமர் - இயம தூதர். வழிக் கொண்டார் - புறப்பட்டார். திரங்கின - தளர்ந்தன. இரங்கலை - இரங்காதே. செயல்இது - செய்யக் கூடிய செயல் இது. உரை முதிர்ந்தவர் - சொல் தடுமாறும் முதியவர். அடைதியால் - அடைவாய்; ஆல் -

அசை. முதிர்ந்திடா கலைமதி - வளராத பிறைச்சந்திரன். முடித்தவர் - சூடியவர். பிறைச்சந்திரனைச் சூடியவர் காசி நகரை அடை. இது நீ செய்யக் கூடிய செயல் என்க. (67)

## 667. காசியின் இயல்பு

### வஞ்சித்துறை

நகர மாய்மறைச், சிகர மானதால்
மகர மாயினான், நிகரில் காசியே. 68

**தெளிவுரை**

ஆணவ மலத்தின் சத்தியை மாய்த்த அகிலேசரின் காசியம் பதியானது நகரமாய்க் காட்சியளித்து வேத சிகரமாய் உள்ளது.

**விளக்கம்**

மகரமாயினான் - ஆணவ மலத்தை அழித்த இறைவன்; மன்மதனின் மீனக் கொடியை மாய்த்த இறைவன் என்பதுமாம்; மகரம் - மீன் கொடி. எனவே, மகரமாயினான் என்பது மீனக் கொடியை யுடைய காமனை உணர்த்தியது. நகரமாய் மறைச் சிகரமானது - நகரமாய்த் திகழ்ந்து வேதத்தின் முடிவாய் உள்ளது. (68)

## 668. காமன் அம்புகள் என் மார்பில் பாய்கின்றன?

### கட்டளைக் கலித்துறை

*தலைவி கூற்று*

இல்ஒன்று எனவென் இதயம்புக் காய்மதன் எய்கணைகள்
வல்ஒன்று பூண்முலை மார்பகம் போழ்வன
மற்றென்செய்கேன்
அல்ஒன்று கூந்தல் அணங்குஅர சோடுஓர் ஆடகப்பொன்
வில்ஒன்று கொண்டுஅவி முத்தத்தி லேநின்ற
விண்ணவனே. 69

**தெளிவுரை**

கருமை பொருந்திய கூந்தலை உடைய பெண் அரசியுடன் பொன்னால் ஆன ஒரு வில்லைக் கொண்டு காசியில் வீற்றிருக் கின்ற இறைவரே! உன் இல்லங்களில் ஒன்று எனவே கருதி என் உள்ளத்துள் புகுந்தீர்! மன்மதன் எய்யும் மலர் அம்புகள் சூதாடு கருவியைப் போன்ற அணிகள் அணிந்த கொங்கை பொருந்திய மார்பில் பாய்கின்றன. நான் என்ன செய்வேன்?

**விளக்கம்**

இல் ஒன்று எனவே - உன் இல்லங்களுள் ஒன்று என்று. மதன் - காமன். எய்கணைகள் - எய்யும் அம்புகள். பூண்முலை - அணிகள் அணிந்த கொங்கை. போழ்வன - பாய்ந்து பிளக் கின்றன. செய்கேன் - செய்வேன். அல் - கருமை; இருள். ஆடகப் பொன் - நான்கு வகைப் பொன்களுள் ஒன்று. ஆடகப் பொன் வில் - மேரு மலையான வில். மேருமலை பொன்னால் இயன்றது என்பர். நின்ற - வீற்றிருக்கின்ற. (69)

## 669. தலைவியின் பார்வை

**கைக்கிளை**

**(மருட்பா)**

**விண்அமிர்து நஞ்சாம் விடமும் அமிர்தமாம்**
**உண்அமிர்தம் நஞ்சோடு உதவலால் - தண்என்**
**கடிநகர்க் காசியுள் மேவும்**
**மடல்அவிழ் கோதை மதர்நெடுங் கண்ணே.** 70

**தெளிவுரை**

*தலைவன் கூற்று*

**கைக்கிளை**

இது 'ஒருபக்கத்து உறவு' எனப் பொருள் படும். தலைவன் தலைவியருள் ஒருவர் கொள்ளும் அன்பு.

தேவர் உண்ணும் அமிர்து நஞ்சாகும்; நஞ்சும் அமிர்தாம்' ஏனென்றால் நீர்நிலையில் மலர்களை யுடைய காவல் மிக்க காசிப் பதியும் இதழ் அவிழும் மலர் மாலை உடையவளின் களிப்புடைய கண்கள் உண்ணும் அமிர்தத்துடன் நஞ்சோடு விளங்குகிறது ஆதலால் அவை குளிர்ந்த பாற்கடலில் பிறந்தன போலும்.

**விளக்கம்**

தலைவியின் அருட்பார்வையான அமிர்தமும் மருட் பார்வையான நஞ்சும் முறையே தேவாமிர்தத்தையும் விடத்தை நஞ்சாகவும் தோன்றச் செய்கின்றன என்பதாம்.

'கண் அமிர்தம் நஞ்சோடுதவலால்' என்றது தலைவி அருட் பார்வையும் மருட்பார்வையும் உடையவள் என்பதை விளக்கிய படி.

கடல் என்றது பாற்கடல். அது முதலில் விடத்தைத் தந்து பின் அமிர்தத்தைத் தந்தது.

தலைவியின் பார்வை துன்பத்தையும் இனிதாய்ப் பார்க்கும் பார்வை இன்பத்தையும் தருவன. ஆதலால் அமிர்தமும் நஞ்சும் பாற் கடலில் பிறந்தன போலும் என்றார்.

தலைவன் தன்னை வருத்திய தலைவியின் கண்களின் இயல்பை யுரைத்தான். (70)

## 670. ஒண்பொருள் நகரமாயிற்று

**ஊர்**

வஞ்சிவிருத்தம்

**கண்ணொடு ஆவி கருத்துமாய்**
**உள்நி றைந்ததுஓர் ஒண்பொருள்**
**அண்ணு மாநகர் ஆனதால்**
**அண்ணலார் அவி முத்தமே.** 71

**தெளிவுரை**

கண்ணாகவும் உயிராகவும் மனமாகவும் உள்ளே நிறைந்த ஓர் ஒள்ளிய பொருள் பொருந்தும் மாநகரமாய் இருத்தலால் பெருமையுடைய காசி நகர் ஆயிற்று.

**விளக்கம்**

அவிமுத்தம் - காசிப்பதி. கண்ணும் உயிரும் மனமுமாய் நிறைந்த ஒரு ஒண் பொருள். இறைவன் - சேர்ந்துள்ள மாநகராயிற்று என்பது கருத்து. அண்ணல் - பெருமை. ஆர் - நிறைந்த. (71)

## 671. எல்லாரும் நின் பிள்ளைகளே!

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

முத்தாடி மடித்தலத்தோர் இளம்சேயை உலகுஈன்ற
முதல்வி யோடும்
வைத்தாடு வீர்பொதுவில் நின்று ஆடும் உமக்குஇந்த
வாரம் என்னே?
கொத்தாடு சடையொடும் ஆனந்தவனத் தேகுறுந்தாள்
நெடும்பூ தத்தோடு
ஒத்தாடு வீர் அடிகட்கு எல்லோமும் பிள்ளைகள்என்று
உணர்ந் திடீரே. 72

**தெளிவுரை**

முத்தம் இட்டு மடியில் வைத்து ஓர் இளங் குழந்தையை - முருகனை - உலகத்தை எல்லாம் ஈன்ற உமையம்மையுடன் கூடி விளையாடுவீர்! பொதுவில் நின்றாடும் உமக்கு இந்தப் பாரபட்சம் ஏன்? கொத்தான சடையுடன் ஆடும் ஆனந்த வனமான காசியில், குறுகிய கால்களையுடைய பெரிய உடலையுடைய பூதங்களுடன் ஒப்ப ஆடுவீர். உங்கட்கு நாங்கள் எல்லாரும் பிள்ளைகளே என்று உணர்வீராக!

**விளக்கம்**

முத்தாடி - முத்தம் இட்டு. மடித்தலம் - மடியில். இளஞ்சேய் - முருகப் பெருமான். உலகு ஈன்ற முதல்வி - உலகங்கள் யாவற்றையும் பெற்றெடுத்த உமையம்மையார். பொது - சபை.

உமக்கு நாங்கள் அனைவரும் பிள்ளைகள். அவ்வாறு இருக்க நீவிர் ஒரு குழந்தையை மட்டும் மடியில் வைத்து விளையாடுவதேன்? உமக்கு இந்தப் பாரபட்சம் கூடாது என்பதாம். பாரம் - பாரபட்சம். ஆனந்தவனம் - காசி. குறுந்தாள் நெடும்பூதம் - குறுகிய காலையும் பெரியவுடலையும் உடைய பூதம். (72)

## 672. பல உயிர்களும் முத்தி அடையச் செய்வேன்

**சம்பிரதாயம்**

**ஆசிரிய விருத்தம்**

உண்டகில கோடியும் உமிழ்ந்திடுவன், முகில்ஏழும்
ஒக்கப் பிழிந்துகடல்ஏ
ழுடன்வாய் மடுத்திடுவன், வடமேரு மூலத்
தொடும்பிடுங் கிச் சுழற்றி
அண்டபகி ரண்டமும் அடித்துடைப் பன்புவனம்
அவையேழும் பிலம் ஏழுமாய்
அடைவடை அடுக்கிய அடுக்கைக் குலைப்பன் இவை
அத்தனையும் வித்தையலவால்
கொண்டல் மணி வண்ணனும் முண்டகக் கண்ணனும்
குஞ்சிதச் செஞ்சரணமும்
குடிலகோ டீரமும் தேடியத லமும் அண்ட
கோளமும் துருவி ஓடப்
பண்டைமறை ஓலமிட வெளியில்நட மாடும்
பரஞ்சுடர் பொலிந்தகாசிப்
பதியில்அடை யாமல்இப் பல்உயிர்த் தொகுதியும்
பரமதம் அடைவிப்பனே. 73

## சம்பிரதம்

சம்பிரதம் என்பது இந்திர சாலம். இக்கலையில் வல்லவர் தம் பெருமையைத் தாமே எடுத்துக் கூறுவதாக உள்ளது இது. சிலேடை வகையிலேயே இவ்வுறுப்புப் பாடல் பாடப்படும்.

### தெளிவுரை

உலகங்கள் கோடிக் கணக்கானவற்றை உண்டு உமிழ்வேன். ஏழு மேகங்களையும் ஒருசேரப் பிழிந்து ஏழுகடல்களிலும் செல்லும்படி செய்வேன். வடதிசையில் உள்ள மேருமலையை வேருடன் பிடுங்கிச் சுழற்றி அண்ட பகிரண்டத்திலும் அடித்து மோதி உடைப்பேன். ஏழு உலகங்களையும் கீழ் உலகமாய் ஆக்கி அடுக்குவரிசையைக் குலைப்பேன். இவை எல்லாம் எனக்குச் சிறந்த வித்தைகள் அல்ல. மேகம் போன்ற நிறமுடைய திருமாலும் தாமரைப் பூவில் உள்ள பிரமனும் வளைந்த சிவந்த திருவடிகளும் வளைந்த சடையும் தேடிக் கீழ் உலகமும் மேல் உலகமும் ஆராய்ந்திடப் பழைய வேதம் முறையிட அம்பலத்தில் ஆடும் மேலான சுடரான விசுவநாதர் வீற்றிருக்கின்ற காசி நகரத்தில் அடையாமல் பல உயிர்க் கூட்டங்களும் முத்தியை அடையச் செய்வேன்.

### விளக்கம்

அகில கோடியும் உண்டு உமிழ்வன் எனக் கூட்ட வேண்டும். வடமேரு மூலத்துடன் பிடுங்கி - வடக்குத் திக்கில் உள்ள மேரு மலையை வேருடன் பிடுங்கி. உடைப்பேன் - அழிப்பேன். புவனம் - மேல் உலகம். பிலம் - கீழ் உலகம். அடைவு அடுக்கிய - வரிசை வரிசையாய் அடுக்கப்பட்டுள்ள. அடுக்கை - உலக வரிசையை. கொண்டல் மணிவண்ணன் - திருமால். முண்டகக் கண்ணன் - பிரமன். செஞ்சரணம் - சிவந்த அடிகள். குடில கோடீரம் - வளைந்த சடை. குடிலம் - வளைவு. கோடீரம் - சடை. அதலம் - கீழ் உலகம். அண்ட கோளம் - மேல் உலகம். வெளி - அம்பலம். பரஞ்சுடர் - மேலான ஒளியுடைய காசிநாதர். காசிப்பதியில் அடையாமல் பல் உயிர்த்தொகுதியும் பரமபதம்

அடைவிப்பேன். காசியில் சென்று கங்கையாற்றில் நீராடி வணங்காதவர்க்குப் பரமபதம் கிட்டாதாயினும் நான் அதைக் கொடுப்பேன் என்று பொய்யாய்ச் சம்பிரதம் செய்பவன் கூறுவதாய்க் கொள்க. இது வெறும் ஆடம்பரப் பேச்சு.

பரமபதம் அடைவிப்பேன் - பரம்+அபதம்+ அடைவிப்பேன்; காசியில் அடையாத வண்ணம் வேறு பொய்ந் நிலையை அடையச் செய்வேன். பரம் - அயல். அப(த்)தம் - பொய். அடைவிப்பன் - அடையச் செய்வேன். (73)

## 673. மேகங்களே! என்தலைவியின் நிலையை இறைவர்க்குக் கூறுவீர்!

### அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

*தோழி மேகத்தைத் தூது விடுதல்*

**விரைகுழைக்கும் மழைமுகில் காள், விண்டலர்தண் துழாய்ப்படலை**
**விடலை என்ன**
**அரைகுழைக்கும் பொழில்காசி அணிநகருக்குஏழுதிரேல்**
**அறல்மென் கூந்தல்**
**வரைகுழைக்கு முலைகுழப்பக் குழைதிரள்தோள் அழகுமுடி**
**வணங்கி என்னக்**
**கரைகுழைக்கும் மலைகுழைத்த கண்நுதற்குஎன் பேதைதிறம்**
**கழறு வீரே. 74**

### தெளிவுரை

விரைதலைச் செய்யும் மழையை அளிக்கும் மேகங்களே! மலரும் மலரையுடைய குளிர்ந்த துளசி மாலையைச் சூடிய திருமாலைப் போல் அரை என்ற பெயரையுடைய மரங்கள் வளர்ந்திருக்கும் சோலை சூழ்ந்த காசி என்ற அழகிய நகரத்துக்குச் செல்வீரானால், கருமணலைப் போன்ற மென்மையான கூந்தலை யுடைய உமையம்மையார் மலையைத் தோற்கச் செய்யும்

கொங்கையைக் குழைத்த திரண்ட தோள் அழகுக்கு முடிவணங்கியதைப் போன்று எல்லையைப் போக்கிய - அளவற்று உயர்ந்து வளர்ந்த - மேருமலையை வளைத்த நெற்றிக் கண்ணை யுடைய சிவபெருமானுக்கு என் தலைவியின் நிலையை எடுத்துக் கூறுவீராக.

**விளக்கம்**

விரைகுழைக்கும் - விரைவையுடைய; விதைகளைக் குழைத்துப் பதப்படுத்தி முளைக்கச் செய்கின்ற என்றும் கொள்ளலாம். மழை முகில்காள் - மழையைப் பெய்யும் மேகங்களே. தண்டுழாய்ப் படலை - குளிர்ந்த துளசி மாலை. விடலை - திருமால். அரை குழைக்கும் - அரை என்ற மரம் தளிர்க்கும். ஏகுதிரேல் - செல்வீர் என்றால். அறல் மென் கூந்தல் - கருமணலைப் போன்ற மெல்லிய கூந்தலையுடைய உமை யம்மையார். வரை குழைக்கும் முலை - மலையைத் தோற்கச் செய்யும் கொங்கை. அழகு முடிவணங்கி - அழகுக்கு முடி வணங்கி என விரித்தல் வேண்டும்.

உமையின் கொங்கைகள் தழுவக் குழைந்த தனது தோளின் அழகுக்குத் தோற்று முடிவணங்கியதைப் போன்று மேருமலையை வணங்கச் செய்த இறைவர் என்க.

கரை - எல்லை. என் பேதை - என் தலைவி. (74)

## 674. காமன் வில் வளைத்தான்! அப்போதே தலைவி சோர்ந்தாள்!

### கட்டளைக் கலித்துறை

கழைக்கரும் பைக்குழைத் தான்மத வேள்அக்
கணத்தில்அம்பொன்
குழைக்கரும் பும்குழைத் திட்டதுஅந் தோகுளிர் தூங்குதுளி
மழைக்கரும் பும்பொழில் காசிப்பிரான்மலை
யாள்முலைபோழ்
முழைக்கரும் புற்றர வாடநின்று ஆடிய முக்கணனே. 75

**தெளிவுரை**

குளிர்ச்சியுடைய மழைத்துளி பெய்யும் பொழிலையுடைய காசியில் வீற்றிருக்கின்ற இறைவரே! இமவான் மகளான உமை யம்மை கொங்கை போழ்ந்த முழையான கரிய புற்றில் அரவு நின்று ஆட அம்பலத்தில் ஆடும் முக்கண்ணனே!

தன்வில்லான இரசதாளிக் கரும்பை மதன் வளைத்தான். அப்போதே அழகிய பொன் காதணியையுடைய இவள் சோர்ந்து விட்டாள். அந்தோ! அருள் செய்க!

**விளக்கம்**

கழைக்கரும்பை - இரசதாளிக் கரும்பை. மதவேள் குழைத்தான் - காமன் வளைத்தான். அக்கணத்தில் - அப்போதே. பொற்குழை கரும்பு - பொன் காதணியை அணிந்த கரும்பு போன்ற தலைவி. குழைந்திட்டது - குழைந்தாள். மழைக்கு அரும்பும் - மழையால் தழைக்கும். பிரானே - பெருமானே; விளி. மலையாள் முலை போழ் முழை கரும்புற்று அரவாட - உமை யம்மையார் தழுவியதால் எம்பிரான் மார்பில் வடுஉண்டாயது. அதைப் பாம்பு புற்று என எண்ணிச் சென்றது. முக்கணன் - மூன்று கண்களையுடைய சிவன். (75)

## 675. இறைவர் செய்த கொடுமை

கண்அஞ் சனத்தைக் கரைத் தோடும் நீர்கடல்
செய்யநின்றாள்
உள்நஞ்சு அனத்துக்கும் அஞ்சவைத்தார்
உம்பர்ஓட்டு எடுப்பப்
பண்நஞ்ச நச்சுஅமிர் தாக்கொண்ட காசிப் பரமர் பச்சைப்
பெண் அஞ்ச நச்சுஅரவு ஆர்த்துநின் றாடும்அப் பிஞ்ஞகரே
76

**தெளிவுரை**

தேவர்கள் அச்சம் கொண்டு ஓடும்படி பண்ணிய நஞ்சை, விரும்பும் அமிர்தமாகக் கொண்ட காசிப் பதியில் உள்ள பரமரும்

இளம்பெண் அஞ்சுமாறு பாம்பை அணியாகப் பூண்டு நிலையாக நின்று ஆடும் இயல்புடையவருமான சிவபெருமான் கண்ணில் பூசப்பட்ட மையைக் கரைத்துக் கொண்டு ஓடும் கண்ணீர்க் கடலில் போய்க் கலக்கும்படியாய் நின்றவள் மனம் மெலிந்து சோற்றுக்கும் அஞ்சும்படி செய்து விட்டார்.

**விளக்கம்**

கண் அஞ்சனத்தை - கண்ணில் பூசப்பட்டமையை. கரைத்தோடும் நீர் - அழித்துக்கொண்டு ஓடும் கண்ணீர். கடல் செய்ய நின்றாள் - கடலில் போய்க் கலக்குமாறு விளங்கினாள். உண்ணஞ் சனத்துக்கு - உள்+நஞ்சு+அனத்துக்கு; உள்ளம் நைந்து (வருந்தி) உணவு உண்பதற்கும். அஞ்ச வைத்தார் - அஞ்சும்படி செய்தார். உம்பர் - தேவர். ஓட்டு எடுப்பப் பண் - அஞ்சி ஓடப்பண்ணும். நஞ்சம் நச்சு - நஞ்சினை விரும்பும். அமிர்தாக் கொண்ட - அமிர்தமாகக் கொண்ட. பச்சைப்பெண் - பசிய நிறம் கொண்ட பெண்; இளம் பெண்; உமையம்மை. நச்சரவு ஆர்த்து - நஞ்சுடைய பாம்பைக் கட்டி. பிஞ்ஞகர் - சிவபெருமான். பெண்ணஞ்ச நச்சரவார்த்து-பெண்+அஞ்ச+நச்சு+அரவு+ஆர்த்து.

'கண்ணீர்க்கடல் போல் பெருக நின்றாளைப் பிஞ்ஞகர் அஞ்ச வைத்தார்' என்க.

தலைவிக்கு இறைவரிடம் உண்டான காதலின் இயல்பை உரைத்தபடி. (76)

## 676. இறைவர்க்கு உரைப்பீர்!

### கட்டளைக் கலிப்பா

*தலைவி கூற்று*

கருகு கங்குல் கரும்ப கடு ஊர்ந்து வெண்
கலைம திக்கொலைக் கூற்றம் கவர்ந்துஉயிர்
பருகு தற்குக் கரத்தால் விரிநிலாப்
பாசம் வீசி வளைத்ததுஇங்கு என்செய்வேன்?
முருகு நாறு குழற்பொலங் கொம்பனீர்,
முத்தர் வாழ்அவி முத்தமும் நெக்குடைந்து

உருகு பத்தர்தம் சித்தமும் கோயிலா
உடைய நாதற்கு உரைத்திடு வீர்களே. 77

**தெளிவுரை**

இருள் என்னும் எருமையை ஊர்ந்து, மதி என்ற இயமன், நிலவு என்ற பாசத்தை வீசினான். நான் இப்போது என்ன செய்வேன்? மணம் கமழும் மலர் சூடிய கூந்தலை உடைய பொன் கொம்பைப் போன்றவரே! முத்தி பெற்றவர் வாழும் காசியில் உள்ளவரும் மனம் உருகி உடைந்து அடியார்தம் உள்ளத்தைத் தன் கோயிலாகக் கொண்டவருமான இறைவர்க்கு உரைப்பீர்!

**விளக்கம்**

கருகு கங்குல் - கரிய இருள். கரும்பகடு - கருமையான எருது. வெண் கலைமதிக் கொலைக்கூற்றம் - வெண்மையான கலைகளையுடைய சந்திரன் என்ற இயமன். விரிநிலாப்பாசம் - விரியும் நிலவான பாசக்கயிறு. முருகு - நறுமணம்; தேனுமாம். பொலங் கொம்பு அனீர் - பொன் கொம்பைப் போன்றவரே! அனீர் - அன்னீர் என்பதன் தொகுத்தல் விகாரம். முத்தர் - முத்தி பெற்றவர். பத்தர் சித்தம் - அடியாரின் உள்ளம். 'நெக்கு உடைந்து உருகு' என்பது பத்தருக்கு அடைமொழி. நெக்கு - நெகிழ்ந்து. கொம்பனீர் நாதற்கு உரைத்திடுவீர் என்க. (77)

## 677. காசியின் இயல்பு

### ஊர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

உரைத்த நான்மறைச் சிரத்தும்ஐந்து அவித்தவர்
உளத்தும்வண் டொரு கோடி
நிரைத்த பூங்குழல் நிரைவளை அவளொடு
நின்றவர் உறைகோயில்
குரைத்த தெண்டிரைக் கங்கை மங்கையர் துணைக்
கொங்கைமான் மதச் சேற்றைக்

கரைத்தி ருங்கடல் கருங்கட லாச்செயும்
காசி மா நகர்தானே. 78

### தெளிவுரை

உரைக்கும் நான்கு வேதங்களின் உச்சியிலும் ஐம் புலன்களையும் அடக்கியவரின் உள்ளத்திலும் ஒரு கோடி வண்டுகள் மொய்க்கும் அழகிய கூந்தலையுடைய வரிசையாய் வளையலை அணிந்த உமையம்மையுடனும் நின்றவர் வீற்றிருக் கின்ற கோயில், ஒலிக்கும் தெளிவான அலையையுடைய கங்கை மங்கையரின் இரு கொங்கைகளில் பூசப்பெற்ற மான்மதச் சேற்றைக் கரைத்துக் கொண்டு ஓடிக் கடலைக் கரியநிறம் உடையதாகச் செய்கின்ற காசி மாநகரம் ஆகும்.

### விளக்கம்

உரைத்த - புகழ்ந்து பேசப்படும். நான்மறைசிரத்தும் - நான்கு வேதங்களின் உச்சியிலும். ஐந்து - ஐம்பொறிகள். அவித்தவர் - அடக்கியவர். நிரைத்த - மொய்க்கும். பூங்குழல் - பூவையுடைய கூந்தல். நிரைவளை - வரிசையான வளையல். குரைத்த - ஒலியையுடைய. தெண்டிரை - தெளிவான அலை. மான்மதச் சேற்றை - கத்தூரிக் குழம்பை. இருங்கடல் - பெரிய கடல். கருங்கடலா - கரிய கடலாக. செயும் - செய்யும். (78)

## 678. அகிலேசரே! அருள்க!

### கட்டளைக் கலிப்பா

மானம் ஒன்று நிறை ஒன்று நாண் ஒன்று
மதியம் ஒன்று குயில்ஒன்று தீங்குழல்
கானம் ஒன்று கவர்ந்துஉணும் மாமதன்
கணைக்கு இலக்குஎன் உயிர்ஒன்று மேகொலாம்
வானம் ஒன்று வடிவண்ட கோளமே
மவுலி பாதலம் ஏழ்தாள் மலைஎட்டும்
நானம் ஒன்று புயமுச் சுடருமே
நயன மாப்பொலி யும்அகி லேசனே. 79

**தெளிவுரை**

வானமே வடிவு; அண்ட கோளமே முடி; ஏழு பாதலங்களும் திருவடி; எட்டு மலைகளும் கத்தூரி பூசப் பெற்ற தோள்கள் ஆகும். சூரியன் சந்திரன் அக்கினி என்னும் மூன்றும் கண்கள் என விளங்கும் அகிலேசரே!

என் மானம் என்ற ஒன்றை மதியம் ஒன்றும், நிறை என்ற ஒன்றை ஒருகுயிலும், நாணம் என்ற ஒன்றை வேய்ங்குழல் ஓசை ஒன்றும் கவர்ந்து உண்ணும். இவை ஒவ்வொன்றையும் ஒவ்வொன்று மட்டுமே உண்ணும். ஆயின் காமனின் அம்புகள் ஐந்துக்கும் என் உயிர் ஒன்று மட்டுமே இலக்காகும். நான் என்செய்வேன்?

**விளக்கம்**

நாண் - நாணம். தீங்குழல் ஓசை கானம் - இனிய குழலின் பாட்டு ஓசை. உணும் - 'உண்ணும்' என்பது தொக்கது. இறைவர்க்கு வானம் உடல் வடிவு. அண்ட கோளம் முடி. ஏழ் பாதலம் திருவடிகள். எட்டு மலைகளும் தோள்கள். நானம் - கத்தூரி. முச்சுடர் - சூரியன் சந்திரன் அக்கினி. நயனமா - 'நயனமாக' என்பதன் ஈறு தொக்கது. நயனம் - கண் (79)

## 679. விடைப்பாகா! அருள்வாய்

### நேரிசை வெண்பா

அகிலாண்ட மாயகண்ட மானஅகி லேசா
முகிலாண்ட சோலைஅவி முத்தா-நகில் ஆண்ட
சின்னவிடைப் பாகா திருநயனம் செங்கமலம்
அன்னவிடைப் பாகா அருள். 80

**தெளிவுரை**

அகில உலகங்களாய்ப் பரந்து விரிந்துள்ள அகிலேசரே! மேகங்கள் வந்து தங்கும் சோலைகளையுடைய காசிநாதரே!

கொங்கையையும் சிறிய இடையையுமுடைய உமாதேவியாரை ஒருபக்கத்தில் கொண்ட இறைவரே! கண்கள் செந்தாமரையைப் போன்ற திருமாலைக் காளை யூர்தியாக உடையவரே! அருள் செய்வீர்!

**விளக்கம்**

அகில அண்டமாய் - எல்லா அண்டங்களுமாய். அகண்டம் - எல்லையிடப் படாதது. முகில் ஆண்ட - முகில்கள் வந்து தங்கும். நகில் ஆண்ட - கொங்கையை யுடைய; கொங்கையால் உடுத்தப் படும். சின்ன இடைப்பாகர் - சிறிய இடையையுடைய உமை யம்மையாரை ஒரு பக்கத்தில் கொண்டவரே. அவிமுத்தா - காசி நாதரே. திருநயனம் - கண்கள். செங்கமலம் அன்ன - செந் தாமரையைப் போன்ற. விடை - காளை ஊர்தி. (80)

## 680. காமன் போரைத் தொடங்கின் இவள் என்ன துன்பம் அடைவாள்?

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

*தோழி கூற்று*

அருகுமதன் குழைத்தகழை தெறித்தமுத்தேறு
உண்டெழுவண்டு
அரற்றும் ஓசை
பெருகுசிறு நாண்ஒலிஎன்று அறிவழிந்து பேதுறும்இப்
பேதைக்கு என்னாம்?
உருகுபசும் பொன்அசும்பத் தசும்புவிசும்பு இரவிஎன
உடைந்து கஞ்சம்
முருகுஉயிர்க்கும் பொலங்குடுமி விமானத்தில்
பொலிந்தஅவி
முத்த னாரே. 81

### தெளிவுரை

உருகி வெளிப்படும் பசும்பொன் துளிக்கின்ற விமான கலசத்தை அதன் ஒளி மிகுதியால் கதிரவன் என்று தாமரை மலர்ந்து நறுமணத்தைப் பரப்பும் பொன் உச்சியை உடைய விமானத்தில் விளங்கும் காசியம்பதியாரே!

பக்கத்தில் மன்மதன் தன் கரும்பு வில்லை வளைக்க அதனின்று தெறித்த முத்தால் அடிக்கப்பட்டு வண்டுகள் ஒலிக்க, பெருகும் அவ்வொலியை வில்லின் நாணினின்று எழுகின்ற ஒலியாகும் என்று எண்ணி அஞ்சி அறிவு அழிந்து வருந்துவாள் இவள். இனி மன்மதன் போரைச் செய்யத் தொடங்கின் இவளது நிலை என்னவாகும்?

### விளக்கம்

மதன் - மன்மதன். குழைத்த - வளைத்த. கழை தெறித்த - கரும்பு வில்லினின்று வெளிப்பட்டுத் தெறித்த. முத்து ஏறுண்டு - முத்தால் அடிக்கப்பட்டு. வண்டு அரற்றும் ஓசை - வண்டுகள் எழுப்பும் ஒலி. கரும்பில் முத்துப் பிறக்கும் என்பர். எனவே, மன்மதன் தன் கரும்பு வில்லை வளைக்க அதினின்று புறப்பட்டுத் தெறித்த முத்தால் அடிக்கப்பட்ட வண்டு வருந்தி ஓசையை எழுப்பியது. அந்த ஓசையை மன்மதன் போர் தொடுக்க வில்லினின்று உண்டாக்கிய ஓசை என்று எண்ணித் தலைவி வருந்தினாள். பசும்பொன் அசும்பு தசும்பு - பொன் துளிக்கின்ற விமான கலசத்தை. தசும்பு - கலசம். அதை ஒளி மிகுதியால் கதிரவன் என்று எண்ணித் தாமரை மலர்ந்தது. இரவி - கதிரவன். உடைந்து - மலர்ந்து. கஞ்சம் - தாமரை. முருகு - தேன். பொலங்குடுமி - பொன் உச்சி. பொலிந்த - விளங்கிய; வீற்றிருக்கின்ற.

இப்பாடல் திரிபதிசய அணி. (81)

## 681. அன்பு செலுத்துபவர் பெறுவன முடைத்தலை, எலும்பு, சாம்பல்!

### கட்டளைக் கலித்துறை

முத்திக்கு வேட்டவர் மோட்டுடல் பார முடைத்தலையோடு
அத்திக்கும் சாம்பற்கும் ஓம்பின ரால் இவை அன்றி யப்பால்
சித்திப் பதுமற்று இலைபோலும் காசிச் சிவபெருமான்
பத்திக்குக் கேவல மேபல மாகப் பலித்ததுவே. (82)

**தெளிவுரை**

முத்தி அடைய விரும்பியவர் பெரிய உடல் பாரத்தைப் புலால் நாற்றம் உடைய தலையோட்டுக்கும் எலும்புக்கும் சாம்பலுக்கும் பாதுகாத்தனர். அவையே அல்லாமல் அப்பால் அவர்க்குக் கிட்டுவது வேறு இல்லை போலும்! காசியில் வீற்றிருக்கும் சிவபெருமானிடம் செலுத்திய அன்புக்குக் கேவல மானதே பயனாக விளைந்தது.

**விளக்கம்**

முத்திக்கு - முத்தியை. வேட்டவர் - விரும்பியவர். மோட்டு உடல் பாரம் - பெரிய உடம்பின் சுமை. முடைத்தலையோடு - புலால் நாற்றம் வீசும் தலை ஓடு. அத்தி - எலும்பு. ஓம்பினரால் - பாதுகாத்தனர். காசிப்பதியில் இறக்க வேண்டும் என எண்ணி அங்கே போய் அடையும் வரை தம் உடலைப் பாதுகாப்பார்.

இறைவனிடம் சாரூபப் பதவியைப் பெற்றவர் முடைத்தலை, எலும்பு, சாம்பல் ஆகியவற்றைப் பெறுவர். ஆதலால் அதற்காக உடலை ஓம்பினர் என இழிவுத் தொனி தொனிக்க உரைத்தார். கேவலம் - முத்தி; இழிந்த தன்மை. பலமாக - பயனாக. அப்பால் - பின்பு. சித்திப்பது - கை கூடுவது. பழிப்பது போல் புகழ்ந்து கூறப்படுகிறது. (82)

## 682. என் துன்பத்தைப் போக்கியருள வேண்டும்!

### கலிநிலைத்துறை

*தலைவி கூற்று*

பல்வேறு உருவாய் நின்றருள் காசிப் பதியுள்ளீர்
வில்வேறு இல்லை பூஅலது அம்பும் வேறில்லை
அல்வேறு அல்லாப் பல்குழ லாரை அலைக்கின்றான்
சொல்வேறு என்னே பாரும் அனங்கன் தொழில்தானே 83

**தெளிவுரை**

பலவகையான வடிவுகளாய் நிற்கின்ற காசிப் பதி இறைவரே! காமனுக்குப் பூவே அல்லாது வேறு வில்இல்லை; அம்பும் அப்பூவே ஆகும். இருள் அன்றி வேறு தன்மையில்லாத பல கூந்தலையுடைய தலைவியை வருத்துகின்றான். நான் கூறக் கூடிய சொல் வேறு என்ன இருக்கின்றது! நீவிரே பாரும் மன்மதன் செய்யும் செயலை! தேவரீர் இத்துன்பத்தை நீக்கிட வேண்டும்!

**விளக்கம்**

இறைவன் நவந்தருபேதம், இருபத்தைந்து மூர்த்தம், அறுபத்து நான்கு வடிவம் ஆகியவற்றை உடையவன்; ஆதலால் 'பல்வேறு உருவாய்' என்றார்.

மன்மதனுக்குக் கரும்பு வில்லே அல்லாமல் பூவில்லும் உண்டு. 'வில்வேறு இல்லை பூவலது' என்பதை 'பூவலது வில்வேறு இல்லை' என்று பிரித்துக் கூட்டுக. அல் - இருள். கூந்தல் பலவகையாகப் பின்னி முடிக்கப்படுவதால் 'பல் குழலாரை' என்றார். குழல் - கூந்தல். அலைக்கின்றான் - வருத்துகின்றான். அனங்கன் - மன்மதன்; அங்கம் இல்லாதவன் என்பது பொருள்; தனக்கு என ஓர் உருவமும் இல்லாதவன். எனவே இங்ஙனம் குறையுடையவனால் நான் துன்பம் அடைகின்றேன் என்றாள். இத்துன்பத்தைப் போக்க வேண்டும் என்பது அவளது குறிப்பு. (83)

## 683. தேன் என அடைந்தவர் பெறுவது நஞ்சு!

### கட்டளைக் கலித்துறை

தான்என் றவர்முன் ஒளித்துஓடித் தன்னை இழந்தவர்முன்
யான்என்று சென்றிடும் காசிப் பிரான்உடம்பு
என்பது என்போடு
ஊன்என்று விட்டுஒழிந் தார்களிப் பார்உவட் டாதஇன்பத்
தேன்என்று அடைந்தவர்க்கு உண்ணக் கிடைப்பது
தீவிடமே. 84

**தெளிவுரை**

காசிப்பிரான் தான் என்ற அகங்காரத்தை உடையவர் முன் நில்லாது ஓடி ஒளிந்து கொள்வார். தன்னை இழந்தவர் முன் நான் உள்ளேன் என்று செல்வர். அப்பெருமானது திருமேனி எலும்பும் ஊனும் என்று எண்ணியவர் தம் அறியாமையால் களிப்பர். அப் பெருமானைத் தேன் என்று எண்ணி அடைந்தவர் உண்ணக் கிடைப்பது கொடிய நஞ்சே ஆகும்.

**விளக்கம்**

தான் என்றவர் முன் - தான் என்னும் அகங்காரம் உடையவர் முன். ஒளித்து ஓடி - காணாமல் போய்; தோன்றாமல் அகன்று. தன்னை இழந்தவர் - தான் என்ற அகங்காரத்தை விட்டவர். பக்தி செலுத்துபவர். யான் என்று சென்றிடும் - தானே வலியச் செல்லும். இறைவனைத் தேன் என்று எண்ணி அடைந்தவர் சாருபத்தைப் பெற்றுக் கொடிய நஞ்சை உண்பர். இறைவனை நீங்கியவர் மகிழ்வர்; அடைந்தவர் நஞ்சு உண்பர் என்பது பழிப்பதைப் போல் புகழ்வதாம். (84)

## 684. பவள வாய் அமிர்து உண்டால் பழுது உண்டோ?

கட்டளைக் கலிப்பா

*தோழிகூற்று*

தீவி டம்கொடுத் தேயமு துண்டஅத்
தேவ ருக்குஒளித்துத் திரி கின்றநீர்
பாவி டும்மலர்ப் பஞ்சணை மேல்இவள்
பவள வாய்அமிர்து உண்டால் பழுதுஉண்டோ?
நாவி டம்கொண்டு ஒருவன் முகங்கள்ஓர்
நான்கினும்நடிக் கும்துரகத்தைவிட்டு
ஆவி டம்கொண்டு அருட்காசி வீதிக்கே
ஆடல் செய்திடும் ஆனந்தக் கூத்தரே. 85

**தெளிவுரை**

நாவை வாழ் இடமாகக் கொண்ட பிரமன் ஒருவன் தம் முகங்கள் நான்கிலும் நடிக்கும் வேதக் குதிரையை விட்டுக் காளை வாகனத்தையுடைய அருள்பொதிந்த காசி நகரத்தின் தெருவில் ஆனந்தக் கூத்திடும் கூத்தரே! கொடிய விடத்தை உமக்குக் கொடுத்துத் தாம் அமுதத்தையுண்ட அத்தேவருக்குப் புலப் படாமல் ஒளித்துத் திரியும் நீவிர், பரப்பப்படும் பூம்பஞ்சணை மேல் இவளுடன் படுத்து இவளது வாய் அமிர்தத்தை நீவிர் உண்டால் குற்றம் ஏதேனும் உண்டாகுமோ!

**விளக்கம்**

தீவிடம் - கொடிய விடம். அமுது உண்ட - அமுதத்தைத் தாங்கள் உண்ட. பாவிடும் - பரப்பிடும். பவள வாய் அமிர்து - பவளம் போன்ற வாய் நீரை. நாவிடங்கொண்ட - கற்றவர் நாவை இடமாகக் கொண்ட. ஒருவன் - பிரமன். துரகத்தை - நான்கு வேதங்களாகிய குதிரையை. ஆ இடங்கொண்டருள் - காளையை ஊர்தியாய்க் கொண்ட. ஆடல் செய்திடும் - ஆடுகின்ற. ஆனந்தக்

கூத்தர் - காசிநாதர். நீவிர் அமுதத்தைப் பெறாத குறையைப் போக்கிக் கொள்வீர் என்பவள் போல் தலைவிக்கு இறைவன் அருளவேண்டும் என வேண்டிக் கொண்டாள். (85)

## 685. அருட்கடலில் திளைத் தாடுவீர்!

### நேரிசை வெண்பா

ஆனந்த வல்லியுடன் ஆனந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தாடு அருட்கடலை - ஆனந்தம்
கொள்ளத் திளைத்தாடு கூடாதேல் இப்பிறவி
வெள்ளத் திளைத்தாடு வீர். 86

**தெளிவுரை**

ஆனந்த வல்லியான விசாலாட்சியம்மையாருடன் காசியில் ஆனந்தக் கூத்தாடுகின்ற அருள் கடலில் ஆனந்தம் அடையக் குடைந்தாடுவீர். அங்ஙனம் ஆடாது போனால் பிறவி என்ற கடல் வெள்ளத்தில் விழுந்து துன்பம் அடைவீர்!

**விளக்கம்**

ஆனந்தவல்லி - விசாலாட்சியம்மையார். ஆனந்தக் கானகம் - காசி. அருட்கடல் - இறைவர். அருட்கடலைத் திளைத்து ஆடும்' கூடாதேல் - அது கைகூடாது போனால். பிறவி வெள்ளத்து - பிறவிக்கடல் ஆகிய வெள்ளத்தில். (86)

## 686. உமக்கு ஈரம் என்பது இல்லையே!

### கலிவிருத்தம்

வீரம் என்பது வில்மதற் கேகுணம்
கோரம் என்பது கொண்டிருந்து ஆவதுஎன்
ஈரம் என்பது இலைஇவர்க்கு என்றதால்
வாரம் என்பதி வாழ்அவி முத்தரே 87

### தெளிவுரை

வாழ்பதியைக் காசியாய்க் கொண்டவரே! வீரம் என்பது கரும்பு வில்லையுடைய மன்மதனுக்கே உரிய குணம் (அ) கோரம் என்பது உம் பெயர். இப்பெயரை நீவிர் கொண்டிருப்பதால் என்ன பயன்? உமக்கு இரக்க குணம் என்பது இல்லையே! உமக்கு உரியதாய் உள்ள குணம்தான் யாது?

### விளக்கம்

கோரம் - அகோரம் என்ற முகம். இறைவனின் ஐந்து முகங்களுள் ஒன்று. ஈரம் - அன்பு; இரக்க குணம். வாரம் என் - உமக்கு உரியதாய் உள்ள குணம் யாது! (87)

## 687. பாவைக்கு ஒரு திக்கில்லை!

அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

முத்து நிரைத்த குறுநகையீர்!
முளரிக் கணையான் கணைகள் திகைப்
பத்து நிரைத்தான்; இனித்தொடுக்கின்
பாவைக்கு ஒருதிக் கிலைபோலும்!
ஒத்து நிரைத்த உடுநிரையோடு
ஒன்றோ பலவோ என வரும்பூங்
கொத்து நிரைத்த பொழில்காசிக்
குழற்கு ஒருவர் கூறீரே. 88

### தெளிவுரை

முத்துப் போன்ற வரிசையான பற்களை யுடையவரே! தாமரையை அம்பாக உடைய காமன் தன் அம்புகளைப் பத்துத் திசைகளிலும் எய்து நிரைத்துள்ளான். இப்பெண்ணுக்கு ஒரு ஆதரவும் இல்லை. ஒன்றாக வரிசையாய் உள்ள விண்மீன் கூட்டத்துடன் ஒன்றோ பலவோ என வருகின்ற பூக்கொத்துகள் வேறொரு விண் மீன் கூட்டம் என நிறைந்துள்ள சோலை சூழ்ந்த

இறைவர்க்கு, ஒருவர் போய் (இவள் நிலைமையை) எடுத்துக் கூறுவீர்.

**விளக்கம்**

முத்து நிரைத்த - முத்தைப் போல் வரிசையாய் அமைக்கப் பட்டுள்ள. குறுநகையீர் - புன்னகை உடையவரே. முளரிக் கணையான் - தாமரை அம்புகளை உடைய மன்மதன். திகைப்பத்து - பத்துத்திசை. நிரைத்தான் - அம்பு எய்தியுள்ளான். பாவைக்கு - இத்தலைவிக்கு - ஒரு திக்கு இலை - ஒருவழி - ஆதரவு - இல்லை; எல்லா இடங்களிலும் அவனது கொடுமை நிறைந்துள்ளதால் இவளுக்கு ஒரு திக்கு இல்லை என்றார். இனித் தொடுக்கின் - இனிமேல் அந்த மன்மதன் அம்பை எய்தால். நிரைத்த - வரிசைப்படுத்திய. உடுநிரை - விண்மீன் வரிசை. ஒன்றோ பலவோ என வரும் - விண்மீன் கூட்டத்துடன் பூக்களாகிய விண் மீன் கூட்டம் ஒன்றோ பலவோ என்னும்படி மலரும். குழகன் - இளையவன்; அழகன். (88)

## 688. உம்மைப் போல் யாமும் அடிபடுவோம்!

### கட்டளைக் கலித்துறை

கூற்றுஅடிக்கு அஞ்சி முறையோ எனக்குல நான்மறையும்
போற்றடிக் கஞ்சம் புகல் அடைந் தேமுனைப்
போல வைத்தால்
சேற்றுஅடிக் கஞ்ச வயல்காசி நாத செருப்படிக்கும்
மாற்று அடிக்கும்தொண்டர் வில்அடிக்கும்புகல்
மற்றில்லையே 89

**தெளிவுரை**

சேற்றில் தாமரை மலர் மலர்ந்துள்ள வயலை உடைய காசிநாதரே! இயமன் பிரம்பினால் அடிக்கும் அடிக்கு அஞ்சி முறையோ என்றுகூறி, நான்கு வேதங்களும் துதிக்கின்ற திருவடியாகிய தாமரையை அடைக்கலமாய் அடைந்தோம்.

உன்னைப் போல் எம்மைச் சாரூபம் பெறும்படி வைத்தால், நீவிர் பட்ட செருப்பு அடிக்கும் பிரம்பு அடிக்கும் அருச்சுனனின் வில்லடிக்கும் நாங்கள் உட்பட வேண்டுமே அல்லாது வேறு வழியில்லை!

**விளக்கம்**

இது பழிப்பதைப் போல் புகழ்வது ஆகும்.

‘இயமனின் பிரம்படிக்கு அஞ்சி உம்மை அடைக்கலமாய் அடைந்தோம். நீவிர் உம்மைப் போல் எமக்கும் சாரூபம் தரின், நீவிர் பட்ட செருப்படி பிரம்படி வில்லடி ஆகியவற்றை நாங்களும் பெற வேண்டும், வேறு வழி இல்லை’ என்று இகழ்வது போல் புகழ்ந்துரைத்தார்.

கூற்றடி - இயமன் பிரம்பால் அடிக்கும் அடி. அடிக்கஞ்சம் - அடி+கஞ்சம்; திருவடியான தாமரை. உனைப் போல வைத்தால் - உம்மைப் போல் சாரூபத்தை நாங்கள் பெறுமாறு செய்தால். சேற்று அடிக்கஞ்ச வயல் - சேற்றின் அடியில் தோன்றும் தாமரையை உடைய வயல். செருப்படி - கண்ணப்ப நாயனார் தன் செருப்பணிந்த காலினை அடையாளத்துக்காகக் காளத்தி நாதரின் கண்ணில் வைத்தது செருப்படி எனப்பட்டது.

மாற்றடி - மாறு - பிரம்பு. பாண்டியன் பிரம்பால் அடித்த அடி. சிவபெருமான் வந்தி என்ற கிழவியின் பங்கை அடைக்க வைகை ஆற்றங் கரைக்கு வந்தவர் அங்கு அதைச் செய்யாது விளையாடியபடி இருந்தார். அதைக் கண்ட பாண்டியன் தன் கைப்பிரம்பால் அவரை அடித்தான். இதுவே ‘மாற்றடி’ என்ற ‘பிரம்படி’.

வில்லடி : அருச்சுனன் ஒரு பன்றியின் மீது அம்பெய்தான். அதே சமயம் வேடனாக வந்த சிவபெருமானும் அதன் மீது அம்பெய்தார். இருவருக்கும் தகராறு மூண்டது. அப்போது சினம் கொண்ட அருச்சுனன் வேடனாகிய இறைவனை வில்லால் அடித்தான்.

புகல் மற்றில்லை - அடைக்கலம். வேறு இல்லை; வேறு வழி.
(89)

## 689. இறைவரின் இயல்பு!

கட்டளைக் கலிப்பா

இல்லை என்பது இலைஓர் மருங்கிலே
எவ்வ றங்களும் உண்டுஓர் மருங்கிலே
கொல்லு கின்றது எழுதரும் கூற்றமே
கூறும் மாற்றம் எழுதரும் கூற்றமே
வில்லும் ஏற்றிடும் நாணும்பொன் ஆகமே
விடுக ணைக்குண்டு நாணும்பொன் ஆகமே
மல்லல் மார்பின் மணிமுத்தம் என்பதே
வாசம் ஐயர்க்கு அவிமுத்தம் என்பதே. 90

**தெளிவுரை**

ஒப்பில்லாத வலப்பக்கத்தில் இடை இல்லை என்பது இல்லை. இடப்பாகமாகிய ஒரு பக்கத்தில் எல்லா அறங்களும் உண்டு. எழுந்து வரும் இயமனே கொல்லப்படுவது. இறைவர் திருவாய் மலர்ந்தருளும் சொல், எழுதுதற்கு அரிய வேதமே ஆகும். வில்லாக உள்ளதும் அதில் வைத்து எய்யப்படும் கயிறும் பொன்னாகமே ஆகும். விடும் அம்பாகிய திருமாலுக்கு நாணம் கொள்கின்ற திருமகள் உள்ளாள். வளப்பம் உடைய மார்பில் மணியாகவும் முத்தாகவும் இருப்பது எலும்பே! இறைவர்க்கு இருப்பிடம் காசியே ஆகும்.

**விளக்கம்**

வலப்பாகத்துப்பகுதி சிவபெருமானுடையது. அங்கு இடை உண்டு. ஆதலால் இல்லை என்று கூறப்படுவது இல்லை என வுரைத்தார்.

இடப்பாகத்தின் பகுதி உமையம்மையாருடையது. அவ் வம்மை முப்பத்திரண்டு அறங்களை வளர்த்தவர். ஆதலால் அப் பகுதியில் எவ்வறங்களும் உண்டு என்றார்.

எழுதருங் கூற்றம் - புறப்பட்டு வரும் அரிய இயமன். எழுதரும்+கூற்றம்; எழுதரும் - எழும். கொல்லுகின்றது - கொல்லும் தன்மை உடையது. மாற்றம் - சொல். இறைவரால் அருளப்பட்டது வேதம். ஆதலால் கூறும் மாற்றம் 'எழுதுதற்கு அரிய சொல்' என்றார். எழுதரும் கூற்றம் - எழுது+அருமை+ கூற்றம். வில்லும் நாணும் பொன் ஆகும். வில் - மேருமலை; அது பொன் மயமானது. நாண் - வாசுகி என்ற பாம்பு. அது பொன் மயமானது என்ப.

விடுகணை - எய்யும் அம்பு. நாணும் - நாணம் கொள்ளும். பொன் - திருமகள். ஆகம் - மார்பு. திருமாலுக்கு நாணம் கொள்ளும் திருமகள் மார்பில் உள்ளாள்.

மல்லல் மார்பின் - வளப்பம் உடைய இறைவரின் மார்பில். மணி முத்தம் - மணிகளும் முத்துக்களும் ஆகிய அணிகள். என்பதே - என்பு + அதே; எலும்பே ஆகும். அவி முத்தம் - காசி.

(90)

## 690. இறைவர்க்கு இன்பாம்

### கலிவிருத்தம்

என்ப ணிக்கும் பணிஎன்று இரந்தபோது
என்ப ணிக்கும் பணிதிக்கு மேக்கென்றார்
என்ப ணிக்கும் பணியா இருந்ததோர்
என்ப ணிக்கும்இன் பாம்அகி லேசர்க்கே. 91

### தெளிவுரை

பாம்புக்கும், நல்ல அணிகளுக்கும் மேலானது என்று அணிந்துள்ள எலும்பின் வரிசைக்கும்; உண்மைத் தொண்டு போன்ற என் தொண்டுக்கும் மகிழ்ச்சி கொள்ளும் அகிலேசரிடம் எனக்கு இடும்பணி யாது என்று வினவிய போது அருள் செய்தது யாது? இன்புற்றிருக்க என்பதே ஆகும்.

**விளக்கம்**

பணிக்கும் பணி என் என்று இரந்த போது - எனக்குத் தாங்கள் இடும் கட்டளையாது என்று இரந்த போது. என் அருள் செய்வது யாது. பணிதிக்கு மேக்கு என்று - அணிகலனுக்கு மேலானது என்று. என்பு அணிக்கும் - எலும்பாகிய அணிக்கும். பணியா இருந்ததோர் என்பணிக்கும் - பணிந்து இருந்த எனது தொண்டிற்கும். இன்பாம் - இன்பமாகும். (91)

## 691. அகிலேசர் எனக்கு ஈந்த பணி

### நேரிசை வெண்பா

கேயூரம் ஊரக் கிளர்தோள் அகிலேசர்
மாயூரம் ஊரும் ஒரு மைந்தற்குத் - தீயூரும்
அவ்வேலை ஈந்தார் அடித்தொழும்பு செய்து ஒழுகும்
இவ்வேலை ஈந்தார் எமக்கு. 92

**தெளிவுரை**

வாகுவலயம் என்ற அணியால் சிறந்து விளங்கும் தோளை யுடைய அகிலேசர், மயில் ஊர்தியில் ஊர்கின்ற ஒப்பற்ற மைந்தனனான முருகப் பெருமானுக்குத் தீயை வெளிப்படுத்தும் அழகிய (சத்தி) வேலை அளித்தருளினார். அடித்தொண்டு செய்யும் எனக்கு இந்தப்பணியை - தொழுதலை - அளித்தருளினார்.

**விளக்கம்**

கேயூரம் - வாகுவலயம் என்ற தோள் அணி. மாயூரம் - மயில்; மயூரம் என்பது மாயூரம் என நீண்டது. ஒருமைந்தன் - ஒப்பற்ற முருகப் பெருமான். அவ்வேலை - அந்த வேலை. அடித் தொழும்பு - அடித் தொண்டு. இவ்வேலை - இந்தப் பணியை. தொழுதலாகிய பணியை எனக்கு ஈந்தார் ஈசர் என்க. (92)

## 692. பறவைகளே என் தலைவர்க்கு என் நிலையைக் கூறுமின்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

குருகை விடுத்தாள் எனக்குருகே கூறாய், சுகத்தை
  விடுத்தாள் என்று
அருகு வளரும் சுகமேசென்று அறையாய், நிறைநீர்
  தெரிந்து பால்
பருகும் அனமே அனம்விடுத்த படிசென்று உரையாய்,
  படிவர்உளத்து
உருகு பசும்பொன் மதில்காசி உடையார் வரித்தோல்
  உடையார்க்கே. 93

### தெளிவுரை

தலைவி பறவைகளைத் தூதுவிடுதல்

தவவேடத்தை உடையவர் உள்ளம் உருகுவது போல உருகும் பசும்பொன் மதில்களையுடைய காசிப்பதியை உடைய வரித்தோல் ஆடையை உடுத்த ஈசர்க்கு, நாரையே! நாரையான என்னைத் தூதாக அனுப்பினாள் என்று கூறுவாய். கிளியைத் தூது அனுப்பினாள் என்று என் அருகில் வளரும் கிளியே, போய்க் கூறுவாயாக! நிறைந்திருக்கும் நீரைத் தெரிந்து அதை நீக்கிப் பாலை மட்டும் அருந்தும் அன்னமே, அன்னத்தைத் தூது அனுப்பினாள் என்று கூறுவாய்!

### விளக்கம்

குருகு - நாரை. சுகம் - கிளி. அறையாய் - உரைப்பாய். அனமே - அன்னமே என்பதன் தொகுத்தல் விகாரம்; அன்னப் பறவையே! விடுத்தபடி - தூதாக அனுப்பிய விதத்தை. படிவர் - தவத்தவர். பசும்பொன் மதில் காசி - பசிய பொன்னால் ஆன மதிலையுடைய காசிநகர். வரித்தோல் - வரிகளை யுடைய புலித் தோல். (93)

## 693. கொன்றை மாலையைப் பெற்றே தீர்வாள்!

*தோழிகூற்று*

உடுத்த கலையும் மேகலையும் ஒழுகும் பணியும்
விரும்பணியும்
தொடுத்த வளையும் கைவளையும் துறந்தாள் ஆவி
துறந்தாலும்
அடுத்தது உமது பரந்தாமம் அதனால் இதழிப்
பரந்தாமம்
விடுத்து விடுவாள் அலள்எனப்போய் விளம்பீர் காசி
வேதியர்க்கே. 94

**தெளிவுரை**

உடுத்த ஆடை, மேகலை, செய்யும் வேலை, இதுகாறும் விரும்பும் அணி, இசையோடு தொடுக்கப்பட்ட வள்ளைப் பாட்டு கைவளை ஆகிய இவற்றைத் துறந்தாள்; உயிர் நீங்கினாலும் வந்து அடைவது உமது முத்தி. ஆகவே மேலான கொன்றை மாலையைத் தராது போனால் விடுபவள் அல்லள் என்று நீங்கள் போய்க் காசிநாதர்க்குக் கூறுங்கள்!

**விளக்கம்**

கொன்றைமாலையை இவளுக்குக் கொடுக்காமல் இருக்க நினைவு உண்டாயின் அது நடவாது. நீ மாலையைத் தராது போனால் இவள் இறப்பாள். இறந்தால் கிடைப்பது முத்தி (சாரூபம்). ஆதலின் அப்போது கொன்றை மாலையைத் தந்தே ஆக வேண்டும்.

கலை - ஆடை. ஒழுகும் பணி - செய்யும் செயல். விரும் பணி - விரும்பி அணியும் அணி. தொடுத்த வளை - தொடுக்கும் வள்ளைப்பாட்டு. 'வள்ளை' என்பது 'வளை' எனத் தொக்கது. கைவளை - கையில் அணியும் வளையல். தொடுத்தவளையும் -

தொடுத்தவள்+ஐயும். எனக் கொண்டு உம்மிடம் வழக்குத் தொடுத்தவளது அழகையும் எனவும் பொருள் கொள்ளலாம். காசியில் ஆவியைத் துறந்தால் முத்தி கிடைக்கும். ஆதலால் 'அடுத்தது உமது பரந்தாமம்' என்றார். பரந்தாமம் - முத்தி; சாரூபப் பதவி. இதழிப் பரந்தாமம் - மேலான கொன்றையின் மலர் மாலை. விடுத்து விடுவாள் அலள் - விட்டுவிடமாட்டாள். காசி வேதியர் - அகிலேசர். (94)

## 694. இயம தண்டனைக்குத் தப்புபவர்

### நேரிசை வெண்பா

வேதத் துரகர் விரகர் அகிலேசர்
பாதத்து உரகப் பரிபுரத்தார் - நாதர்இவர்
சேவடிக் கண்டாரே திறம்பிழைத்துத் தென்புலத்தார்
கோவடிக்கு அண்டாரே குலைந்து. 95

### தெளிவுரை

வேதம் என்ற குதிரையை உடையவரும், நுண்ணறிவை அளிப்பவரும், திருவடிகளில் பாம்பாகிய அணியை அணிந்தவரும் ஆகிய தலைவர் அகிலேசர் திருவடிகளைக் கண்டவர், தென்புலத்தார் தலைவனான இயமனது வன்மைக்குத் தப்பிக் குலைந்து அவனது தண்டனையை அடையமாட்டார்.

### விளக்கம்

வேதத்துரகர் - வேதம் என்ற குதிரை. விரகர் - நுட்பமான அறிவை அளிப்பவர். உரகப்பரிபுரம் - பாம்பாகிய சிலம்பு. திறம் பிழைத்து - வன்மைக்குத் தப்பி. தென்புலத்தார் கோ - இயமன். கோ வடிக்கண்டாரே குலைந்து - குலைந்து+கோ+அடிக்கு+ அண்டாரே; அஞ்சி இயமனின் பிரம்பு அடியை அடையமாட்டார். (95)

## 695. இறைவரின் தோளால் என்ன பயன்?

### கட்டளைக் கலித்துறை

*(தலைவி கூற்று)*

குலைவளைக் கும்பழுக் காய்முழுத் தாறு கொழுங்கமுகின்
தலைவளைக் கும்பொழில் காசிப் பிரான்தடங் கோட்டுப்
பைம்பொன்
மலைவளைக் கும்புயத்து ஆண்மைஎன் னாம்தெவ்
வளைந்து கழைச்
சிலைவளைத் துத்தன் படைவீடு அமர்க்களம் செய்திடினே.
96

### தெளிவுரை

காமனான பகைவன் சூழ்ந்து கரும்பாகிய வில்லைவளைத்து தனது கோயிலைப் போர்க்களமாக ஆக்கினால், கரையைச் சேர்ந்துள்ள பாக்குக்குலையான முழுத்தாறு கொழுமையான பாக்கு மரத்தின் தலையை வளையச் செய்யும் சோலையையுடைய காசிநாதர் பெரிய உச்சியை உடைய பசும் பொன் மேரு மலையினைத் தோற்கச் செய்யும் தோள் ஆண்மையானது என்ன பயனை உடையது?

### விளக்கம்

'மன்மதன் தன் கரும்பு வில்லை வளைத்துப் போர் செய்வானானால் இறைவரின் தோளாற்றல் என்ன பயனை உடையது?' என்பது கருத்து. பழுக்காய்த் தாறு - பாக்குத்தாறு. கமுகு - பாக்கு மரம். தடங் கோடு - பெரிய உச்சி. பைம் பொன் மலை - மேரு மலை. என்னாம் - என்ன பயனை உடையது. தெவ் வளைத்து - பகைவன் காமன் சூழ்ந்து கொண்டு. கழைச்சிலை - கரும்பு வில். படை வீடு - கோயில்; பாசறை. அமர்க் களம் செய்திடின் - போர்க்களம் ஆக்கினால்; போரிட்டால்.

குலை வளைக்கும் - கரையைச் சூழ்ந்துள்ள. (96)

## 696. தலைவியைக் கூடினால் பழி உண்டாகாது!

ஆசிரிய விருத்தம்

*(தோழி கூற்று)*

இடம ருங்கினின் மருங்கி லாதவவள்
குடியி ருக்கவும் முடியில்வேறு
இவள்ஒருத்தியை இருத்தி வைத்துமதி
மோக மோகினியின் உருவமாய்
நடமிடு இங்குஇவள் மேலும் வைத்துளம்
நயந்தோர் பிள்ளை பயந்தநீர்
நம்குலத் திருவை மருவின் இன்றுபிறர்
நாவளைக்கவிட மாகுமே
குடம்உ டைந்ததென வானின் நங்கள்மடி
மடைதிறந்து பொழி பாலொடும்
கொழும டல்பொதி அவிழ்ந்து கைதைசொரி
சோறும் இட்டணி திரைக்கையால்
கடல்வ யிற்றினை நிரப்பு கின்றசுர
கங்கை குண்டுஅகழி யாநெடுங்
ககன நீள்குடுமி மதில்கள் ஏழ்உடைய
காசி மேவும்அகி லேசரே. 97

**தெளிவுரை**

குடம் உடைந்தென வானத்தில் மடியாகிய மடை திறந்து பொழியும் பாலுடனே, கொழுவிய மடலின் கட்டவிழ்ந்து தாழை சொரிகின்ற சோறும் இட்டு அலையாகிய கையால் கடல் வயிற்றை நிரப்பும் வான கங்கை, ஆழமான அகழியாக இருக்க, பெரிய வானம் அளவு உயர்ந்த மதில்கள் ஏழையுடைய காசிப்பதியில் வீற்றிருக்கின்ற அகிலேசரே!

இடப்பாகத்தில் இடை என்பது இல்லாத உமையம்மையார் குடியிருக்கவும், தலை முடியில் வேறொருத்தி - கங்கையை இருத்தி வைத்து மிக்க மோகத்தை உண்டாக்கும் மோகினியின்

வடிவமாய் நடனம் இடும் இவள் (திருமால்) உள்ளம் வைத்து விரும்பிக் கூடி ஒரு பிள்ளையை மகாசாத்தரை - பெற்றெடுத்தவர் நீவிர். இத்தகைய நீவிர் நம் குலத்தில் தோன்றியவளைத் தழுவினால் பிறர் பழி கூற இடம் ஏற்படுமோ?

**விளக்கம்**

இடமருங்கினில் - இறைவரின் இடப்பாகத்தில். மருங்கு இலாதவள் - இடை இல்லாதவள்; முடி - சடை. அதிமோக மோகினி - மிக்க காதலை எழுப்பும் மோகினி. மோகினி வடிவில் திருமால் வர, அவர் மீது சிவன் ஆசை கொண்டு சேர்ந்து 'மகாசாத்தர்' என்ற பிள்ளையைப் பெற்றார்.

பிறர் நாவளைக்க இடமாகுமோ - பிறர் பழி கூற இடமாகுமோ? ஆகாது. ஆகையால் இவளைச் சேர்வாயாக என்றாள் தோழி. மருவின் - தழுவினால்; கூடினால்.

குடம் உடைந்ததென - குடமானது உடைந்தாற் போல. மடிமடை திறந்து - மடியான மடை திறந்து. கைதை - தாழை. சோறு - தாழையில் உள்ள ஒரு பொருள். கங்கை பாலுடன் சோற்றைத் தந்து கடலின் வயிற்றை நிரப்பும். இத்தகைய கங்கையே, ஆழமான அகழியாய் விளங்க. மதில்கள் ஏழால் சூழப்பெற்ற காசிநகரம்.

அகிலேசரே! நீவிர் நம் குலப் பெண்ணைச் சேரின் பிறர் பழியைக் கூற இடமாகுமோ? என்பது இப்போது அலர் எழுந்துள்ளது என்பதைப் புலப்படுத்துகிறது. (97)

## 697. ஆனந்த வனத்தார் மாலை அளியார்

### மடக்கு

### பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சரியோடு ஒழுகும் கரவளையே
சரக்கோடு ஒழுகும் கரவளையே
தையற் கனமே தீவிடமே
தவழும் கனமே தீவிடமே

சொரிவது அடங்காக் கண்ணீரே
துளிக்கும் தடங்காக் கண்ணீரே
துயரே வதித னந்தினமே
சூரற் கழுத்தின் நந்தினமே
கருகிப் புலர்ந்த நாவாயே
கரைவந்து இழியும் நாவாயே
கண்கள் உறங்கா கழுநீரே
கடலே கழியே கழுநீரே
அரிவை இவளுக்கு உருகீரே
அனத்தோடு உறங்கும் குருகீரே
அளியார் இதழி வனத்தாரே
அருளா னந்த வனத்தாரே. 98

## தெளிவுரை

கைவளையானது சரி என்ற அணியுடன் நழுவும். பல வகையான பண்டங்களுடன் நீரில் தோணி செல்லும்; தலைவிக்கு அன்னம் நஞ்சாகும். வானிலே உலவும் மேகமே தீவுகளாகிய இடங்களாகும்; சொரிவது அடக்க முடியாத கண்ணீர் ஆகும்; பெரிய சோலையிலே துளிக்கும் கள் ஆகிய நீரே; துயரத்தில் தங்குவதில் பெருகினோம்; அழித்தலை உடைய சங்கின் கூட்டமே; நாவும் வாயும் கருகிப்புலர்ந்தன. கரையில் வந்து இழியும் ஓடமே! கண்கள், உறங்கா! நீர் அக்கண்களைக் கழுவும் (அழுவேன்)! கடலே! கழியே! கழுநீர்ப் பூக்களே! அன்னப்பறவையுடன் உறங்கும் நாரைகளே! கொன்றை மலரால் ஆன அழகிய மாலையைத் தாரார்! ஆனந்த வனத்தார் அளியார்!

## விளக்கம்

சரி - சரி என்ற அணி. கரவளை - கை வளையல்; தோணி. சரக்கோடு ஒழுகும் கரவளையே - பொருளை ஏற்றிக்கொண்டு செல்லும் தேரணியே. தையற்கு அனம் தீ விடமே - இப் பெண்ணுக்குச் சோறு கொடிய நஞ்சே! தவழும் கனமே - வானில் உலவும் மேகமே. தீவு இடமே - தீவுகளாகிய இடங்களே.

துளிக்கும் தடங்கா கள் நீரே - தடங்காவில் சிந்தும் கள் நீரே! துயரே வதிதல் நந்தினம் - துன்பத்தில் தங்குதல் பெருகினோம். சூரல் கழுத்தின் நந்து இனமே - சுழித்தலையுடைய கழுத்தை யுடைய சங்குக் கூட்டமே. கருகிப் புலர்ந்த நாவாயே - கருகி உலர்ந்த நாவே வாயே! கண்கள் உறங்கா - விழிகள் உறங்க மாட்டா. நீர் கழும் - நீர் கண்களைக் கழுவும். கழியே - நீர் நிலையே. கழுநீரே - கழுநீர்ப் பூக்களே! உருகீரே - இரக்கம் காட்டுவீர். அனம் - அன்னப்பறவை. இதழி - கொன்றை மாலை.

வளை முதலியவற்றை விளித்து ஆனந்த வனத்தார் தனக்குக் கொன்றை மாலையைத் தரவில்லை என்ற செய்தியைத் தலைவியின் தோழி கூறினாள். (98)

## 698. இறைவர்க்கு இருப்பிடம் காசியாகும்?

### சந்த விருத்தம்

வனத்தினும் ஓர் பொற்பொதுமு கப்பினும் நினைப்பவர்
மனத்தினும்ந டித்தருள் செய்வார்
சினக்கயல் விழிக்கடை கருக்கொள்கரு ணைக்கொடி
திளைத்தமரு மத்தர் இடமாம்
நனைக்கமல நெக்குடை தரக்குடை துறைச்சுர
நதிக்கரையில் முட்டைகொல்எனாக்
கனத்தபரு முத்தினை அணைத்துஅனம் இனத்தொடு
களிக்கும்அவி முத்தநகரே. 99

### தெளிவுரை

சுடுகாட்டிலும், ஒரு பொன்னம்பலத்திலும், நினைப்பவர் உள்ளத்திலும், நடிக்கின்றவர் சினம் உடைய கயல்விழியின் கடையிலும் கருவைக் கொண்ட கொடி போன்ற உமை யம்மையார், மகிழ்ந்து அமரும் ஒருபாதியை உடையவரின் இடம், அரும்பையுடைய தாமரை மலர, நீராடும் துறையை உடைய கங்கை நதிக்கரையில் கனமான பருத்த முத்தினை முட்டை என்று

எண்ணி அணைத்து அன்னப்பறவை இனத்தோடு மகிழும் காசி நகரமே ஆகும்.

**விளக்கம்**

வனத்தினும் - சுடுகாட்டிலும். பொன் பொது முகப்பு - பொன்னம்பலத்தின் முன்னிடம். சினக்கயல் விழி - சினத்தை யுடைய கயல்மீன் கண். கருக்கொள் - கருவைக் கொள்ளும். விழிக்கடை கருக்கொள் கருணைக் கொடி - கண்ணின் கடையில் கருவைக் கொள்ளும் அருளையுடைய கொடி போன்ற உமை யம்மையார். திளைத்து அமரும் - மகிழ்ந்து பொருந்தியிருக்கும். அத்தர் - 'அர்த்தர்' என்பது 'அத்தர்' என்றாயிற்று; ஒருபாகத்தை யுடையவர் என்க. நனை - அரும்பு. கமலம் - தாமரை. நெக்கு உடைதர - நெகிழ்ந்து மலர. சுரநதி - கங்கை ஆறு. எனா - என்று. கனத்த பருமுத்தினை - கனமான பருத்த முத்து. அம்முத்தை அன்னப்பறவைகள் தம் முட்டை என எண்ணி அணைத்து இனத்தொடும் மகிழும். (99)

## 699. ஒருசொல் சொல்லச் சமயம் எனின் இறைவர் வருவார்

### வேறு

*தோழி கூற்று*

கருமுகில் வெளுப்பஅற இருளும் அள கத்தின்இவள்
கதிர்முலை முகட்டுஅணைய அணைமீதே
வருகிலர் எனில்செவியில் ஒருமொழி சொலச்சமயம்
வருகஎன அழைக்கின்உடன் வருவார்காண்
சுரநதி சுருட்டும் விரி திரைகளொடு முத்திமகள்
துணைமுலை கிளைக்குமவர் மணநாளின்
முரசமொடு முழக்குகுட முழவென விரைக்கவளை
முரலும்அவி முத்தநகர் உடையாரே. 100

**தெளிவுரை**

தேவ கங்கையாறு சுருட்டும் விரித்த அலைகள் ஒரு முத்தி மகளின் இரு கொங்கைகளில் அணைத்து மகிழும் அவர் திருமண நாளில் முரசத்துடன் முழக்கும் குடமுழவு என ஒலிக்கச் சங்கு ஒலிக்கும் காசி நகரினையுடைய அகிலேசர், கரிய மேகமானது வெண்மையுடையது என்று கூறுமாறு இருளும் கூந்தலையுடைய இவள் கதிரையுடைய கொங்கை முகப்பை அணைக்கப் படுக்கைக்கு வருகிலர் என்பார் உள்ளாராயின், அவர் செவியில் 'ஒருசொல்லைச் சொல்வதற்கு ஏற்ற சமயம் இதுவாகும் வா' என்று உரைத்து அழைத்தால் உடனே வருவார்.

**விளக்கம்**

அற - மிக. அளகம் - கூந்தல். கூந்தல் கருமையை நோக்கக் கரிய மேகமும் வெண்ணிறமாகத் தோன்றும் என்றாள். அணை - படுக்கை. ஒருமொழி சொல் - பிரணவ உபதேசமான ஒரு சொல்லைச் சொல்ல. சமயம் - மரணத் தறுவாய். இவளை அணைத்துத் தழுவ வருக என்பவருக்கு வாரார் என்று சிலர் சொல்வார் உளராயின், இவள் உயிர் நீங்கும் சமயம் இதுவாகும் என்று கூறின், தம் வழக்கத்தினின்றும் மாறாது இருக்க, இறைவன் உடனே பிரணவ உபதேசத்தைச் செய்ய வருவார். அலைகளின் ஒலிக்குக் குடமுழவின் ஓசை உவமை. வளை - சங்குகள். முரலும் - ஒலிக்கும். பறை ஒலிக்கச் சங்கு ஒலிக்க மணம் செய்வது மரபு. ஆதலால் குடமுழவையும் வளையையும் உரைத்தார். (100)

## 700. இறைவனை ஏத்துமின்!

### நேரிசை ஆசிரியப்பா

உடைதிரைக் கங்கை நெடுநதித் துறையின்
வலம்புரி என்னஆங்கு இடம்புரி திங்கள் .
வெள்ளிவீழ் அன்ன விரிநிலாப் பரப்பும்
பொன்வீழ் அன்ன புரிசடைக் கடவுள்
5 முடவுப் படத்த கடவுள் பைம்பூண்
கறங்குஎனச் சுழலும் கால்விசைக்கு ஆற்றாது

உமிழ்தரு குருதித் திரள்தெறித் தாங்குத்
திசைதொறும் தெறித்த திரண்மணிக் குலங்கள்
வான்ஏறு கடுப்ப வெரிநின் தாக்கலும்
10 கைஎடுத்து எண்திசைக் களிறும் வீரிடத்
தெய்வநா டகஞ்செய் வைதிகக் கூத்தன்
வரைபகப் பாயும் வானரக் குழாத்துஒரு
கருமுக மந்தி கால்விசைத்து எழுந்து
பழுக்காய்க் கமுகின் விழுக்குலை பறித்துப்
15 படர்தரு தோற்றம் சுடரோன் செம்மல்
தெசமுகத்து ஒருவன் திரள்முடி பிடுங்கி
விசையின் பாய்ந்தென விம்மிதம் விளைக்கும்
தடமலர்ப் படப்பைத் தண்டலைக் காசிக்
கடிநகர் புரக்கும் கண்ணுதல் செல்வன்
20 வேம்பும் கடுவும் தேம்பிழி யாகச்
செஞ்செவி கைப்பயான் தெரித்த சின்மொழி
அஞ்செவி மடுத்தாங்கு அளித்தனன் அதனால்
வேத்தவை வியப்ப விரைத்தேன் பில்கும்
தேத்தமிழ் தெளிக்கும் செந்நாப் புலவீர்
25 மண்மகள் கவிகைத் தண்நிழல் துஞ்சப்
புரவுபூண்டு இந்திர திருவொடும் பொலிந்து
முடிவினும் முடியா முழுநலம் கொடுக்கும்
செந்நெறி வினவுதிர் ஆயின் இன்னிசைப்
பாத்தொடுத்து அடுத்த பரஞ்சுடரை
30 நாத்தழும்பு இருக்க ஏத்துமின் நீரே. 101

## தெளிவுரை

மடிந்து விழும் அலையையுடைய கங்கையின் பெரிய ஆற்றின் துறையில் வலம்புரிச் சங்கைப் போன்று அவ்விடத்தை விரும்பிய சந்திரன் வெள்ளியால் ஆன விழுதினைப் (கம்பியைப்) போன்ற நிலவு ஒளியைப் பரப்பும் புரிந்த சடையை உடைய சிவபெருமான்,

வளைந்த படத்தையுடைய தெய்வத்தன்மை உடைய அணி காற்றாடி போலச் சுழலும் திருவடியின் வேகத்துக்கு ஆற்றாமல்

உமிழும் குருதித் திரள் வீசி அங்குத் திக்குதோறும் தெறித்த திரண்ட மணிக் கூட்டங்கள் இடியைப் போன்று முதுகில் தாக்கவும் எட்டுத் திக்குகளில் உள்ள எண் யானைகளும் கையெடுத்துத் தூக்கி முழக்கம் இட, தெய்வ நாடகத்தை இயற்றும் கடவுள், மலை பிளக்கப் பாயும் குரங்குகள் கூட்டத்தில் உள்ள ஒரு கரிய முகத்தையுடைய பெண் குரங்கு காலால் விரைவாக எழுந்து பாக்குக் காயையுடைய பாக்கு மரத்தின் சிறந்த குலைகளைப் பறித்துக் கொண்டு போகும் தோற்றம், கதிரவனின் மகனான சுக்கிரீவன் பத்து முகங்களை யுடைய ஒருவனான இராவணனது திரண்ட முடியை - கிரீடத்தைப் - பிடுங்கி விரைவாய்ப் பாய்ந்தாற் போல் வியப்பான செயலை விளைக்கும் பெரிய மலர்களை யுடைய தோட்டங்களையும் சோலைகளையும் உடைய காசிக் கடிநகரைப் பாதுகாக்கும் நெற்றியில் கண்ணையுடைய இறைவன்

என் சொற்களைக் கேட்கும் போது கசப்புடைய வேப்பம் பழமும் கடுக்காயும் தேனைப் போல் விரும்பத் தக்கனவாய் ஆகும் படி. தம் செவிகள் வெறுக்கும்படி, யான் கூறிய சில மொழிகள் செவியில் கேட்டு அருள் செய்தனன். ஆகையால் அரசரின் அவை வியப்பை அடையும்படி மணம் உடைய தேன் வழியும் தேன் போன்ற இனிமையுடைய தமிழ்ப் பாடலைப் பாடும் செந்நாப் புலவீர்! நிலமகள் குடையின் கீழ்க் குளிர்ந்த நிழலில் தங்கப் பாதுகாவலை மேற்கொண்டு இந்திர பதவியான செல்வத்துடன் விளங்கி முடிவு காலத்திலும் முடிவற்ற முழுமை யான நலத்தை அளிக்கின்ற நல்ல, முத்தி நெறியில் வினவுவா யாயின் இனிய இசையோடு கூடிய பாடலைத் தொடுத்த மேலான பரஞ்சுடரை நாத்தழும்பு உண்டாகப் போற்றுவீராக!

**விளக்கம்**

(1-11) வலம்புரி - வலப்பக்கமாக வளைந்த வரிகளை யுடைய சங்கு. இடம்புரி - இடத்தை விரும்பும். வெள்ளி வீழ் அன்ன - வெள்ளியால் ஆன விழுதை - கம்பியைப் - போன்று; நிலவு ஒளிக்கு இது உவமை. பொன் வீழ்ந்தன்ன - பொன் வீழ் போல்; பொன்கம்பி போல. (நிலவைப் பரப்பும் சடை, பொன் வீழ் அன்ன சடை என இயைகிறது.)

(5-11) சிவபெருமான் நடனம் செய்யும்போது அவர் அணியாக அணிந்துள்ள பாம்பிடத்திருந்து மணிகள் சிதறி எல்லாத் திசை யானைகளின் முதுகின் மீது தெறித்துத் தாக்கின. அதனால் அந்த யானைகள் வீரிட்டன. முடவுப்படத்த - வளைந்த படத்தை யுடைய. கடவுள் பைம்பூண் - தெய்வத்தன்மை கொண்ட பசுமை யான் அணியான பாம்பு.

கறங்குஎன - காற்றாடியைப் போல். கால்விசைக்கு - காற்றின் வேகத்துக்கு. ஆற்றாது - பொறுத்துக்கொள்ள இயலாது. உமிழ்தரு - வெளிப்படும். குருதித்திரள் - இரத்தத் திரட்சி. திரள் மணிக் குலங்கள் - திரண்ட மாணிக்கக் கூட்டம். வான்ஏறு கடுப்ப - இடியைப் போல. வெரிநின் தாக்கலும் - முதுகில் தாக்கவும். எண்டிசைக் களிறு - எட்டுத்திக்குகளிலும் உள்ள யானைகள். வீரிட - முழக்கமிட. வைதிகக் கூத்தன் - இறைவன்.

(12-18) பாக்குமரக் குலையைப் பறித்து இறங்கும் குரங்குக்கு இலங்கையின் உத்தர கோபுரத்திலிருந்த இராவணனின் பத்து முடிகளையும் பறித்து வந்த சுக்கிரீவன் உவமை.

வரைபக - மலைபிளக்க. வானரக்குழாம் - குரங்குக் கூட்டம். கருமுக மந்தி - கருமையான முகம் உடைய குரங்கு. பழுக்காய் - பாக்கு. கமுகு - பாக்கு மரம். விழுக்குலை - சிறந்த குலை. படர்தரு தோற்றம் - மேலே எழும் காட்சி. சுடரோன் செம்மல் - கதிரவனின் மகனான சுக்கிரீவன். செம்மல் - மகன். தெசமுகத்து ஒருவன் - பத்துத் தலைகளையுடைய இராவணன். திரண்முடி - திரண்ட கிரீடங்கள். பாய்ந்தென - பாய்ந்தாற் போல். விம்மிதம் - வியப்பு. தடமலர் - பெரிய மலர். படப்பை - தோட்டம்.

கடிநகர் - காவலை யுடைய நகரம். புரக்கும் - பாதுகாக்கும். கண்ணுதற் செல்வன் - சிவபெருமான்.

வேம்பும் கடுவும் தேம்பிழியாக - யான்கூறும் சொற்கள் வேப்பம்பழமும் கடுக்காயும் ஆக இருப்பினும் தேன்போல் விரும்பக் கூடியனவாக விளங்க. செஞ்செவி - செம்மையான காதுகள். கைப்ப - கசக்க. தெரித்த - கூறிய. அஞ்செவி - அகம்+செவி; உட்செவி; செவிமடுத்து - கேட்டு. அளித்தனன் -

அருள் செய்தான். வேத்தவை - மன்னன் அவை. விரைத்தேன் - நறுமணம் உடைய தேன். பில்கும் - சிந்தும். தேத்தமிழ் - இனிய தமிழ். மண்மகள் - நிலமகள். தெளிக்கும் - தெளிவுபட விரிக்கும். துஞ்ச - தங்க. புரவு - காவல்; ஆட்சி. முடியா - அழியாத. முடியா முழுநலம் - அழியாதிருத்தலான பெருநன்மை. அது வீடுபேறு. முடிவினும் - இறக்கும் போதும்.

பாத்தொடுத்து - பாக்களைப் பாடி. செந்நெறி - முத்திநெறி. வினவுதிர் ஆயின் - வினவுவீரானால். பரஞ்சுடர் - மேலான ஒளி மயமான இறைவரை. நாத்தழும்பு இருக்க - நாவில் தழும்பு ஏற்படும்படியாக ஏத்துமின் - வணங்குவீர். இறைவர் எனக்குக் கருணை செய்தார். ஆதலால் புலவர்களே, நீங்களும் அவரை ஏத்துங்கள்.
(101)

*காசிக் கலம்பகம் தெளிவுரையும் விளக்கமும் முற்றுப்பெற்றன*

# 11. சகல கலாவல்லி மாலை

சகல கலா வல்லி - கலை மகள்; சரசுவதி. அவ் இறைவி மீது பாடப்பட்ட மாலை என்பது பொருள். இதனைச் 'சரசுவதி தோத்திரம்' என்றும் வழங்குவர்.

## 701. என் மனத்து எழுந்தருளுவாய்!

கட்டளைக் கலித்துறை

வெண்தா மரைக்கன்றி நின்பதம்
தாங்கஎன் வெள்ளை உள்ளத்
தண்தா மரைக்குத் தகாதுகொ
லோசகம் ஏழும்அளித்து
உண்டான் உறங்க ஒழித்தான்பித்
தாகஉண் டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே
சகல கலாவல்லியே. 1

### தெளிவுரை

ஏழு உலகங்களையும் பாதுகாத்து அதனை உண்டவன் ஆன திருமால் உறங்கவும் உலகத்தை அழிக்கும் சங்காரத் தொழிலை யுடைய சிவபெருமான் பித்தனாக விளங்கச் செய்தவனான நான் முகன் இனிதாய்ச் சுவைக்கும் கரும்பைப் போன்றவளே! பல கலைகளிலும் வல்லவளே! வெண்தாமரைக்கே அல்லாது நின் திருவடியைத் தாங்க என் வெள்ளையுள்ள - அறியாமையுடைய - குளிர்ந்த தாமரை மலர்கள் தகுதியற்றனவோ!

**விளக்கம்**

கலைமகள் வெண்தாமரையில் வீற்றிருக்கின்ற இயல்பு உடையவள். நின்பதம் - நினது திருவடி. தாங்க - சுமக்க; வீற்றிருக்க. வெள்ளையுள்ளம் - அறியாமையுடைய மனம்.

வெண்தாமரையில் வீற்றிருக்கும் நின்திருவடி என் மனத் தாமரையிலும் வீற்றிருக்கத் தக்கதே. எனவே இதில் எழுந்தருளு வாய் என்பது கருத்து. அளித்து உண்டான் - திருமால். அளித்து - பாதுகாத்து உண்டான் - கண்ணனாகத் திருமால் அவதரித்தபோது உலகினை உண்டான். உறங்க - தூங்கிக்கிடப்ப. செயல் அற்றிருக்க என்ற படி. சகலகலாவல்லி அருள் கொண்டு காத்தலால் தன் தொழில் செய்யாது திருமால் இனிதாய் உறங்க என்பது கருத்து. ஒழித்தான் - அழிப்பவனான சிவபெருமான்: பித்தாக - பித்தனாக. கண்டான் - செய்தவன். திருமால் உறங்கவும் சிவன் பித்தனாகத் திரியவும் செய்தவனான பிரமன்.என அவனுக்கு உயர்வு கூட்டிச் சொல்லப் பட்டது. தண்டாமரை - குளிர்ந்த தாமரை மலர். சுவைகொள் கரும்பே - சுவைக்கின்ற கரும்பு போன்று இனியவளே. (1)

## 702. பாடும் பணியில் என்னைப் பணித்தருளுக!

நாடும் பொருள்சுவை சொல்சுவை
தோய்தர நாற்கவியும்
பாடும் பணியில் பணித்தருள்
வாய்பங்க யாசனத்தில்
கூடும் பசும்பொன் கொடியே
கனதனக் குன்றும்ஐம்பால்
காடும் சுமக்கும் கரும்பே
சகல கலாவல்லியே. 2

**தெளிவுரை**

வெண் தாமரையில் வீற்றிருக்கின்ற பசுமையான பொன் கொடியைப் போன்றவளே! கனமான இருகொங்கைகளையும்

ஐந்து வகையாய்ப்பின்னி முடிக்கப்படும் கூந்தலாகிய காட்டையும் சுமக்கும் கரும்பைப் போன்றவளே! கலைமகளே!

ஆராயப்படும் பொருள் சுவையும் சொற்சுவையும் பொருந்த வெண்பா முதலிய நான்கு வகைப்பட்ட கவிகளையும் பாடும் படியான பணியில் என்னை ஈடுபடுத்துவாய்!

**விளக்கம்**

நாடும் - ஆராயப்படும்; விரும்பப்படும். தோய்தர - பொருந்த. நாற்கவி - நான்கு வகைப்பட்ட கவி; அவை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனவும் கூறலாம். பாடும்பணி - பாடுகின்ற பணிவிடை.

பொதுவாகக் கொடியில்தான் மலர் இருக்கும். ஆனால் மலரிலே கொடியுள்ளதாகக் - கூறியது ஓர் அழகு. பங்கயாசனம் - பங்கயம் + ஆசனம்; பங்கயாசனம்; தாமரை இருக்கை. (2)

## 703. அருட்கடலில் குளிப்பது என்று?

702. அளிக்கும் செழுந்தமிழ்த் தெள்அமுது
ஆர்ந்துஉன் அருள்கடலில்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ
லோஉளங் கொண்டு தெள்ளித்
தெளிக்கும் பனுவல் புலவோர்
கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே
சகல கலாவல்லியே. 3

**தெளிவுரை**

மனத்தால் ஆராய்ந்து மிகவும் தெளிந்து செய்யும் செய்யுட்களை உடைய புலவர்களின் கவியாகிய மழை பெய்யக் கண்டு மகிழ்ச்சி அடையும் தோகையையுடைய மயில் போன்றவளே! கலைமகளே!

நின்னால் அருளப்பெறும் தமிழாகிய தெளிந்த அமுதத்தை நிறைய உண்டு நினது அருள் என்ற கடலில் குளிக்கும்படியான நிலைமை என்று எனக்கு வாய்க்குமோ!

**விளக்கம்**

அளிக்கும் - கலைமகளால் அருளப் பெறும். தெள் அமுது - தெளிவான அமுதம். ஆர்ந்து - அருந்தி; அருந்த எனவும் கொள்ளலாம்.

**'தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான முத்திக் கனியேஎன் முத்தமிழே'**

என்ற தமிழ்விடுதூது அடிகள் இங்கு நினைவு கூரத் தக்கன.

குளிக்கும்படிக்கு - நீராடும் படியான தன்மை உள்ளம் கொண்டு - மனத்தைக் கொண்டு. தெள்ளித் தெளிக்கும் - மிகவும் தெளிந்து செய்யும். தெளிக்கும் - இயற்றப்படும். பனுவல் - செய்யுள். கவிமழை - கவியான மழை; உருவகம், சிந்தக் கண்டு - இயற்றக் கண்டு. களிக்கும் - மகிழும், கலாப மயில் - தோகையை யுடைய மயில்; உவமையாகு பெயர். (3)

## 704. கல்வியும் வாக்கும் பெருகப் பணித்தருள்வாய்!

தூக்கும் பனுவல் துறைதோய்ந்த
கல்வியும் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
வாய், வட நூற்கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்
தொண்டர்செந் நாவினின்று
காக்கும் கருணைக் கடலே
சகல கலாவல்லியே. 4

**தெளிவுரை**

வடமொழி நூல்களாகிய கடலும் நிறைந்த செழுமையான தமிழ்ச் செல்வமும் உடைய தொண்டரின் செம்மையான

நாவினின்று காக்கும் அருள் கடலே! பலகலைகளுக்கும் இறைவியே!

ஆராயும் நூல் துறைகளில் தோய்ந்த செயற்கை அறிவும், சொல்லின் சுவை பொருந்தப் பெற்ற கவி இயற்றும் ஆற்றலும் என்னிடம் பெருகும்படியாகச் செய்தருள்வாய்!

**விளக்கம்**

வடநூற்கடல் - வடமொழி நூல்களாகிய கடல். தூக்கும் - ஆராயும். பனுவல் துறை - தமிழ்நூல்களின் பாகுபாடுகள். கல்வி - நூல்களைக் கற்றுப் பெறும் அறிவு. வாக்கு - புண்ணிய வயத்தால் கவி இயற்றும் ஆற்றல் என்னும் இயற்கை அறிவு. தேக்கும் - நிறைக்கும். (4)

## 705. நின் திருவடி மலர் என் நெஞ்சத்து அலராதது ஏன்?

பஞ்சப் பிதந்தரு செய்யபொன்
பாதபங் கேருகம்என்
நெஞ்சத் தடத்துஅல ராததுஎன்
னே!நெடுந் தாள்கமலத்து
அஞ்சத் துவசம் உய்ர்த் தோன்செந்
நாவும் அகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசுஒத் திருந்தாய்
சகல கலாவல்லியே. 5

**தெளிவுரை**

நீண்ட தாளையுடைய தாமரையில் வீற்றிருக்கின்ற அன்னக் கொடியை யுயர்த்தியவனான பிரமனின் செந்நாவிலும் உள்ளத்திலும் வெண்தாமரை இருக்கையிலும் ஒரு சேர வீற்றிருக் கின்றவளே! கலைமகளே!

செம்பஞ்சுக் குழம்பு பூசப்பெற்ற இன்பத்தை அளித்தருளுகின்ற சிவந்த அழகிய திருவடிகள் என்ற தாமரை மலர்கள் எனது உள்ளமாகிய நீர் நிலையில் மலராதது ஏன்?

**விளக்கம்**

பஞ்சப்பிதந்தரு - பஞ்சு + அப்பு + இதம் + தரு; பஞ்சு - செம்பஞ்சுக் குழம்பு. அப்பு - பூசப் பெறும். இதம் தரு - நன்மை தரும். செய்ய - சிவந்த. பங்கேருகம் - தாமரை. நெஞ்சத்தடம் - மனம் என்ற பொய்கையில். அலராதது - மலராதது; தோன்றி மலராதது. என்னே - என்ன காரணமோ! நெடுந்தாள் கமலம் - நீண்ட தாளை - காம்பை - உடைய தாமரை. அஞ்சத் துவசம் உயர்த்தோன் - அன்னப்பறவையுடைய கொடியை உயர்த்தவன்; அவன் பிரமன். வெள்ளை கஞ்சத் தவிசொத்திருந்தாய் - வெள்ளை + கஞ்சம் + தவிசு + ஒத்திருந்தாய் - வெண்மையான தாமரை இருக்கையில் ஒருசேர வீற்றிருந்தவளே. (5)

## 706. எண்ணும் பொழுது எளிது எய்தல் வேண்டும்

பண்ணும் பரதமும் கல்வியும்
தீஞ்சொல் பனுவலும்யான்
எண்ணும் பொழுதுஎளிது எய்தநல்
காய்! எழு தா மறையும்
விண்ணும் புவியும் புனலும்
கனலும்வெங் காலும் அன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய்
சகல கலாவல்லியே. 6

**தெளிவுரை**

எழுத்தினால் எழுதப்படாத வேதங்களிலும் வானத்திலும் நிலவுலகத்திலும் நீரிலும் தீயிலும் கொடிய காற்றிலும் அடியாரின் கண்ணிலும் கருத்திலும் நிறைந்து விளங்குபவளே! எல்லாக் கலைகளுக்கும் இறைவியான கலைமகளே!

இசையும் நாடகத் தமிழும் இயற்றமிழும் கல்வியறிவும் இனிய சொற்களையுடைய கவியும் ஆகிய இவை எல்லா வற்றையும் நான் எண்ணும் போது எனக்கு எளிதில் அடையும்படி அருள் செய்வாய்!

**விளக்கம்**

பண் - இசைத்தமிழ். பரதம் - நாடகத் தமிழ். கல்வி - இயற்றமிழ். கல்வியறிவுமாம். தீஞ்சொல்பனுவல் - இனிய சொல் அமைதியையுடைய கவிகள். நல்காய் - அருள்வாய்.

எழுதாமறை - வேதம், வெங்கால் - காற்று.

இப்பாடலில் முத்தமிழ்க்கல்வியும் கவியாற்றலும் வேண்டு கின்றார். வேதத்தால் கூறப்படுபவள் அவள் ஐம்பூதங்களில் இருப்பவளும் அவள்; அடியார்க்குக் காட்சியும் கருத்தாயும் உள்ளவளும் அவள் என்க. (6)

## 707. பாட்டும் பொருளும் பயனும் என்னிடம் பொருந்த அருள்வாய்

பாட்டும் பொருளும் பொருளால்
பொருந்தும் பயனும்என்பால்
கூட்டும் படிநின் கடைக்கண்நல்
காய், உளம் கொண்டு தொண்டர்
தீட்டும் கலைத்தமிழ்த் தீம்பால்
அமுதம் தெளிக்கும் வண்ணம்
காட்டும்வெள் ஓதிமப் பேடே
சகல கலாவல்லியே. 7

**தெளிவுரை**

உள்ளம் கொண்டு தொண்டர் இயற்றும் கலைத் தன்மை பொருந்திய தமிழாகிய இனிய பாடலையும் நீரையும் தெளிவாக அறியும் வண்ணம் புலப்படுத்தும் வெண்மையான அன்னப் பேடே! கலைமகளே!

செய்யுளும் அதன் பொருளும் பொருளால் பெறும் பயனாகிய அறம் பொருள் இன்பம் வீடும் என்னிடம் கூட்டும் வண்ணம் நின் கடைக்கண்ணால் அருள் செய்வாய்.

**விளக்கம்**

பாட்டு - செய்யுள். பொருள் - செய்யுளின் பொருள். பொருளால் பொருந்தும் பயன் - அப்பொருளால் உண்டாகும் பயனான அறம் பொருள் இன்பம் வீடு. கடைக்கண் நல்காய் - கடைக்கண்ணால் பார்த்தருள்வாய். தொண்டர் - அடியார். தீட்டும் - இயற்றும். பால் அமுதம் - நீரும் பாலும். அமுதம் - நீர். தீம்பால் - இனிய பால். தெளிக்கும் வண்ணம் - அறிந்து கொள்ளும்படி, வெள்ஓதிமப்பேடே - வெண்மையான பெண் (அன்னப் பறவையே!) (7)

## 708. அடிமை கொள்வாய்!

**சொல்விற் பனமும் அவதான**
**மும்கவி சொல்லவல்ல**
**நல்வித்தை யும்தந்து அடிமைகொள்**
**வாய், நளி னாசனம்சேர்**
**செல்விக்கு அரிதுஎன்று ஒருகால**
**மும்சிதை யாமைநல்கும்**
**கல்விப் பெருஞ்செல்வப் பேறே**
**சகல கலாவல்லியே.** 8

**தெளிவுரை**

வெண்மையான தாமரை மலர் இருக்கையில் வீற்றிருக்கின்ற அரிது என்று ஒரு காலத்திலும் அழியாதபடி வழங்குகின்ற கல்வியாகப் பெருஞ் செல்வப்பேறே! கலைமகளே!

நாவன்மையும் அவதானமும் கவிகளை இயற்றவல்ல ஆற்றலும் தந்து என்னை நின் அடிமையாகக் கொள்வாயாக!

**விளக்கம்**

சொல்விற்பனம் - நாவன்மை. அவதானம் - ஒரே சமயத்தில் பலவற்றைக் கவனித்தல். கவி சொல்ல வல்ல நல்வித்தை - கவிஇயற்றும் ஆற்றல்; மாணவர்க்குப் பாடத்தைக் கூறவல்ல ஆற்றல் எனவும் கொள்ளலாம். நளினாசனம் - நளினம் + ஆசனம்; வெண் தாமரை இருக்கை. செல்வி - திருமகள். சிதையாமை - அழியாமல். நல்கும் - அளிக்கும். (8)

## 709. நின்னை நினைக்கும் ஆற்றல் உடையார் யார்?

சொற்கும் பொருட்கும் உயிராம்மெய்ஞ்
ஞானத்தின் தோற்றம்என்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர்
யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோடு
அரசன்னம் நாணநடை
கற்கும் பதாம்புயத் தாயே
சகல கலாவல்லியே. 9

**தெளிவுரை**

தரையில் பொருந்தும் துளையையுடைய துதிக்கை பொருந்திய பெண்யானையின் அரச அன்னப்பறவையும் வெட்கும் நடையை நடக்கும் திருவடியான தாமரையை உடைய அன்னையே! கலைமகளே!

சொல்லுக்கும் பொருளுக்கும் உயிரான மெய்ஞ்ஞானத்தின் தோற்றத்தைப் போல் விளங்கும் நின்னை நினைக்கும் ஆற்றல் வாய்ந்தவர் யார்?

**விளக்கம்**

சொற்கும் பொருட்கும் உயிராம் மெய்ஞ்ஞானம்

சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராக விளங்கும் உண்மையறிவு. ஞானத்தின் தோற்றமாக விளங்குபவள் கலைமகள்.

நின்னை நினைப்பவர் யார்? - நின்னை நினைக்கும் ஆற்றல் வாய்ந்தவர் யார்? எவருமிலர். அதாவது அவள் ஆற்றலை அறிய இயலாது என்றபடி. நிலம்தோய் - தரையில் பொருந்தும் புழைக்கை - துளையையுடைய துதிக்கை. நற்குஞ்சரம் - நல்ல யானை. பிடி - பெண்யானை. அரசன்னம் - தலைமையுடைய அன்னப்பறவை. நாண - வெட்கமடைய. நடைகற்கும் - நடை பயிலும். பதாம்புயம் - பத + அம்புயம்; அடியாகிய தாமரை. (9)

## 710. என் பண்கண்டு மன்னரும் பணிய அருள்வாய்!

மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும்என்
பண்கண் டளவில் பணியச்செய்
வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும் விளம்பில்உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலாவல்லியே. 10

### தெளிவுரை

உலகங்களை எல்லாம் படைப்பவனான நான் முகன் முதலிய வானில் உள்ள தெய்வம் பல கோடியர் இருப்பரேனும், உண்மையைச் சொல்லப்போனால், நின்னைப் போல் பிரத்தியட்ச மான பலனைத் தரும் தெய்வம் உள்ளதோ! கலைமகளே!

உலகத்தில் பொருந்திய வெண்மையான கொற்றக் குடைக்குக் கீழாக மேன்மையுடைய மன்னரும் என் செய்யுளைக் கண்ட அளவில் எனக்கு வணங்கிப் பணியும்படி செய்வாயாக!

### விளக்கம்

இப்பாட்டு தில்லிநகர்ப் பாதுஷாவின் அன்பு தனக்குக் கிடைக்க வேண்டும் என்ற விருப்பத்தைக் கொண்டது.

மண்கண்ட - நிலவுலகம் முழுவதையும் நிழற்றிய. வெண் குடை - மன்னர்களின் வெண்மையான கொற்றக்குடை. மேற்பட்ட - மேன்மையுடைய. என் பண் - என் செய்யுள். படைப்போன் - பிரமா. விளம்பில் - உண்மையைச் சொன்னால். கண் கண்ட தெய்வம் - பிரத்தியட்சமான பயனைத் தரும் தெய்வம்.

இந்நூலை ஆசிரியர் தமக்கு இந்துத்தானி மொழி அறிவு வேண்டும் என்று கலைமகளை வேண்டிப் பாடினார். அவள் அருளால் சிறந்த இந்துத்தானி அறிவு வாய்க்கப் பெற்றார். பாதுஷாவிடம் இந்துத்தானியில் பேசிப்பழகினார். அம்மன்னர் இவரிடம் ஈடுபட்டுக் காசியில் இருத்தற்குரிய மடம் அமைத்தற்குக் கேதார கட்டத்தில் இடம் தந்தார். இவர் அதுகாறும் அங்கே மறை பட்டிருந்த விசுவ லிங்கப் பெருமானை வெளிப்படுத்திக் கோயில் அமைத்து வழிபாடு நடத்தற்கு ஏற்பாடுகளையும் செய்தார். அங்கு இவர் தங்கியிருந்த மடம் **குமாரசாமி மடம்** என்று அழைக்கப் படுகின்றது. அங்கே இவர் வாழ்ந்தபோதுதான் ‘காசிக்கலம்பகம்’ பாடப்பட்டது.

***சகல கலாவல்லி மாலையும் தெளிவுரையும் விளக்கமும் முற்றுப் பெற்றன.***

# 12. மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை

இரட்டை மணிமாலை என்பது அந்தாதித் தொடையில் இருபது வெண்பாவும் கலித்துறையுமாய் இயைந்து வருவது (அல்லது) வெண்பாப் பத்தும் விருத்தம் பத்தும் ஆக அந்தாதித் தொடையில் பொருந்தி வருவதாகும்.

'வெண்பா முதலாகக் கலித்துறை
பின்வரும் இந்த இருபது இரட்டைமணி மாலை''

(என்பது பன்னிரு பாட்டியல்)

'இருபது வெண்பா கலித்துறை இயையின்
வருவது இரட்டை மணிமாலை யாகும்'

(என்பது இலக்கண விளக்கப்பாட்டியல்.)

மதுரை மீனாட்சியம்மை மீது பாடப்பட்ட இரட்டை மணி மாலை என்பது மேற் கண்ட தொடரின் பொருள். இதில் நேரிசை வெண்பா பத்தும் கட்டளைக் கலித்துறை பத்தும் அமைந்துள்ளன. அந்தாதித் தொடையாய்ப் பாக்கள் அமைந்துள்ளன.

## 711. இடம்பத்தில் இரார்

### நேரிசை வெண்பா

கார்பூத்த கண்டத்து எம் கண்ணுதலார்க்கு ஈரேழும்
பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பே - சீர்கொள்
கடம்பவனத் தாயேநின் கண்ணருள் பெற்றாரே
இடம்பவனத் தாயே இரார். 1

**தெளிவுரை**

கருமை உடைய திருக்கழுத்தையுடைய நெற்றிக் கண்ணை யுடைய எம் சிவபெருமானுக்குப் பதினான்கு உலகங்களையும் பெற்ற இளமையுடைய பச்சைநிறக் கொம்பைப் போன்றவளே! சிறப்புப் பொருந்திய கடம்பவனத்தில் மதுரையில் வீற்றிருக்கும் தாயே! நின் கடைக் கண் அருளைப் பெற்றவரே இடம்பம் என்ற குற்றத்தில் இராதவர் ஆவார்.

**விளக்கம்**

மீனாட்சியம்மையே, நின் அருளைப் பெற்றவரே 'டம்பம்' என்ற குற்றத்துக்குட்படார்.

கார்பூத்த - கருமைநிறம் கொண்ட. கண்டம் - கழுத்து. எம் கண் நுதலார் - எம் நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமான். ஈர் ஏழுபார் பூத்த - பதினான்கு உலகங்களை ஈன்ற. பசுங்கொம்பு - பச்சை நிறம் உடைய கொம்பைப் போன்றவளே! கொம்பு - ஆகுபெயர். கடம்பவனத் தாயே - கடம்பவனமாகிய மதுரையில் எழுந்தருளியுள்ள தாயே. இடம்பவனத்தாயே இரார் - டம்பம் மிகுதியில் உள்ளவராக இரார். டம்பம் - பன்னிரண்டு குற்றங்களுள் ஒன்று. (1)

## 712. என்றும் என் மனம் நினைக்கும்!

### கட்டளைக் கலித்துறை

இராநின் றதும் சொக்கர் எண் தோள் குழைய இருகுவட்டால்
பொராநின் றதும்சில பூசலிட்டு ஓடிப் புலவிநலம்
தராநின் றதும் அம்மை அம்மணவாளத் தயவுக்குள்ளாய்
வராநின்றதும் என்று வாய்க்குமென் நெஞ்ச மண வறையே.
2

**தெளிவுரை**

என் மனமாகிய அறையில், மீனாட்சியம்மை, தம் கணவரான சொக்கரின் தோள்கள் குழையும்படி செய்ததும், அவர்

இரண்டு கொங்கையான மலைகளால் போரிட்டதும் (தழுவியதும்), ஊடல் கொண்டு ஓடி ஊடல் இன்பம் தந்ததும், கணவரின் அன்புப் பிடிக்குள் வந்ததும் ஆகிய இவற்றை என்றும் என் மனம் நினைக்கும்.

**விளக்கம்**

இராநின்றது - இருந்தது. சொக்கர் - சொக்கலிங்கப் பெருமான். பொராநின்றது - போரிட்டது. இருகுவட்டால் - இரண்டு கொங்கைகளாகிய மலைகளால், பூசலிட்டு - ஊடல் செய்து. புலவிநலம் - ஊடல் நீங்கிக் கூடலால் உண்டாகும் இன்பம். தராநின்றது - தந்தது. அம்மணவாளர் - கணவரான சொக்கர். வராநின்றது - வந்தது. என்றும் வாய்க்கும் - என்றும் நினைக்கும்.

தாயே, நீ நின்கணவருடன் புரியும் திருவிளையாடல்களை என் மனம் எப்போதும் நினைக்கும். (2)

## 713. சிவபெருமானுக்கு உடம்பை இரு கூறாக்கினாள்

### நேரிசைவெண்பா

மதம்பரவு முக்கண் மழகளிற்றைப் பெற்றுக்
கதம்பவனத் தேஇருந்த கள்வி - மதங்கன்
அடியார்க்கு உடம்புஇருகூறு ஆக்கினாள் பார்க்கின்
கொடியார்க்கு உள கொல் குணம். 3

**தெளிவுரை**

மதத்தையுடைய மூன்று கண்களையுடைய இளைய ஆண் யானைக் கன்றை ஈன்று கடம்பவனமான மதுரையில் இருந்தாள் கள்வி. (மீனாட்சி) பாணபத்திரரின் அடியாரான சிவபெருமானுக்கு உடலை இரண்டு கூறாக ஆக்கினாள். ஆராய்ந்து பார்க்கின் இது கொடிபோன்றவர்க்கு - கொடியவர்க்கு - உள்ள குணம் போலும்!

**விளக்கம்**

மதம்பரவு முக்கண் மழகளிறு - விநாயகர்; மதத்தையுடைய மூன்று கண்களையுடைய இளைய களிறாகிய யானை. கதம்பவனம் - மதுரை. மதங்கன் அடியார்க்கு - பாணபத்திரரின் அடியாரான சிவபெருமானுக்கு, சொக்கநாதர் பாணபத்திரர் பொருட்டு விறகு விற்றார்; ஆதலால் 'மதங்கன் அடியார்' என்றார். மதங்கன் - பாணன்; இங்குப் பாணபத்திரனைக் குறித்தது. உடம்பு இரு கூறு ஆக்கினாள் - உமையம்மை தவம் செய்து, சிவபெருமான் உடலில் ஒருபாதியாய் இருக்கும் படி வரத்தைப் பெற்றாள். ஆதலால் உடம்பு இருகூறு ஆக்கினாள் என்றார். 'கடம்பவனம்' என வரவேண்டியது 'கதம்பவனம்' என எதுகை நோக்கித் திரிந்தது. கொடியார் - கொடியைப் போன்ற இடையை உடையவர்; கொடியவர். (3)

## 714. நினக்கும் உண்டு கனதனம்

### கட்டளைக் கலித்துறை

குணங்கொண்டு நின்னைக் குறைஇரந்து ஆகம்
குழையப் புல்லி
மணம்கொண் டவர்ஒரு வாமம்கொண் டாய்மது
ரேசர்அவர்
பணங்கொண்டு இருப்பது அறிந்துங்கொள் ளாயம்மை
பைந்தொடியார்
கணங்கொண்டு இறைஞ்சும் நினக்கும்உண்
டால்பொன் கனதனமே. 4

**தெளிவுரை**

அம்மையே! நற்குணம் கொண்டு நின்னிடம் வேண்டி இரந்து மார்பு குழையுமாறு தழுவி மணந்து கொண்டார் சிவபெருமான். நீ அவரது ஒரு பாகத்தைப் பெற்றாய். மதுரையின் மன்னரான அவர் பணம் கொண்டிருப்பதைப் பார்த்தும் (படம் உடைய பாம்பை அணியாக அணிந்திருப்பதைக் கண்டும்) அப்பணத்தை நீ பெற்றுக்

கொள்ளாய். பசுமையான வளையலை அணிந்த மங்கையர் கூட்டமாகக் கூடி வணங்கும் உனக்கும் மிக்க பொன் தனம் உண்டு (பொன் போன்ற கனத்த கொங்கை உண்டு).

**விளக்கம்**

குறையிரந்து - உன்னை வேண்டி. ஆகம் - மார்பு; உடல். குழைய - குழையுமாறு. புல்லி - தழுவி. மணம் கொண்டவர் - திருமணம் செய்து கொண்டவர். வாமம் - இடப்பக்கம். மதுரேசர் - மதுரையின் மன்னரான சிவபெருமான். பணம் - செல்வம்; பாம்பின் படம். கொள்ளாய் - பெற்றுக்கொள்ளமாட்டாய். இதற்கு என்ன காரணம் என்றால் நீயும் மிக்க செல்வம் பெற்றுள்ளமையே என்பார். 'நினக்கும் உண்டால் பொன் கனதனமே' என்றார். பொன்கனதனம் - பொன் என்ற பெருஞ் செல்வம். பொன் போன்ற கனமான கொங்கை. இறைஞ்சும் - வணங்கும். பைந் தொடியார் - பசிய வளையலை அணிந்த பெண்கள். (4)

## 715. உன் போல் செல்வம் இருந்தால் கால்மாறி ஆடார்

### நேரிசை வெண்பா

கனம்இருக்கும் கந்தரர்க்குஉன் கன்னிநாடு ஈந்துஎன்
தினம் இரப்ப தோஒழியார் தேனே-பனவனுக்காப்
பாமாறி யார்க்குஉனைப்போல் பாரத் தனம்இருந்தால்
தாம்மாறி ஆடுவரோ தான். 5

**தெளிவுரை**

தேன் போன்றவளே!

மேகத்தின் கரிய நிறம் கொண்ட கழுத்தை யுடைய சொக்க நாதர்க்கு உனது பாண்டிய நாட்டைத் தந்து என்ன பயன்? அவர் யாசிக்கும் தொழிலைக் கைவிடவில்லை! ஓர் பார்ப்பனனுக்காகத் தன் பாட்டை விற்றவர் உன்னைப் போன்ற தனம் (செல்வம்

கொங்கை) இருந்தால் தாம் கால் மாறி ஆடுவாரோ! ஆட மாட்டார்.

**விளக்கம்**

கனம் இருக்கும் - மேகத்தின் கரிய நிறம் பொருந்தி யிருக்கின்ற கந்தரர்க்கு - கழுத்தையுடையவர்க்கு. கன்னி நாடு - பாண்டிய நாடு. ஈந்து என் - தந்ததால் என்ன பயன்? தினம் இரப்பதோ ஒழியார் - நாள் தோறும் இரத்தலைக் கைவிட மாட்டார். தேனே - தேன் போன்றவளே!

பனவனுக்கா - தருமி என்ற பார்ப்பானுக்காக. பா மாறியார் - தம் பாட்டை விலைக்கு விற்றவர். பாரத்தனம் - கனமான கொங்கை; பெருத்தசெல்வம். தாம் மாறி ஆடுவரோ - கால்மாறி ஆடுவாரோ. கால் மாறி ஆடுதல் வரலாறு - இராசசேகர பாண்டியன் என்ற மன்னன், இறைவன் நெடுங்காலமாக ஒரே காலில் நின்றபடி ஆடியதினின்று மாற்றிஆட வேண்டும் என வேண்டிக் கொண்டான். அவன் வேண்டுகோளுக்கு இரங்கி இறைவர் காலை மாற்றி வைத்து ஆடினார்.

இறைவன் கூத்தாடுவதற்குக் காரணம் பணம் இல்லாமையே ஆகும் என்பது கருத்து.

பா மாறியார் - பாடலை விலைக்கு விற்றவர். (5)

## 716. ஆனந்த மாக்கடலில் மீனாட்சியம்மையின் கருங்கண்மீன் விளையாடும்

### கட்டளைக் கலித்துறை

தானின்று உலகு தழையத் தழைந்த தமிழ் மதுரைக்
கானின்ற பூங்குழல் கர்ப்பூர வல்லி கருங்கண்செய்ய
மீனின்று உலாவி விளையா டுவதுவிண் ஆறு அலைய
வானின்றது ஓர்வெள்ளி மன்றுஆடும் ஆனந்த மாக்கடலே.

6

**தெளிவுரை**

தான் நிலைபெற்றதால் உலகமானது வளம் பெறுகின்ற மதுரைப்பதியில், மணம் பொருந்திய பூவையுடைய கூந்தலை யுடைய கர்ப்பூர வல்லியான மீனாட்சி அம்மையின் கரிய கண்ணான சிவந்த மீன் பொருந்தி விளையாடுவது கங்கையாறு அலைய வானத்தில் நின்ற ஓர் வெள்ளியம்பலத்தில் உள்ள ஆனந்த மாக்கடலில் ஆகும்.

**விளக்கம்**

மீனாட்சியம்மையின் கருங்கண்ணான மீன் விளையாடு வதற்கு இடமாக உள்ளது ஆனந்த மாக்கடல் என்பதாம். ஆனந்த மாக்கடல் என்றது சிவபெருமானை. விண் ஆறு அலைய - அப்பெருமான் ஆடும் போது அவர் அணிந்த கங்கையும் ஆடுகின்றது. ஆதலால் விண் ஆறு அலைய என்றார். விண் ஆறு - கங்கையாறு.

மதுரை நிலைபெற்றுள்ளதால் உலகம் நிலை பெற்று வாழ்கின்றது. ஆதலால் தான் நின்று உலகு தழைய என்றார். தான் நின்று - தான் நிலை பெற்றதால். உலகு தழைய - உலகும் வளம் பெற. கான் நின்ற - நறு மணம் பொருந்திய. கர்ப்பூரவல்லி - மீனாட்சியம்மை. வெள்ளி மன்று - வெள்ளியம்பலம்; இது மதுரையில் உள்ளது. (6)

## 717. இவளுக்கு வேறு வேலை இல்லை!

### நேரிசை வெண்பா

கடம்பவன வல்லிசெல்வக் கர்ப்பூர வல்லி
மடந்தை அபிடேக வல்லி - நெடுந்தகையை
ஆட்டுவிப்பாள் ஆடல்இவட்கு ஆடல்வேறு
இல்லை எமைப்
பாட்டுவிப்ப தும்கேட் பதும். 7

### தெளிவுரை

மதுரையில் வீற்றிருக்கின்ற கர்ப்பூரவல்லியும் கடம்பவன வல்லியும் செல்வத்தையுடைய அபிடேகவல்லியும் ஆன மீனாட்சியம்மை சிவபெருமானை ஆடும்படி ஆட்டுவிப்பாள். எம்மைப் பாடும்படி செய்வதும் கேட்பதும் தவிர வேறு திருவிளையாடல் இவளுக்கு இல்லை.

### விளக்கம்

கடம்பவனவல்லி, கர்ப்பூரவல்லி, அபிடேகவல்லி என்பவை மீனாட்சியம்மையின் திருப் பெயர்கள். நெடுந்தகையை - சிவபெருமானை. ஆடல் ஆட்டுவிப்பாள் - ஆடல் ஆடும்படி செய்வாள். எம்மைப் பாடச் செய்வதும் அதனைத் தான் கேட்பதுமன்றி வேறு திருவிளையாடல் இவ்வம்மைக்கு இல்லை. அபிடேகம் - முடி. அபிடேக வல்லி - முடி சூடிய அரசி. (7)

## 718. பித்தன்று, பேதைமை!

### கட்டளைக் கலித்துறை

பதுமத் திருவல்லி கர்ப்பூர வல்லிநின் பாதபத்மம்
மதுமத் தொடும்தம் முடிவைத்த வாமது ரேசர்அவர்
இது மத்தப் பித்துமன்று ஏழைமை முன்னர்
இமையவர் கைப்
புதுமத் தினைப் பொன் சிலைஎன்று எடுத்த புராந்தகர்க்கே.
8

### தெளிவுரை

தாமரையில் வீற்றிருப்பவளும் கர்ப்பூரவல்லியுமான நின் திருவடித் தாமரையுடன் ஊமத்தை மலரை இறைவர் தம் முடியில் அணிந்துள்ளது என்ன வியப்பு! முன்காலத்தில் தேவரின் புதிய மத்தான மேருமலையைப் பொன்வில் என்று எடுத்துத் திரி புரங்களை எரித்தவரான மதுரேசர்க்கு மேற்சொன்ன செயல் மனமயக்கத்தால் வந்தது பித்தும் அன்று. அறியாமையே ஆகும்.

**விளக்கம்**

மீனாட்சியம்மையே, இறைவர் நின் திருவடியுடன் ஊமத்தை மலரைத் தலையில் சூடியுள்ளது மனமயக்கத்தினால் உண்டான செயல் அன்று. அறியாமை ஆகும் என்பது கருத்து. அம்மையின் திருவடியான தாமரை மலருடன் ஊமத்தை மலரைச் சூடியது வியப்பைத் தருகின்றது!

பாதபத்மம் - திருவடித்தாமரை. மதுமத்து - ஊமத்தை.

வைத்தவா - வைத்தது என்ன வியப்பு! மதுரேசர் - சிவபெருமான். இது மத்தப் பித்தும் அன்று - இது மனமயக்கத்தால் வந்த பித்தும் அன்று. ஏழைமை - அறியாமை. புராந்தகர்க்கு இது மத்துமன்று; ஏழைமை என இயைக்க. இமையவர் கைப் புதுமத்து - தேவர் கையில் கொண்ட புதியமத்து, பொற்சிலை - மேருமலை; அதனை இறைவர் வில்லாகக் கைக் கொண்டார். புராந்தகர் - முப்புரங்களை அழித்தவர். (8)

## 719. என் மன வீட்டில் விளக்கிட்டிரு!

### நேரிசை வெண்பா

தகுமே கடம்பவனத் தாயேநின் சிற்றில்
அகமேஎன் நெஞ்சகமது ஆனால் - மகிழ்நரொடும்
வாழாநின் றாய்இம் மனையிருள்மூ டிக்கிடப்பது
ஏழாய் விளக்கிட் டிரு. 9

**தெளிவுரை**

மதுரையில் வீற்றிருக்கின்ற மீனாட்சித் தாயே! நின் சிறிய இல்லமாக என மனத்தைக் கொண்டதானால், நீ நின் கணவ ரோடும் இந்த இல்லத்தில் இருப்பது தக்கதே! பெண்ணே! ஆதலால் இந்த இல்லம் இருள் மூடிக் கிடப்பது. ஆதலால் இதில் நீ விளக்கு இட்டு இருத்தல் வேண்டும்.

**விளக்கம்**

கடம்பவனத் தாயே!-மீனாட்சி அம்மையே. கடம்பவனம் - மதுரை. சிற்றிலகம் - சிறிய இல்லம். என்நெஞ்ச கமதானால் - என் மனமானால். மகிழ்நர் - கணவர். வாழா நின்றாய் - வாழ்பவளே. இருள் - அறியாமை. ஏழாய் - பெண்ணே; ஏழையே! விளக்கு இட்டு இரு - விளக்கை ஏற்றி வைத்திருப்பாய்!

'நீ ஏழை ஆதலால் குடிக்கூலி வேண்டா. விளக்கை ஏற்றி வைத்திருந்தால் போதும்' என்றார். 'தொழும்பர் உளக் கோயிற்கு ஏற்றும் விளக்கே' என்பது இங்கு நினைவு கூரத் தக்கது. (9)

## 720. கர்ப்பூரவல்லியின் பொய்கை, மலை, ஆலயம்

### கட்டளைக் கலித்துறை

இரைக்கு நதிவைகை பொய்கைபொன் தாமரை
ஈர்ந் தண்தமிழ்
வரைக்கு மலைதென் மலயம தேசொக்கர் வஞ்ச நெஞ்சைக்
கரைக்கும் கனகள்வி கர்ப்பூர வல்லிக்குக் கற்பகத்தால்
நிரைக்கும்பொன் கோயில் திருவால வாயும்
என்நெஞ்சமுமே 10

**தெளிவுரை**

சொக்கர் பெருமானின் வஞ்ச நெஞ்சைக் கரைக்கும் பெருங் கள்வியான கர்ப்பூரவல்லிக்கு - மீனாட்சியம்மைக்கு நதி, ஒலிக்கும் வைகையாறாகும். பொய்கை பொற்றாமரைக் குளமாகும். மலை, குளிர்ச்சியுடைய தமிழையுடைய தென் பொதிய மலையாகும். அவளுக்குக் கற்பக மலரால் அர்ச்சனை செய்யப்படும் பொற்கோயில், மதுரைத் திருவாலவாயும் என் மனமுமே ஆகும்.

**விளக்கம்**

இரைக்கும் - ஒலிக்கும். பொற்றாமரை - பொற்றாமரைக் குளமாகும். ஈர்ந்தண்தமிழ் - மிகவும் குளிர்ந்த தமிழ். வரைக்கும் -

அகப்படுத்தும். தென்மலயமதே - தெற்கில் உள்ள பொதிய மலையாகும். கரைக்கும் - நெகிழச் செய்யும். கற்பகத்தால் - கற்பகமலரால். பொன் கோயில் - அழகிய கோயில். (10)

## 721. இயமனே நின் செயல் தகாது!

### நேரிசை வெண்பா

நெஞ்சே திருக்கோயில் நீல்உண்டு இருண்டகுழல்
மஞ்சேந்து அபிடேக வல்லிக்கு - விஞ்சி
வரும் அந்தகாஎன் வழிவருதி யால்இக்
கருமம் தகாஎன் கருத்து. 11

**தெளிவுரை**

கரிய நிறத்தைப் பெற்று இருண்ட கூந்தலான மேகத்தை உடைய அபிடேக வல்லியான மீனாட்சி அம்மைக்கு, என் மனமே திருக்கோயிலாகும். சினத்தால் மிக்கு வரும் இயமனே! என் வழியில் வருகின்றாய்! இது உனக்குத் தகாது! இது என் கருத்து.

**விளக்கம்**

நீல்உண்டு இருண்ட குழல் - கரிய நிறத்தை உடைய இருண்ட கூந்தல். குழல்மஞ்சு - கூந்தல் என்ற மேகம். அந்தகா - இயமனே. அந்தகன் - உயிர்களுக்கு அந்தத்தை - வாழ்வின் முடிவை - ஏற்படுத்துபவன். ஆதலால் இப்பெயர். வருதியால் - வருகின்றாய். ஆல் - அசை. கருமம் தகாது - நின் செயல் தகாதது.

## 722. சிவபெருமானை அருள்வாய்!

### கட்டளைக் கலித்துறை

கருவால வாய்நொந்து அறமெலிந் தேற்குஇரு
கால் மலரைந்
தருஆல வாய்நின்றது ஒன்றுஉத வாய், வன்
தடக்கைக்கு நேர்

பொருஆல வாய்எட்டுப் போர்க்களிறு ஏந்து பொன்
கோயில் கொண்ட
திருஆல வாய்மருந் தேதென்னர் கோன்பெற்ற
தெள்அமுதே. 12

## தெளிவுரை

முன்னே தொங்கும் வளைந்த கையை ஒத்துப் பின் விளங்கும் வாலை உடைய எட்டு ஆண் போர் யானைகளால் சுமக்கப்படும் பொற்கோயிலில் வீற்றிருக்கின்ற திருவாலவாய் மருந்தைப் போன்றவளே! பாண்டியன் பெற்றெடுத்த தெளிந்த அமுதம்போன்ற மீனாட்சியே! மண் முதலியவற்றை ஆசைப்பட்டு அதன் பயனாக வந்த பிறவியினால் மிகவும் இளைப்பை அடைந்தேன். இத்தகைய எனக்கு இரண்டு கால் மலர்களை யுடைய ஐந்து மரமாகி ஆலமரத்தினிடத்தே நின்ற பரம் பொருளாகிய சிவபெருமானை எனக்கு உதவுவாயாக!

## விளக்கம்

கருவால வாய் நொந்தற மெலிந்தேற்கு - அவாய் கருவால் அற நொந்து மெலிந்தேற்கு; மண் முதலியவற்றின் மீது ஆசை கொண்டு அதன் பயனாக வந்த பிறவியால் துன்பம் அடைந்து இளைத்த எனக்கு என்பது பொருள். கான்மலர் ஐந்தரு ஆலவாய் நின்றது - இரண்டு கால் மலரையுடைய ஐந்தருவாகி ஆல மரத்தினிடம் நின்ற பரம் பொருளாகிய ஒன்றை (சிவ பெருமானை). உதவாய் - உதவுவாயாக. வன் தடக்கைக்கு நேர் பொரு ஆலவாய் எட்டுப் போர்க்களிறு ஏந்து பொற்கோயில் - இது மதுரையில் உள்ள இந்திர விமானம் - முன்னே தொங்கும் வளைந்த கையைப்போல் பின்னே விளங்கும் வாலை யுடையனவாகி விளங்கும் இந்திர விமானம். இது எட்டு யானைகளால் சுமக்கப்படுவது. (12)

## 723. மலைக்கு வடு அன்று; மணம்!

### நேரிசை வெண்பா

தென்மலையும் கன்னித் திருநாடும் வெள்ளிமலைப்
பொன்மலைக்கே தந்த பொலங்கொம்பே - நின்மா
முலைக்குவடு பாய்சுவடு முன்காய மால்அம்
மலைக்குவடு அன்றே மணம். 13

**தெளிவுரை**

பொதிய மலையையும் பாண்டிய நாட்டையும் வெள்ளி மலையில் உள்ள பொன்மலை போன்ற சிவபெருமானுக்கே தந்த பொன் கொம்பு போன்ற மீனாட்சியே! நின் பெரிய கொங்கை மலை பாய்ந்ததால் எம்பிரான் மார்பில் உண்டான சுவடு முன் புண் - மார்பில் உண்டான புண். ஆதலால் அது எம்பெருமானாகிய் மலைக்கு வடு ஆகாது; மணம் ஆகும்.

**விளக்கம்**

தென்மலை - பொதியமலை. கன்னித் திருநாடு - பாண்டிய நாடு. வெள்ளி மலைப் பொன்மலை - வெள்ளி மலையான கயிலாயமலையில் உள்ள பொன்மலையான சிவபெருமானுக்கு. பொலம் - பொன். கொம்பே - கொம்பைப் போன்ற மீனாட்சியே. நின்மா முலைக்கு வடு - நின் பெரிய முலைக்குன்று. பாய்சுவடு - பாய்ந்ததால் ஏற்பட்ட புண்அடையாளம். முன்காயமால் - மார்பில் ஏற்பட்ட புண் ஆகும். ஆதலால் அது வடுவாகாது! மணம் ஆதற்குக் காரணம் ஆயிற்று. பட்ட புண் மார்பில் என்றால் இகழப் படாது; விழுப்புண் எனப் புகழ்ந்து பேசப்படும். முதுகில் பட்டிருந்தால் புறப்புண் என்று இகழ்ந்து பேசப்படும். (13)

## 724. நின்னைப் பணியாத என் பண்பு!

### கட்டளைக் கலித்துறை

மணியே, ஒருபச்சை மாணிக்க மேமருந் தேஎன்று ன்னைப்
பணியேன்; பணிந்தவர் பாலும்செல் லேன்;அவர்
பால்செலவும்

துணியேன்; துணிந்ததை என்உரைக் கேன்மது
ரைத்திருநாட்டு
அணியே, அனைத்துஉயிர்க் கும்அனை நீஎன்று
அறிந்து கொண்டே. 14

**தெளிவுரை**

மதுரை என்ற அழகிய நாட்டுக்கு அணியாய் விளங்கு பவளே! எல்லா உயிர்களுக்கும் நீ தாய் ஆவாய் என்று நான் அறிந்து கொண்டேன். அறிந்தும், மணி போன்றவளே! பச்சை நிறமுடைய மாணிக்கமே! அமிர்தமான மருந்தே என்று உன்னை நான் பணியேன். நின்னை வழிபடுபவரிடமும் போகேன்! அவர் பால் செல்லவும் துணியேன். துணிந்ததை என்னவென்று கூறுவேன்!

**விளக்கம்**

மணியே - மணியைப் போன்றவளே. பச்சை மாணிக்கமே - பச்சை நிறம் உடைய மாணிக்கம் போன்றவளே. மாணிக்கம் பச்சை நிறம் உடையதன்று; செந்நிறம் கொண்டது. மீனாட்சி யம்மை பச்சை நிறம் உடையவள். ஆதலால் பச்சை நிறம் உடைய மாணிக்கம் போன்றவளே என்றார். மருந்தே - அமிர்தம் போன்றவளே! துணியேன் - நினையேன். என் உரைக்கேன் - என்ன என்று கூறுவேன். அனைத்துயிர்க்கும் மனை - அனைத்து + உயிர்க்கும் + அனை; 'அன்னை' என்பது 'அனை' என விகாரப் பட்டது. (14)

## 725. கற்பூரவல்லி மனத்துள் புக, கலைமகள் நாவில் புகுந்தாள்!

### நேரிசை வெண்பா

கொண்டைச் செருக்கும் குறுநகையும் நெட்டயிற்கண்
கெண்டைப் பிறக்கமும்வாய்க் கிஞ்சுகமும் - கொண்டு
அம்மை

கற்பூர வல்லி கருத்தில் புகப்புகுந்தாள்
நற்பூர வல்லியும் என் நா. 15

**தெளிவுரை**

கொண்டைச் செருக்கும் புன்னகையும் நெடிய நீண்ட கூர்மை ஆன கெண்டைமீனின் விளக்கமும், வாயாகிய முள் முருங்கையும் உடையவளாய் மீனாட்சி அம்மையான கற்பூர வல்லி என் மனத்துள் புகுந்தாள். அவள் புகவே கலைமகளும் என் நாவில் வந்து புகுந்தாள்.

**விளக்கம்**

மீனாட்சி உள்ளத்துள் புகக் கலைமகள் நாவில் புகுந்தாள் என்க. அம்பிகையின் திருவருள் இருந்தால் கல்வியறிவு உண்டாகும் என்பது கருத்து. கொண்டைச் செருக்கு - கொண்டையால் ஏற்படும் பெருமிதம். நெட்டு அயில்கண் கெண்டை - நீண்ட வேல் போன்ற கண்களையுடைய கெண்டை மீன். பிறக்கம் - விளக்கம். வாய்க்கிஞ்சுகம் - முள் முருங்கை. என்னா - என் + நா; எனது நாவில். நற்பூரவல்லி - நல்பூரவல்லி. கலைமகளின் திருப்பெயர்களுள் ஒன்று பூரவல்லி; இது 'பூரவாஹிணி' என்ற பெயரின் மொழி பெயர்ப்பு. (15)

## 726. நார் இல்லை பூத் தொடுப்பதற்கு!

### கட்டளைக் கலித்துறை

நாஉண்டு, நெஞ்சுஉண்டு, நல்தமிழ் உண்டு, நயந்தசில
பாவுண்டு, இனங்கள் பலவும்உண்டேபங்கில்
கொண்டிருந்தோர்
தேவுண்டு உவக்கும் கடம்பா டவிப்பசுந்
தேனின் பைந்தாள்
பூவுண்டு நார்ஒன்று இலையாம் தொடுத்துப்புனை வதற்கே.
16

### தெளிவுரை

திருப்பெயரைக் கூற நாக்கு உண்டு; நினைக்க மனம் உண்டு; நல்ல தமிழ் உண்டு; விரும்பும் சில பாக்கள் உண்டு; பாவினங்கள் பலவும் உண்டு. தன் பங்கில் கொண்டுள்ள ஒரு தெய்வமான சிவபெருமான் மகிழும் கடம்பவனப் பசிய தேனான மீனாட்சி அம்மையின் பசிய தாளையுடைய மலர் உண்டு; ஆனால் தொடுத்துச் சூட்டுதற்கு நார் இல்லையே!

### விளக்கம்

நயந்த - விரும்பிய. பா - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா. பாஇனம் - பாவினமான தாழிசை, துறை, விருத்தம். பங்கில் - வாம பாகத்தில். கொண்டிருந்தோர் தேவுண்டு உவக்கும் கடம்பாடவிப் பசுந்தேன் - சிவபெருமான் உண்டு மகிழும் கடம்பவனத்துப் பசிய தேன் மீனாட்சி. பூவிருந்தும் நார் இல்லை என்பது ஒரு நயம். நார் - மாலை கட்டுதற்குரிய நார். (16)

## 727. அம்பிகையின் அருள்

### நேரிசை வெண்பா

புனைந்தாள் கடம்பவனப் பூவைசில பாவை;
வனைந்தாள்எம் வாயும் மனமும்;-தினம் தினமும்
பொன்பதமே நாறும் அவள் பூம்பதம்என் றேம்நமது
சொல்பதமே நாறும் சுவை. 17

### தெளிவுரை

என் சில பாக்களை கடம்பவனத்துப் பூவையைப்போன்ற மீனாட்சியம்மையார் அணிந்து கொண்டாள். எம் வாயையும் மனத்தையும் தன் இருப்பிடமாக அலங்கரித்தாள். (எழுந்தருளி யிருந்தாள்). நாள்தோறும் அவளுடைய மலர் அடி பொன் உலகம் முழுவதும் மணம் பரப்பும் என்று துதித்தோம். அதனால் நம் சொல்லாகிய பதம் சுவை யுடையதாய் விளங்கும்.

**விளக்கம்**

புனைந்தாள் கடம்பவனப்பூவை சிலபாவை - கடம்பவனப் பூவை சிலபாவை புனைந்தாள் எனப்பிரித்துக் கூட்டுக. கடம்பவனப் பெண்ணான பூவையைப் போன்ற மீனாட்சி அம்மை என் பாக்களுள் சிலவற்றை அணிந்து கொண்டாள். எம் வாயும் மனமும் வனைந்தாள் - எம் வாயையும் மனத்தையும் அலங்கரித்தாள். தினம் தினம் அவள் பூம்பதம் நாறும் என்றேம் - நாள்தோறும் அவளுடைய திருவடிகள் பொன் உலகம் முழுவதும் மணம் கமழும் என்று கூறினோம். சொற்பதம் - சொல்லான பதம். சுவை நாறும் - சுவை யுடையதாய் விளங்கும். (17)

## 728. தயக்கம் இன்றி என் பாட்டைச் சூடுக.

கட்டளைக் கலித்துறை

சுவைஉண்டு எனக்கொண்டு சூடுதியால், மற்றுஎன்
சொல்தமிழ்க்கு ஓர்
நவைஉண்டு எனஅற நாணுதி போலும்
நகைத்தே மூன்று
அவையுண் டவரொடு அருள்கூடல் வைகும்அம்
மேசொல்பொருட்கு
எவையுண்டு குற்றம் அவையுண்டு நீவிர்
இருவிர்க்குமே. 18

**தெளிவுரை**

புன்னகை கொண்டு மூன்று மதில்களையும் எரித்தவருடன் அருள் பொலியும் மதுரையம்பதியில் வைகும் அம்மையே! என் பாட்டுக்குச் சுவையுண்டு என்று எண்ணிச் சூடுவாயாக! என்னால் இயற்றப்படும் பாவிற்கு ஒரு குற்றம் உண்டு என்று எண்ணி நாணித் தயங்குகிறாய் போலும்! (சொல்லும் பொருளுமாகிய நீவிர் - சத்தியும் சிவமும் என்னும் இருவரும் - சொல்லாகவும்

பொருளாகவும் விளங்குதலால்) சொல்லுக்கும் பொருளுக்கும் எக் குறையுண்டு. அவை உம் இருவருக்கும் உள்ளன. ஆதலால் தயங்காது அணிந்து கொள்வாய்!

**விளக்கம்**

என் பாட்டைச் சூடிக் கொள்க என்பது கருத்து.

சூடுதியால் - சூடுதி+ஆல்; சூடிக் கொள்வாயாக. நவை - குற்றம். அற நாணுதி - மிகவும் நாணம் கொள்கின்றாய்; தயங்கு கின்றாய். நகைத்து - சிரித்து. மூன்றவை - மூன்று + அவை; அவை - பகுதிப் பொருள் விகுதி. உண்டவர் - எரித்தவர். கூடல் - மதுரை. அம்மே - மீனாட்சி அன்னையே. சக்தி சொல்லாகவும் சிவம் பொருளாகவும் உரைப்பர். எனவே சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள குற்றம் உமக்கும் உண்டு என்று உரைத்தார்.

(18)

## 729. கலைமகளையும் ஏவல் கொள்வாள்!

### நேரிசை வெண்பா

விண்டிருந்த பொன்கமல மீதிருந்த பொன்னினையும்
கொண்டிருந்து குற்றேவல் கொள்ளுமால் -
தொண்டர் அண்டர்
தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக் கேகடப்பம்
பூங்காவில் வீற்றிருந்த பொன். 19

**தெளிவுரை**

அடியார்கள் தேவரின் இனிய கற்பகச் சோலையில் வீற்றிருக்கச் செய்வதற்குத் தென் மதுரையில் கடம்பவனப் பூங்காவில் வீற்றிருக்கின்ற பொன்னான மீனாட்சியம்மையார் மலர்ந்திருந்த வெண் தாமரையில் வீற்றிருக்கும் திருமகளையும் தனக்கு ஏவல் கொள்ளுமாறு செய்யும்.

**விளக்கம்**

கடம்பவனப் பொன் தாமரைப் பொன்னை ஆட்கொள்ளும் என்பது நயம்.

விண்டிருந்த - மலர்ந்திருந்த. பொற்கமலம் - அழகிய வெண் தாமரையில் வீற்றிருக்கும் திருமகள். பொன் - திருமகள். ஏவல் கொள்ளுமால் - ஆட்கொள்ளும்; பணிசெய்யும்படி செய்யும். ஆல் - அசை நிலை. தொண்டர் - அடியவர். அண்டர் - தேவர். தேங்கா - கற்பகச் சோலை. மதுரைக்கே - மதுரையில். கடப்பம் பூங்கா - கடம்ப வனம். பூங்காவில் வீற்றிருந்த பொன் - மீனாட்சி யம்மை. (19)

## 730. வன்நெஞ்சத்தில் கற்பூரவல்லிகுடி புகுந்ததேன்?

### கட்டளைக் கலித்துறை

**பொற்பூர வல்லி கமலத்தளேகொல் புகுந்தகமும்**
**வெற்பூர வல்லி பிறந்தக மும்மது மீட்டுமென்னே**
**அற்பூர வல்லிஎன் வன்நெஞ்சக் கஞ்சத்தெம் ஐயனொடும்**
**கற்பூர வல்லி குடிபுகுந் தேநின்ற காரணமே. 20**

**தெளிவுரை**

இமய மலையில் தோன்றிய அழகிய உமையம்மையார் புகுந்த இடமாகிய அடியாருடைய உள்ளமும் தாமரையே! அப் பெருமாட்டி பிறந்த வீடும் இமயமலைச் சாரலில் உள்ள சுனையில் மலர்ந்த தாமரையே! மீண்டும் அன்புமிக என் கீழான நெஞ்ச மாகிய தாமரையில் எம் பெருமானோடும் அக்கற்பூரவல்லி குடிபுகுந்துநின்ற காரணம் என்னே! அவள்தான் வெண் தாமரையை இருக்கையாகக் கொண்ட கலைமகளோ! அன்றிச் செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளோ!

**விளக்கம்**

பொற்பூரவல்லி - பொன்+பூரவல்லி; பொன் - அழகிய; பூரவல்லி - கலைமகள். கமலத்தளோ செந்தாமரையில் உள்ள திரு மகளோ, வல்லி கொல், கமலத்தளே சொல் என இரண்டிடத்தும் 'கொல்' என்பதைக் கூட்டுக. புகுந்தகமும் - புகுந்த + அகமும்; புகுந்த வீடும்; புகுந்த இடமான அடியாருடைய உள்ளத் தாமரை. பிறந்தகமும் - பிறந்த+அகமும்; பிறந்தவீடும்; பிறந்த இடமும் இமயமலைச் சாரலில் உள்ள சுனைக்கண் மலர்ந்த தாமரை; வெற்பூர வல்லி - வெற்பு + ஊர் + அ + வல்லி; இமய மலையில் தோன்றிய அழகிய உமையம்மையார். நெஞ்சக் கஞ்சம் - உள்ளமாகிய தாமரை. எம் ஐயனோடும் - எம் பெருமானுடனும். கற்பூரவல்லி - உமையாள்.

இரண்டு உயர்ந்த தாமரை மலர்களை இருக்கையாக உடையவள் என் மனம் என்ற இழிந்த தாமரையிலும் சிவ பெருமானுடன் குடி புகக் காரணம் என்ன வியப்பு! அவள்தான் கலைமகளோ, திருமகளோ! (20)

*மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை மூலமும்*
*தெளிவுரையும் முற்றுப் பெற்றன*

# 13. மதுரை மீனாட்சியம்மை குறம்

இது, மதுரை மீனாட்சியம்மையைப் பற்றிய குறம் என்று பொருள்படும்.

குறமாவது இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலத்தில் நிகழ்வனவற்றையும் அறிந்து சிறந்த வகையில் அமைய உரைத்தலைப் பாடுவதாகும்.

> 'இறப்பு நிகழ்வு எதிர் என்னும்முக் காலமும்
> திறப்பட உரைப்பது குறத்திப் பாட்டே'
>
> *(பன்னிரு பாட்டியல் 131)*

தலைவன் உலாவருதல் அவனைக் கண்டு தலைவி காமுறுதல், திங்கள் தென்றல் முதலியவற்றால் அவள் வருந்துதல், அப்போது குறத்தி ஒருத்தி தலைவிக்குக் குறி கூறல் முதலியன குறம் எனப்படும். இதனைக் 'குறத்திப்பாட்டு' எனவும் 'குறவஞ்சி' எனவும் உரைப்பர்.

## 731. குறம்பாடச் சித்தி விநாயகரை வணங்குவோம்

### காப்பு

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

கார்கொண்ட பொழில்மதுரைக் கர்ப்பூர வல்லிமணம்
கமழும் தெய்வத்
தார்கொண்ட கருங்குழல்அம் கயற்கண்நாயகிகுறம்செந்
தமிழால் பாட,
வார்கொண்ட புகர்முகத்துஐங் கரத்து ஒரு கோட்டு
இருசெவிமும்
மதத்து நால்வாய்ப்

போர் கொண்ட கவுள்சிறுகண் சித்தி விநாயகன்
துணைத்தாள்
போற்று வாமே.

**தெளிவுரை**

கரிய மேகம் தங்கும் சோலையையுடைய மதுரையம்பதியில் வீற்றிருக்கும் கர்ப்பூரவல்லியும், நறுமணம் கமழும் தெய்வத் தன்மையுடைய மாலை சூடிய கரிய கூந்தலையுடைய மீனாட்சி யம்மையுமான இறைவியின் குறத்தைச் செந்தமிழால் பாட நீண்ட புள்ளிகளையுடைய முகமும் ஐந்து கைகளும் ஒருகொம்பும் இரு செவிகளும் மூன்று மதங்களும் தொங்கும் வாயும் போர் ஆற்றல் உடைய கன்னமும் சிறுகண்களும் உடைய சித்தி விநாயகப் பெருமானின் இரு திருவடிகளை வணங்குவோம்.

**விளக்கம்**

யாம் குறம் பாடச் சித்திவிநாயகரை வணங்குவோம். சித்தி விநாயகர் - மதுரையில் உள்ள விநாயகப் பெருமான்.

கார்கொண்ட பொழில் - கரிய மேகம் தங்கும் சோலை. தெய்வத்தார் - தெய்வத்தன்மையுடைய மாலையைச் சூடியுள்ள. அங்கயற்கணாயகி - அங்கயற்கண் நாயகி; மீனாட்சி. வார் கொண்ட - நீளம் உடைய. புகர் - புள்ளி. ஐங்கரம் - ஐந்து கைகள். ஒரு கோடு - ஒரு தந்தம். மும்மதம் - கன்னமதம், கபோல மதம், பீஜமதம் என்ற மூன்று மதம். துணைத்தாள் - இரு திருவடிகள்.

## 732. பொதிய மலை குறத்தி நான்

### சிந்து

1. பூமருவிய பொழில்திகழ் மதுரா
புரிமருவிய அங்கயற்கண் அம்மை
தேமருவிய மதிதவழ் குடுமித்
தென்பொதியக் குறத்திநான் அம்மே.

2. செந்நெல் முத்தும் கன்னல்முத் துமொளி
திகழ்மதுரை அங்கயற்கண் அம்மை
பொன்னும் முத்தும் சொரியும்வெள் அருவிப்
பொதியமலைக் குறத்தி நான் அம்மே.

### தெளிவுரை

1. நான், மலர்கள் மலர்ந்துள்ள சோலைகள் விளங்கும் மதுரைப்பதியில் வீற்றிருக்கும் அங்கயற்கண் அம்மைக்கு உரியதான தேன் பொருந்திய சந்திரன் தவழுகின்ற உச்சியை யுடைய தென் பொதிய மலையில் வாழும் குறத்தியாவேன்.

2. செந்நெல் முத்தும், கரும்பினின்று தோன்றும் முத்தும் விளங்கும் மதுரை அம்பதியில் வீற்றிருக்கின்ற மீனாட்சி யம்மையின் பொன்னையும் முத்தையும் வீசும் வெண்மையான அருவிகளையும் உடைய பொதியமலையில் வாழும் குறத்தி நான்.

### விளக்கம்

(1) பூ மருவிய - மலர்கள் மலர்ந்துள்ள. பொழில் - சோலை. அங்கயற்கண்ணம்மை - அம்+கயல்கண்+அம்மை; மீனாட்சி என்பதன் தமிழ்ப் பெயர்ப்பு. தேமருவிய-தேன் பொருந்திய; இனிமைபொருந்திய எனவும் கொள்ளலாம். குடுமி - உச்சி. தென் பொதியம் - தென் திக்கில் உள்ள பொதிய மலை.

(2) செந்நெல் முத்து - செந்நெல்லான முத்து. நெல் பயிரிலிருந்து முத்துப் பிறக்கும் என்பர். ஆதலால் அதையும் கொள்க. கன்னல் முத்து - கரும்பினின்று தோன்றும் முத்து. சொரியும் - வீசும். எறியும் கரைகளில் - தான் போகும் இடங்களில் எல்லாம் பொன்னையும் முத்துக்களையும் சொரியும் வெண்மை யான அருவிகள்.

## 723. தமிழ் முனிவன் குடியிருக்கும் மலை என்மலை

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

3. செண்டிருக்கும் வடவரையில் சேல்இருக்கும் அரசிருக்கும்
தென்னர் ஈன்ற
கண்டிருக்கும் மதுரமொழிக் கனியிருக்கும் துவர்இதழ் அம்
கயற்கண் பாவை
வண்டிருக்கும் நறைக்கமல மலர்இருக்கும் பரிபுரத்தாள்
மனத்துள் வைத்துக்
கொண்டிருக்கும் தமிழ்முனிவன் குடியிருக்கும்
பொதியமலைக்
குறத்தி நானே.

**தெளிவுரை**

கரிகாலனால் செண்டு எறியப்பட்ட இமயமலையில் சேல் மீன் இலச்சினை இருத்தற்குக் காரணமான அரசியிருக்கின்ற பாண்டியர் ஈன்ற கற்கண்டு போன்ற இனிய மொழியான கனியை யுடைய பவழம் போல் இதழையுடைய கயல்மீன் போன்ற கண்களைப் பெற்றுள்ள பாவை போன்ற வண்டுகள் மொய்த்தற்கு இடமான தேன் பொருந்திய தாமரை மலர் இருக்கின்ற சிலம் பணிந்த பாதங்களை உள்ளத்தில் வைத்துக் கொண்டுள்ள தமிழ் முனிவனான அகத்தியன் வாழ்கின்ற பொதிய மலையின் குறத்தி நான்.

**விளக்கம்**

செண்டிருக்கும் வட வரை - கரிகாலன் செண்டால் எறிந்தான். அதனால் அச்செண்டின் அடையாளம் உள்ள இமய மலை. சேலிருக்கும் - சேல் மீன் போன்ற விழியுடைய. அரசிருக்கும் - அரசியிருக்கும்; தென்னர் - பாண்டியர். கண்டு கற்கண்டு, கற்கண்டு போன்ற இனிய சொல். கனியிருக்கும் துவர் இதழ் - கொவ்வைக் கனியைப் போன்ற சிவந்த இதழ். நறைக்

கமலம் - தேனையுடைய தாமரை. பரிபுரத்தாள் - சிலம்பை அணிந்த திருவடி. மீனாட்சியம்மையின் திருவடிகளைத் துதிக்கும் அகத்திய முனிவர் வாழ்கின்ற பொதியமலை என் மலை என்றாள் குறத்தி. (3)

## 734. சொக்கலிங்கனை மேவுவாய்!

### சிந்து

4. மங்கை குங்குமக் கொங்கை பங்கயச்
செங்கை அங்கயற்கண் ணினாள் மறை பண்ணினாள்
பங்க னைக்கழல் அங்க னைச்சொக்க
லிங்க னைக் கூடி மேவுவாய் கொல்லிப் பாவையே.

### தெளிவுரை

கொல்லிப் பாவை போன்ற பெண்ணே! குங்குமம் பூசப் பெற்ற கொங்கையை உடைய மங்கையும் தாமரை மலர் போன்ற சிவந்த கையையுடைய கயல்மீன் போன்ற கண்ணை உடையவளும் வேதங்களைப் படைத்தவளும் ஆன மீனாட்சி அம்மையைத் தன் பங்கில் கொண்டவனும் தேவர்களின் உடலினின்று கழன்ற என்பை அணிந்தவனும் ஆகிய சொக்க லிங்கப் பெருமானை நீ அடைவாய்!

### விளக்கம்

குங்குமக் கொங்கை - குங்குமக் குழம்பு பூசப்பெற்ற முலை. பங்கயச் செங்கை - தாமரை மலரைப் போன்ற சிவந்த கை. அங்கயற்கண்ணினாள் - அழகிய கயல் போன்ற கண்ணை உடையவள்; மீனாட்சி. பங்கனை - மீனாட்சியைத் தன் இடப் பாகத்தில் கொண்டவனை. கழல் அங்கனை - தேவர் உடம்பினின்று கழன்ற எலும்பை அணிந்தவனை. மேவுவாய் - பொருந்துவாய்; மணப்பாய். (4)

## 735. பழியஞ்சியார் உனைக் கூடுவார்.

### வேறு

5. வஞ்சி யேஅப ரஞ்சியேமட மயிலே வரிக்குயிலே
கொஞ்சி யேபழி யஞ்சி யார்உனைக் கூடுவாரினி
அம்மையே.

**தெளிவுரை**

வஞ்சிக் கொடி போன்றவளே! புடம் இடப்பட்ட பொன்னைப் போன்றவளே! இளைய மயில் போன்றவளே! இசை பாடும் குயில் போன்றவளே! பழிக்கு அஞ்சியவரான சிவ பெருமான் உன்னைக் கொஞ்சி இனிக் கூடுவார்.

**விளக்கம்**

பழியஞ்சியார் - பழிக்கு அஞ்சும் குணம் உடைய சிவ பெருமான். திருவிளையாடலில் 'பழியஞ்சின படலம்' உள்ளது. அதை இங்கு நினைவு கூர்கிறார். அபரஞ்சியே - புடம் இடப்பட்ட பொன்னைப் போன்றவளே.

இனிக் கொஞ்சிக் கூடுவார் என இயைகிறது. (5)

## 736. பிள்ளையார் வைத்தல் முதலியன

### வேறு

6. புழுகாலே தரை மெழுகு பிள்ளை யார்வை;
பொற் கோலம் இட்டுநிறை நாழி வையாய்.

**தெளிவுரை**

அம்மையே! நறுமணப் புழுகால் தரையை மெழுகுவாய். அங்குப் பிள்ளையாரை வைப்பாய். அழகிய கோலத்தையும் அந்த இடத்தில் இட்டு நிறைந்த நாழி நெல்லை வைப்பாய்!

**விளக்கம்**

குறத்தி தான் குறி சொல்வதற்கு முன் செய்ய வேண்டிய வற்றை இங்குக் குறிக்கின்றாள்.

தரையை புழுகினால் மெழுகிக் கோலம் இட்டுப் பிள்ளையாரை வைத்து நாழிகையளவு நெல்லையும் வைக்க வேண்டும் என்று அக்குறத்தி உரைக்கின்றாள்.

புழுகு - நறுமணம் உடைய பொருள். (6)

## 737. சொக்கர் அருள் புரிவார்

### வேறு

7. ஆழிகை தா அழகாரும்அங் கயற்கண்அம்மை பங்கர்
அழகிய சொக்கர் அருள்புரிவர் உன்பால்
மருவியே அம்மே.

**தெளிவுரை**

மோதிரம் அணிந்த கையை, அம்மையே, கொடு. அழகு பொருந்திய மீனாட்சியம்மையின் பங்கரான அழகிய சொக்கர் உன்னைத் தழுவி அருள் செய்வார்.

**விளக்கம்**

ஆழி கை தா - மோதிரம் அணிந்த கையைத் தா. அங்கயற் கணம்மை - மீனாட்சியம்மை . மருவி - தழுவி; பொருந்தி. (7)

## 738. சவுந்தர மாறர் வந்து அணைவார்

### வேறு

8. பேசும் என்குறி மோசம் என்றிடில்
ஆர்சொ லும்பரி யாசமே

வாச மென்குழ லாய்சவுந்தர
மாறர் வந்து அணைவார்அமே.

**தெளிவுரை**

நறுமணம் உடைய மென்மையான கூந்தலை உடைய அம்மையே! நான் கூறும் குறி தவறிவிடும் என்றால் எல்லார் சொல்லும் பொருள் அற்றதே ஆகும். சவுந்தர பாண்டியர் வந்து உன்னைச் சேர்வார்.

**விளக்கம்**

வாசம் - நறுமணம். பரியாசம் - பரிகாசம்; இகழ்ச்சிக்குரியது. அமே - 'அம்மே' என்பதன் விகாரம். (8)

## 739. சொக்கலிங்கர் இனி அணைவார் உன்னை

வேறு

9. நங்கை நீகரு தும்குறி சொல்லஉன்
செங்கை தனைக் கொடு வாஎங்கள்
அங்க யற்கண்ணி பங்கர் அருள்சொக்க
லிங்கர் இனிஅணை வார்அம்மே.

**தெளிவுரை**

மங்கையே! நீ எண்ணும் குறியை யான் சொல்ல உன் செங்கையை எனக்குக் கொடுப்பாய். எங்கள் மீனாட்சி யம்மையை இடப்பாகத்தில் உடைய அருளுடைய சொக்கலிங்கர் இனி உன்னை அணைவார்.

**விளக்கம்**

கொடுவா - கொண்டு வா; கையை நீட்டு. (9)

## 740. மதுரேசர் உனைச் சேர்வார்

### வேறு

10. தூசுமொரு காசும்வைஉள் நேசம் வரவே சொல்லநான்
ஈசர்கயி லாசர்மது ரேசர்உனைச் சேர் வார்அம்மே.

**தெளிவுரை**

அம்மே! நான் குறி சொல்ல ஆடையையும் ஒரு காசினையும் அன்பு உண்டாக வைப்பாய்! ஈசரான கயிலாய வாசர் மதுரையில் வீற்றிருப்பவர் உன்னைச் சேர்வார்.

**விளக்கம்**

தூசு - ஆடை. நேசம் வரவே வை - அன்பு உண்டாக வை.
(10)

## 741. சுந்தரர் தோள் சேர்வாய்

### *அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்*

11. கைக்குறியின் முகக்குறிநன் றுஇடத்தெழுந்த கவுளிநன்று
கன்னி மார்வந்து
இக்குறிநன்று என்கின்றார் இடக்கண்ணும் துடிக்கின்றது
இதன்மேல் உண்டோ
பொய்க்குறிய சிறு மருங்குல் பூங்கொடிநீ அங்கயற்கண்
பூவை மாதின்
மெய்க்குறியும் வளைக்குறியும் முலைக்குறியும்
அணிந்தவர் தோள்
மேவு வாயே.

**தெளிவுரை**

பொய்யான சிறிய இடையினை உடைய பூங்கொடியைப் போன்றவளே! நின் கையில் உள்ள குறியைவிட முகக் குறியானது

நன்றாக அமைந்துள்ளது. இடப்பக்கத்தில் உண்டான பல்லியினது சொல்லும் நன்று. சத்தமாதர் வந்து இக்குறிகள் நல்லன என்று கூறுகின்றார். இடக்கண்ணும் துடிக்கின்றது. இதன் மேல் உண்டாகவேண்டிய நல்ல குறிகள் எவை இருக்கின்றன? மீனாட்சி யம்மையான பூவைப் போன்ற மாது மெய்யில் உண்டாக்கிய குறியும் வளையால் ஏற்படுத்திய குறியும் கொங்கையால் உண்டாக்கிய குறியும் உடையவர் தோளை நீ அடைவாய்.

**விளக்கம்**

கைக்குறி - தலைவியின் கையில் உள்ள குறி. இடத்து எழுந்த - இடப்பக்கத்தில் உண்டான. கவுளி - பல்லி; பல்லியின் சொல். கன்னிமார் - சத்தமாதர். இடக்கண் துடிக்கின்றது - பெண்களுக்கு இடக்கண் துடித்தல் நல்ல சகுனம் ஆகும். பொய்க்குறிய சிறு மருங்குல் - பொய்யான மிகச்சிறிய இடை. பூங்கொடி - பூங்கொடி போன்றவளே! தலைவியே. பூவை - பூவைப்பறவை; நாகணவாய்ப்பறவை. வளைக்குறி - வளையலால் ஏற்படுத்திய குறி. முலைக்குறி - கொங்கையால் இறைவர் மார்பில் ஏற்படுத்திய குறி. மேவுவாய் - அடைவாய். (11)

## 742. மலையமலை என் மலை

### கொச்சகக் கலிப்பா

12. கடமலைக்கும் வெம்மலையாம் கைம்மலையும்
ஆயிரவாய்ப்
படமலைக்கும் அரவரசும் பரித்தருளும் பார்மடந்தை
குடமலைக்கும் தடமுலையாம் குலமலைகள்
இரண்டுளனவும்
வடமலைக்கும் தென்பொதியும் மலயமலை
என்மலையே.

**தெளிவுரை**

மதத்தைச் சொரியும் கையையுடைய மலையான எட்டுத் திக்கு யானைகளும், ஆயிரம் வாய்களையுடைய படம்

பொருந்திய பாம்பரசனான ஆதிசேடனும் சுமக்கின்ற நிலமகளின் குடத்தைத் தோற்கச் செய்கின்ற பெரிய முலைகளாகும் எனக் கூறும்படி மாலைகள் புரள்கின்ற வடக்கு மலையும் தெற்கில் பொருந்தியவாய் விளங்குவன இமயமலையும் தென்பொதிய மலையும். அவற்றுள் மலைய மலை என் மலையாகும்.

**விளக்கம்**

கடமலைக்கும் - கடம் + அலைக்கும்; மதநீரை அலை போலச் சொரியும். வெம்மலையாம் - கொடிய மலையான. கைம் மலை - கையையுடைய மலை. ஆயிர வாய்ப்படம் அலைக்கும் அரவரசு - ஆயிரம் வாய்களை உடைய படம் பொருந்திய பாம்புகளின் மன்னனான ஆதிசேடன். பரித்தருளும் - சுமக்கின்ற. பார் மடந்தை - நிலமகள். குடம் அலைக்கும் - வடிவத்தால் குடத்தைத்தோற்கச் செய்து வருத்துகின்ற. தட முலையாம் - பெரிய முலைகளாக. குலமலைகள் - குலைமலை எட்டு என்பர். இங்கு எட்டு அன்று இரண்டு என்று கூறும்படியாக. பொதியும் - பொருந்தியிருக்கின்ற. மலையமலை - பொதியமலை. (12)

## 743. பொதிய மலை என் மலை

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

13. திங்கண்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை
அங்கயற்கண் அம்மைதிரு வருள்சுரந்து
பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை
யென்மலையே.

**தெளிவுரை**

திங்களைத் தலையில் சூடிக் கொள்ளும் மலையும் தென்றற் காற்று பொருந்திய மலையும் மேகங்கள் வந்து தங்கிச் சூழ்ந்து கொள்ளும் மலையும், தமிழ் முனிவனான அகத்திய முனிவன்

வாழும் மலையும் மீனாட்சியம்மையினது திருவருள் சுரந்து பொழிவதைப் போல் பாய்ந்து வரும் அருவி பொருந்திய மலையுமான பொதிய மலை என் மலையே ஆகும்.

**விளக்கம்**

புயல் - மேகம். அங்கயல்கண் அம்மை - மீனாட்சி. பொழிவது என - சொரிவதைப் போல். பொங்கருவி - பெருகி ஓடி வரும் அருவி. (13)

## 744. பொன் குடுமிப் பொதிய மலை என் மலை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

14. கன்ன மதம்பெய்து உறங்குகொலைக்
களிறு கிடந்து பிளிறு மலை
தென்னந் தமிழும் பசுங்குழவித்
தென்றல் கொழுந்தும் திளைக்கும் மலை
அன்னம் பயிலும் பொழில்கூடல்
அறலங் கூந்தல் பிடியாண்ட
பொன்னம் குடுமித் தடஞ்சாரல்
பொதிய மலைஎன் மலைஅம்மே.

**தெளிவுரை**

கன்னத்தினின்று மதநீர் பெய்து உறங்கும் கொலை யானை இருந்து பிளிறும் மலையும் அழகிய தமிழும் பசுமையான குழந்தையான இளந் தென்றற் காற்றும் பொருந்தியுள்ள மலையும் அன்னப்பறவை பொருந்திய சோலையுடைய மதுரையைக் கருமணலைப் போன்ற கூந்தலையுடைய பெண்யானையான மீனாட்சியம்மை ஆள்கின்ற உச்சியை யுடைய பெரிய சாரலை யுடையதுமான பொதிய மலை என் மலையாகும்.

**விளக்கம்**

கன்னமதம் - கன்னத்தினின்று வடியும் மதநீர். கன்னம் - காது. பிடி - பெண்யானை போன்ற மீனாட்சியம்மை. குழவித்

தென்றல் கொழுந்து - இளந்தென்றற் காற்று. திளைக்கும் - விளையாடும்; பொருந்தியுள்ள. அன்னம் - அன்னப்பறவை. பொன்னங்குடுமி - பொன்+அம்+குடுமி; பொன் போன்ற அழகிய குடுமி. சாரல் - பக்கம்; அடிமலை. (14)

## 745. இன்பமுறும் பொதியமலை என் மலையே!

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

15. மந்தமா ருதம்வளரும் மலைஎங்கள் மலையே!
வடகலை தென் கலை பயிலும் மலைஎங்கள் மலையே!
கந்தவேள் விளையாடும் மலைஎங்கள் மலையே
கனகநவ மணிவிளையும் மலைஎங்கள் மலையே
..........................................................................
..........................................................................
இந்தமா நிலம்புரக்கும் அங்கயற்கண் அம்மை
இன்பமுறும் தென்பொதிய மலைஎங்கள் மலையே.

**தெளிவுரை**

தென்றற்காற்று வளர்கின்ற மலை எங்கள் மலையாகும். வடமொழிக் கலைகளும் தென்மொழிக்கலைகளும் பொருந்திய மலை எங்கள் மலையாகும். முருகப்பெருமான் விளையாடல் செய்கின்ற மலை எங்கள் மலையாகும். பொன்னும் நவமணியும் விளையும் மலை எங்கள் மலையாகும். இந்தப் பெரிய உலகத்தைக் காத்தருளும் மீனாட்சியம்மை இன்பம் அடையும் தென் பொதிய மலை எங்கள் மலையாகும்.

**விளக்கம்**

மந்தமாருதம் - தென்றற் காற்று. வடகலை - வடமொழிக் கலை. தென் கலை - தமிழில் உள்ள கலை. கந்தவேள் - முருகப்பெருமான். கனக நவமணி - பொன்னும் வயிரம் முதலிய ஒன்பது மணிகள். புரக்கும் - பாதுகாக்கும். (15)

## 746. எங்கள் மலை பொதிய மலை

16. சிங்கமும் வெங்களிறுமுடன் விளையாடும் ஒருபால்;
சினப்புலியும் மடப்பிணையும் திளைத்திடும்
அங்கு ஒருபால்;
வெங்கரடி மரையினொடும் விளையாடும் ஒருபால்;
விடஅரவும் மடமயிலும் விருந்து அயரும் ஒருபால்,
அங்கணமர் நிலம்கவிக்கும் வெண்க விகை நிழல்கீழ்
அம்பொன்முடி சூடும்எங்கள் அபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவும் கும்பமுனி பயிலும்
தென்பொதிய மலைகாண்மற்று
எங்கள்மலை அம்மே!

### தெளிவுரை

அம்மையே! எம்மலையின் ஒரு பக்கத்தில் தம்முள் பகைகொண்ட சிங்கமும் கொடிய யானையும் விளையாடும். ஒரு பக்கத்தில் தம்முள் பகையுடைய சினம் உடைய புலியும் இளமை யுடைய பெண் மானும் விளையாடும். ஒரு பக்கத்தில் தமக்குள் பகை கொண்ட கொடிய கரடியும் மரை என்ற ஒரு விலங்கும் எம்மலையில் விளையாடும். ஒரு பக்கத்தில் தமக்குள் பகை கொண்ட நஞ்சையுடைய பாம்பும் இளமயிலும் கூடி விருந்து உண்ணும். எம்மலையின் ஒரு பக்கத்தில் அழகிய கண்களை யுடைய நிலத்தைக் கவிந்துள்ள வெண்மையான குடையின்கீழ் அழகிய பொன்முடி சூடும் எங்கள் அபிடேக வல்லியான மீனாட்சி யம்மையின் சிவந்த தாமரை போன்ற திருவடிகளை வணங்கும் குடத்தில் பிறந்த முனிவனான அகத்திய முனி வாழ்வர். இத்தகைய தென்பொதியமலை எங்கள் மலையாகும்.

### விளக்கம்

மீனாட்சியம்மையின் ஆட்சிச் சிறப்பால் பகையுடைய விலங்குகள் ஒன்றாய் விளையாடுதல் முதலியவை செய்யும் என்பது கருத்து.

வெங்களிறு - கொடிய ஆண்யானை. ஒருபால் ஒரு பக்கத்தில். சினப்புலி - கோபத்தை யுடைய புலி. மடப் பிணை - இளமையுடைய பெண் மான். திளைத்திடும் - விளையாடும். மரை - ஒருவகை விலங்கு. வெங்கரடி - கொடிய கரடி. விடஅரவு - நஞ்சையுடைய பாம்பு. மடமயில் - இளமயில். விருந்து அயரும் - விருந்து உண்ணும். வெண்கவிகை - வெண்மையான குடை. அம் பொன் முடி - அழகிய பொன்னால் ஆன முடி. அபிடேகவல்லி - மீனாட்சி. செங்கமலம் பதம் பரவும் - சிவந்த தாமரை மலரைப் போன்ற திருவடியைத் துதிக்கும். கும்ப முனி - அகத்தியர். (16)

## 747. எங்கள் குலம் குறவர் குலம்

### அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

17. கச்சைப் பொருது மதர்த்து எழுந்து
 கதிர்த்துப் பணைத்த மணிக் கொங்கைப்
பச்சைப் பசுங்கொம்பு அங்கயற்கண்
 பாவை பயந்த ஆறுஇரு தோள்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச்
 சிறுவன் தனக்குப் பெருந்தடங்கண்
கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த
 குறவர் குலம்எம் குலம் அம்மே.

**தெளிவுரை**

மார்பில் கட்டப்படும் கச்சினை அடர்த்துச் செருக்குக் கொண்டு எழுந்து, ஒளியுடன் பருத்த, அழகிய கொங்கையை யுடைய பசிய கொம்பைப் போன்ற மீனாட்சியம்மையார் பெற்ற பன்னிரண்டு தோள்களையுடைய வெட்சி மாலை சூடிய நறுமணம் உடைய தலைமயிரை யுடைய முருகப் பெருமானுக்குப் பெரிய அகன்ற கண்களையுடைய தாழ்ந்த குலப் பெண்ணான வள்ளியைத் தந்த குறவரின் குலம் எங்கள் குலமாகும்.

**விளக்கம்**

கச்சு - பெண்டிர் மார்பில் அணியும் உடை. மதர்த்தெழுந்து - செருக்குடன் எழுந்து. பணைத்த - பருத்த. அங்கயற்கண்பாவை - மீனாட்சியம்மை. ஆறிரு தோள் சிறுவன் - முருகப் பெருமான். செச்சைப் படலை - வெட்சி மாலை. குஞ்சி - தலைமயிர். கொச்சைச் சிறுமி - இழிந்த குறவர் குலப் பெண். (17)

## 748. எங்கள் குடிக்குப் பொருந்திய இயல்பு

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

18. கொழுங் கொடியின் விழுந்தவள்ளிக் கிழங்கு
கல்லி எடுப்போம்;
குறிஞ்சிமலர் தெரிந்து முல்லைக் கொடியில்
வைத்துத் தொடுப் போம்;
பழம்பிழிந்த கொழுஞ்சாறும் தேறலும்வாய் மடுப்போம்;
பசுந்தழையும் மரவுரியும் இசைந்திடவே
உடுப்போம்;
செழுந்தினையும் நறுந்தேனும் விருந்து அருந்தக்
கொடுப்போம்;
சினவேங்கைப் புலித்தோலின் பாயலிற்கண்
படுப்போம்;
எழுந்து கயற்கணிகாலில் விழுந்துவினை கெடுப்போம்;
எங்கள்குறக் குடிக்குஅடுத்த இயல்பு இது
காண் அம்மே.

**தெளிவுரை**

அம்மே! நாங்கள் கொழுமையான கொடியில் விளைந்த வள்ளிக் கிழங்கைத் தோண்டி எடுப்போம். குறிஞ்சிமலரை ஆராய்ந்து எடுத்து முல்லைக் கொடியில் வைத்துச் சேர்த்து மாலையாகக் கட்டுவோம், கனிகளைப் பிழிந்தெடுத்த கொழுவிய சாறும் தேனும் குடிப்போம். பசுமையான தழையையும் மரவுரியையும் பொருந்தவே உடுத்திக் கொள்வோம். சிவந்த

தினையையும் நறுமணம் உடைய தேனையும் எங்களை நாடி வந்த விருந்தினர்க்கு உண்ணத் தருவோம். சினம் பொருந்திய வேங்கைப் புலியின் தோல் படுக்கையில் படுத்து உறங்குவோம். காலையில் எழுந்து மீனாட்சியம்மையின் காலில் விழுந்து எம் தீவினைகளைப் போக்கிக் கொள்வோம். எங்கள் குறவர் குடிக்குப் பொருந்திய தன்மைகள் இவையாகும்.

**விளக்கம்**

விழுந்த - விளைந்த. கல்லி - தோண்டி. தொடுப்போம் - கட்டுவோம். கொழுஞ்சாறு - கொழுமையான சாறு. தேறல் - தேன். வாய்மடுப்போம் - குடிப்போம். மரவுரி - மரத்தினின்று உரிக்கப்பட்டு ஆடையாய் உடுத்துக் கொள்வது. இசைந்திடவே - பொருந்த. விருந்து அருந்த - விருந்தினர் உண்ண. பாயல் - படுக்கை. கயற்கணி - மீனாட்சியம்மை. வினை - தீவினை; பாவம். (18)

## 749. குடியிருப்பது குறிச்சி

19. புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை இணங்கும்;
புதுத்தினை கல் உரற்பாறை முன்றில்தொறும்
உணங்கும்;
கல்விடரில் வரிவேங்கை கடமானோடு உறங்கும்;
கருமலையில் வெள்அருவி கறங்கி வழிந்து
இறங்கும்;
சில்வலையும் பல்வாரும் முன் இறப்பில் தூங்கும்;
சிறுதுடியும் பெருமுரசும் திசைதொறும்நின்று
ஏங்கும்;
கொல்லையின்மான் பிணையும்இளம்
பிடியும்விளை யாடும்;
குறிச்சிஎங்கள் குறச்சாதி குடிஇருப்பது அம்மே.

**தெளிவுரை**

அம்மே! மானான பார்வை என்ற மிருகம் புலிப் பார்வையுடன் பொருந்தியிருக்கும். புதிய தினை கல்லுரலான

பாறையில் வீட்டின் முன்பக்கம் தோறும் உலர்த்தப் பெற்றிருக்கும். கற்குகையில் வரிகளையுடைய வேங்கைப் புலி யானையுடன் உறங்கும். கரிய மலையில் வெண்மையான அருவி ஒலித்து வழிந்து இறங்கும். சிலவலைகளும் பல தோல் வாரும் வீட்டின் இறவாணத்தில் தொங்கும். சிறுதுடியும் பெரிய முரசும் எல்லாத் திக்குகளிலும் இருந்து ஒலிக்கும். வீட்டுக் கொல்லையில் பெண் மானும் இளம் பெண்யானையும் ஒன்று கூடி விளையாடும். இத்தகைய இயல்புடைய குறிச்சியாகிய ஊர் எங்கள் குறவர் சாதியினர் குடியிருப்பதாகும்.

**விளக்கம்**

புல்வாயின் பார்வை - மானாகிய பார்வை மிருகம். மிருகங் களைப் பிடிப்பதற்காகக் குறவர்களால் உயிருடன் வளர்த்துப் பழக்கப்படும் மிருகம். இணங்கும் - பொருந்தி யிருக்கும். முன்றில் - முன்பக்கம். உணங்கும் - காயும். கல்விடர் - கற்பிளவு; குகை வரி வேங்கை - வரியையுடைய வேங்கைப்புலி. கடமான் - மதத்தையுடைய யானை. கறங்கி - ஒலித்து. சில்வலை - விலங்குகளைப் பிடிக்க உதவும் சில வலைகள். வார் - தோல்வார். இறப்பு - வீட்டின் தாழ்வாரத்தின் முன்புறக் கம்பத்தின் மேல் உள்ள உறுப்பு. ஏங்கும் - முழங்கும். மான்பிணை - பெண்மான். இளம்பிடி - இளைய பெண்யானை. குறிச்சி - மலை நிலத்து ஊர்.

(19)

## 750. குறவனுக்கும் எனக்கும் கஞ்சியிலை

**அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்**

20. **வெள்ளி மலைக் குறவன்மகன் பழனிமலைக்**
**குறவன் எங்கள்**
**வீட்டில் கொண்ட**
**வள்ளி தனக் கேகுறவர் மலையாட்சி சீதனமா**
**வழங்கி னாரால்**

பிள்ளைதனக்கு எண்ணெயிலை அரைக்கும்ஒரு
துணி இலைஎன்
பிறகே வந்த
கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கும்
எனக்குமிலை
கஞ்சி தானே.

**தெளிவுரை**

வெள்ளி மலையான கயிலாய மலையையுடைய சிவ பெருமான் பெற்ற மகனான பழனி மலைக்குரிய குறவனான முருகப் பெருமான் எங்கள் குறவர் வீட்டில் மணந்து கொண்ட வள்ளி மங்கைக்கு மலை ஆட்சியுரிமையைச் சீதனமாகக் கொடுத்தார். அதன்பின் எங்கள் பிள்ளைகளுக்கு எண்ணெய் இல்லை. இடுப்பில் உடுத்துக் கொள்ள ஒரு துணி இல்லை. எனக்குப் பின் இரண்டாந்தாரமாக வந்த கள்ளியை மணந்து கொண்ட அன்றைக்கே என் கணவனான குறவனுக்கும் எனக்கும் கஞ்சி இல்லையாயிற்று.

**விளக்கம்**

வெள்ளி மலைக் குறவன் - கயிலாயமலைக்கு உரிய சிவ பெருமான். பழனி மலைக் குறவன் - பழனி மலைக்குரிய குறவனான முருகப் பெருமான். மலையாட்சி - மலையை ஆளும் உரிமை. சீதனம் - பெண்களுக்குக் கொடுக்கப்படும் பொருள். பிறகே வந்த கள்ளி - இரண்டாம் மனைவி. எண்ணெயிலை - தலையில் பூசிக்கொள்ள எண்ணெய் இல்லை. முன்பு வறுமை இல்லாமல் வாழ்ந்தோம். இளையாள் வந்தபின்பு எனக்கும் கணவனுக்கும் உணவு இல்லை என்றாள். (20)

## 751. குறி சொல்லிக் காலம் கழித்தேன்

### எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

21. கூடல்புன வாயில் கொடுங் குன்றுபரங் குன்று
குற்றாலம் ஆப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகமா டானை திருக் கானப்பேர் சுழியல்
இராமேசம் திருப்புத்தூர் இவைமுதலாம் தலங்கள்
நாடிஎங்கள் அங்கயற்கண் ஆண்டதமிழ்ப் பாண்டி
நன்னாடும் பிறநாடும் என்நாட தாகக்
காடுமலை யும்திரிந்து குறிசொல்லிக் காலம்
கழித்தேன்என் குறவனுக்கும் கஞ்சிவாரா தம்மே.

### தெளிவுரை

மதுரை, திருப்புனவாயில், பிரான் மலை, திருப்பரங்குன்றம், திருக்குற்றாலம், திருவாப்பனூர், திருப்பூவணம், திருநெல்வேலி, திருவேடகம், திருஆடானை, காளையார் கோயில், திருவலஞ்சுழி, இராமேசுவரம், திருப்புத்தூர். என்னும் இவை முதலிய தலங்கள் நாடி எங்கள் மீனாட்சியம்மை ஆண்ட பாண்டி நாடும் பிறநாடும் என் நாடாகக் காடும் மலையும் திரிந்து அங்கங்கு உள்ளவர்க்குக் குறியைச் சொல்லிக் காலத்தைக் கழித்து வந்தேன். இதனால் எனக்கும் என் குறவனான கணவனுக்கும் கஞ்சிக்கும் வருவாய் போதவில்லை!

### விளக்கம்

கூடல் - மதுரை. புனவாயில் - திருப்புனவாயில். கொடுங் குன்று - பிரான் மலை. பரங்குன்று - திருப்பரங்குன்று. ஆப்பனூர் - திருவாப்பனூர். பூவணம் - திருப்பூவணம். நெல்வேலி - திரு நெல்வேலி. ஏடகம் - திருவேடகம். ஆடானை - திருவாடானை, கானப்பேர் - காளையார் கோயில். சுழியல் - திருவலஞ்சுழியல். கஞ்சி வாராது - கஞ்சிக்கும் பொருள் வராது.

## 752. நாங்கள் சொன்னது சொன்னதே

22. பொற்றொடிவள் ளிக்குஇளைய பூங்கொடிஎன் பாட்டி
பூமகள்மா யவன்மார்பில் பொலிவள்என்று சொன்னாள்
மற்றவள்பெண் களில்எங்கள் பெரியதாய் கலைமான்
மலர்அயனார் திருநாவில் வாழ்வள்என்று சொன்னாள்
பெற்றஎங்கள் நற்றாயும் சுந்தரிஇந் திரன்தோள்
பெறும் என்றாள் பின்எங்கள் சிறியதாய் அம்மே
சொற்றகுறிக்கு அளவுஇலைஎம் கன்னிமார் அறியச்
சொன்னேன்பொய் அலநாங்கள் சொன்னது சொன்னதுவே.

### தெளிவுரை

தாயே! பொன் வளையலை அணிந்த வள்ளிக்குத் தங்கையான என் பாட்டி திருமகள் திருமாலின் திருமார்பில் விளங்குவாள் என்று குறி சொன்னாள். அப்பாட்டியின் பெண்களில் எங்கள் பெரிய தாய் கலைமகள் நான்முகனின் நாவில் வாழ்வாள் என்று குறி சொன்னாள். பெற்ற எங்கள் நற்றாயும் இந்திராணி இந்திரன் தோளைச் சேர்வாள் எனக் குறி இயம்பினள். அதன்பின் எங்கள் சிறிய தாய் சொன்ன குறிகளுக்கு அளவே இல்லை. சத்தமாதர் அறியக் கூறினேன். நான் கூறியது பொய்யாகாது. சொன்னது சொன்னதாகும்.

### விளக்கம்

பொற்றொடி - பொன் வளையல். பூங்கொடி - பூங்கொடி போன்றவள். பூமகள் - திருமகள். மாயவன் - திருமால். பொலிவாள் - விளங்குவாள். வள்ளியின் தங்கையான என் பாட்டி 'திருமகள் திருமால் மார்பில் இருப்பாள்' என்ற குறிசொன்னாள். அது பலித்தது. அப்பாட்டியின் பெண்களில் ஒருத்தியான பெரிய தாய் 'கலைமகள் பிரமனின் நாவில் வாழ்வாள்' என்று குறி சொன்னாள். எங்களைப் பெற்ற நற்றாயும் 'இந்திராணி இந்திரன்

தோளை அடைவாள்' என்றாள். அது பலித்தது. கலைமான் - கலைமகள். மலர் அயனார் - தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமன். நற்றாய் - ஈன்ற தாய். சுந்தரி - இந்திராணி. கன்னிமார் - சத்த மாதர். பொய் அல - நான் கூறியவை பொய் அல்ல. சொன்னது சொன்னதுவே - சொன்னது சொன்னபடியே நடக்கும்.

## 753. நீ நினைத்த குறியைச் சொல்வேன்!

23. முன்னொரு நாள் அம்மைதடா தகைபிறந்த நாளில்
முகக்குறிகண்டு இவள்உலக முழுதாளும் என்றேன்
பின்ஒருநாள் கைக்குறிபார்த்து அம்மைஉனக்கு எங்கள்
பிஞ்ஞகர்தாம் மணவாளப் பிள்ளைஎன்று
சொன்னேன்.
அன்னை இவள் மெய்க்குறிகள் அனைத்தையும் பார்த்து
உனக்கோர்
ஆண்பிள்ளை உண்டுபிறந்து அரசாளும் என்றேன்
சொன்னகுறி எல்லாம்என் சொற்படியே பலிக்கும்
தொகுத்துநீ நினைத்தகுறி இனிச்சொலக்கேள்
அம்மே.

### தெளிவுரை

அம்மையே! முன்னொரு நாளில் தடாதகைப் பெருமாட்டியார் பிறந்த, நாளில் முகக் குறியைப் பார்த்து இவள் இவ்வுலகத்தை ஆள்வாள் எனக் குறி சொன்னேன். அது பலித்தது. பின் ஒரு நாள் தடாதகைப் பெருமாட்டியின் கையில் உள்ள குறியைப் பார்த்து, தாயே, உமக்கு எம் சிவபெருமான்தான் மணமகன் ஆவார் என்று உரைத்தேன். அது பலித்தது. அம்மையான அவளது உடல்குறிகள் எல்லாவற்றையும் பார்த்து உனக்கு ஓர் ஆண்பிள்ளை பிறக்கும். அவன் அரசாள்வான் என்றேன். அது பலித்தது. இங்ஙனம் நான் கூறும் குறிகள் யாவும் என் சொல்லின் படியே பலிக்கும். நீ நினைத்த குறி எல்லாவற்றையும் தொகுத்து இனிக் கூறுவேன். கேட்பாயாக!

**விளக்கம்**

தடாதகை - மீனாட்சியம்மை. தடுத்தற்கரிய தகுதியை உடையவள் என்பது பொருள். ஆளும் - ஆள்வாள். அம்மை - அம்மையே; விளி. பிஞ்ஞகர் - சிவபெருமான். மணவாளப் பிள்ளை - மணமகன். மெய்க் குறிகள் - உடலில் உள்ள குறிகள். சொலக்கேள் - சொல்லக் கேட்பாயாக. 'சொல' 'சொல்ல' என்பதன் விகாரம். (23)

## 754. அரிதன்று எங்கள் குலத்துக்கு

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

24. ஒருகாலம் கஞ்சியும்என் குஞ்சுதலைக்கு எண்ணெயுமோர்
உடுப்பும் ஈந்தால்
பொருகால வேற்கண்ணாய், மனத்துநீ நினைத்தஎல்லாம்
புகல்வன் கண்டாய்!
வருகால நிகழ்காலம் கழிகாலம் மூன்றும் ஒக்க
வகுத்துப் பார்த்துத்
தருகாலம் தெரிந்துரைப்பது எளிது அரிதுஅன்று எங்கள்குறச்
சாதிக்கு அம்மே.

**தெளிவுரை**

போரிடும் கூற்றுவன் போன்ற கண்ணை யுடையவளே! அம்மையே! ஒருவேளை உண்பதற்குரிய கஞ்சியும் என் குழந்தைத் தலைக்கு எண்ணெயும் ஒரு உடையும் எனக்குத் தந்தால் நின் மனத்துள் நினைப்பனவற்றையெல்லாம் சொல்வேன். எதிர்காலம், நிகழ்காலம், இறந்தகாலம் ஆகிய மூன்றும் ஒன்றாகப் பகுத்துப் பார்த்துத் தக்க காலத்தை ஆராய்ந்து பயனை எடுத்துக் கூறுவேன். இங்ஙனம் உரைப்பது எளியது; எங்கள் குறவர் குடிக்கு அரிதன்று!

**விளக்கம்**

ஒருகாலம் கஞ்சி - ஒரு வேளை அருந்தக் கூடிய கஞ்சி யுணவு. என்குஞ்சு - என் குழந்தை. உடுப்பு - உடை. பொரு காலவேற்கண்ணாய் - போரிடுகின்ற கூற்றுவனைப் போன்ற வேலை ஒத்த கண்ணையுடையவளே. புகல்வன் - கூறுவேன். வரு காலம் - எதிர்காலம். கழிகாலம் - இறந்த காலம். வகுத்துப்பார்த்து - ஆராய்ந்து பார்த்து. தருகாலம் - பயன் தரும் காலம். (24)

## 755. நினைத்த குறி இனிச் சொல்வேன்

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

25. குங்குமஞ்சந் தனக்குழம்பில் குழைத்துத்தரை மெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையும் காட்டிச்
செங்கனக நவமணிகள் திசைநான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனில் பிள்ளையார் வைத்துப்
பொங்குநறு மலரறுகோ டுஐங்கரர்க்குச் சாத்திப்
புழுகுநெய்வார்த் திடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக் கரசியெங்கள் அங்கயற்கண் ணமுதை
மனத்துள்வைத்து நினைத்தகுறி இனிச்சொலக்கே
ளம்மே.

**தெளிவுரை**

அம்மே! குங்குமத்தைச் சந்தனத்தில் குழைத்துத் தரையை மெழுகிக் கோலத்தை இட்டுக் குங்கிலியக் கொழுவிய புகையை எழுப்பிக் காட்டி, செம்மையான பொன் நவமணிகள் ஆகிய வற்றை நான்கு திசையிலும் பரப்பி, தென்மேற்கு மூலையில் பிள்ளையாரை வைத்து நறுமணமுடைய அறுகம் புல்லோடு பிள்ளையார்க்கு அணிவித்து புழுகும் நெய்யும் வார்க்கும் விளக்கும் நெல் நிறைந்த நாழிகையையும் வைத்து, மங்கையர்க்கு அரசியான எங்கள் மீனாட்சியம்மை அமுதை மனத்தில் இருத்தித்

தியானித்து நீ நினைத்த குறியை இனிச் சொல்லக் கேட்பாயாக!

**விளக்கம்**

குங்குமம் சந்தனக் குழம்பால் தரையை மெழுகி. குங்கிலியம் - ஒரு நறுமணப் பொருள். செங்கனகம் - செம்பொன். நவ மணிகள் - வயிரம் முதலிய ஒன்பது மணிகள். அவை வருமாறு: (1) கோமேதகம், (2) நீலம், (3) பவளம், (4) புருடராகம், (5) மரகதம், (6) மாணிக்கம், (7) முத்து, (8) வயிரம், (9) வைடூரியம். நிறை நாழி - நெல் நிறைந்த நாழி. (25)

## 756. எக்குறி தப்பினும் இக்குறி தப்பாது

26. முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
 முறத்திலொரு படிநெல்லை முன்னேவை அம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்துஓர் கூற்றை
 இரட்டைபட எண்ணினபோ துஒற்றைபட்ட தம்மே
உன்னாமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந் துதித்தார்
 உனக்கினிஎண் ணினகருமம் இமைப்பினிற்கை கூடும்
என்னாணை எங்கள்குலக் கன்னிமா ரறிய
 எக்குறிதப் பினும்தப்பாது இக்குறிகா ணம்மே.

**தெளிவுரை**

அம்மே! மூன்று நாழியும் மூன்று உள்ளங்கை அளவும் நெல்லை அளந்து எடுத்துக் கொண்டுவா! முறத்தில் ஒரு படி நெல்லை முன்னே வைப்பாய். இந்நாழி நெல்லையும் மூன்றாகப் பிரித்து ஒரு பகுதியை இரட்டை இரட்டையாக எண்ணியபோது ஒற்றைப்பட்டது. துதிப்பதற்கு முன்னமேயே வேள்விமலைப் பிள்ளையார் வந்து தோன்றினார். ஆதலால் உனக்கு எண்ணிய செயல்கள் எல்லாம் இமைப் பொழுதில் கைகூடும். இது என் ஆணை. எங்கள் குலச் சத்தமாதர் அறிய எந்தக்குறி தப்பினாலும் இக்குறியானது தப்பாது. இக்குறியை நீ பார்ப்பாயாக!

**விளக்கம்**

முந் நாழி - மூன்று நாழி அளவு. முச்சிறங்கை - மூன்று உள்ளங்கை அளவு. கொடுவா - கொண்டு வா. ஒருபடிநெல் - ஒருபடி அளவுள்ள நெல். இந்நெல்லை மூன்றாக மூன்றாகப் பிரித்து ஒரு கூற்றை எடுத்து, இரட்டைப்பட எண்ணி வந்த போது ஒற்றையான நெல் நின்றது. நினைப்பதற்கு முன்னமே விநாயகர் வந்து தோன்றினார். இவ்விரண்டால் தலைவி நினைத்த காரியம் கைகூடும் என்று குறத்தி கூறினாள். ஒருகூறு - ஒரு பங்கு. ஒற்றைப்படல் - கடைசியில் ஒருநெல் நிற்றல். (26)

## 757. உண்டான நற் சகுனங்கள்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

27 நெல்அளந் திட்ட போது
நிமித்தநன் றிடத்தெ ழுந்த
பல்லியும் வரத்தே சொல்லும்
பத்தினிப் பெண்கள் வாயால்
சொல்லிய வாய்ச் சொல் அன்றித்
தும்மலும் நல்ல தேகாண்
அல்லது கிளைகூட் டும்புற்று
ஆந்தைவீச்சு அழகிது அம்மே.

**தெளிவுரை**

அம்மையே! நெல்லை அளந்த போது ஒற்றைப்பட வந்த குறியும் நல்லதே. இடப்பக்கத்தில் எழுந்த பல்லிக் குரலும் வரவையே கூறுகின்றது. பத்தினிப் பெண்கள் வாயால் கூறிய வாய்ச் சொல்லும் (விரிச்சியும்) அல்லாது தும்மலும் நல்லதே. அதுவும் அல்லாது தன் சுற்றத்தை அழைக்கப் புற்றில் உள்ள ஆந்தைக்குரலும் நல்லதே.

**விளக்கம்**

நெல் அளந்த போது வந்த ஒற்றைப்படை எண், பல்லி சொல், பத்தினிப் பெண்டிரின் சொல், தும்மல், ஆந்தைக் குரல் என்பவை நற்குறிகளாகக் குறத்தி உரைத்தாள்.

நிமித்தம் - சகுனம்; குறி. இடத்து எழுந்த - இடப்பக்கத்தில் தோன்றிய. வரத்தே - வரவையே. புற்றத்தை - புற்றின் மேல் உள்ள ஆந்தை. வீச்சு - குரல். (27)

## 758. கை கொண்டுவா அம்மே!

### எண்சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

28. கொண்டுவா அம்மேகை கொண்டுவா அம்மே
 கொழுங்கனக நவமணிகள் அளைந்திடு முன்கையே
வண்டுசு லா மலர்கொய்ய வருந்திடுமுன் கையே
 வருந்தினர்க்கு நவநிதியும் சொரிந்திடுமுன் கையே
புண்டரிகம் பூத்தழகு பொலிந்திடுமுன் கையே
 புழுகுறுநெய்ச் சொக்கர்புயம் தழுவிடுமுன் கையே
அண்டர்தம்நா யகிஎங்கள் மதுரைநா யகியை
 அங்கயற்கண் நாயகியைத் கும்பிடுமுன் கையே.

**தெளிவுரை**

அம்மையே நின் கையைக் கொண்டுவா! கொழுமையான பொன் நவமணிகளைப் பயிலும் உன் கையைக் கொண்டுவா. வண்டுகள் மொய்க்கும் மலர்களைப் பறிக்க வருந்தும் நின் கையைக் கொண்டுவா! வறுமையால் வருந்திவந்தவர்க்கு நவ நிதியும் அளித்திடும் உன் கையைக் கொண்டுவா! தாமரை மலர்ந்து அழகு செய்து விளங்கும் உன் கையைக் கொண்டுவா! புழுகு பொருந்திய நெய்யுடன் கூடிய சொக்கரின் தோளைத் தழுவும் உன் கையைக் கொண்டுவா. தேவர்களின் தலைவியான எங்கள் மதுரையரசியை - மீனாட்சியைக் கும்பிடும் உன் கையைக் கொண்டுவா!

**விளக்கம்**

தலைவியின் கையை நீட்டுமாறு குறத்தி கூறுகின்றாள் கைக் குறியைப்பார்க்க.

கனகம் - பொன். நவமணி - ஒன்பது வகை மணி. அளைந் திடும் - பயிலும். வண்டு சுலாம் மலர் - வண்டுகள் மொய்க்கும் மலர். உலாம் - உலவல். நவநிதி - ஒன்பது வகைப்பட்ட செல்வம் அவையாவன; கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, பதுமநிதி, நந்தநிதி, நீலநிதி, மகாநிதி, மகாபதுமநிதி, முகுந்த நிதி. புண்டரிகம் - தாமரை. புழுகு - நாவிப்புழுகு. நறு நெய் - நறுமண நெய். புயம் - தோள். அண்டர் தம் நாயகி - தேவரின் தலைவி. (28)

## 759. குறத்தி கூறும் பலன்கள்

29. அம்மேநின் செங்கையைநின் கொங்கையில்வைத்
ததுதான்
அபிடேகச் சொக்கர் உனை அணைவர்என்ற
குறிகாண்
இம்மேலைத் திகையினிற்கை எடுத்ததுவும் அவர்தாம்
இன்று அந்திப் பொழுதினில்வந்து எய்துவர்என்
றதுகாண்
கைம்மேற்கை கட்டியதும் தப்பாமல் உனக்குக்
கைகூடு நீநினைத்த காரியம் என் றதுகாண்
செம்மேனி மணிவயிற்றில் கைவைத்தது இனிநீ
சிறுவர்பதின் அறுவரையும் பெறுவை என்றது
அம்மே.

**தெளிவுரை**

அம்மையே! நின் சிவந்த கையை நின் கொங்கையில் வைத்தாய். அதுதான் முடியை அணிந்த சொக்கலிங்கர் உனை அணைவார் என்பதற்குரிய குறியாகும். இம் மேற்குத் திக்கில் நின் கையை எடுத்தாய். அதுவும் அப்பெருமான் இன்றைய மாலைப்

பொழுதில் வந்து சேர்வார் என்பதற்குரிய குறியாகும். கைமேல் கையைக் கட்டியதும் தவறாமல் உனக்கு நினைத்த காரியம் கைகூடும் என்பதைப் புலப்படுத்தும் குறியாகும். நின் சிவந்த மேனியின் அழகிய வயிற்றில் கைவைத்தசெயல் இனிமேல் நீ பதினாறு பிள்ளைகள் பெறுவை என்பதை அறிவுறுத்துவதாகும்.

**விளக்கம்**

அபிடேகச் சொக்கர் - முடியைச் சூடிய சொக்க நாதர். மார்பில் கையை வைத்தது சொக்கநாதப் பெருமான் தழுவுவார் என்பதற்குரிய குறியாகும். மேற்குப் பக்கத்தில் கையை எடுத்தது இன்றைய மாலைப் பொழுதில் வந்து சேர்வார் என்பதற்குரிய குறியாகும். கைம்மீது கை கட்டிய செயல் நினைத்த காரியம் கைகூடும் என்பதைக் குறிக்கும். வயிற்றில் கைவைத்தது பதினாறு பிள்ளைகளைப் பெறுவதற்குரிய அறிகுறி. இவ்வாறு குறத்தி குறி சொன்னாள்.

மேலைத்திகை - மேற்குத்திசை. எடுத்தது - தூக்கியது. அந்திப்போது - மாலை. காண் - அசை. பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்க என்பது ஒரு வாழ்த்து வகை. (29)

## 760. தனரேகை முதலியவற்றின் பயன்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

30. அங்கைத் தலத்துத் தனரேகை
அளவில் செல்வம் தரும்உனது
செங்கைத் துடிதென் மதுரேசர்
செம்பொன் புயத்தில் சேர்க்குமால்
இங்குஇப் படிபுத் திரரேகை
எவர்க்கும் இலைஇப் படிதோளில்
தங்கு மறுஅங் கயற்கணம்மை
தன்னோடு இருக்கத் தருமம்மே.

**தெளிவுரை**

அம்மே! உன் உள்ளங்கையில் உள்ள தன ரேகை அளவற்ற செல்வத்தை உனக்குத் தரும். உன் சிவந்த கையில் உள்ள துடியைப் போன்ற - தமருகம் போன்ற - இந்த ரேகையானது தென் மதுரைச் சொக்க நாதரின் செம்பொன் போன்ற தோளில் சேர்க்கும். இங்கு உள்ள இத்தகைய புத்திரரேகை வேறு எவர்க்கும் இல்லை. உன் தோளில் உள்ள இத்தகைய மறுவான குறி மீனாட்சியம்மையோடு இருக்கும்படி செய்யும்.

**விளக்கம்**

அங்கை - உள்ளங்கை. தனரேகை - செல்வத்தைத் தரும் ரேகை. துடி - தமருகம்; தமருகம் போன்ற ரேகை. சேர்க்கும் ஆல். ஆல் - அசைநிலை. இலை - இல்லை என்பதன் விகாரம். மறு - அடையாளம்; மச்சம். (30)

## 761. மலை

## சிந்து

31 பொன்பொதியும் துகில்என வெண் புயலாடுதெண் பனிமூடும்
**தென்பொதிய மலையாட்டி** பேரைச் சொல்லாய் பாடநான்

**தெளிவுரை**

பொன்னை இட்டு மூடும் ஆடையைப் போல் வெண்மை யான மேகத்துடன் குளிர்ந்த பனிமூடும் இயல்புடைய தென் பொதிய மலையை யுடையவளே! நான் பாடுதற்காக நின் பெயரைச் சொல்வாயாக.

**விளக்கம்**

பொன் பொதியும் - பொன்னைவைத்து மூடும். துகில் - ஆடை. வெண்புயல் - வெண்மையான மேகம். இதனுள் தசாங்கத்துள் ஒன்றான மலை கூறப்பட்டது.

இது முதல் பத்துக் கண்ணிகளில் (31-39) தசாங்கம் கூறப்படும். (1) மலை, (2) நதி, (3) நாடு, (4) ஊர், (5) மாலை, (6) யானை, (7) குதிரை, (8) கொடி, (9) முரசு, (10) ஆக்கினை, புயலும் பனியும் ஆடைக்கு உவமை, மலைக்குப் பொன்உவமை.

அரசனுக்குரிய பத்து உறுப்புகள் 'தசாங்கம்' எனப்படும். தசாங்கம் - தசம் + அங்கம்; தசம் - பத்து; அங்கம் - உறுப்பு அங்கயற்கண்ணியின் தசாங்கமே இங்குக் கூறப்படுவது. (31)

## 762. நதி

32 பலநதிகள் புணர்ந்தநதி பதியைஅணை யாதவைகைக்
குலநதித்தண் துறைச்செல்வி பேரைச் சொல்லாய்
பாடநான்

### தெளிவுரை

பல ஆறுகள் வந்து கலக்கின்ற கடலை அடையாத வைகைக் குலநதியின் குளிர்ந்த துறையையுடைய செல்வி! நான்பாடப் பேரைச் சொல்வாய்.

### விளக்கம்

நதிபதி - கடல். புணர்ந்த - கலந்த. அணையாத - சேராத. குலநதி - பாண்டியர் குலத்துக்குரிய ஆறு.

இதில் தசாங்கத்துள் ஒன்றான வைகை 'ஆறு' கூறப்பட்டுள்ளது. (32)

## 763. நாடு

33 அன்புஆண்டு கல்வலிதென்று அவ்வைபா டியஎங்கள்
தென்பாண்டி நாட்டாள்தன் பேரைச் சொல்லாய் பாடநான்.

**தெளிவுரை**

அன்பை மேற்கொண்டு கல்வலிது என்று ஔவையார் பாடிய எங்கள் தென்பாண்டி நாட்டவள் பெயரை யான்பாடக் கூறுவாய்!

**விளக்கம்**

அன்பு ஆண்டு - அன்பை மேற்கொண்டு. ஔவையார் கல்வலிது என்று பாடியபகுதி 'பஞ்சவன்தன், நான் மாடக் கூடலில் கல்வலிது' என்பதாகும். இதில் தசாங்கத்துன் ஒன்றான 'நாடு' கூறப்பட்டுள்ளது. (33)

## 754. ஊர்

34 பொன்மாடம் சூழ்ந்தகரும் புயல்அமலன் போர்வைநிகர்
பன்மாடக் கூடலாள் பேரைச் சொல்லாய் பாடநான்.

**தெளிவுரை**

பொன் மாளிகைகள் சூழ்ந்துள்ள கருமையான மேகம் தங்கும் குற்றமற்றவனது யானைத் தோல் போர்வையையுடைய பல மாளிகைகள் பொருந்திய மதுரைப்பதியை உடையவளுடைய பேரை யான்பாடச் சொல்லாய்!

**விளக்கம்**

பொன் மாடம் - பொன்னால் ஆன மாளிகைகள். கரும் புயல் - கரிய மேகம். அமலன் - குற்றம் அற்ற சிவபெருமான். போர்வை நிகர் - யானைத் தோலை ஒத்த. கூடல் - மதுரை.

கூடலாள் என்றதால் மன்னரின் தசாங்கத்துள் ஒன்றான 'ஊர்' இதில் கூறப்பட்டுள்ளது. (34)

## 765. மாலை

35 எண்திசைக்கும் வேம்புஆய்எம் இறையவர்க்குக்
கரும்பாகும்
வண்டு இசைக்கும் தாரினாள் பேரைச் சொல்லாய்
பாடநான்.

**தெளிவுரை**

எட்டுத் திக்குகளுக்கும் வேம்பாகவும் இறையவர்க்குக் கரும்பாகவும் விளங்கும் வண்டுகள் ஒலிக்கும் மாலையை யுடைய மீனாட்சியம்மையின் திருப்பெயரை யான்பாட உரைப்பாய்!

**விளக்கம்**

எண்டிசை - எட்டுத்திக்குகள். வேம்பாய் - வேப்ப மாலை யாகவும், எம் இறையவர்க்குக் கரும்பாகும் - எம் சிவபெரு மானுக்கு அவர் விரும்புதலால் கரும்பாகவும். வண்டு இசைக்கும் - வண்டுகள் மொய்த்து ஒலிக்கின்ற. தாரினாள் - மாலையை யுடையவள். தசாங்கத்துள் ஒன்றான இப்பகுதியில் மீனாட்சி யம்மையின் 'மாலை' கூறப்பட்டுள்ளது. (35)

## 766. குதிரை

36 தினவட்டம் இடும்பருதித் திண்பரிமண் பரியாக்கும்
கனவட்ட வாம்பரியாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

**தெளிவுரை**

தினந்தோறும் உலகத்தை வலம் வரும் கதிரவனின் திண்மை யான குதிரையைத் தன்காலால் தூசியை எழுப்பி மண்பரியாகச் செய்யும் கனவட்டம் என்ற தாவிச் செல்லும் குதிரையை உடையவள் பெயரை யான்பாடக் கூறுவாயாக!

**விளக்கம்**

வட்டம் இடும் - வலம் வரும். பருதி - கதிரவன். திண்பரி - திண்மையான குதிரை. மண்பரியாக்கும் - மண்தூசி மூடப்பட்ட குதிரையாக்கிவிடும். சூரியனின் குதிரையான விண்பரியைத் தன் கால் தூசியால் மூடி மண் குதிரையாக்கும் என்பதாம். பாண்டியர்க்கு உரிய குதிரையின் பெயர் கனவட்டம். வாம்பரியாள் - தாவிச் செல்லும் குதிரையையுடையவள்; அவள் மீனாட்சி. 'வாவும்' என்பது 'வாம்' என்று தொக்கது.

இதில் தசாங்கத்துள் ஒன்றான 'குதிரை' கூறப்பட்டுள்ளது.

(36)

## 767. யானை

37 திக்கயங்கள் புறங்கொடுப்பத் திசைஎட்டும்
திறைகொண்ட
கைக்கயத்தை மேற் கொண்டாள் பேரைச் சொல்லாய்
பாடநான்.

**தெளிவுரை**

எட்டுத் திக்கு யானைகள் முதுகுகாட்ட எட்டுத்திசைகளிலும் கப்பத்தைப் பெற்ற துதிக்கையை யுடைய யானையையுடையவள் பெயரை யான் பாடச் சொல்லுவாய்!

**விளக்கம்**

திக்கயங்கள் - எட்டுத்திக்குகளிலும் உள்ள யானைகள் எட்டு. புறம் கொடுப்ப - முதுகிட. திறை - கப்பம். கைக்கயம் - துதிக்கையை உடைய யானை.

இதில் தசாங்கத்துள் ஒன்றான 'யானை' கூறப்பட்டுள்ளது.

(37)

## 768. கொடி

38 ஆன்ஏற்றும் கொடியானை ஐங்கணையான் வென்றிடஅம்
மீன்ஏற்றின் கொடிஉயர்த்தாள் பேரைச் சொல்லாய்
பாடநான்.

**தெளிவுரை**

காளையைக் கொடியில் உடைய சிவபெருமானை ஐந்து மலர் அம்புகளையுடைய மன்மதன் வென்றிட அவனது மீன் கொடியை உடையவள் பேரை யான் பாடக் கூறுவாய்!

**விளக்கம்**

ஆன் - காளை. சிவபெருமானின் கொடி காளைக் கொடி. கொடியான் - சிவபெருமான். ஐங்கணையான் - ஐந்து மலர் அம்புகளை உடைய மன்மதன். மீன் ஏற்றின் கொடி - மீன் கொடி.

இதில் தசாங்கத்துள் ஒன்றான 'கொடி' கூறப்பட்டுள்ளது. (38)

## 769. ஆணை (ஆக்கினை)

39 இனி ஆணை இலை அரசர்க்கு என்றுதிசை எட்டும்ஒரு
தனி ஆணை செலுத்தினாள் பேரைச் சொல்லாய்
பாடநான்.

**தெளிவுரை**

இனிமேல் எந்த மன்னர்க்கும் உலகத்தில் ஆணை செலுத்தும் உரிமை இல்லை என்று எட்டுத்திசைகளிலும் ஒப்பற்ற ஆணையைச் செலுத்தியவளது பெயரை யான் பாடக் கூறுவாய்.

**விளக்கம்**

ஆணை - ஆளும் உரிமை; ஆணையைச் செலுத்தும் உரிமை. தனி ஆணை - ஒப்பற்ற ஆணை.

இதில் தசாங்கத்துள் ஒன்றான 'ஆணை' குறிப்பிடப் பட்டுள்ளது. (39)

## 770. மடக்கொடியைப்பாடுவேன்!

40 கருமலையச் செருமலையும் கைம்மலைய மன்னர்தொழ
உருமலையத் துவசன்அருள் மடக்கொடியைப் பாடுவனே.

**தெளிவுரை**

கருப்பம் கலையப் போரிடுகின்ற கைகளை உடைய மன்னர் வணங்கும்படி வருகின்ற மலயத்துவசன் என்ற பாண்டியனின் மகளான இளைய கொடி போன்ற மீனாட்சியைப் பாடுவேன்.

**விளக்கம்**

கருமலைய - கருப்பம் கலங்க. செருமலையும் - போர் இடும். கைம்மலைய - கையையுடைய மலையான. மன்னர் தொழ - மன்னர் எல்லாம் வணங்கும்படியான. பாடுவன் - பாடுவேன். (40)

## 771. அபிடேக வல்லியைப் பாடுவேன்

41 விண்புரக்கும் கதிர்மௌலி முடிகவித்து வெண்குடைக்கீழ்
மண்புரக்கும் அபிடேக வல்லியைநான் பாடுவனே.

**தெளிவுரை**

வான் உலகைப் பாதுகாக்கும் ஒளிக்கதிரை உடைய முடியைச் சூடி வெண்ணிறக் குடையின் கீழ் மண் உலகத்தைக் காக்கின்ற அபிடேக வல்லியான மீனாட்சி அம்மையை யான் பாடுவேன்.

**விளக்கம்**

விண் - தேவவுலகம். மௌலி - தலை. முடி - கிரீடம். மண் - மண் உலகம். அபிடேக வல்லி - முடி சூடியவள். (41)

## 772. மொய் குழலைப் பாடுவேன்

42 வெம்புருவச் சிலைகுனித்து விழிக்கணைகள்
இரண்டு எந்தை
மொய்ம் புருவத் தொடுத்துஎய்த மொய்குழலைப்
பாடுவனே.

**தெளிவுரை**

விரும்பத்தக்க புருவம் என்ற வில்லை வளைத்து கண்கள் என்ற இரண்டு எம் தந்தையான இறைவனின் உடலில் தைத்து அம்புகளை உருவும்படி எய்த நெருங்கிய கூந்தலை யுடைய அம்மையைப் பாடுவேன்.

**விளக்கம்**

வெம்புருவச்சிலை - விரும்பத் தக்க புருவம் ஆன வில்; கொடிய புருவம் ஆகிய வில் எனவும் கொள்ளலாம். குனித்து - வளைத்து. விழிக்கணைகள் - கண் ஆகிய அம்புகள். மொய்ம்பு - உடல். உருவ - ஊடறுக்க. (42)

## 773. அரசாட்சி தந்தாளைப் பாடுவேன்

43 ஊன்கொண்ட முடைத்தலையில் பலிகொண்டார்க்கு
உலகுஏழும்
தான்கொண்ட அரசாட்சி தந்தாளைப் பாடுவனே.

**தெளிவுரை**

மாமிசம் பொருந்திய புலால் நாற்றம் வீசும் தலையில் பிச்சை ஏற்ற சிவபெருமானுக்கு ஏழ் உலகங்களும் தான் கொண்ட அரசாட்சியும் அளித்தவளை யான் பாடுவேன்.

**விளக்கம்**

முடைத்தலை - புலால் நாற்றம் வீசும் தலை ஓட்டில். பலி கொண்டார்க்கு - பிச்சை எடுத்தவர்க்கு. அரசாட்சி தந்தாளை - அரசாட்சியை இறைவர்க்குத் தந்தவளை. (43)

## 774. மீனவனைப் பயந்தவளைப் பாடுவேன்

44 வானவர்கோன் முடிசிதறி வடவரையில் கயல்எழுது
மீனவர்கோன் தனைப்பயந்த மெல்லியலைப் பாடுவனே.

**தெளிவுரை**

வானவரின் மன்னனான இந்திரனின் முடிசிதறி இமய மலையில் கயல் சின்னத்தைப் பொறித்த பாண்டிய மன்னனான உக்கிர குமார பாண்டியனைப் பெற்றெடுத்த மென்மையான இயல்புடைய மீனாட்சியைப் பாடுவேன்.

**விளக்கம்**

வானவர் கோன் - இந்திரன். முடிசிதறி - முடியைச் சிதறச் செய்து. திருவிளையாடல் புராணத்துள் 'இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம்' என்பதில் இச்செய்தியைக் காணலாம். கயல் எழுது - மீன் இலச்சினை பொறித்த. மீனவர் கோன் - உக்கிர குமார பாண்டியன். பயந்த - பெற்றெடுத்த. (44)

## 775. பிறைநாறும் சீறடியைப் பாடுவேன்

45 கான்மணக்கும் சடைக்காட்டில் கவின்மணக்கும்
கடிகொன்றைத்
தேன்மணக்கும் பிறைநாறும் சீறடியைப் பாடுவனே.

**தெளிவுரை**

நறுமணம் கமழும் சடையான காட்டில் அழகு பொருந்திய நறுமணம் உடைய கொன்றை மலரின் தேன் மணக்கின்ற பிறைச் சந்திரன் பொருந்திய சிறிய திருவடியைப் பாடுவேன்.

**விளக்கம்**

கான் - நறுமணம். சிவபெருமான் தம் தேவியார் ஊடல் கொண்ட போது அதைத் தணித்தற்காக அவள் அடிகளில் வீழ்ந்து வணங்குவர். ஆதலால் அம்மையின் திருவடிகளில் கொன்றை மலரும் பிறைச்சந்திரனும் உள்ளனவாக உரைத்தார். பிறை நாறும் - பிறைச் சந்திரன் தோன்றும். சீறடி - சிறிய அடி. (45)

## 776. விரைக் கொடியைப் பாடுவேன்

46 எவ்விடத்தும் தாமாகி இருந்தவருக்கு அருந்தவரும்
வெவ்விடத்தை அமுதாக்கும் விரைக்கொடியைப்
பாடுவனே.

**தெளிவுரை**

எங்கும் தாமாகி நிறைந்திருக்கின்ற சிவபெருமானுக்கு உண்ணத் தக்கதாக வந்த கொடிய விடத்தை அமுதமாய் ஆக்கிய மணம் உடைய கொடி போன்றவளைப் பாடுவேன்.

**விளக்கம்**

அருந்த வரும் - அருந்தும்படியாய் வந்த. வெவ்விடம் - கொடிய விடம். விரைக் கொடி - மணமுடைய கொடி போன்ற மீனாட்சியம்மை. அருந்தவரும் - அருந்த + அரும். (46)

## 777. பித்தனுடன் விளையாடுபவளைப் பாடுவேன்!

47 வைத்தபகிர் அண்டம்எனும் மணல்சிற்றில் இழைத்திழைத்
தோர்
பித்தனுடன் விளையாடும் பெய்வளையைப் பாடுவனே.

**தெளிவுரை**

அமைத்து வைக்கப்பட்ட பகிரண்டம் எனும் மணலால் ஆன சிறிய இல்லத்தைச் செய்து ஒரு பித்தங் கொண்டவனுடன்

விளையாடுகின்ற இயல்புடைய வளையல் அணிந்த பெரு மாட்டியைப் பாடுவேன்.

**விளக்கம்**

பகிரண்டம் - அண்டத்தின் வெளி. மணல் சிற்றில் - மணலால் ஆன சிறிய வீடு. இழைத்து - இயற்றி. பித்தன் - சிவ பெருமான். பெய்வளையை - அணியும் வளையல் உடைய வளான மீனாட்சி. (47)

## 778. மொய்குழலைப் பாடுவேன்

48 இலைக் குறியும் குணமும்நமக்கு என்பார்க்கு
வளைக்குறியும்
முலைக்குறியும் அணிந்திட்ட மொய்குழலைப் பாடுவனே.

**தெளிவுரை**

பெயரும் குணமும் நமக்கு இல்லை என்ற சிவபெருமானுக்கு வளையலால் செய்யப்படும் குறியும் கொங்கையால் உண்டாக்கப் பட்ட குறியும் செய்த நெருங்கிய கூந்தல் உடையவளைப் பாடுவேன்.

**விளக்கம்**

இலைக் குறியும் குணமும் நமக்கு - நமக்கு பெயரும் குணமும் இல்லை. என்பார்க்கு - எனக் கூறப்படுகின்ற சிவ பெருமானுக்கு. வளைக்குறி - வளையலால் இறைவரின் மெய்யில் ஏற்படுத்திய குறி. இறைவி இறைவனைத் தழுவ அதனால் அவளது வளையல் இறைவரின் உடலில் தழும்பை உண்டாக்கியது. அணிந்திட்ட - இறைவர்க்கு உண்டாக்கிய. மொய் குழல் - நெருங்கிய கூந்தல். (48)

## 779. அனைத்துமாகியவளைப் பாடுவேன்

49 ஒன்றாகி அனைத்துயிர்க்கும் உயிராகி எப்பொருளும்
அன்றாகி அவை அனைத்தும் ஆனாளைப் பாடுவனே

**தெளிவுரை**

தான் ஒன்றாகி எல்லாவுயிர்க்கும் உயிராய் ஆகி எல்லாப் பொருளும் அல்லவாகி அவை எல்லாமாய் ஆகி நின்றவளை நான் பாடுவேன்.

**விளக்கம்**

இறைவி ஒரு பொருளாகவும் எல்லா உயிர்களாகவும் உள்ளாள். எல்லாப் பொருள்களாகவும் அவை அல்ல ஆகவும் அவள் விளங்குகின்றாள் என இறைமையை உணர்த்தியவாறு. (49)

## 780. அங்கயற்கண் அமுதைப் பாடுவேன்!

50 பரசிருக்கும் தமிழ்க்கூடல் பழியஞ்சிச் சொக்கருடன்
அரசிருக்கும் அங்கயற்கண் ஆர் அமுதைப் பாடுவனே.

**தெளிவுரை**

புகழ் பொருந்திய தமிழ் வழங்கும் மதுரையில் வீற்றிருக்கும் பழிக்கு அஞ்சிய சொக்கலிங்கருடன் அரசியாய் விளங்குகின்ற அங்கயற் கண் அமுதைப் பாடுவேன்.

**விளக்கம்**

பரசு - புகழ். தமிழ்க்கூடல் - தமிழை வளர்க்கும் மதுரை. பழியஞ்சிச் சொக்கர் - தமக்கு உண்டான பழிக்கு அஞ்சிய சொக்க நாதர். திருவிளையாடற் புராணத்தின் பழியஞ்சின படலம் இச் செய்தியைப் புலப்படுத்தும். ஆர் அமுது - அரிய அமுதம் போன்றவள். (50)

## 781. வாழி! வாழி!

### கொச்சகக் கலிப்பா

51 நீர்வாழி, தென்மதுரை நின்மலனார் அருள்வாழி,
கார்வாழி, அங்கயற்கண் கன்னிதிரு வருள்வாழி,
சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி
பேர் வாழி அவன்செல்வம் பெரிது ஊழி வாழியவே.

**தெளிவுரை**

மழை வாழ்க! மதுரையில் வீற்றிருக்கும் குற்றம் அற்றவர் அருள் வாழ்க! மழை பெய்யும் மேகம் வாழ்க! அங்கயற்கண் அம்மையான மீனாட்சியின் திருவருள் வாழ்க! அப்பெரு மாட்டியின் சிறப்புகள் வாழ்க! காஞ்சியம்பதியில் வாழ்கின்ற திருமலை பூபதி என்பவர் வாழ்க! இறைவனின் திருப்பெயர் வாழ்க! அவனது செல்வம் பெரிதாக நீண்ட காலம் வாழ்க!

**விளக்கம்**

நின்மலனார் - குற்றமற்ற சிவபெருமான். கார் - மேகம். கச்சி நகர் திருமலைபூபதி இவ்வாசிரியரை ஆதரித்தவர். காஞ்சியில் வாழ்ந்தவர்.

*மதுரை மீனாட்சியம்மை குறத்தின் மூலமும் தெளிவுரையும் விளக்கமும் முற்றுப் பெற்றன.*

# 14. தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை

இரட்டை மணிமாலை - இதன் இலக்கணத்தை மீனாட்சி யம்மை இரட்டை மணிமாலையின் முன்னுரையில் காண்க.

இத்தொடர் தில்லையில் வீற்றிருக்கின்ற சிவகாமி அம்மை மீது பாடப்பெற்ற இரட்டை மணிமாலை என்று பொருள்படும்.

இதில் அமைந்துள்ள இரண்டு பாவகைகள் நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகும்.

## 782. நெஞ்சத்தை இடமாகக் கொண்டாள்

### நேரிசை வெண்பா

சீர்பூத்த செல்வத் திருத்தில்லை மன்றுஅகம்என்
கார்பூத்த நெஞ்சகமாக் கைக்கொண்டாள்-ஏர்பூத்துள்
ஐயம் ஒருங்குஈன்ற அம்நுண் மருங்குஒசிய
வையம் ஒருங்குஈன்ற மான். 1

**தெளிவுரை**

உள்ளதோ இல்லையோ என்ற ஐயத்தை உண்டாக்கும் அழகிய நுண்ணிய இடை ஒசிய உலகங்களை எல்லாம் ஈன்ற மானைப் போன்ற சிவகாமியம்மை, சிறப்புடைய செல்வம் பொருந்திய திருத்தில்லை மன்றமாக என் ஆணவ இருளையுடைய மனத்தைத் தான் வீற்றிருத்தற்குரிய வீடாகக் கொண்டாள்.

**விளக்கம்**

மான் போன்றவள் என் நெஞ்சகமாகக் கொண்டாள். சீர்பூத்த - சிறப்பு மிக்க. கார் பூத்த - ஆணவ இருளையுடைய. ஏர் - அழகு; எழுச்சி. ஐயம் ஒருங்கீன்ற - முப்பத்திரண்டு அறங்களைச் செய்த எனவும் கூறலாம். அம் நுண் மருங்கு - அழகிய நுட்பமான இடை. ஒசிய - அசைய; ஒல்க. (1)

## 783. பாகம் தர ஓர் படிவம் உண்டோ

### கட்டளைக் கலித்துறை

மாகம் திருவுரு மன்றுடை யார்க்குஎனின் மற்றுஉனக்கோர்
பாகம் தரஓர் படிவம்உண் டேபர மானந்தமே
ஏகம் தருந்திரு மேனியது ஆக்கிமற்று எண்இறந்த
ஆகம் தருவதும் அம்மைநின் ஆடல்கொல்
அங்குஅவர்க்கே. 2

**தெளிவுரை**

மேலான ஆனந்தமாய் விளங்கும் சிவகாமி அம்மையே! வானத்தைத்தம் வடிவமாகக் கொண்ட சிவபெருமானுக்கு என்றால் அவர் நினக்கு உடலில் ஒரு பாகத்தைத் தர வடிவு உண்டோ! அத்தகையவர்க்கு ஒரு மேனியுடையதாக்கிப் பின்பு எண்ணற்ற உடலைத் தருவது, அம்மையே, நின் விளை யாடலாலோ!

**விளக்கம்**

மாகம் - வானம். மன்றுடையார் - சிவபெருமான். பாகம் - பகுதி; உடலில் இடப்பாகம். ஏகம் தருதிருமேனி - ஒரு மேனி யாக்கி. ஆகம் - உடம்பு. எண்ணிறந்த ஆகம் - இருபத்தைந்து, அறுபத்து நான்கு ஆகிய மூர்த்தங்கள். (2)

## 784. வந்திப்பார் பெற்றவரம்

### நேரிசை வெண்பா

அங்கம் பகுந்தளித்த அம்பலர்த்தார்க்கு ஆம்பல்அங்கைச்
சங்குஒன்று கொங்கைத் தழும்புஒன்றே - நங்கைஉனை
வந்திப்பார் பெற்றவர மற்றொருநீ வாய்த்ததிரு
உந்திப்பார் ஏழும் ஒருங்கு. 3

**தெளிவுரை**

சிவகாமி அம்மையே! தம் உடலில் இடப்பாகத்தைப் பகுத்துத் தந்த தில்லையம்பலத்தில் ஆடுபவர்க்கு நீ தந்தது ஆம்பல் போன்ற கையில் அணிந்த வளையல் தழும்பு ஒன்று, கொங்கையால் ஏற்படுத்திய தழும்பு ஒன்று! அம்மையே! நின்னை வணங்குபவர் பெறுவதாவது நின் திருவயிற்றில் உதித்த ஏழ் உலகங்கள் ஆகும்.

**விளக்கம்**

சிவகாமி அம்மையார் தம்மை வணங்குபவர்க்கு ஏழ் உலகையும் அளிப்பாள் என்பது கருத்து. ஆம்பல் மலர் கைக்கு உவமை. சங்கு - வளையல். இங்கு அதனால் ஏற்படுத்திய தழும்பை உணர்த்தி நின்றது. 'வாய்த்த திருவுந்தி' என்பதைத் 'திருவுந்தியிலே வாய்த்த' என மாற்றி இயைக்க. பார் ஏழு - ஏழ் உலகங்கள். (3)

## 785. பூமியைப் பூ என்பதன் காரணம்

### கட்டளைக் கலித்துறை

ஒருவல்லி அல்லிக் கமலத்துள் ஊறுபைந் தேறல்ஒத்த
திருவல்லி தில்லைச் சிவகாம வல்லிஎன் சித்தத்துள்ளே
வருவல்லி செம்பொன் வடமேரு வில்லியை
வாட்கண் அம்பால்
பொருவல்லி பூத்தலின் அன்றேஇப் பூமியைப்பூஎன்பதே. 4

**தெளிவுரை**

ஒற்றைக் கொடியில் மலரும் அக இதழையுடைய தாமரையில் (இதய கமலத்தில்) உள்ள பசிய தேனைப் போன்ற அழகையுடையவளும் தில்லைச் சிவகாம வல்லியும் என் மனத்துள் நினைக்க வந்தருளுபவளும் செம் பொன்னால் ஆன வட மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானை ஒளியுடைய கண் ஆன அம்பினால் போரிடுபவளுமான சிவகாமி யம்மை பூத்ததனால்தான் பூமியைப் பூ என உரைக்கின்றனர்.

**விளக்கம்**

ஒருவல்லி - ஒற்றைக் கொடி. அல்லி - அகஇதழ். கமலம் - தாமரை. ஊறு - சுரக்கும்; உண்டாகும். பைந்தேறல் - பசுமையான தேன். என் சித்தத்துள்ளேவருவல்லி - என் மனத்துள் நினைத்த அளவில் விரைந்து வரும் அம்மை. வில்லி - சிவபெருமான். வாட்கண் அம்பால் - ஒளியுடைய கண் ஆன அம்பினால். பொருவல்லி - போரிடுபவள். பூத்தலின் - உண்டாக்கிய காரணத்தால்; தோற்றியதால். அம்மையைார் தோற்றிய காரணத்தால்தான் பூமியைப் பூ என்று கூறுகின்றனர். பூ - பூமி. (4)

## 786. வேதமும் உணரா!

### நேரிசை வெண்பா

பூத்ததுவும் ஈரேழ் புவனமே அப்புவனம்
காத்ததுவும் அம்மை கருணையே - கூத்தர்அவர்
பாடுகின்ற வேதமே பாராஇப் பார் ஒடுங்க
ஆடுகின்ற வேதமே அங்கு. 5

**தெளிவுரை**

அம்மையே நீ படைத்தவையும் பதினான்கு உலகங்கள் ஆகும். அவ்வுலகங்களைக் காத்ததும் நின் கருணையேயாகும். இந்தவுலகங்கள் எல்லாம் ஒடுங்குமாறு ஆடுவதன் காரணத்தைக்

கூத்தாடும் இறைவர்ஆன அவரைப் பாடும் வேதங்களும் பார்த்து உணரமாட்டா!

**விளக்கம்**

பூத்ததுவும் - படைத்ததுவும். ஈர் ஏழ் புவனம் - பதினான்கு உலகங்கள். கூத்தர் - கூத்தாடும் நடராசர். ஆடுகின்றது ஏது - ஆடுவதன் காரணத்தை. பாரா - பார்த்து உணர்ந்து கொள்ளா. (5)

## 787. கொங்கையால் பொற்புயத்தைக் குழைத்தாய்!

கட்டளைக் கலித்துறை

அங்கைகொண் டேநின் அடிதைவந்து ஆரழல் ஆறமுடிக்
கங்கைகொண்டு ஆட்டும்நங் கண்ணுதலார்அக்
கனகவெற்பைச்
செங்கைகொண் டேகுழைத் தார்சிவ காமிநின் சித்திரமென்
கொங்கைகொண் டேகுழைத் தாய்அவர் பொற்புயக்
குன்றுஎட்டுமே. 6

**தெளிவுரை**

சிவகாமி அம்மையே! நெற்றியில் கண்ணை உடைய சிவ பெருமான், தன் கையைக் கொண்டு நின் திருவடியைத் தொட்டுத் தடவி நின் சினமான அரிய தீ ஆறத் தன்முடியில் உள்ள கங்கை யாற்றைக் கொண்டு நீராட்டுவார். நம் இறைவரான அவர் பொன் மலையைத் தம் கையைக் கொண்டு குழைத்தார். சிவகாமியே நின் அழகிய மென்மையான கொங்கையைக் கொண்டு சிவபெரு மானின் எட்டுக் குன்றங்களையும் குழையச் செய்தாய்.

**விளக்கம்**

அடி தைவந்து - அடியைத் தடவி. ஆரழல் - சினமாகிய அரிய தீ. முடிக்கங்கை - முடியில் உள்ள கங்கை நீர். ஆட்டும் - நீராட்டிக் கழுவி. கண்ணுதலார் - நெற்றியில் கண் உடைய

சிவபெருமான். குழைத்தார் - வளைத்தார். சித்திரமென் கொங்கை - அழகிய மென்மையான முலை. பொற்புயக் குன்று எட்டு - அழகிய தோள்களாகிய எட்டு மலைகள். (6)

## 788. மறலிக்கு நெய்தல் முரசு

### நேரிசை வெண்பா

குன்றம் சுமந்துஒசிந்த கொம்பேநின் கோயிலும்பொன்
மன்றும் பணிந்தேம் வழிவந்தால் - பொன்தாழ்
வரைசென்ற திண்தோள் மறலிக்கு நெய்தல்
முரைசன்றே வென்றி முரசு. 7

**தெளிவுரை**

குன்றுகளைப் போன்ற கொங்கைகளைச் சுமந்து அசையும் கொம்பு போன்ற அம்மையே! நின் கோயிலையும் பொன் அம்பலத்தையும் வணங்கினோம். எங்கள் வழிக்கு இயமன் வருவானானால் பொன் மயமான மலையைப் போன்ற திண்மை யான இயமனுக்கு நெய்தல் பறையான சாப்பறை அன்றோ வெற்றி முரசு. (இறப்பு உண்டாகும் என்பதாம்.)

**விளக்கம்**

எம்மிடம் இயமன் வந்தால் அவனுக்குச் சாப்பறை ஒலிக்கும்; இறப்பான் என்பதாம். குன்றம் - மலை. கொம்பே - கொம்புபோன்றவளே! வழிவந்தால் - எங்கள் உயிரைப்பற்ற எம் வழியில் வந்தால். திண் தோள் மறலி - திண்ணிய தோளையுடைய இயமன். நெய்தல் முரைசு - சாப்பறை. வென்றி - வெற்றி. (7)

## 789. கண்ணும் குறியிட்டது போலும் கறைக் கண்டம்

### கட்டளைக் கலித்துறை

முருந்து அடர்ந்து ஆர முகிழ்த்தபுன் மூரல் முதல்விகயல்
பொருந்தடங் கண்விழிக் கும்புலி யூரர்பொன்
மார்பின் மற்றுஉன்

பெருந்தடங் கொங்கை குறியிட்ட வாகண்டுஅப்
பிஞ்ஞகர்க்குன்
கருந்தடங் கண்ணும் குறியிட்ட போலும் கறைக்கண்டமே. 8

**தெளிவுரை**

மயில் இறகின் அடிபோன்ற முத்துப்பல் தோன்றிய புன்னகை யுடைய முதல்வியே! கயல்மீன்கள் பொருந்தியுள்ள நீர்நிலைகள் பொருந்திய சிவபெருமான் பொன் மார்பில் உன் பெருத்த கொங்கைக் குறியிட்ட விதத்தைக் கண்டு, கருமையான கண்ணும் இறைவர்க்குக் குறியிட்டது போல் அவர் கழுத்து கறை யுடையதாக விளங்கும்.

**விளக்கம்**

அம்மையின் கொங்கை இறைவர் மார்பில் வடு ஏற்படுத்தி யதைப் பார்த்த கண் தானும் இறைவரின் கழுத்தில் கறையை உண்டாக்கியதைப் போல் அவர் கழுத்தின் களங்கம் விளங்கும். முருந்து - மயில் இறகின் அடி. ஆரம் முகிழ்த்த - முத்துக்கள் தோன்றிய. புன் மூரல் - புன்னகை. முதல்வி - முதல்வியே; விளி. கயல் - கயல் மீன்கள். பொரும் - துள்ளும். பெருந்தடங் கொங்கை - மிகப் பெரிய கொங்கை. குறியிட்ட வா - குறியிட்டவாற்றை. பிஞ்ஞகர் - சிவபெருமான். கறைக்கண்டம் - நஞ்சால் உண்டான கறுப்பு. (8)

## 790. மயில் இருக்கப் பாம்பால் இறைவர்க்குத் துன்பம் உண்டாகாது

### நேரிசை வெண்பா

கறைகொண்டு நச்சரவக் கச்சணிந்தார் என்று
மறைகொண்டு வாழ்த்துவதும் வம்பே-இறைகொண்டு
அயில்இருக்கும் முத்தலைவேல் அண்ணலுக்குஎன் னேஓர்
மயில்இருக்கத் தில்லை வனத்து. 9

### தெளிவுரை

இறைவர், நஞ்சை உணவாகக் கொண்டு நஞ்சையுடைய பாம்பாகிய கச்சினை அணிந்து கொண்டார் என்று வேதங்கள் அச்செயலை வாழ்த்திப் பாடுவது வியப்பே ஆகும். தங்கும் பக்கத்தில் இருக்கும் மூன்று தலைகளையுடைய வேலை ஏந்திய சிவபெருமானுக்கு தில்லைவனத்தே பக்கத்தில் மயில் இருக்க என்ன துன்பம் உண்டாகும்?

### விளக்கம்

கறை கொண்டு - விடத்தை உணவாக உண்டு. நச்சரவக்கச்சு - பாம்பாகிய கச்சு. மறை கொண்டு வாழ்த்துவது - வேதங்கள் சிறப்பாக வாழ்த்திப் போற்றுவது. வம்பு - புதுமையானது; வியப்பானது. இறை கொண்டு - தங்கி. அயல் இருக்கும் - பக்கத்தில் இருக்கும். தில்லைவனம் - சிதம்பரம். அண்ணலுக்கு என் - இறைவனுக்கு என்ன தீங்கு உண்டாகும்? மயில் இருப்பதால் இறைவர்க்குப் பாம்பினால் தீமை ஏதும் உண்டாகாது என்பது கருத்து. முத்தலை வேல் - சூலம். (9)

## 791. அன்னம் பல்லாயிர அண்டம் பயந்தன

### கட்டளைக் கலித்துறை

வன்னம் செறிவளைக் கைச்சிற கால்தன் வயிற்றினுள் வைத்து
இன்னம் சராசர ஈர்ங்குஞ்சு அணைத்து இரை தேர்ந்து அருத்திப்
பொன்னம் பலத்துள்ஒர் ஆனந்த வாரிபுக்கு ஆடும்பச்சை
அன்னம் பயந்தன கொல்லாம் பல் ஆயிர அண்டமுமே. 10

### தெளிவுரை

அழகுடைய வளையை அணிந்த கைச்சிறகால் தன் வயிற்றுக்குள் வைத்துச் சராசரம் என்ற இளைய குஞ்சுகளை அணைத்து, இரையை ஆராய்ந்து எடுத்து உண்பித்துப், பொன்னம் பலத்துள் உள்ள ஓர் ஆனந்தக் கடலுள் புகுந்து ஆடும் பசுமையான அன்னப்பறவை பல ஆயிரம் அண்டங்களை இன்னும் ஈன்றன.

**விளக்கம்**

இறைவியாகிய அன்னப்பறவை சராசரம் என்ற குஞ்சுகளை அணைத்து உணவை உண்பித்துப் பொன்னம்பலத்துள் உள்ள ஆனந்தக்கடலில் நீராடிப் பின் மேலும் பல உலகங்களையும் ஈன்றது என்க.

வன்னம் - அழகு. வளைக்கைச் சிறகு - வளையல் அணிந்த கையாகிய சிறகு. சராசரக் குஞ்சு - உலகங்களாகிய குஞ்சுகள். உலகங்கள் பறவைக் குஞ்சுகளாகக் கூறப்பட்டுள்ளன. அருத்தி - உண்பித்து. ஆனந்தவாரி - ஆனந்தக்கடல். பச்சை அன்னம் - இளைய அன்னப்பறவை. பயந்தன - ஈன்றன. அண்டம் - உலகு.

(10)

## 792. மின்கொடியே உணர்த்தும்

### நேரிசை வெண்பா

அண்டம் திருமேனி அம்பலத்தார்க்கு என்பதுரை
கொண்டங் குணர்தல் குறைபாடே - கண்டளவில்
விண்ணம் பொலிந்ததொரு மின்கொடியே சொல்லாதோ
வண்ணம் பொலிந்திருந்த வா. 11

**தெளிவுரை**

சிவபெருமானுக்கு வானமே திருமேனியாகும் என்ற சொல்லைக் கொண்டு உணர்வது குறைபாடாகும். வானில் பொருந்திய மின்கொடியைப் பார்த்த அளவில் அவர்தம் இயல்பை உணர்த்தாதோ!

**விளக்கம்**

சிவபெருமானுக்கு வானமே திருமேனி என்று வாயால் கூறுவது குறைவுடையது. வானிலே தோன்றும் மின் கொடியே இறைவனது திருவடிவை உணர்த்தி விடும்.

அண்டம் - வானம். அம்பலத்தார் - சிவபெருமான். குறைபாடே - குறைவுடையது. விண்ணம் பொலிந்தது - வானில் விளங்குகின்ற. மின்கொடி - உமையம்மை.

சிவபெருமானுக்கு வானம் திருமேனியாகவும் அதில் தோன்றும் மின்னலை உமையம்மையாகவும் எண்ணி இவ்வாறு உரைத்தார். (11)

## 793. கங்கை என்ன துன்பம் அடையுமோ!

### கட்டளைக்கலித்துறை

வாய்ந்தது நின்மனை வாழ்க்கைஎன் றேதில்லை
வாணர்அம்மே
காய்ந்தது வென்றிவில் காமனை யேமுடிக் கங்கையைப்பின்
வேய்ந்தது பாவநின் மென்பதம் தாக்கஅவ் வெண்மதியும்
தேய்ந்தது பெண்மதி என்படு மோஅச் சிறுநுதற்கே. 12

**தெளிவுரை**

அம்மையே! நின் மனைவாழ்க்கை தில்லை வாணர்க்குப் பொருந்தியது என்றதால் அவர் வெற்றியுடைய கரும்பு வில்லை யுடைய மன்மதனை எரித்தார். பின்பு முடியில் கங்கையைச் சூடிக் கொண்டார். பாவம், நின் திருவடி தாக்கியதால் அந்த வெண் மதியும் தேய்ந்தது. அங்ஙனமேல், அந்தச்சிறு நெற்றியை யுடைய கங்கைக்கு என்ன துன்பம் உண்டாகுமோ!

**விளக்கம்**

அம்மே, நின் மனைவாழ்க்கை ஏற்பட்ட துணிவினால் இறைவர் மன்மதனை எரித்து விட்டார். நின் மென்மையான திருவடி பட்டுப் பிறையும் தேய்ந்தது. அங்ஙனமாக இறைவர் கங்கையைத் தலையில் சூடிக் கொண்டார். அக்கங்கைக்கு நின்னால் என்ன துன்பம் உண்டாகுமோ என்பதாம்.

மனைவாழ்க்கை - மனைவியால் உண்டான வாழ்க்கை. தில்லை வாணர் - தில்லைப்பதியில் வாழ்பவரான சிவபெருமான். காய்ந்தது - எரித்தது. மென்பதம் - மென்மையான திருவடி. (12)

## 794. சிவகாமியைச் சிவனோடு எண்ணுதலே தக்கது!

### நேரிசை வெண்பா

சிறைசெய்த தூநீர்த் திருத்தில்லைத் தொல்லை
மறைசெய்த ஈர்ந்தண் மழலைப் - பிறை செய்த
ஒண்ணுதலைக் கண்நுதலோடு உள்ளத்து இருத்திஇன்பம்
நண்ணுதலைக் கண்ணுதலே நன்று. 13

**தெளிவுரை**

அணையைச் செவ்வனே படைத்த தூய நீர் நிலையையுடைய திருத்தில்லையில் பழமையுடைய வேதங்களை உண்டாக்கிய குளிர்ந்த மழலையையுடைய பிறை போன்ற நெற்றியையுடைய சிவகாமியை நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானுடன் மனத்தில் இருத்தி இன்பம் ஏற்படுதலைக் கருதுவதே நன்றாகும்.

**விளக்கம்**

சிறை - அணை; கரை. தூநீர் - தூய்மையான நீர்நிலை. தொல்லை - பழமை. மறை செய்த - மறையையுண்டாக்கிய. சிறுநுதற்கு - கங்கைக்கு. ஒள்நுதல் - சிவகாமவல்லி. கண்ணுதலோடு - நெற்றிக்கண்ணை யுடைய சிவனோடு. உமையோடு சிவனை நினைப்பதே நன்மையாகும். (13)

## 795. அவட்கு ஏது தலையெடுப்பு?

### கட்டளைக் கலித்துறை

நங்காய் திருத்தில்லை நன்னுத
லாய்நுத னாட்டமொத்துன்
செங்காவி யங்கண் சிவப்பதென்
னேசெழுங் கங்கையைநின்

பங்காளர் நின்னைப் பணியுமப்
போதுகைப் பற்றிமற்றென்
தங்கா யெழுந்திருஎன் றாலவட்
கேது தலையெடுப்பே. 14

**தெளிவுரை**

'சிவகாமி நங்கையே! திருத்தில்லையில் வீற்றிருக்கின்ற நல்ல நெற்றியை உடையவளே! இறைவரின் நெற்றிக் கண்ணை ஒத்து நின் செங்காவி அழகிய கண் சிவப்பது என்னே! செழுமையான கங்கையை நின் பங்காளரான இறைவன் நின்னை வணங்கும் அப்போது கையைப் பற்றி 'என் தங்கையே எழுந்திருப்பாய்!' என்று கூறினால் அவளுக்கு ஏது தலையெடுப்பு? (செருக்கு?)

**விளக்கம்**

நங்காய் - பெண்ணே! நன்னுதலாய் - நல்ல நெற்றியை உடையவளே! நுதல் நாட்டம் - இறைவனின் நெற்றிக் கண். செங்காவி - செங்கழுநீர். பங்காளர் - பங்கையுடையவர். தங்காய் - தங்கையே. தலையெடுப்பு ஏது - தலையெடுத்தல் ஏது; இறுமாப்பு ஏது? உன் தங்கை என்று கூறினால் அவளுக்கு இறுமாப்பு இராது. (14)

## 796. ஞாலமெல்லாம் ஈன்றவள் குமரியாய் உள்ளாள்!

### நேரிசை வெண்பா

தலைவளைத்து நாணியெந்தை தண்ணளிக்கே ஒல்கும்
குலைவளைத்த கற்பகப்பூங் கொம்பர் - கலைமறைகள்
நான்குமரி யார்க்கிந்த ஞாலமெலா மீன்றளித்தும்
தான்குமரி யாகியிருந் தாள். 15

**தெளிவுரை**

எம் தந்தையின் குளிர்ந்த கருணைக்குத் தலையை வளைத்து நாணம் கொண்டு பூக்குலையை வளைத்த கற்பகப் பூங்கொம்பு போன்ற சிவகாமி, கலைகள் பொருந்திய மறைகள் நான்கிலும் மருவியவர்க்கு - சிவபெருமானுக்கு - ஞாலம் எல்லாவற்றையும் பெற்றுக் கொடுத்தபின்பும் தான் குமரியாகவே இருந்தாள்.

**விளக்கம்**

தண்ணளி - குளிர்ந்த கருணை. இறைவர் தண்ணளிக்குத் தலைவளைத்து நாணி ஒல்கும் கொம்பர். மறைகள் நான்கும் மரியார்க்கு - நான்கு வேதங்களில் பொருந்தியிருப்பவர்க்கு. மரியார்க்கு - மருவியார்க்கு என்பதன் விகாரம். குமரியாய் இருந்தாள் - இளமை உடையவளாய் இருந்தாள். (15)

## 797. நடுநிலை இல்லாமையாகும்

### கட்டளைக் கலித்துறை

தாளிற் பதித்த மதித்தழும்
புக்குச் சரிஎம்பிரான்
தோளிற் பதித்த வளைத்தழும்
பேதொல்லைத் தில்லைப்பிரான்
வாளிற் பதித்த முலைத்தழும்பு
அங்கவர் மார்பினிலந்
நாளிற் பதித்ததொன் றேஎம்
பிராட்டி நடுவின்மையே. 16

**தெளிவுரை**

எம் அம்மையே! இறைவர் உம் திருவடியில் பதித்த சந்திரனால் ஏற்பட்ட தழும்புக்குச் சரியாக எம்பெருமான் மார்பில் நீ வளையலால் ஒரு தழும்பையே ஏற்படுத்தினாய். அவர் நின்மார்பில் ஒன்றும் செய்யாதிருக்க நீ நின் கொங்கைத்தழும்பை

ஏற்படுத்தினாய். இது மிகையான செயல். இது நடுநிலைமை அற்றதாகும்.

சிவகாமி, சிவபெருமான் அம்மையின் காலில் உண்டாக்கிய பிறைத் தழும்புக்குச் சரியாக வளையல் தழும்பை உண்டாக்கினாள். முன் காலத்தில் இறைவர் ஒரு தழும்பும் ஏற்படுத்தாதிருக்க அவர் மார்பில் தழும்பு ஒன்றை அம்மை உண்டாக்கினாள். இச்செயல் நடுநிலையற்றதாகும்.

**விளக்கம்**

தாளில் - இறைவியின் திருவடியில். மதித்தழும்பு - பிறைச் சந்திரனால் ஏற்படுத்திய அடையாளம். அதாவது இறைவர் அம்மையைக்காலில் விழுந்து வணங்கியபோது உண்டாக்கிய தழும்பு. ஆனால் ஒரு தழும்பும் இறைவர் உண்டாக்காத அக் காலத்தில் அவரது மார்பில் கொங்கைத் தழும்பை உண்டாக் கினாள் இறைவி. இது நடுநிலைமையில்லாத செயல் ஆகும்.

வளை - வளையல். அனைத் தழும்பு - அந்தத் தழும்பு. வானில் - ஒளியுடன். ஒன்றே - ஒரு செயலே. (16)

## 798. திருமகள் சிவகாமியை நினைத்தல்

### நேரிசை வெண்பா

இன்தளிர்க்கைக் கிள்ளைக்கே யீங்குதலை கற்பிக்கும்
பொன்தளிர்த்த காமர் பொலங்கொம்பு - மன்றவர் தம்
பாகத் திருந்தாள் பதுமத்தாள் பாவித்தாள்
ஆகத் திருந்தாள் அவள். 17

**தெளிவுரை**

இனிய தளிர் போன்ற கையில் உள்ள கிளிக்குக் குளிர்ந்த சொற்களைப் பொன் போன்ற தளிர்க்கையை யுடைய பொன் கொம்பு போன்ற சிவகாமியம்மை கற்பிப்பாள். சிவபெருமானின் இடப்பாகத்தில் இருக்கும் அந்தச் சிவகாமியம்மையைத்.

தாமரையில் வீற்றிருக்கின்றவளும் திருமாலின் மார்பில் இருந்தவளும் ஆன திருமகள் நினைந்தபடி இருந்தாள்.

**விளக்கம்**

இன் தளிர்க்கை - இனிய தளிர் போன்றகை. கிள்ளை - கிளி. ஈர்ங்குதலை - இனிய மழலை மொழி. காமர் - விரும்பத்தக்க. பொலங்கொம்பு - பொன் கொம்பு போன்ற சிவகாமி. மன்றவர் - சிவபெருமான். பாகத்திருந்தாள் - உமையம்மை. பதுமத்தாள் - தாமரை போன்ற அடிகள்; திருமகள்; பாவித்தாள் - நினைத்த வண்ணம் இருப்பாள். ஆகம் - மார்பு. உடல். (17)

## 799. என் ஆவிக்குள் திருவடிகளும் சிலம்பும்!

கட்டளைக் கலித்துறை

அல்லிக் கமலத் துணைத்தாளது
என்றுமென் னாவிக்குள்ளே
புல்லிக் கிடந்தது போலும்
கெட்டேன்புன் மலர்க் கிழங்கைக்
கல்லிப் புலக்களை கட்டருள்
பூத்துட் கனிந்தமலை
வல்லிக் கிலைகொன் மருங்கென்று
இரங்கு மறைச் சிலம்பே. 18

**தெளிவுரை**

புன்மையான ஆணவ மலம் என்ற கிழங்கைத் தோண்டிப் புலம் என்னும் களைகளைக் களைந்து அருள் பூத்து உள்ளே கனிந்த மலைமகளாகிய சிவகாமி அம்மைக்கு இடையானது இல்லையோ என்று ஒலிக்கும் வேதச் சிலம்பும். உள் இதழ்களை யுடைய தாமரைத் தாள்களிலிருந்து என்றும் என் உயிர்க்குள்ளே பொருந்தியிருந்தது போலும்!

**விளக்கம்**

வேதமாகிய சிலம்புகள் சிவகாம வல்லியின் அடிகளிலிருந்து என் ஆவிக்குள்ளே என்றும் பொருந்தின போலும் என இயைக்க.

அல்லி - அகஇதழ். கல்லி - தோண்டி. துணைத்தாளது - இரு திருவடிகளிலிருந்து. புன்மலக்கிழங்கை - அற்பமான ஆணவ மலம் என்ற கிழங்கை. கட்டு - களையை நீக்கி. மருங்கு - இடை. என் ஆவிக்குள் அத்திருவடிகள் பொருந்த அவற்றுடன் சிலம்பு களும் பொருந்தின போலும் என்க. (18)

## 800. பிரம பதவியும் வைகுந்தப்பதவியும் விரும்போம்.

### நேரிசை வெண்பா

மறைநாறும் செவ்வாய் மடக்கிள்ளாய் பிள்ளைப்
பிறைநாறும் சீறடிஎம் பேதாய் - நறைநாறும்
நாட்கமலம் சூடேம் நறுந்துழாய் தேடேம்நின்
தாட்கமலம் சூடத் தரின். 19

**தெளிவுரை**

வேதம் மணக்கும் சிவந்த வாயையுடைய இளைய கிளி போன்றவளே! இளம் பிறை பொருந்தியுள்ள சிறிய அடிகளை யுடைய எம் பேதையே! நின் திருவடித் தாமரையைச் சூடிக் கொள்ள எனக்குத் தந்தால் தேன் மணக்கும் தாமரை மலரைச் சூடமாட்டோம். (பிரமபதவியை யாம் விரும்ப மாட்டோம்) நறுமணம் உடைய துழாய் மாலையைத் தேடோம். (திருமாலின் வைகுந்தப் பதவியைத் தேடமாட்டோம்.)

**விளக்கம்**

மறை நாறும் - வேதம் மணக்கும். செவ்வாய் - சிவந்தவாய். மடக்கிள்ளாய் - இளமையுடைய கிளியே. சிவபெருமான்

ஊடற்காலத்தில் சிவகாமியின் திருவடியை வணங்கியபோது அப்பெருமான் தலையில் சூடியிருந்த பிறைச்சந்திரன் பொருந்தும். அதனால் பிறைநாறும் சீரடி என்றார். நாறும் - தோன்றும்; பொருந்தும். நாட்கமலம் - அன்று அலர்ந்த தாமரைப்பூ. சூடேம் - அணிய மாட்டோம். நாட்கமலம் சூடேம் - புதிய தாமரை மலரில் இருக்கும் பிரமனது பதவியை விரும்ப மாட்டோம். நறுந்துழாய் தேடேம் - நறுமணம் கமழும் துளசி மாலையை அணிந்த திருமால் பதவியை விரும்போம். தாள் கமலம் - திருவடியான தாமரை. சிவகாமியம்மையே! நின் திருவடித்தாமரைகள் கிட்டப் பெற்றால் பிரமபதவியையும் திருமால்பதவியையும் விரும்ப மாட்டோம் என்கிறார். (19)

## 801. எந்தையின் செயல்

### கட்டளைக் கலித்துறை

தருஅற நாணத் திருவறச் சாலை சமைத்தம்மைநீ
பொருவறு நல்லறம் பூண்டதுஎன் னாம்எந்தை பொற் புலியூர்
மருவறு மத்த முடித்துக் கடைப்பலி தேர்ந்து வம்பே
தெருவற ஓடித் திரிதரு மான்மற்றுன் சீர்த்தி கொண்டே. 20

**தெளிவுரை**

அம்மையே, கற்பக மரமானது நாணம் கொள்ளுமாறு நல்ல அறச்சாலையை அமைத்த நீ நிகரில்லாத நல்ல அறத்தைச் செய்தும் என்ன பயன்? எம் இறைவன் தில்லையில் மணம் அற்ற ஊமத்தைப் பூவைச் சூடிக் கொண்டு வீட்டுவாயில் தோறும் சென்று பிச்சையெடுத்து வீணாகத் தெருவெல்லாம் உன் சீர்த்தி கொண்டு ஓடித் திரிகின்றார்.

**விளக்கம்**

தரு அற நாண - கற்பகமரமானது மிகவும் நாணம் அடைய. அறச்சாலை - தரும சாலை. பொருவறு - ஒப்பில்லாத. என்னாம் -

என்ன பயன் உண்டாகும். பொற்புலியூர் - தில்லை. மருவறு மத்தம் - மணம் இல்லாத ஊமத்தைப் பூ. பலி தேர்ந்து - பிச்சை எடுத்து. கடை - வீட்டு வாயில். வம்பே - வீணே. தெருவற ஓடி - தெருக்களில் எல்லாம் மிக ஓடி. திரிதருமால் - ஆல் அசை. சீர்த்தி - பெரும்புகழ்.

கற்பக மரமும் நாணுமாறு அறத்தைச் செய்தும் இறைவர் பிச்சை எடுப்பாரானால் என்ன பயன்? உன் புகழால் அவர் திரிவார். (20)

*தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை மூலமும் தெளிவுரையும் விளக்கமும் முற்றுப் பெற்றன.*

**குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு மூலமும் உரையும் முற்றுப் பெற்றன.**



